த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—308

# இந்தியாவில் பாங்கியல் சட்டமும் நடைமுறையும்

(இரண்டாம் பகுதி)

ஆசிரியர்
எம். எல். டேனன், O.B.E., I.E.S. (Ret)

தமிழாக்கம்
பு. சி. கந்தசாமி, பி.காம். (ஆனர்ஸ்),
வணிகவியல் பேராசிரியர்,
அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி,
செய்யாறு.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—May. 1972

T.N.T.B.S. (C.P.) No. 308



# Banking Law and Practice in India—Part II

M. L TANNAN

*Translation*

P. S. KANDASAMY

**Net Price Rs. 5-75**

**(No discount)**

This translation of 'Banking Law and Practice in India' by M. L. Tannan, is Published by arrangement with Shri M. L. Tannan' The Cliff, Carmichael Road, Bombay.

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of Government of India in the Ministry of Education and Social Welfare.'

*Printed by*
KALYAN PRINTERS,
1/10. Muniyappa Mudaly St.,
Madras-1.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக ஆக்கிப் பதினோராண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'இந்தியாவில் பாங்கியல் சட்டமும் நடைமுறையும்—II** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 308ஆவது வெளியீடாகும். இதுவரை 343 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

## சொற்களின் சுருக்கப் பட்டியல்

| | | |
|---|---|---|
| எ.ஸி. | — | லா ரிபோர்ட்ஸ், அப்பீல் கேஸ்கள், லார்டுகள் சபை |
| ஆ.இ.ரி. | — | ஆல் இண்டியா ரிபோர்ட்டர் |
| அல்-இ.லா.ரி. | — | அலகாபாத்து ஸீரீஸ் (இந்தியன் லா ரிபோர்ட்ஸ்) |
| பி.எல்.ஆர். | — | பெங்கால் லா ரிபோர்ட்ஸ் |
| பி.அண்ட் எ.டி. | — | பார்னுல் அண்டு அடால்ஃப்ப்ஸ் ரிபோர்ட் (கிங்ஸ் பெஞ்சு) |
| பி.அண்ட் ஸி. | — | பார்னுல் அண்டு க்ராஸ்வெல் ரிபோர்ட் (கிங்ஸ் பெஞ்சு) |
| பிங் | — | பிங்கம் ரிபோர்ட்டுகள் |
| பிங்.நியு. | — | ,, நியு வழக்கு |
| பாம் | — | பாம்பே ஸீரீஸ் (லா ரிபோர்ட்) |
| பாம்.லா.ரி. | — | பாம்பே லா ரிபோர்ட்டர் |
| ஸி.ஏ. | — | கோர்ட் ஆஃப் அப்பீல் ரிபோர்ட் |
| ஸி.பி. | — | காமன் பெஞ்சு ரிபோர்ட் |
| ஸி.ஸி. | — | கம்பெனி வழக்குகள் |
| ஸி.பி எஸ்.எல். | — | காமன் பெஞ்ச் ரிபோர்ட் (நியூ ஸீரீஸ்) |
| ஸி.பி. | — | லா ரிபோர்ட் (காமன் ப்ளி டிவிஷன்) |
| கல். | — | கல்கத்தா ஸீரீஸ் (இந்தியன் லா ரிபோர்ட்) |
| காம்ப் | — | காம்பெல்ஸ் ரிபோர்ட் நிஸி பிரயஸ் |
| சா.கா.டி. | — | லா ரிபோர்ட்ஸ், சான்ஸரி டிவிஷன் |
| டி.ஜி ஜே. | — | டி ஜெக்ஸ் & ஜோன்ஸ் ரிபோர்ட் சான்ஸரி அப்பீல் |
| டக் | — | டக்ளஸ் ரிபோர்ட்ஸ், கிங்ஸ் பெஞ்ச் |
| இ.அண்டு பி. | — | எல்லிஸ் அண்டு ப்ளாக்பர்ன்ஸ் ரிபோர்ட், க்வீன் பெஞ்சு |
| எக்ஸ் | — | எக்ஸ்செக்கர் ரிபோர்ட் |
| எக்ஸ்.டி. | — | எக்ஸ்செக்கர் டிவிஷன் |
| எ.எல்.ஸி. | — | ஹவுஸ் ஆஃப் லார்ட்ஸ்-க்ளார்க்ஸ் ரிபோர்ட் |

| | | |
|---|---|---|
| ஹோர் | — | ஹோர்ஸ் ரிபோர்ட் |
| கே.பி.(கி.பெ.) | — | கிங்ஸ் பெஞ்சு |
| லா.ஜ.சே. | — | லா ஜர்னல் சான்ஸரி |
| லா.ஜ.க்யு.பி. | — | லா ஜர்னல் க்வீன்ஸ் பெஞ்சு |
| லா.ரி. | — | லா ரிபோர்ட் |
| லா.டை. | — | லா டைம்ஸ் |
| லாகூ. | — | லாகூர் ஸீரீஸ் (இந்தியன் லா ரிபோர்ட்) |
| மூ.இ.அ. | — | மூர்ஸ் இண்டியன் அப்பீல் கேஸஸ் பிரிவி கவுன்சில் |
| மா: & க்ரா. | — | மானிங் அண்டு க்ராங்கர்ஸ் ரிபோர்ட் காமன் பிளீஸ் |
| மீ. & வெ. | — | மீஸன் அண்டு வெல்ஸ் பீ |
| மத. | — | மதராஸ் சீரீஸ் (இந்தியன் லா ரிபோர்ட்) |
| பி.க. | — | பிரிவி கவுன்ஸில் |
| க்வீ.பெ. | — | க்வீன்ஸ் பெஞ்சு |
| க்வீ.பெ.டி. | — | க்வீன்ஸ் பெஞ்ச் டிவிஷன் லா ரிபோர்ட் |
| ரி.ரி. | — | ரிவைஸ்ட் ரிபோர்ட்ஸ் |
| டை.லா.ரி. டி.எல்.ஆர். | — | டைம்ஸ் லா ரிபோர்ட்ஸ் |

# வழக்குகளின் பட்டியல்



## (Table of Cases)

### ஏ (A)

## சி (C)

பக்கம்

ஐ (I)



ஜே (J)



கே (K)



எல் (L)

பக்கம்

# புள்ளி விவரப் பட்டியல்

## (List of Statistical Table)

# BIBLIOGRAPHY

AIYAR, A.N.—Banking Companies Act, 1949.

BAGEHOT—English Constitution.

BANERJEE, DR. PRAMATH NATH—Public Administration in Ancient India.

BHASHYAM, K. and ADIGA, K.Y.—The Negotiable Instruments Act, 1881.

BRUNTON, JOHN—Bankers and Borrowers.

„ „ —Letters on Practical Banking.

BUHLER—The Laws of Manu—The Sacred Books of the East, Vol. XXV.

BYLES, Sir, JOHN BARNARD—A Treaties on the Law of Bills of Exchange, Promissory Notes and Cheques.

CHALMERS, Sir, M.D.—A Digest of the Law of Bills of Exchange.

„ „ „ —The Bills of Exchange Act, 1882.

DAVIS, J.F.—Bank Organization, Management and Accounts.

DONGERKERRY—The Indian Partnership Act, 1932.

DONOUGH'S Indian Stamp Act.

DUNBAR, CHARLES, F.—The Theory and History of Banking.

DUTT, R.C.—Civilization in Ancient India.

EASTON, H.T.—History and Principles of Banks and Banking.

EVITT, H.E.—Practical Banking. Currency and Exchange.

EWBANK—Manual for Co-operative Societies in the Bombay Presidency.

FINDLAY SHIRRAS—Indian Finance and Banking.

GHOSH, K.M.—The Indian Company Law.

GHOSE, Sir RASHBEHARY—The Law of Mortgage in India, 2 Vols.

GILBART, J.W.—The History, Principles and Practice of Banking, 2 Vols, Logic of Banking.

HALSBURY, LORD—The Law of England, Vol. II.

HOLDEN, J.M.—Securities for Banker's Advances.

HOPKINS, ALFRED—The Fundamentals of Good Bank-Building.

HUTCHISON, JOHN—The Practice of Banking, 4 Vols.

INSTITUTE OF BANKERS, LONDON—Questions on Banking Practice.

JAIN, L.C.—Indigenous Banking in India.

JONES, R.W.—Studies in Practical Banking.

JORDAN, DAVID F.—Investments.

KAUTILYA—Arthshastra.

KNIFFIN, WILLIAM H.—Commercial Paper.

LAUGHLIN, J.C.—The Principles of Money.

League of Nations, Economic Intelligence Service-Commercial Banks.

MACDONNEL, A.A. AND KEITH, A.B.—Vedic Index, Numbers and Subjects (1912), Vol. 1.

MCGREGOR, T.D.—Bank Advertising Plans.

MACLEOD, HENRY DUNNING—The Elements of Banking.

,, ,, ,, —Theory and Practice of Banking, 2 Vols.

MEGRAH, MAURICE—The Banker and Customer.

MITRA, A.C.—Banking Companies Act, 1949.

MOXON, T.B.—English Practical Banking.

MULLA, D F. AND SHAVAKSHA, K.S.—Indian Contract Act, Sale of Goods Act, and Partnership Act, Students' Ed.

PAGET, Sir JOHN—The Law of Banking.

,, ,, ,, —Legal Decisions Affecting Bankers (Edited and Annotated), 3 Vols.

PALMER—Company Precedents.

POLLOCK AND MULLA—The Indian Contract Act.

PRUDDEN, RUSSEL F.—The Bank Credit Investigator.

RAE, GEORGE—The Country Banker.

RAMACHANDRA RAO, B.—Present Day Banking in India.

RICHARD, R.D.—The Origin of the Cheque.

SEN, SUSHIL CHANDRA—The Indian Companies Act, 1913 (As Amended by Act XXII of 1936).

SHELDON, H.P.—Practice and Law of Banking.

SITARAM, R.S.—Banking Decisions Affecting Bankers in India.

SMITH, JAMES WALTER—A Handy Book on the Law of Banker and Customer.

SPLADING, W. F.—Banker's Credit.

STEAD, FRANCIS R.—Bankers' Advances.

,, ,, ,, —Banker's Tests.

STEELE, F. E.—The Banker as Lender.

SUNEJA, L. R.—Bankers' Objections on Unpaid Cheques.

,, ,, ,, —Bankers' Securities Against Advances.

SYKES, ERNEST—Banking and Currency.

TANNAN, M. L.—Banking Needs of India.

,, ,, ,, —Regulation of Banks in India.

THAKUR, B. T.—Organisation of Indian Banking.

THOMAS, S. EVELYN—Banker and Customer.

THOMSON, WILLIAMS—Dictionary of Banking.

TILLYARD, FRANK—Banking and Negotiable Instruments.

TRANT, JAMES B.—Bank Administration.

WALKER, J. DOUGLAS—A Treatise on Banking Law.

WATKINS, LEONARD L.—Banker's Balances.

WHITNEY, N. R.—Banking Practice.

WITHERS, HARTLEY—Bankers and Credit.

Annual Report on the Indian Post and Telegraphs Department.

Census Report (1931).

Report of the Hilton Young Commission (1926).

Report of the Indian Central Banking Enquiry Committee (1931), Vol. I.

Report of the Indian Law Commission (1866).

Report of the Stock Exchange Enquiry (Morison) Committee (Bombay, 1937).

Statistical Tables Relating to Banks in India.

The Indian Finance Year Book.

The Investor's Year-Book—Place, SIDDONS AND GOUGH.

Reserve Bank of India Publications. (The author is grateful fo the use of the Material although it has not been possible to acknowledge the source at each place separately.)

Handout issued by Ministry of Commerce and Industry. Government of India on Credit Guarantee Scheme (Substantially reproduced.)

# 6. செக்குகள்

### செக்கு பிறந்த கதை

இங்கிலாந்து நாட்டில், லண்டன் மாநகரிலிருந்த பொற்கொல்லர்கள்தான், முதன்முதலாக பாங்கராகச் செயலாற்றினர்; கேட்கும்பொழுது அதே மதிப்புள்ள தொகையைச் செலுத்தும் உறுதிமொழியின் அடிப்படையில், அவர்களுடைய வாடிக்கைக்காரர்களிடமிருந்து பணம் பெற்றனர். பிறருக்குப் பணம் செலுத்த விரும்பியபோது, குறிப்பிட்ட பணத்தைச் செலுத்துமாறு, பாங்கருக்கிடும் கட்டளையை எழுதிக்கொடுத்தல், அவர்களுடைய வாடிக்கைக்காரர்களின் வழக்கமாகக் காலப் போக்கில் அமைந்தது. இவ்வாறு எழுதப்பட்ட குறிப்புகளும், ஆணைகளுந்தான் செக்கு செலாவணியின் தொன்மையான வடிவங்களாகும் என்பது சில ஆராய்ச்சியாளர்களின் துணிபு. 'எழுதிய குறிப்பு' (drawn note) என்று அதை வாடிக்கைக்காரர்கள் அழைத்தனர்; பெருவாரியாகவும் பயன்படுத்தினர். குறிக்கப்பட்டுள்ள தொகையைக் கேட்கும்பொழுது செலுத்துக என்று வாடிக்கைக்காரர் பாங்கருக்கு இடும் ஆணையைக்கொண்ட சாதாரண துண்டுச்சீட்டாகும் அது. பெறற்குரியவரிடம் (payee) மட்டுமே செலுத்தத்தக்கதாக, அது பெரும்பாலும் எழுதப்பட்டது. இருப்பினும், பெறற்குரியவரிடமோ அல்லது அவரது ஆணைக்கேற்பவோ அல்லது கொணர்வோரிடமோ செலுத்துமாறு சிலபொழுது அவை வரையப்பட்டன. 'எழுதிய குறிப்பு' அதன் தொடக்கத்திலிருந்தே உண்டியல் (Bill of Exchange) என வியாபார வழக்காற்றுச் சட்டத்தில் (Lex Mercatoria) கருதப்பட்டுள்ளது. ஆணைப்படிச் செலுத்தத்தக்க உண்டியலைப் பிறருக்கு உரிமை மாற்றம் செய்வதற்கு, அவருக்குச் சாதகமாக அதில் புறங்குறித்தல் (endorse) வேண்டும் என்றும் அச்சட்டம் இயம்பிற்று. பொற்கொல்லர் பயன்படுத்திய எழுதப்பட்ட செக்கின் மாதிரிகள் மூன்றை அடுத்த பக்கத்தில் காணலாம். [மெக்லாடு (Macleod)

அவர்களின் பாங்கியலின் கோட்பாடும், நடைமுறையும், நூற் பிரிவு I, அத்தியாயம் IV, பிரிவு 4, பக்கம் 282.]

(1)

தாமஸ் ஃபீலஸ் (Thomas Feweles) அவர்கட்கு, — இதைப் பெற்ற வுடன், சாமுவெல் ஹவார்டுக்கு (Samuell Howard) அல்லது அவரது ஆணையின்படி, ஒன்பது பவுண்டு (pounds) பதின்மூன்று ஷில்லிங்கு (shillings) ஆறு பென்சைச் (pence) செலுத்துமாறு, நான் விரும்புகிறேன் ; இத்தொகையை என்னுடைய கணக்கில் எழுதிக்கொள்ளவும்.

ஆகஸ்டு 14, 1675 தங்கள் சேவகன்,
£9 13s 6d எட்மண்ட் வாரப் (Edmund Warcupp).

(2)

சில்டி (Childe) அவர்கட்கு,—இதைக் கொணர்வோரிடம் இருபது பவுண்டு செலுத்தி, அதை என் கணக்கில் இடுமாறு வேண்டு கிறேன்.

லண்டன், ஆகஸ்டு 29, 1689.

இ. போலிகென் (E. Poliexen)

(3)

போல்டன் (Bolton), மார்ச்சு 4, 1684

இதைப் பார்த்தவுடன் (at sight), சார்லஸ் டன்கோம்ப்க்கு (Charles Duncombe) அல்லது அவரது ஆணைக்கிணங்க, நானூறு பவுண்டு செலுத்துக ; அதை என் கணக்கில் இட்டுக்கொள்க.

தங்கள் உறுதியான நண்பன்,
வின்செஸ்டர் (Winchester).

பெறுபவர் :

கேப்டன் ஃபிரான்சிஸ் சைல்டு (Captain Francis Child) அவர்கட்கு,
டெம்பிள் பேரியின் (Temple Baree) அண்மையில்.

இருப்பினும், இதற்கும் முந்தைய காலத்திலிருந்தே செக்கு வழக்கிலிருந்தது என்ற கூற்றைப் பிந்தைய ஆராய்ச்சி (later

research) மெய்ப்பித்திருக்கிறது. [ஆர். டி. ரிச்சார்ட் (R.D. Richards) அவர்களின் செக்கின் பிறப்பு என்ற நூல் — தி பாங்கர், ஜனவரி 1929, பக். 29.] அரசாங்கக் கருவூலத்திலிருந்து பணம் பெறும் உரிமையுள்ளவர்களுக்கு, 'டிபென்ஞ்சர்ஸ்' (Debentures) என்றழைக்கப்பட்ட செலுத்துப் பத்திரங்களினுல் அவர்களுக்குரிய பணத்தைச் செலுத்துதல், ஸ்டூவர்டு (Stuart) மன்னர் காலத்தில் இங்கிலாந்து நாட்டில் நிலவிய ஒரு வழக்கமாகும். அரசாங்க அதிகாரிகள், மன்னரால் நியமிக்கப்பட்ட பணியாளர்கள், ஓய்வு பெற்று உதவிச்சம்பளம் பெறுகிறவர்கள் (Pensioners) போன்றவர்களுக்கு இதுபோன்று செலுத்தப்பட்டது. இந்தச் செலுத்துப் பத்திரங்கள் பெரும்பாலும் [கிராம்வெல் (Cromwell) ஆட்சியில் தவிர] லத்தீன் மொழியில் எழுதப்பட்டன; பல சொற்கள் சுருக்கியெழுதவும்பட்டன. கருவூலம் அவற்றின்பாற் பணம் செலுத்தியவுடன், அதற்குச் சான்ருக அமையும் ஆதாரச்சீட்டுகளாக (vouchers) அவற்றை வைத்துக்கொண்டது. அவற்றைச் செலுத்தப் போதுமான நிதியிருக்கும்பொழுது, அந்தச் செலுத்துப் பத்திரங்கள் பணம் பெற்றன. எனவே, பொற்கொல்லர் - பாங்கர்கள் தயக்கமின்றி அவற்றை வட்டம் கழித்து வாங்கினர் (discounted). பெறற்குரியவருக்கோ அல்லது உரிமை அளிக்கப் பெற்றவருக்கோ (assignee) பெரும்பாலும் குறிப்பிட்ட நிதிகளிலிருந்து செலுத்துமாறு அவைகள் கருவூலத்துக்கு அதிகாரமளித்தன. இந்தப் பத்திரங்களைத் தழுவித்தான், பொற்கொல்லர்களது 'எழுதிய குறிப்பும்' எழுந்தன. எனவே, இவை ஒன்றும் புதியன(novel)வன்று என்ற துணிபு பொருத்தமானது என்பது இங்கு நோக்கற்பாலது.

### செக்கு செலாவணியின் நற்பயன்கள் (Advantages)

பிற நாணயங்களைக்காட்டிலும், செக்கு செலாவணி மிகுதியான நற்பயனைப் பயக்கும். முதலாவது, செக்குகள் மூலம் பணத்தைச் செலுத்துதலோ, பெறுதலோ மிகவும் வசதியானது (convenient). தேவையான தொகைக்கு - பெரியதென்ருலும் சிறியதென்ருலும் - செக்குகளை எழுதலாம். பணம் செலுத்துபவர்களும், பெறுபவர்களும் பல ஆபத்துகளுக்கு (risk) ஆளாகலாம். சிறப்புக் கீறலிடப்பட்ட செக்குகள்மூலம் (specially crossed cheques) அவர்கள் அவ்வாபத்துகளினின்றும் விடுபடுகின்றனர். இரண்டாவது, செக்குகள்மூலம் செலுத்தும்போது, ரசீது (receipt) பெற நாம் அதிகமாக விழைய வேண்டியதில்லை; இருப்பினும், கூடுமானவரை ரசீது பெற்றுக்கொள்ளல் சாலச் சிறந்தது. செக்குகளின் வழியாகச் (பணம்) செலுத்துபவர்கள் அவற்றைப் பதிவு செய்த பதிவேடுகளைப் (records) பாதுகாக்க வேண்டிய

தொந்தரவுகளினின்றும் விடுபடுகின்றனர்; எவ்வாறெனில், செலுத்தும் - பாங்கு (paying - bank) தனது கணக்கேடுகளில் அவற்றைப் பதிவு செய்துகொள்கிறது. தேவையானால், பெறற் குரியவரது புறக்குறிப்பைத் தாங்கிய செக்கையும் கணக்கேடுகளில் செய்த பதிவுகளையும் காட்டி, தனது எழுத்தர்களது சான்று களையும் பெற்று, அந்த பாங்கு தன் செலுத்தலை (payment) மெய்ப்பிக்க இயலும். செக்கு வசதிகள் இல்லாமலிருந்தால், பணம் செலுத்துதல் கடினமானது மட்டுமின்றிச் செலவு மிக்க (costly)தொரு செயலென்றும் மக்கள் உணருவர். வைத்திருப்ப வர் (holder) அதனை இழந்துவிட்டாலோ அல்லது அவரிடமிருந்து அது களவாடப்பட்டுவிட்டாலோ, அவர் அச்செய்தியை எழுதுப வருக்கு (drawer) அறிவித்து, அதன்பாற் உரிமையற்றவருக்கு அது செலுத்தப்படாவண்ணம் செய்து, தனக்கு நேரவிருக்கும் இழப்பினைத் தவிர்க்கலாம். செக்கை விலைக்கு வாங்கி வைத்திருப் பவரைச் (holder for value) சட்ட முரண்பாடான உரிமை மாற்றம் (conversion) பாதிக்காத வண்ணம் சில சலுகைகள் அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைப் பற்றி அடுத்துவரும் அத்தியாயங்களில் விரிவாக ஆராய்வோம். பிற நாணயங்களின் மூலம் செலுத்தும்போது, இந்த நற்பயன்கள் கிட்டுவதில்லை. பிரிட்டன், பிரான்சு, ஜெர்மனி போன்ற ஐரோப்பிய நாடுகளில் கடந்த சில ஆண்டுகளில்தான் இவ்வகைச் செலாவணியின் நற் பயன் உணரப்பட்டு வருகிறது. அதனால் செக்கு செலாவணியை மக்கள் விரிவாகப் பயன்படுத்த, அவைகள் தங்களாலியன்ற அனைத் தையும் செய்து தகுந்த ஊக்கமளிக்கின்றன.

### செக்குகளுக்கு மக்களிடையே செல்வாக்கு

ஏறக்குறைய கடந்த நூறு ஆண்டுகளாக, இங்கிலாந்து நாட்டு மக்களிடையே செக்கின் செல்வாக்கு வெகுவாகப் பெருகி வருகின்றது. 1844ஆம் ஆண்டின் பீல்ஸ் சட்டம் (Peel's Act) செக்குகள் செல்வாக்குப் பெற மிகவும் துணையாக இருந்தது. அந்தச் சட்டம் இயற்றப்படுமுன் கூட்டுப்பங்கு பாங்குகள் நோட்டுக்களை வரையறையின்றி வெளியிடும் உரிமையைப் பெற்றி ருந்தன. அந்தச் சட்டம் அவற்றின் உரிமைக்கு உச்சவரம்பை நிர்ணயித்து, பாங்குகள் வரம்புக்குமேல் நோட்டுக்களை வெளியிடு வதைத் தடுத்தது. எனவே, பாங்குகள் தங்களுக்கு நேர்ந்த இந்த இழப்பை ஈடுகட்ட, வேறு வழியில் தங்கள் தொழிலைப் பெருக்க முற்பட்டன; அதன் பயனாகச் செக்கின் வளர்ச்சியில் முனைந்து ஈடு பட்டு, மக்கள் அதைப் பெருமளவு பயன்படுத்துமாறு ஊக்கமளித் தன. நாளடைவில், செக்குகளைப் பயன்படுத்துதல் மிகவும் பொதுவான வழக்கமாக வளர்ந்தது. 1922ஆம் ஆண்டிலே

லண்டன் மாநகரிலுள்ள பாங்கு ஒன்றில் செலுத்தப்பட்ட ஒவ்வொரு மில்லியன் பவுண்டு தொகையிலும் உள்ளடங்கிய நோட்டுக்கள், உலோக நாணயங்கள் ஆகியவற்றின் மொத்த மதிப்பு £ 8900 ஆகும். 1918ஆம் ஆண்டு, செக்குகளின்மீதுள்ள முத்திரை வரி (stamp duty) ஒரு பென்னியிலிருந்து இரண்டு பென்ஸ் ஆக உயர்த்தப்பட்டதனுல், அவற்றின் செல்வாக்குக் குறைந்துவிடும் என்று பலர் நம்பினர். மறைந்த ஸ்நோடென் பிரபு (Lord Snowden—அப்பொழுது அவர் திரு. பிலிப்) கருவூல வேந்தராக (Chancellor of the Exchequer) - நிதி அமைச்சராக - அப்போது பணியாற்றினுர். 1921ஆம் ஆண்டில் உபயோகப்படுத்தப் பட்ட செக்குகளின் எண்ணிக்கையையும் (298,000,000), 1923 - 1924ஆம் ஆண்டில் அவற்றின் எண்ணிக்கையையும் (366,000,000) புள்ளி விவரங்களுடன் ஒப்பிட்டுக் காட்டி, முத்திரை வரி உயர்வு செக்குகளைப் பாதிக்கவில்லையென்று அவர் வலியுறுத்தினுர். [தி டைம்ஸ் (லண்டன்) மே 6ஆந்தேதி 1923] பரிவர்த்தனைச் சாதனமாக (means of exchange) செக்குகள் தற்பொழுது ஆற்றும் பணியின் முக்கியத்துவத்தை யாரும் மறுக்க முடியாது. 1960ஆம் ஆண்டு ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) பாங்கர்களது தீர்வகங்களின் (clearing houses) வழியாகத் தீர்க்கப்பட்ட செக்குகளின் மொத்த மதிப்பு 22,81,75 மில்லியன் பவுண்டு. இந்தியாவில் அது 12,13,17·4 மில்லியன் ரூபாய்தான் என்பது இங்கு நோக்கற்பாலது.

### இந்தியாவில் ஏன் செக்குகள் செல்வாக்கு அடையவில்லை ?

மேற்கூறிய புள்ளி விவரங்களிலிருந்து இந்தியாவில் செக்குகள் குறைவாகவே பயன்படுத்தப்படுகின்றன என்று தெளிவாகிறது. இதற்கான காரணங்களை ஆராய்வோம்: முதலாவதாக, இந்தியாவின் பரப்பளவைக் கருத்தில் கொண்டு நோக்கினுல், இங்கு இயங்கும் பாங்கு அலுவலகங்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு என்பது புலனுகும் ; இரண்டாவதாக, செக்குகளை ஆங்கில மொழியில் எழுத வேண்டும் என்று இன்றும் சில பாங்குகள் வேண்டுகின்றன. (கடந்த காலத்தில் அவைகளின் எண்ணிக்கை மிகவும் அதிகமாக இருந்தது.) அந்த மொழி தெரிந்தவர்கள் மிகச் சிறுபான்மையானவர்களே என்பதை இங்கு நினைவிற்கொள்ள வேண்டும். எழுபது விழுக்காட்டுக்கும் மேலான மக்கள் வசிப்பது கிராமங்களில்தான் ; ஆனுல், அங்கு நிலவும் பாங்கு வசதிகளோ, மனநிறைவை அளிக்கத்தக்கவையாக இல்லை ; மூன்றுவதாக, பாங்குகளின் உறுதியிலும், நிறைவிலும் மக்களுக்கு இன்னும் போதுமான நம்பிக்கை வளரவில்லை ; நான்காவதாக, செக்குகளின்மீது சுமத்தப்பட்ட முத்திரை வரி, மக்கள் தங்கள் விருப்பம்போல்

செக்கை உபயோகப்படுத்த, 1927ஆம் ஆண்டுவரை தடையாக இருந்தது ; ஐந்தாவதாக, செக்கு செலாவணியின் நற்பயனை மக்கள் இன்னும் முற்றிலும் உணரவில்லை ; இறுதியாக, செக்கு களை ரொக்கமாக்கும் (encashment) வசதிகள், இன்றும் மன நிறைவை அளிக்கத் தக்கவையாக இல்லை. சமீபகாலம்வரை, இந்தியாவில் செக்கின்மீது பெரிய பாங்கின் அலுவலகங்களிலிருந்து பணம் பெறக் குறைந்தது அரைமணி நேரமாவது ஆகும். சில பாங்குகளில் இன்றும் அந்தக் குறைபாடு உணரப்படுகிறது. இது பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களிலுள்ள பாங்குகளுக்குக் குறிப்பாகப் பொருந்தும். இங்கிலாந்திலும், பிற மேற்கத்திய நாடு களிலும் உள்ள பாங்குகள் சில அரிய சூழ்நிலைகளில் தவிர, தங்க ளிடம் சமர்ப்பிக்கப்பட்ட செக்குகளுக்குப் பணம் செலுத்த, இரண்டு நிமிடங்களுக்குமேல் எடுப்பதில்லை. அந்நாடுகளில் பாங்குகள் தங்கள் பணியாளர்களில் மிகவும் பொறுப்பு வாய்ந்த வரைப் பணக்கணக்கராக (cashier) அமர்த்துவதே இந்த விரைவுச் செலுத்துதலுக்கான (prompt payment) காரணங்களில் ஒன்றாகும். இதற்கு மாறாகக் காசுக் கூட்டமைப்பின் (Firms of Shroffs) பணி யாளர்களிடம் ஒப்பந்த அடிப்படையில், இந்தியாவிலுள்ள சில பாங்குகள், இப்பணியைக் கொடுக்கின்றன.

**பாங்கு அலுவலகங்களின் எண்ணிக்கை போதாது**

மேற்கூறிய காரணங்களில் இது முதன்மையானது. ஐக்கிய அரசாங்கத்தில் ஏறக்குறைய 3,300 மக்களுக்கு ஒரு பாங்கு என்ற வீதத்திலும், இந்தியாவில் ஏறக்குறைய 73,712 நபர்களுக்கு ஒரு பாங்கு என்ற வீதத்திலும் பாங்குகளின் எண்ணிக்கை உள்ளது. எனவே, இந்தியாவில் செக்கை பயன்படுத்தல் குறைவாக இருப் பதில் வியப்பொன்றுமில்லை. நம் நாட்டு மக்களிடையே பாங்கை நாடும் வழக்கத்தை (banking habit) வளரச் செய்ய வேண்டுமாயின், பாங்கு அலுவலகங்களின் எண்ணிக்கையை வெகு வாக அதிகரித்தல் மிக அவசியம். கடந்த இரண்டிலிருந்து மூன்று ஆண்டுகளில் பல கிளைநிலையங்கள் (branches) திறக்கப்பட் டுள்ளன ; செக்கின்மீது பணம் பெறும் வசதிகளும் செம்மை யாக்கப்பட்டுள்ளன.

**மொழி - இடையூறு**

நம் நாட்டில் பெரும்பான்மையான பாங்குகள் ஆங்கிலத்தில் தான் செக்குகளை அச்சிடுகின்றன. இங்கு எழுதப்படிக்கத் தெரிந் தவர்களுள்ளும் ஒரு சிலரே ஆங்கிலத்தில் சரியாகச் செக்கு எழுத வல்லவர். மற்ற மொழிகளிலிடப்பெற்ற கையெழுத்தைக் கொண்ட செக்குகளின்மேல் பணம் செலுத்தச் சில பாங்குகள் முன்

வந்திருக்கின்றன ; ஆனால் நிபந்தனை ஒன்றைப் பிணைக்கின்றன : அதாவது, வாடிக்கைக்காரருடையதன் கள்ளக் கையெழுத்தைக் (forgery of customer's signature) கண்டுபிடிக்கத் தவறியதனால் தமக்கு நேரும் இழப்பை ஈடு செய்ய வாடிக்கைக்காரர் ஒப்புக் கொள்ள வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. [பின்னிணைப்பு ஆ. படிவ எண் 5 (எ) பின்னால்] இழப்பீடு செய் ஒப்பந்தத்தைப் (indemnity) பெறாமல், குறிப்பிட்ட வட்டார மொழிகளில் செக்கு களை எழுதச் சில பாங்குகள் வாடிக்கைக்காரர்களை அனுமதித் திருத்தல் மகிழத்தக்க வளர்ச்சியாகும். உயர்ந்த பொறுப்புக் களுக்கும் இந்தியர்களையே நியமிக்கப் பாங்குகள் தொடங்கியிருப் பதால், ஆங்கிலத்தைப் போலவே இந்திய மொழியொன்றிலிட்ட கையெழுத்தைத் தேர்ந்து கண்டறிதலோ (verify) அல்லது கள்ளக் கையெழுத்தைக் கண்டு பிடித்தலோ பாங்கின் பணியாளர்களுக்கு இயலாத செயலன்று. ஒரு மாநிலத்தில் வழங்கும் ஒப்புக் கொள்ளப்பட்ட மொழிகளில் எழுதும் செக்குகளை மதித்துப் பணம் செலுத்துமாறு பாங்குகளைக் கட்டாயப்படுத்துதல் விரும்பத்தக்க சீர்திருத்தமாகும். செக்கு செலாவணியை மக்கள் உபயோகிப்ப தற்கு அது ஊக்கமளிப்பதுடன் நடுத்தர வகுப்பைச் சேர்ந்த இளை ஞர்கள் கூட்டுப்பங்கு பாங்குகளில் சேர்ந்து பணியாற்றுவதற் கான வேலை வாய்ப்பையும் அது ஏற்படுத்துகிறது.

## முத்திரை வரி ஒழிப்பு

இந்நூலின் முதற்பதிப்பில் முத்திரை வரியை ஒழிக்க உறுதி யாகப் பரிந்துரைக்கப்பட்டது. 1927ஆம் ஆண்டில் அந்த வரி நீக்கப்பட்டதன் விளைவாக, மாநிலங்களின் தலைநகரங்களிலும், வணிகப் பெரு மையங்களிலும் (big commercial centres) மட்டு மின்றிச் சிறிய நகரங்களிலும் செக்கை பயன்படுத்தும் பழக்கம் வெகுவாக அதிகரித்துள்ளது. இந்தியாவில் செயல்படும் பாங்கு களுடைய தீர்வகங்களின்மூலம் தீர்வு செய்யப்பட்ட செக்குகளின் எண்ணிக்கையைப் பற்றிய புள்ளி விவரங்கள் வெளிவரத் தொடங்குமுன் இந்த அதிகரிப்பின் அளவு தெரியாமலிருந்தது. தீர்வகங்களின்மூலம் தீர்வு செய்யப்பட்ட செக்குகளின் மொத்த மதிப்பு 1926ஆம் ஆண்டில் 15·88 கோடி ரூபாயாகும். 1960ஆம் ஆண்டில் 124,31·7 கோடி ரூபாயாக அது உயர்ந்தது. 1960ஆம் ஆண்டில் தீர்வு செய்யப்பட்ட செக்குகளின் மொத்த எண்ணிக்கை 5,35,10,000 ஆகும். செக்கு நாணயத்தின் வளர்ச்சி, பாங்கை நாடும் வழக்கத்தின் எழுச்சி இவைகளினால் விளைந்த நற்பயனோடு ஒப்பிடும்போது, முத்திரை வரி ஒழிப்பினால் அரசாங்கத்திற்கு நேர்ந்த வருவாயிழப்பு (loss of revenue) முக்கியத்துவமற்ற ஒன்றாகக் குன்றிக் குறைகிறது.

**பிற காரணங்கள்**

செக்கின்மீது பணம் பெறும் வசதிகளைச் செம்மையாக்குதல் மூலம், தங்களுக்கும் நாட்டுக்கும் நன்மை பயக்கும் வகையில், செக்கை மக்கள் பயன்படுத்தும் வழக்கத்தை பாங்குகள் வெகுவாக அதிகரிக்க இயலும். எனவே, மேற்கூறியவைகளின்றிப் பிற காரணங்களைப் பற்றிச் சொல்லுமிடத்து, செக்குகளைப் பரப்புவதில் பெரும்பங்கு பாங்கைச் சார்ந்துதான் உள்ளது என்று குறிப்பிட்டாலே போதுமானது. தானியங்களைப் பல இடங்களுக்கும் கடத்திச் செல்லப் பொதுவாகக் குளிர்ப்பருவத்தில் (winter) பெரும் பணத்தேவை (demand for currency) எழுகிறது. இது பணச்சந்தையில் (money-market) தட்டுப்பாட்டை (stringency) உண்டாக்குவதோடு, தொலைவான இடங்களுக்குப் பணம் அனுப்ப ஆகும் செலவுகளையும் மக்களே ஏற்றுக்கொள்ளுமாறு செய்கிறது. பணத்தட்டுப்பாடு தொழில், வணிக அமைப்புகளை வெகுவாகப் பாதிக்கும் என்பது கண்கூடு. செக்கை பயன்படுத்தும் பழக்கம் (cheque habit) பணச்சந்தையில் கொஞ்சம் தளர்ச்சியை உண்டாக்குவதோடு, நிதிமாற்றச் செலவுகளையும் (charges for transfer of funds) குறைக்க வல்லது.

## செக்கு செலாவணியைப் பரப்பும் வழி வகைகள்

தொழில், வாணிக முன்னேற்றத்துக்குச் செக்கின் இன்றியமையாமையையும், அதன் பல நற்பயன்களையும் இதுவரை கண்டோம். எனவே, செக்கை பயன்படுத்தும் பழக்கத்தை மக்களிடையே பரப்பும் பணியை அரசாங்கமும், பாங்குகளும் மேற்கொள்ள வேண்டும். அதற்காகச் செய்யும் செலவைப் போல் பத்து மடங்கு வருவாயைக் காலப்போக்கில் அவை பெறக்கூடும். அரசாங்கமும், பாங்குகளும் செக்கு செலாவணியைப் பரப்ப உதவும் சில வழி வகைகளை இங்கு ஆராய்வோம்.

**பரப்பும் விதங்கள்**

பெரிய நகரங்களிலுள்ள அஞ்சலகங்கள் எல்லாக் கடிதங்களின் மீதும் 'ஒருவருக்கொருவர் நலனைப் பேண, செக்கின் வழியாகப் பணத்தைச் செலுத்துங்கள்' என்று முத்திரையிடலாம். தங்கள் சொந்த நலனை முன்னிட்டேனும் செக்கின் நன்மைகளை வணிகர் பரப்பலாம். பம்பாயிலுள்ள கம்பெனியொன்றின் உண்டியல் வசூலிப்பவர், ஒருநாள் சில உண்டியல்களை வசூலித்த பின், கள்ளத்தனமாக ஓடிவிட்ட (decamp) நிகழ்ச்சியை இந்நூலாசிரியர் அறிவார். அந்தக் கம்பெனியின் வாடிக்கைக்காரர்களில் பெரும்பான்மையினர் கீறலிட்ட செக்கின்மூலம் பணம் செலுத்தாமையே

இந்நிகழ்ச்சிக்குக் காரணம். இந்த அனுபவத்தின் விளைவாக அந்தக் கம்பெனி, 'பாதுகாப்புத் தலையாயது, செக்கின் வழியாகப் பணத்தைச் செலுத்துவது இரு பாலாருக்கும் பாதுகாப்பை நல்கு கிறது' என்று அச்சிட்ட அட்டைகளை அதன் புரவலர் (Patrons) அனைவருக்கும் அனுப்பியது. இது போன்ற ஆபத்தைத் தவிர்க்க, 'பெறற்குரியவரின் கணக்குக்காக (Payee's A/c) அல்லது 'செலா வணித் தன்மையற்றது' (Not Negotiable) என்று கீறலிட்ட சொற் களைப் பயன்படுத்துதல் சாலச் சிறந்தது.

### சேர வேண்டிய பணத்துக்கு அரசாங்கம் செக்குகளைப் பெறுதல்

நில வருவாய் (land revenue), மக்களிடமிருந்து அரசாங்கம் பெறவல்ல பிற பண உரிமைகள் (money claims) முதலியவை செக் கின் வழியாகச் செலுத்தப்பட்டால், சமர்ப்பிக்கும்பொழுது அவற்றின் பணம் செலுத்தப்பட வேண்டுமென்ற நிபந்தனைக்குட் படுத்தி, அரசாங்கம் அவற்றை ஏற்க வேண்டும். இந்தியாவிலுள்ள ஸ்டேட் பாங்கின் கிளையகங்கள் நிருவகிக்கும் அரசாங்கக் கருவூலங் களிலும், இந்திய ரிசர்வ் பாங்கின் அலுவலகங்களிலும் தற் பொழுது செக்குகள் பெற்றுக்கொள்ளப்படுகின்றன. எல்லா மாவட்டத் தலைமை இடங்களிலும் (headquarters) இந்த பாங்கு கள் கிளையகங்களை இன்னும் தொடங்கவில்லையாதலாலும், கீழ் நிலைக் கருவூலங்களில் (sub-treasuries) செக்குகள் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லையாதலாலும் நில வருவாயைச் செக்கு மூலமாகச் செலுத்துதல் பொது வழக்காக அமையவில்லை. இவ் வாறு பெற்றுக்கொள்ளும் செக்குகளின்மீது பணம் பெறும்வரை, சுத்த ரசீதுகள் (pucca receipts) தர வேண்டியதில்லையாதலின், கீழ்நிலைக் கருவூலங்கள் இம்முறையைத் தழுவத் தயங்குவதற்கு ஒப்புக்கொள்ளக்கூடிய காரணமேதும் இருப்பதாகத் தெரியவில்லை. நூறு அல்லது இருநூறு ரூபாய்களுக்குமேல் கொடுக்க வேண்டிய தொகைகளுக்கு அரசாங்கம் செக்குகளைக் கொடுக்கத் தொடங் கினல், செக்கை பயன்படுத்தும் பழக்க வளர்ச்சியில் பெரும் பங்கு ஆற்றிய பெருமை அரசாங்கத்தைச் சாரும். குறைந்தபட்ச அளவுக்கும் (fixed minimum) அதிகமான தொகைகளை அர சாங்கத் துறைகள் செக்கின் வழியாகத்தான் செலுத்த வேண்டும் என்று பிரான்ஸ் நாட்டில் 1940ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் ஆணை (decree) பிறப்பிக்கப்பட்டது. பொருள்கள், பணிகள், வாடகை, இன்ன பிற வசதிகள் இவைகளுக்காகச் செலுத்த வேண்டிய தொகை 3000 ஃபிராங்குக்கு (Francs—ஏறக்குறைய 40 ரூபாய்) அதிகமானல், அவற்றைச் செக்கு அல்லது பாங்கு வரைவு (bank draft) மூலமாகத்தான் செலுத்த வேண்டும் என இன்னும் ஒரு படி முன்னே சென்று பெடெயின் அரசாங்கம் (Petain

Government) கட்டாயப்படுத்திற்று. மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாய் அல்லது அதற்கு அதிகமான சம்பளம் வாங்கும் தங்கள் பணியாளர்களுக்கு, உள்ளாட்சி மன்றங்கள் (local authorities) செக்கு மூலமாக அவற்றைச் செலுத்தலாம்; அல்லது அவர்களுடைய பாங்குகளுடன் தொடர்பு கொண்டு, அவர்களுடைய கணக்குகளில் ஒவ்வொரு திங்களும் அவர்களுடைய சம்பள வரவு வைக்கப்படும் வண்ணம் ஏற்பாடு செய்யலாம். இவற்றின்மூலம் உள்ளாட்சி மன்றங்களும் செக்கு செலாவணியைப் பரப்பக் கைகொடுத்துதவலாம்; பாங்கை நாடும் வழக்கம் வளர்வதற்கும் அவை துணை புரிந்ததாகும். ஐக்கிய அரசாங்கம் (U.K.) 1960ஆம் ஆண்டு இயற்றிய கூலி செலுத்தல் சட்டத்தை (Payment of Wages Act) இங்கு மேற்கோளாகக் குறிப்பிடுதல் பொருத்தமுடைத்து. வேலையாள்களின் இசைவைப் பெற்று, அவர்களுடைய பாங்குக் கணக்குகளில் அவர்களது கூலியை அல்லது சம்பளத்தை வரவு வைக்கச் செய்யும் வேலையளிப்போரின் ஏற்பாட்டுக்கு, அந்தச் சட்டம் அனுமதியளிக்கிறது.

### செக்குகளின்மீது விரைவாகப் பணம் செலுத்துதல்

பணம் பெறும் முகப்பிலிருந்து செக்குகளின்மீது விரைவில் பணம் பெறும்வண்ணம் தேவையான வசதிகளைப் பாங்குகள் செய்ய வேண்டும். இத்துறையில் ஆங்கில பாங்குகளின் பழக்கத்தையறிந்து, அதைப் பின்பற்றுதல் பயன் தரும். ஆங்கில பாங்குகள் தங்கள் பணியாளர்களில் பொறுப்புள்ளவரை ரொக்கப் பகுதியில் செயலாற்ற அமர்த்துகின்றன. ஆனால் நம் நாட்டிலுள்ள பாங்குகளில் சில, காசுக்கடையின் (shroff) பணியாளர்களை, ஆண்டு ஒன்றுக்கு இவ்வளவு என்று ஒப்புக்கொண்ட பணத்தை மொத்தமாகக் கொடுத்து, ரொக்கப் பணியை ஆற்ற அமர்த்துகின்றன. சில இந்திய பாங்குகளில் இளம் பணக்கணக்கர் (Junior cashier) செய்யும் தவறுக்கும் விடுப்புக்கும் (commission and omission) தலைமைப் பணக்கணக்கரே (chief cashier) பொறுப்பேற்பதால், அவருடைய ஆள்களையே அந்தப் பணியில் அமர்த்திக்கொள்ள அவர் அனுமதிக்கப்படுகிறார். ஆகவே, இந்திய பாங்குகளின் காசாளர்களும் (shroffs), பணக்கணக்கர்களும் எந்த ஆபத்தையும் மேற்கொள்ள மனமும் துணிவுமின்றிச் செக்குகளின்மீது செலுத்த வேண்டிய சிறு தொகைகளையும் விரைந்து செலுத்துவதில்லை. இதற்கு மாறாக, இங்கிலாந்து நாட்டில் பணியாற்றும் பணக்கணக்கர்கள் பாங்குகளின் பொறுப்புள்ள பணியாளர்களாகையால், வாடிக்கைக்காரர்களை நன்கு அறிவர்; அவர்களுடைய கணக்குகளின் நிலையையும் ஏறத்தாழ அறிந்திருப்பர். எனவே, சிறு தொகைகளுக்கு எழுதப் பெற்ற செக்குகளின்மீது அவற்றை

எழுதியவர்களின் கணக்குகளைப் புரட்டிப் பார்க்காமலேயே பணம் செலுத்தி விடுதல் அவர்களது வழக்கம். இருப்பினும், போதுமான பணத்தை வைத்திருக்காமல், செக்குகளை வழக்கமாக வெளியிடும் வாடிக்கைக்காரர் இந்த வழக்கத்தினால் பயனடையாத வண்ணம் தடுக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. பொதுவாக, அவர்கள் கணக்கை முடித்து விடுதல் வழக்கம். இந்திய பாங்குகள் பிற நாட்டு பாங்குகளைப்போல் துணிச்சலான வழக்கங்களை மேற்கொள்ள விரும்ப மாட்டா ; இருப்பினும், பொறுப்பு வாய்ந்த தங்கள் பணியாளர்களை ரொக்கப் பகுதியில் செயலாற்ற அமர்த்துவதில் இடையூறோ மறுப்போ இருக்க நியாயமில்லை.

நாணயம் பேணும் காப்புறுதி (fidelity insurance), இன்ன பிற முன்னேற்பாடுகளைச் செய்து, இதனால் மேற்கொள்ளும் ஆபத்தை அவை ஈடு செய்துகொள்ளலாம்.

**பிற வசதிகள்**

அலுவலகங்களிலும், தொழிற்சாலைகளிலும் பணி புரிவோர் அவர்கள் பணத்தை வைக்கவும், செக்குகளின்மீது பணம் பெறவும் உதவும்பொருட்டுச் சில பாங்குகள் தங்கள் கிளையகங்கள் சிலவற்றை விடுமுறை நாள்களில் கொஞ்ச நேரமும், வேலை நாள்களில் வேலை நேரத்திற்கு முன்னும் பின்னும் திறந்து வைத்திருக்கின்றன. பாங்குகள் செல்வாக்குப் பெறவும், அவற்றின் தொழில் பெருகவும் இந்த வசதிகள் வழி செய்கின்றன.

சில பாங்குகள், வாடிக்கைக்காரர்களின் நலனைக் கருத்தில் கொண்டு, துளையொன்று செய்யப்பட்ட உறுதியான இருப்புப் பெட்டியைத் தங்கள் அலுவலகங்களில், வெளியே இருந்து அதை அணுகும் வண்ணம் பொருத்தமான இடத்தில் வைக்கின்றன. அலுவலகங்களிலோ அல்லது கடைகளிலோ அதிகமான பணத்தை வைத்திருக்க விரும்பாதவர்கள், பாங்குகள் மூடப்பட்டிருப்பினும், பணத்தைப் பொட்டணங்களாகக் கட்டி முத்திரை (seal) வைத்து, அந்தத் துளை வழியாக அப்பெட்டிக்குள் போட்டு விட்டுச் சென்று விடலாம். இதைப் போலவே செக்குகள், பிற மதிப்பு மிக்க பொருள்கள் அனைத்தையும் அப்பெட்டிக்குள் இட்டு விடலாம். முத்திரை வைக்கப்பட்டுள்ள இந்தப் பொட்டணங்களை அந்த பாங்கின் பொறுப்பு வாய்ந்த பணியாளர் மறுநாள் திறந்து பார்த்து, அவற்றைச் சரியான கணக்குகளில் வரவு வைக்க ஏற்பாடு செய்கிறார்.

**சேமிப்பு பாங்குக் கணக்கின்மீது செக்குகளை எழுத அனுமதி**

இறுதியாகச் சில குறிப்பான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுச் சேமிப்பு பாங்குக் கணக்குகளின்மீது செக்குகளை எழுத, பாங்குகள்

அனுமதிக்கலாம். சில மாற்று பாங்குகளும் (exchange banks), கூட்டுப் பங்கு பாங்குகளும் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு இந்தச் சலுகையை அளிக்கத் துவங்கி இருக்கின்றன. மற்றக் கூட்டுப் பங்கு பாங்குகள் அவற்றை ஏன் பின்பற்றக் கூடாது என்பதற்குத் தக்க காரணம் இருப்பதாகத் தென்படவில்லை. (மற்றக் கூட்டுப் பங்கு பாங்குகளும் இந்தச் சலுகையை அளிக்குமாறு வற்புறுத்தப் படுகின்றன.)

### அஞ்சல் சேமிப்பு பாங்குகள் அளிக்கும் வசதிகள்

செக்கு செலாவணியைப் பரப்புவதில் சமீப ஆண்டுகளில் அஞ்சல் மன்றங்கள் காட்டும் உற்சாகம் இங்குக் குறிப்பிடத்தக்கது. சேமிப்பு பாங்கு ஆலோசனைக் குழுவின் (Savings Bank Advisory Committee) பரிந்துரைகளைத் தொடர்ந்து, சேமிப்பு பாங்குக் கணக்கிலிருந்து சில குறிப்பான கட்டுப்பாடுகளுக்குட்பட்டுச் செக்கு களினால் பணத்தைத் திருப்பி எடுக்கும் (withdraw) வசதியைப் பம்பாயிலுள்ள பொது அஞ்சலகம் (G.P.O.) 1956ஆம் ஆண்டு ஜூலை 16ஆந்தேதி முதல் புதிதாகப் புகுத்தியது. தலைமை அஞ்சலகங்களிலும் (Head Post Offices), துணை அஞ்சலகங்களிலும் (Sub Post Offices) வைக்கப்படும் குறைந்தபட்ச இருப்பாக (minimum balance) 250 ரூபாயுள்ள கணக்குகளுக்கு 1958ஆம் ஆண்டு ஏப்ரல் 1ஆந்தேதியிலிருந்து இவ்வசதியளிக்கப்படுகிறது. 1959ஆம் ஆண்டின் இறுதியில் 256 தலைமை அஞ்சலகங்களிலும், 1565 துணை அஞ்சலகங்களிலும் இந்த வசதி தொடங்கப் பெற்று, தனி நபர் கணக்கு, கூட்டுக் கணக்கு (Joint account), கூட்டு நிறு வனங்கள் (private firms), கம்பெனிகள் ஆகியவற்றின் கணக்கு களுக்கு, அஞ்சலகச் சேமிப்பு பாங்கு விதிகளின் (Post Office Savings Bank Rules) 44ஆம் விதிப்படி, இவ்வசதி அளிக்கப்பட்டது. 1959ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களிலிருந்து சேமிப்பு பாங்கு அலுவலை நடத்தும் எல்லாத் தலைமை அஞ்சலகங்களுக்கும், துணை அஞ்சலகங்களுக்கும் இந்த வசதி நீடிக்கப்பட்டிருக்கிறது.

செக்கு வசதிகள் நாடு முழுவதும் பரவவில்லையாயினும், நகர்ப் புறங்களிலுள்ள பல அஞ்சல் சேமிப்பு பாங்குகள் இந்த வசதியை அளிக்கின்றன. அஞ்சல் சேமிப்பு பாங்குகளின் முக்கியத்துவம் அதிகரித்துக்கொண்டே இருப்பினும், அவை இன்னும் அஞ்சல கத்தின் துணைப்பகுதியாகவே இருக்கின்றன.

செலுத்த வக்குள்ளது (good for payment) என்ற பாங்கு களின் சான்றைத் தாங்கிய செக்குகளே 1958ஆம் ஆண்டு ஏப்ரல் 1ஆம் தேதிக்கு முன்பு அஞ்சலகச் சேமிப்பு பாங்குக் கணக்கில் வைப்பாக (deposit) ஏற்றுக்கொள்ளப்பட்டன. தற்பொழுதுள்ள

புதிய விதிகளின்படி, இந்தச் சான்று தேவை இல்லை. முதலாவது (initial) வைப்புக்குக்கூட அஞ்சலகத் தலைவருக்குச் (Post Master) சாதகமாக எழுதப் பெற்ற செக்குகள் எளிதாக ஏற்றுக்கொள்ளப் படுகின்றன.

## (செக்கு) தீர்வு (Clearing) வசதிகள்

செக்கை பயன்படுத்தும் பழக்கத்தைப் பரப்பும் வண்ணம், குறிப்பான தலைமை அஞ்சலகங்களில், தீர்வு வசதிகள் புதிதாகத் தொடங்கப் பெற்றுள்ளன. இதற்கு அந்த அஞ்சலகங்கள் இரண்டு நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும்: முதலாவது, அவை பணி யாற்றும் இடங்களில் இந்தியாவின் ரிசர்வ் பாங்கு நிருவகிக்கும் தீர்வகங்கள் அமைந்திருக்க வேண்டும்; இரண்டாவது, அவை ரிசர்வ் பாங்கின் துணை உறுப்பினர்களாக இருத்தல் வேண்டும். இந்தியாவின் ஸ்டேட் பாங்கு நிருவகிக்கும் தீர்வகங்கள் அமைந் துள்ள இடங்களுக்கு இவ்வசதியைப் பரப்பும் எண்ணம் மேலாண்மையாளர்களின் (authorities) தீவிர ஆலோசனையில் (active consideration) இருப்பதாகத் தெரிகிறது. முறையான பாங்கு வசதிகள் பரவ இன்னும் ஆண்டு பலவாகும் இடங்களி லெல்லாம் இன்று அஞ்சலகங்கள் பணியாற்றுகின்றன. எனவே, நாடு முழுவதும் பரவலாக அலுவலகங்களைக் கொண்டுள்ள தனி சிறப்பைப் பெற்றிருப்பதால், பாங்கை நாடும் பழக்கம், செக்கை பயன்படுத்தும் வழக்கம் ஆகியவற்றை வளர்க்கும் மாபெரும் பணி யில் பெருந்தொண்டாற்றும் வாய்ப்பை, அஞ்சலகச் சேமிப்பு பாங்குகள் மிகுதியாகப் பெற்றிருக்கின்றன. இந்நோக்குடன்தான் வைப்பு, திரும்ப எடுப்பு ஆகிய செயல்களுக்கு பாங்குத் தொழிலின் நடைமுறைக்கொப்பத் தங்கள் விதிகளை அஞ்சல் மேலாண்மை யாளர் மாற்றியமைக்கின்றனர். எனவே, அவர்களின் காலந்தழீய வளரும் இயல்பு (dynamism) மிகவும் போற்றத் தக்கதாகும். தேசீய வளர்ச்சித் திட்ட வட்டாரங்கள் (NES Blocks), சமூக வளர்ச்சித் திட்ட எல்லைகள், ஊராட்சி மன்றங்கள் ஆகியவற்றின் தலைமையிடங்களில் அமைந்துள்ள கிளை அஞ்சலகங்கள் அனைத்தும் சேமிப்பு பாங்கு வசதிகளை அளிக்க வேண்டும்; ஒவ்வோர் ஆண்டும் 6000 கிளை அஞ்சலகங்களைப் புதிதாகத் துவக்க வேண்டும் என்ற இலக்கு (target) தற்பொழுது நிறைவேறும் திட்டத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

## அஞ்சல் சேமிப்பு வைப்புகளின் திடீர் வளர்ச்சி

அஞ்சலகச் சேமிப்பு பாங்குகளின் செயல் வண்ணம் (performance) போற்றத் தக்கதாகும். செக்கு வசதிகளை அளித்தமை

யாலும், 1962ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களிலிருந்து வட்டி வீதத்தை ½ விழுக்காடு உயர்த்தியதாலும், அஞ்சல் பாங்குகளின் வைப்புகள் சமீப காலத்தில் வெகுவாக அதிகரித்துள்ளன. தனி நபர் சேமிப்பான அஞ்சலகச் சேமிப்பு பாங்கு வைப்புகளைப் பிற சேமிப்புடன் ஒன்றித்து, சிறு சேமிப்பின் தலைப்பில் காட்டுதல் பொருத்தமற்றது. அஞ்சலகச் சேமிப்பு பாங்கு வைப்புகளும், பிற வைப்புகளுக்கு இணையாக ரொக்கத் தன்மை (நீர்மை - liquidity) உடையனவாகையால், அவற்றையும் பிற பாங்கு வைப்புகளுக்குச் சமநிலையாகக் கருதுவதே பொருத்தமான செயலாகும்.

அஞ்சலகச் சேமிப்பு பாங்கை, அஞ்சலகத்தின் புற ஒட்டாகக் (adjunct) கருதாமல் தேர்ந்த பணியாளர்களை அமர்த்துவதோடு வாணிக பாங்குகளை முன்மாதிரியாகக் கொண்டு அவற்றைச் சீரமைத்தால், நாட்டுப்புறங்களில் வாழும் மக்களுடைய சேமிப்பைத் திரட்டும் (mobilisation) பணியில் இன்னும் பெரும் பங்கை அவை ஆற்ற இயலும்.

## ட்ஜிரோ முறை (Giro System), செலாவணி மாற்றுமுறை (Credit Transfer) ஆகிய இரண்டும் செக்குகளுக்கு மாற்று வழிகளாக அமைதல்

செக்கு செலாவணி பல நற்பயன்களைப் பெற்றிருப்பினும் சில ஐரோப்பிய நாடுகளிலும், ஜப்பான், இஸ்ரேல், எகிப்து, அல்ஜீரியா, ட்யூனிசியா, இன்ன பிற நாடுகளிலும் அதைப் பயன்படுத்தும் வழக்கம் நன்ருக விரிவடையவில்லை. இந்த நாடுகளில் 'ட்ஜிரோ' (Giro) முறையில்தான் பெரும்பாலும் பணம் செலுத்தப்படுகிறது. 'ட்ஜிரோ' என்ற சொல் கிரேக்கச் சொல். அதன் பொருள் 'சுற்றுப் பயணம்' அல்லது 'புழக்கம்' (circuit or circulation) ஆகும். இந்நூற்ருண்டின் தொடக்கத்திற்கு முன்பிருந்தே பணம் மாற்றும் இம்முறை ஜெர்மெனியில் பெருவழக்காக இருந்து வருகிறது. ஓர் எளிய மேற்கோளினுல் செக்கு மூலம் பணம் மாற்றுதலைக்காட்டிலும் ட்ஜிரோமூலம் பணம் மாற்றுதலின் முக்கிய நன்மைகளைத் தெளிவாக்கலாம்: பல மைல் தொலைவுள்ள நகரில் வாழும் B அவர்களுக்கு A என்பவர் குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலுத்த வேண்டும் என்று கொள்வோம். A என்பவர் செக்கு ஒன்று எழுதி B என்பவருக்கு அனுப்புகிருர். B என்பவர் அதைத் தம் பாங்கரிடம் அதன்மீது பணம் வசூலித்துத் தம்முடைய கணக்கில் வரவு வைக்க ஒப்படைக்கிருர். B என்பவரின் பாங்கு A என்பவருடைய பாங்

குக்கு அதை அனுப்பி, அதனிடமிருந்து செலுத்திய அறிவிப்பைப் பெற்றவுடன், B என்பவரின் கணக்கில் அந்தத் தொகையை வரவு வைக்கும். இந்தச் செய்முறை(proces)யினுல் கழியும் நேரத்தை எளிதாகக் கற்பனை செய்து பார்க்கலாம். A என்பவரின் பாங்கு அதைச் செலுத்த மறுத்தால், மறுத்த செக்கு A என்பவரிடம் திரும்ப, மறுபடியும் அவ்வளவு நேரம் விரையமாகும். இதற்கு மாருக ட்ஜிரோ முறையில், நான்குத் தாள்கள் (slips) கொண்ட ட்ஜீரோ இதழை A என்பவர் நிரப்பி, அவருடைய பாங்குக்கு (அல்லது அஞ்சலகத்திற்கு) அனுப்புவார். அதன் முதலிரண்டு தாள்களை A என்பவருடைய பாங்கு B என்பவரது பாங்குக்கு அனுப்பிவிட்டு, மூன்ருவது தாளை அவருடைய கணக்கில் பற்று வைக்குமாறு, வாடிக்கைக்காரரர் தனக்கிட்ட அதிகாரத்தின் சான்ருக வைத்துக்கொள்ளும்; பணம் அனுப்பியதை அறிவிக்கும் முகத்தான் நான்காவது தாளை A என்பவருக்குத் திருப்பி அனுப்பும். முதலிரண்டு தாள்களைப் பெற்ற B என்பவரின் பாங்கு, அதி லொன்றைத் தீர்வுக்காக நிறுத்திக்கொண்டு, மற்ருென்றை அவருடைய கணக்கில் வரவு வைக்கப்படுகிறது என்பதை அறிவிக்கும் முகத்தான் B என்பவருக்கு அனுப்பிவிடும். செக்கை போலன்றி அதற்கு நேர்மாருன முறையில், A என்பவரிடமிருந்து B என்பவருக்கு நேராகப் பணமாற்றம் ஏற்படுவதை இங்கு நோக்க லாம்: மறுக்கப்படும் என்ற அபாயமுமில்லை; மிக விரைவிலேயே B என்பவரின் கணக்கும் வரவு பெறுகிறது. இந்த முறையை உயர்ந்த அளவிற்குத் தரப்படுத்தி இயந்திர மயமாக்கி இருப்பதால், அதிக விரைவிலும், திறமையாகவும் பணமாற்றம் செய்யப் படுகிறது. மலிவுத் தன்மையே, இதன் சிறப்பு மிக்க அமிசமாகும். ட்ஜிரோ இதழ்கள் மிகக் குறைவான விலைக்குக் கிடைக்கின்றன. 100 இதழ்களைக் கொண்ட புத்தகம் ஏறத்தாழ இரண்டு ரூபாய்க்குக் கிடைக்கிறது. ட்ஜிரோ மாற்றல்கள் முத்திரை வரிக்கு உட்பட்டன அல்ல. வாடிக்கைக்காரரர்கள், குறிப்பாக அஞ்சல் ட்ஜிரோ மாற்று முறையின்கீழ், தங்கள் கணக்கு இருப்பு களின்மீது பெறும் வட்டியைக் கொண்டே, பணம் மாற்றும் செலவின் பெரும்பகுதியை ஈடுகட்டிக் கொள்ளலாம். ஹாலந்து நாட்டில் ட்ஜீரோ இருப்புகளின் வட்டியே வருமானத்தின் தலைமையான பகுதியாக இருப்பதுடன், எல்லாச் செலவுகளும் போகக் குறிப்பிடத்தக்க இலாபத்தைக் கொடுக்கிறது.

### செலாவணி மாற்றம் (Credit Transfer)

ட்ஜிரோ முறை வெளிப்படையான பல நன்மைகளைப் பெற்றிருந்த போதிலும், ஐக்கிய அரசாங்க மக்களை வெகுவாக அது கவரவில்லை. அங்கு செக்குமூலம் நிதியை மாற்றுதலே இன்னும்

பெரு வழக்காக இருக்கிறது. எனவே, ட்ஜிரோ முறையில் பற்றும் பழக்கமும் உடைய ஐரோப்பிய கண்டத்து மக்கள், சுற்றுவழியான செக்கு முறையில் பிரிட்டிஷ் மக்களுக்குள்ள நாட்டத்தைப் பார்த்து, அவர்களின் சகிப்புத் தன்மையை உணர்ந்து வியப்படை கின்றனர். ட்ஜிரோ முறையின் நன்மைகளை உணர்ந்தே, ராட்கிளிஃப் குழு (Radcliffe Committee) அதன் அறிக்கையில் பிரிட்டிஷ் பாங்குகள் அம்முறையைத் தழுவலாம் என்று குறிப் பிட்டது. ஐக்கிய அரசாங்கத்தில் அந்த முறை அதன் முழு வடிவத்திலும், பொருளிலும் இன்னும் தொடங்கப் பெறவில்லை யாயினும், அதை ஒத்த செலாவணி மாற்று முறையை அண்மைக் காலத்தில் தோற்றுவித்துள்ளனர். 1960ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் தீர்வு பாங்குகள் செலாவணித் தீர்வு வசதியைத் தொடங்கின.

வாணிகர்களுடைய வரவுக்கும் நடைமுறை ஆணை செலுத் தலுக்கும் (standing order payment) மட்டுமே அதைப் பயன்படுத்த லாம் என்று ஒரு வரம்பு விதித்தனர். பிற தீர்வு பாங்குகளிலுள்ள கணக்குகளின் வரவுக்காக வாடிக்கைக்காரர்கள் செலுத்தும் செலா வணியை பாங்குகள் ஏற்கும் வண்ணம், அக்டோபர்த் திங்களில் இந்தத் தீர்வு முறையின் நோக்கம் விரிவாக்கப்பட்டது. 1960ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் இறுதிவரை இந்தத் தீர்வு முறையில் பயன் பெற்ற 29 மில்லியன் ஆதாரச் சீட்டுகளின் மொத்தத் தொகை 2304 மில்லியன் பவுண்டு ஆகும் எனக் கணக்கிடப்பட்டது. இந்த வெற்றியினால் ஊக்கம் பெற்று, 1961ஆம் ஆண்டு மார்ச்சு மாதத் தொடக்கத்தில் இதனைக்காட்டிலும் பயன்மிக்க மூன்றும் நிலை (stage) தொடங்கப் பெற்றது. தற்பொழுது, பாங்கு ஒன்றின் வாடிக்கைக்காரராயிருப்பினும் அல்லது இல்லாவிடினும், இந்த வசதியை அளிப்பதில் பங்கெடுத்துக்கொள்ளும் எல்லா பாங்கு களுடைய எல்லாக் கிளையகங்களின் வாடிக்கைக்காரர்களுடைய வரவுக்காகவும், அதில் பணம் செலுத்தலாம். பணம் செலுத்து பவர் ஒரு குறிப்பிட்ட தாளில் வரவு பெறும் பாங்கின் பெயர், முகவரி, குழூக்குறி (Code) எண், வரவு வைக்கப்பட வேண்டிய கணக்கின் பெயர், அதன் எண் ஆகியவற்றை நிரப்பிக் கொடுக்க வேண்டும். வாடிக்கைக்காரரல்லாதவரிடம் ஒரு முறைக்கு ஆறு பென்ஸ் (pence) வீதம் கட்டணம் வசூலிக்கப்படுகிறது ; செலா வணி மாற்றத்தைத் துவக்கும் (intiate) வாடிக்கைக்காரரிடமிருந்து அவருடைய கணக்கின் நிலைமைக்குத் தக்கவாறு கட்டணம் வசூலிக்கப்படுகிறது. இரண்டு ஷில்லிங்கு ஆறு பென்ஸ் கட்ட ணத்தைச் செலுத்துவதன்மூலம் பெறுகின்ற பாங்குக்குச் செலா வணியை நேராக மாற்ற முடியும். அதனால் கால விரயம் தவிர்க்கப்படுகிறது. ஸ்காட்டிஷ் (scottish) பாங்குகள், பிற

வாணிக பாங்குகள், டிரஸ்டி (trustee) அல்லது அஞ்சலகச் சேமிப்பு பாங்குகள் ஆகியவற்றிலுள்ள கணக்குகளுக்குச் செலாவணியை மாற்றவும் இந்தத் தீர்வு பாங்குகள் முன் வந்துள்ளன. எனவே, ஆங்கிலத் தீர்வு பாங்குகளின் பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட கிளையகங்கள் அளிக்கும் இந்த வசதி மிகவும் மகத்தானது என்பது இங்கு நோக்கற்பாலது.

## இந்திய பாங்குகளும், ட்ஜிரோ, செலாவணி மாற்று முறைகளும்

மலிவுத்தன்மை, விரைவு ஆகிய இரட்டைச் சிறப்பியல்புகளும் நன்மைகளுந்தான், இந்த இரண்டு முறைகளும் செல்வாக்குப் பெற அடிப்படையாக இருந்தன. எனவே, இந்திய பாங்குகள் ஏற்றுக் கொள்ள இந்த உதவிச் சாதனங்கள் (expedients) உகந்தவையா என்ற வினவை, மேற்கூறிய இரட்டைக் காரணிகளின் பின்னணியில்தான் ஆராய வேண்டும். இந்தியாவில் செக்குகள் முத்திரை வரிக்கு உட்படாததால் செலுத்தும் தொகை பெரியதாயினும், அன்றிச் சிறியதாயினும், அவற்றின்மூலம் வசதியாகச் செலுத்தலாம் ; பண அஞ்சல் ஆணை (money order) மூலம் செலுத்த ஆகும் கட்டணத்தைக்காட்டிலும் வரைவு (டிராஃப்டு) மூலம் பணத்தை மாற்ற ஆகும் செலவு மிகக் குறைவாகும் ; இயந்திர மயமாக்குதல், தன்னியக்கப் பொறிகளைப் பயன்படுத்துதல் (automation) ஆகிய திட்டங்களைக் (பிற நாடுகளில் ட்ஜிரோ மாற்று முறையின் மலிவுக்கு, இவையே முக்கிய காரணங்கள் என்பதை நினைவிற்கொள்ள வேண்டும்.) குறிப்பிடத்தக்க அளவுக்கு இந்திய பாங்குகள் இன்னும் நிறைவேற்றவில்லை. எனவே, ட்ஜிரோ முறையை அல்லது செலாவணி மாற்று முறையை மலிவு என்ற அடிப்படையில் இந்தியாவில் தொடங்கத்தக்க வாய்ப்பும் தேவையும் தற்பொழுது இல்லை என்பது தெளிவாகிறது. இரண்டாவது காரணியான விரைவு என்பதை ஆராயுங்கால் பின்வரும் சிக்கல்கள் எழுகின்றன: பாங்கு வசதிகள் நாட்டுப்புறத்தை இன்னும் அடையவில்லை ; அப்படியே அடைந்தாலும், ஒருவருக்கொருவரின் உரிமைகளைத் தீர்த்துப் பணம் செலுத்தவல்ல திறம்பட்ட அமைப்பை அந்த இடங்களில் உருவாக்க வேண்டும் ; அவ்வமைப்புகளிலுள்ள கோளாறுகளினால் விளையும் காலதாமதம், தொந்தரைகள் முதலியவை, பாங்குகள் இந்த முறைகளைத் தழுவிக்கொண்டுள்ள ஆர்வத்தைத் தளர்த்திவிடும். மேலும் ஐரோப்பிய நாடுகளிலுள்ள பாங்குகளைப் போல, இந்திய பாங்குகள் இன்னும் இயந்திர மயமாக்கப்படவில்லையாதலின், அவைகளுக்கு இணையான செயல் விரைவை நம் பாங்குகள் பெறலரிது என்பதையும் கருத்திலிருத்திக்கொள்ள வேண்டும்.

## ட்ஜிரோ முறை சோதனைக்(Trial)குகந்தது

மேற்கூறிய கருத்துகள் ஒருபுறம் இருக்க, இயலும்வரை பயன்ளிக்கட்டும் என்ற நோக்குடன், ட்ஜிரோ முறையையும் செலாவணி மாற்று முறையையும் சோதனைக் கண்ணோட்டத்துடன் நம் நாட்டில் தொடங்கலாம். ஐக்கிய அரசாங்கத்திலுள்ள பாங்கு களின் செயல் முறையைத் தழுவி நம் நாட்டிலும் (பண) மாற்று முறையை உருவாக்க, இங்கு நிலவும் கிளை பாங்கு முறை (branch banking system) உறுதுணையாக இருக்கும். இந்த முறை (மாற்று முறை) செம்மையாகத் தரப்படுத்தப்பட்டால், நாளடைவில் விரைவைப் பெறும். அதனால் அது வளர்ச்சி பெற்று மலிவுத்தன் மையையும் அடையும். அப்பொழுது நம் பாங்குகள் குறைந்த கட்டணத்திற்கு (செலாவணி) மாற்றும் வசதிகளை அளிக்கலாம். இதன் விளைவாகக் காலப்போக்கில் பிறிதொரு முக்கியமான நன்மையையும் பாங்குகள் பெறலாம். இவ்வசதிகளை அளித்தலின் பயனாகப் புதிய வாடிக்கைக்காரர்களைக் கவரலாம்; அதிக வைப்பு களைத் திரட்டலாம்; எனவே, மிகுதியான இலாபமும் பெறலாம். செக்கு, வரைவு ஆகியவற்றின்மூலம் பிற இடங்களுக்குப் பணம் செலுத்துபவர்கள், பாங்கு கட்டணத்தோடு, அவற்றை அஞ்சலில் அனுப்ப ஆகும் செலவுகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் ட்ஜிரோ அல்லது செலாவணி மாற்று முறை, அஞ்சல் கட்டணத்தைத் தவிர்ப்பதால் அதன்மூலம் பணம் பெறும் அல்லது செலுத்தும் மக்கள் இவ்வசதிகளைச் சிக்கனமாக அடைய வழியேற் படுகிறது. செக்குகள் மறுக்கப்படுவது போல இங்கும் பணம் செலுத்த மறுக்கப்படும் என்று அஞ்ச வேண்டியதில்லை; பணத்தை யும் துரிதமாகப் பயன்படுத்திக்கொள்ளலாம். மேலும் சிறு தொகைகளைச் செலுத்த வரிசையில் நிற்க வேண்டிய தொல்லை யையும், அதனால் ஏற்படும் கால விரயத்தையும் குறைத்து மக்கள் எளிதாகப் பயன்பெற இது வழி செய்கிறது.

## வசூலிக்கும் கட்டணம்

சிறு தொகைகளுக்கு எழுதப் பெற்ற செக்குகளை வசூலிக்க, பாங்குகள் உயர்ந்த கட்டணங்களை விதிக்கின்றன என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. பாங்கு ஒன்று தொலைவிலுள்ள தனது கிளை யகத்தின்மீது எழுதிய செக்கைப் பிறிதொரு பாங்கு வசூலிப்பதற்கு விதிக்கும் கட்டணம் மிதமிஞ்சியது (எச்சமானது—excessive). ஒரு நிகழ்ச்சியில் சிறு தொகையான நூறு ரூபாய்க்கு எழுதப்பட்ட செக்கு ஒன்றை வசூலிக்க இரு பாங்குகள் விதித்த மொத்தக் கட்ட ணம் ஒரு ரூபாய் எழுபத்தைந்து பைசா என்பதை இந்நூலாசிரியர் அறிவார். எனவே, பணத்தைச் செலுத்த மலிவான வசதிகள்

இருக்க வேண்டியதன் அவசியத்தையும், நியாயத்தையும் இந் நிகழ்ச்சி விளக்குகிறது. சிறு தொகைகளைச் செலுத்துவதற்குச் செலாவணி மாற்று முறை மிகச் சிறந்த சாதனமாக (அருமருந் தாக) அமையும். மற்றொரு நிகழ்ச்சியில் பெரிய பாங்கு ஒன்று பெங்களூரிலுள்ள தனது கிளையகத்தின்மீது எழுதிய இலாப ஈவு ஆணை (dividend warrant) பம்பாயிலுள்ள 'பெரிய ஐந்து' (big five) என்று சொல்லப்படும் பாங்குகளில் ஒன்றினிடம் வசூலிப்பதற்காக ஒப்படைக்கப்பட்டது. அது வசூலாக ஏறத்தாழ 20 நாள்கள் கழிந்தன. இது போன்ற நிகழ்ச்சிகள் நம் நாட்டில் பாங்குத் தொழில் வளர்வதற்கும், செல்வாக்கு பெறுவதற்கும் மிகுந்த ஊறு விளைவிக்க வல்லன என்பதில் ஐயமில்லை.

### செக்கு என்பதன் வரையறுப்பு (இலக்கணம்)

செக்குகளை எழுதுதல், வசூலித்தல், செலுத்துதல் ஆகிய செயல்களைப் பற்றி எழும் பல்வேறு வினாக்களை ஆராயுமுன், 'செக்கு' என்பதற்குச் சட்டம் தரும் இலக்கணத்தை விளக்குதல் அவசியமானதாகும். 1881ஆம் ஆண்டு செலாவணி முறிச் சட்டத்தின் 6ஆம் பிரிவு செக்கு என்பதற்கு இலக்கணம் வகுக் கிறது. 'தெளிவாகக் குறித்த ஒரு பாங்கரின்மீது எழுதப்பட்ட, உரிமையுடன் கேட்டால் தவிர செலுத்த வேண்டும் என்று சொல்லப்படாத, உண்டியலே செக்காகும்.' இந்த இலக் கணத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ள உண்டியல் என்பதன் இலக்கணத்தை அறிதல் இன்றியமையாதது.

### உண்டியல் என்பதன் வரையறுப்பு (இலக்கணம்)

1881ஆம் ஆண்டு செலாவணி முறிச்சட்டத்தின் 5ஆம் பிரிவு, உண்டியலின் இலக்கணத்தைப் பின்வருமாறு இயம்புகிறது :

> குறித்த ஒருவருக்காவது அல்லது அவருடைய ஆணைக் கிணங்கவாவது அல்லது அதைக் கொணர்வோரிடமாவது குறித்த ஒரு தொகைச் செலுத்துமாறு குறிப்பிட்ட ஒரு வருக்கு அதை விடுப்பவர் இடும் நிபந்தனையற்ற ஆணையே 'உண்டியல்' ஆகும். அது எழுத்தால் எழுதப்பட்டிருக்க வேண்டும் ; விடுப்பவரின் கையொப்பத்தையும் தாங்கி யிருக்க வேண்டும்.
>
> குறித்த ஒரு நிகழ்ச்சி நிகழ்வதிலிருந்து, குறிப்பிட்ட காலப்பகுதி கழியும்போது, பணத்தொகை அல்லது அதன் தவணைகளில் ஒன்று செலுத்தப்படும் என்ற உறுதி மொழியோ அல்லது செலுத்துக என்ற ஆணையோ, இந்தப் பிரிவு, பிரிவு 4 ஆகியவற்றின் பொருளுக்கேற்ப, 'நிபந்தனை

யுள்ள' தாகாது—அந்த நிகழ்ச்சி எப்பொழுது நிகழும் என்பது மட்டுமே உறுதியற்றது ஆயினும், அது நிகழ்வது உறுதியே என்று மனிதகுலம் பொது முறையாகக் கருதினுல், செலுத்த வேண்டிய தொகையில் எதிர்கால வட்டி அடங்கியிருப்பினும் அல்லது குறிப்பிட்ட நாணய மாற்று வீதத்தில் அது செலுத்தப்படும் என்று கூறியிருப்பினும் அல்லது அது நாணய மாற்று வீதத்தின் போக்கைச் சார்ந்து இருப்பினும், இப்பிரிவு, பிரிவு 4 இவற்றின் பொருளுக்கேற்ப, அது 'குறித்த ஒரு' தொகையாகும்; செலுத்த வேண்டிய தொகையின் தவணைகளில் ஒன்றைச் செலுத்தத் தவறும்போது, செலுத்தாத மீதிப்பணத்தின் தவணை முதிர்ந்து, அது செலுத்துதற்குரியதாகும் என்று அந்த முறி கூறியிருப்பினும் அந்தத் தொகை 'குறித்த' ஒன்ருகும்.

கட்டளை இடப்பட்டிருப்பவர் அல்லது பணம் செலுத்தப் பட வேண்டியவர் இவர்தான் என்று தெளிவாக உணர முடியு மானுல், அவர் பெயர் தவருக எழுதப்பட்டிருப்பினும் அல்லது அவர் பதவி மட்டும் விவரிக்கப்பட்டிருப்பினும், இப்பிரிவு, பிரிவு 4 இவற்றின் பொருளுக்கிணங்க, அவர் 'குறித்த ஒருவர்' ஆவார்.

உண்டியலின் மாதிரி வகைகளுக்குப் பின்னிணைப்பு 'ஆ'விலுள்ள **24**ஆம் எண்ணைத் தாங்கிய படிவத்தைக் காண்க.

## செக்கின் இன்றியமையாத அமிசங்கள்

### எழுதப்பட்ட முறி

செக்கு, எழுதப்பட்ட ஒரு முறியாகும். வாய்மொழியான (oral) ஆணைகள் பிற அமிசங்களைப் பெற்றிருப்பினும், செக்குகள் ஆகமாட்டா. செக்கை எழுதப் பயன்படுத்த வேண்டிய எழுது கருவிகளைப் பற்றிய வரையறை எதையும் சட்டம் வகுக்கவில்லை. ஷெல்டன் (Sheldon) அவர்கள் கூறுவது போல், (அ) பென்சில் அல்லது மை (ஆ) தட்டச்சு அல்லது (இ) அச்சு எழுத்துகள் இவற்றினுல் செக்குகளை எழுதலாம். பென்சிலால் எழுதப்பட்ட செக்குகள் சட்டப்படி குறைபாடற்றவை. எனினும், பாங்குகள் இப்பழக்கத்திற்கு ஊக்கம் கொடுக்கக் கூடாது (discourage) [பாங்கியலின் சட்டமும், நடைமுறையும் (Practice and Law of Banking) ஹெச். பி. ஷெல்டன் அவர்கள், 6ஆம் பதிப்பு, பக். 2]. போர்முனைகளில் இருந்தவர்கள் அழிக்க முடியாத பென்சிலால் எழுதிய பல செக்குகளின்மீது, முதல் மாபெரும் போரின்போது (1914-1918) ஐக்கிய அரசாங்கத்திலிருந்து பாங்குகள் பணம்

செலுத்தின என்பது உண்மையே ; ஆனால், போர்க்காலத்திய விதி விலக்கான சூழ்நிலைகளே பாங்கர்கள் காட்டிய அச்சலுகைக்கு முக்கிய பொறுப்பாக அமைகின்றன. பென்சிலால் எழுதப்பட்ட செக்குகளுக்குப் பணம் செலுத்துதல் பல ஆபத்துகளைத் தாங்கி யிருக்கிறது. எவ்வாறெனில், எழுதுபவர் அங்கீகரிக்காத திருத்தங் களைச் செய்தலும் எளிது; கண்டுபிடிப்பதும் அரிது. எனவே, தங்கள் சொந்த நலனை முன்னிட்டேனும், பென்சிலால் எழுதப் பட்ட செக்குகளுக்குப் பணம் செலுத்துவதை பாங்கர்கள் ஒரு பழக்கமாக்கிக்கொள்ளக் கூடாது.

### நிபந்தனையற்ற ஆணை

முன்பு, செக்குகள் பழைய உலகத்திற்கு (ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய கண்டங்களுக்கு) உரித்த மரியாதை, நயம் இவற்றைத் தெரிவிக்கும் வாசகங்களைக்கொண்டிருந்தன. (நம்) நாட்டு உண்டியல்கள் (hundies) அவற்றை இன்றும் தாங்கியிருக் கின்றன. சாரமற்றப் பகுதி மட்டும் - அச்சிடப்பட்ட இன்றைய பத்திரங்களில் அவை இல்லாதிருத்தல் கண்கூடு. இன்றைய செக்கு நிபந்தனையற்ற ஆணையைக்கொண்டிருக்க வேண்டும். 'ஆணை' யென்றால், 'ஆணை' என்ற சொல்லையோ அல்லது அதே பொருளுள்ள வேறு சொல்லையோ பயன்படுத்தியிருத்தல் வேண்டும் என்கிற தேவையில்லை. 'செலுத்துக' (pay) என்ற சொல்லே, பொதுவாக, பாங்குக்கு இடும் ஆணையைக் குறிக்கும். 'தயவு செய்து' (please) என்ற சொல் 'செலுத்துக' என்ற சொல்லுக்கு முன் தோன்றுவதனாலேயே, அந்தப் பத்திரம் செல்லாததாகாது. மாறாகப் பின்வரும் சொல்லமைப்புக்கொண்ட முறியை, ஆணை என்று கருதவியலாது : 'ப்ளேக் (Black) அவர்களுக்கு, இதைக் கொணர்வோருக்குத் தயவு செய்து ஏழு பவுண்டைக் கொடுத்து, அதை என் கணக்கிலிடுங்கள் ; தாங்கள் இதைச் செய்வீர்களாக' என்பது செக்காகாது. செக்கின் ஆணை நிபந்தனையற்றதாக இருக்க வேண்டும் ; நிபந்தனையற்றது என்பதை விளக்கும் செலாவணி முறிச்சட்டத்தின் 5ஆம் பிரிவிலுள்ள 2ஆவது பத்தியை மேலே ஆண்டுள்ளோம் (quoted). பணத்தைச் செலுத்துவதுடன், ஏதாவது பிற செயலையும் செய்ய வேண்டும் என்று பாங்கரை அது வேண்டினால், அந்த ஆணை நிபந்தனையுள்ளதென்றாகிறது; அந்த முறியும் செக்கு என்று கருதற்கரியதாகிறது. உதாரணமாக, 'அடியில் இணைக்கப்பட்டுள்ள ரசீது கையொப்பமும் தேதியும் இடப்பட்டிருந்தால்' என்று குறிக்கப்பட்டு, அத்துடன் ரசீது ஒன்றும் இணைக்கப்பட்டுள்ள செக்கை, நிபந்தனையுள்ள ஆணையைத் தாங்கிய பத்திரம் என்றே கருதுதல் வேண்டும் ; அது போலவே அதன் தொகையைக் குறிப்பிட்ட நிதி ஒன்றிலிருந்து செலுத்த

வேண்டும் என வற்புறுத்தும் செக்கையும் நிபந்தனையுள்ள ஆணையைக் கொண்டுள்ளது என்றே கொள்ள வேண்டும். எனவே, இந்த இரண்டு பத்திரங்களும் செக்காக மாட்டா. எனினும், குறிப்பிட்ட கணக்கில் அதன் தொகையைப் பற்று வைக்க வேண்டும் என்ற குறிப்பையோ அல்லது அந்தச் செக்கு வெளியீட்டுக்கு வழி கோலிய பேரத்தின் (transaction) குறிப்பையோ அந்த ஆணை தாங்கியிருந்தாலும், அது நிபந்தனை அற்றதாகக் கருதப்படும். சில செக்குகளைக் கொடுக்கும்போது அந்தச் செலுத்தலுக்குக் காரண மான வழிப்பட்டியலின் (invoice) விவரங்களை அவற்றில் குறித்தல் அமெரிக்காவிலுள்ள வாணிகத் தொழிலமைப்புகளின் வழக்க மாகும். அது போலவே, ரசீதில் கையொப்பமிட வேண்டிய கட்டளையைப் பெறற்குரியவருக்கு இட்டிருந்தால், அது அந்தச் செக்கை செல்லாததாக்காது. ஏனென்றால், அது பாங்கருக்கு இட்ட ஆணையல்ல. எடுத்துக்காட்டாக, 'செலுத்துவதற்காகச் சமர்ப்பிக்குமுன், இந்த ரசீதில் கையொப்பமிட வேண்டும்' என்ற கட்டளை செக்கில் காணப்படினும், அது செக்கிலுள்ள ஆணையின் நிபந்தனையற்ற தன்மையைப் பாதிப்பதாகாது. மறைந்த சர். ஜான் பேஜட் அவர்கள், இந்தக் கூற்று சரியானதன்று என்று ஐயுற்றார். இருப்பினும், அதுபோன்ற ஆணைகள் நிபந்தனையற்றவை களாகவே, பொது முறையாக, நம்பப்படுகின்றன (ஹெச். பி. ஷெல்டன் அவர்களின் பாங்கியலின் சட்டமும் நடைமுறையும் என்ற நூல், 6ஆம் பதிப்பு, பக். 2).

### தெளிவாகக் குறித்த ஒரு பாங்கரின்மீது மட்டுமே

அந்த முறி தெளிவாகக் குறித்த (specified) ஒரு பாங்கரின் மீது மட்டுமே எழுதப்பட்டிருக்க வேண்டும். இதில் இரண்டு உட் கருத்துகள் உள. ஒன்று, அது பாங்கர் ஒருவர்மீது — பாங்க ரல்லாத பிற நபர்மீது அல்ல—எழுதப்பட்டிருக்க வேண்டும். இரண்டாவது, அந்த பாங்கரின் பெயர், இயன்றால், அவர் முகவரி யும் தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுது தான் எந்த ஆள் அல்லது நிலையத்திடம் அதைச் செலுத்த வேண்டுமோ, அவர் அல்லது அதைப் பற்றிய தவறு நேரா மலிருக்கும். எனவே, 'வழங்கு பட்டிகளைப்' (supply bills) போன்று அரசாங்கக் கருவூலங்களின்மீது இடும் ஆணைகளைச் சட்டத்திற்கிணங்க செக்குகள் எனக் கருத்வியலாது. இந்திய அரசாங்கத்தை பாங்கு என்று சொல்லுதல் பொருத்தமுடைத் தன்று. எனவே, அரசாங்கக் கருவூலங்களின்மீது எழுதப்படும் ஆணை, இந்திய ரிசர்வு பாங்கு அல்லது இந்திய ஸ்டேட் பாங்கு மீது எழுதும் ஆணையினின்றும் வேறுபட்டது. எனவே, 1881ஆம் ஆண்டு செலாவணி முறிச்சட்டத்தின் 85, 128, 131 ஆகிய

பிரிவுகள் அளிக்கும் சட்டப் பாதுகாப்பை, அவை பெறற்குரியன வல்ல.

**இங்கிலாந்திலும் இந்தியாவிலும் பாங்கர்களுடைய டிராஃப்டுகள்**

1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 3ஆம் பிரிவுக்கிணங்க, உண்டியல் என்பது ஓர் ஆள், பிறிதோர் ஆளின்மீது எழுதுவ தாகும். அ.து., (i.e.)[1] எழுதுபவரும், எழுதப் பெற்றவரும் இரு வெவ்வேறு ஆள்களாக அல்லது கூட்டு நிறுவனங்களாக அல்லது நிலையங்களாக (institutions) இருக்க வேண்டும். இதன் விளைவாக ஒரு பாங்கின் கிளையகம் அதன் தலைமையகத்திற்கு அல்லது அதே பாங்கின் பிறிதொரு கிளையகத்திற்கு எழுதும் பணம் செலுத்து ஆணை, செக்குக்கு ஒப்ப ஆகும் என இங்கிலாந்து நாட்டில் கருதப் படவில்லை; ஏனெனில், அந்த ஆணையை எழுதும் நிலையமும், எழுதப் பெற்ற நிலையமும் வெவ்வேறு எனக் கருதுதல் பொருத்தமற்றது. 1932ஆம் ஆண்டு இயற்றப்பட்ட உண்டியல் திருத்தச் சட்டம் (Bills of Exchange Amendment Act) பாங்கு வரைவுகளை (டிராஃப்டுகளை), செக்குகளுக்குச் சமமாக உயர்த்திற்று. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 76 தொடக்கம் 82 இறுதியாக வுள்ள பிரிவுகளை, (கீறலிட்ட செக்குகளைப் பற்றிய விதிகளைப் பகர்வன), 1906ஆம் ஆண்டு உண்டியல்கள் (கீறலிட்ட செக்குகள்) சட்டம் திருத்தியமைத்தது. இவ்வாறு திருத்தப்பட்ட அப்பிரிவு களனைத்தும் பாங்கு வரைவுகளுக்கு (செக்குகளுக்கு அவை பொருந்துவனபோல்) முற்றும் பொருந்தும். 'பாங்கு வரைவு' என்னும் சொற்றொடர், பாங்கொன்றோ அல்லது அதன் சார் பாகவோ, அதன் பொருட்டோ செலுத்த வேண்டிய வரைவைக் குறிக்கும்; தலைமையகமோ அல்லது அதனுடைய பிறிதொரு கிளையகமோ அதைச் செலுத்த வேண்டியிருக்கலாம். இந்தியச் சட்டத்திலுள்ள உண்டியலின் இலக்கணம், அந்த ஆணையை ஓர் ஆள், மற்றோர் ஆளின்மீது எழுத வேண்டும் என்று வற்புறுத்தா ததால் ஒரு பாங்கின் தலைமையகம் அதன் கிளையகங்களின்மீது எழுதும் வரைவுகளை, (பிற இன்றியமையாத அமிசங்களை அவை பெற்றிருந்தால்) செக்குகளுக்குச் சமமாகக் கருத வேண்டும்; அவ்வாறே கிளையகங்கள் தலைமையகத்தின்மீது எழுதும் வரைவு களும், கிளையகங்கள் ஒன்றின்மீது மற்றொன்று எழுதும் வரைவு களும் செக்குகளுக்குச் சமமாகும். 1930ஆம் ஆண்டின் XXVஆம் சட்டம் 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தில் 85 A என்ற பிரிவைப் புதிதாகப் புகுத்தியது. இதன் விளைவாக, வரைவு களைப் பற்றிய இந்தியச் சட்டம் மன நிறைவை அளிக்கத்தக்க வகையில் அமைந்திருக்கிறது. தற்பொழுது, வரைவுகளில் பெறற்

[1] அ.து. — அதாவது என்பதன் சுருக்கம்.

குரியவரின் புறக்குறிப்பு (endorsement) கள்ளக் கையெழுத்தைக் கொண்டதாக இருப்பினும், 85 A என்னும் பிரிவு முறைப்படி அவற்றைச் செலுத்தும் பாங்கருக்குச் சட்டப் பாதுகாப்பை (statutory protection) அளிக்கிறது. இங்கிலாந்து பாங்கின் (Bank of England) பணியாளர் ஒருவர், போர்க்கடன் பத்திரங்களின் (war stocks) மீது வட்டி செலுத்தும் முகத்தான், வட்டி ஆணைச் சீட்டு (interest warrant) ஒன்றில் கையொப்பமிட்டுக் கொடுத்தார். அதை, அந்த பாங்கில், அரசாங்கம் வைத்துள்ள நிதியின் மேல், அரசாங்கத்தின் பதிலாள் (agent) என்ற நிலையில் அந்தப் பணியாளர் கொடுத்தது; எனவே, அது செக்காகும் என்று மேல் வழக்கு மன்ற நீதிபதி ஃபின்லே அவர்கள், சிலிங்ஸ்பியும் பிறரும் (எ.) வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு லிமிடெட் (Slingsby and others A. Westminster Bank Ltd.—*1931*), *1* கே. பி. *173* என்ற வழக்கில் தீர்ப்புக் கூறினர். இந்த வழக்கில் அந்தப் பணியாளரின் இருமையான தகுதிகளை (dual capacity) வேறுபடுத்துதல், (ஒரு நிலையில் அவர் அந்த பாங்கின் பணியாள்; அதே சமயம் அவர் பிறிதொருவரின் பதிலாளாகச் செயலாற்றும் நிலை ஆகிய இரண்டையும்) நோக்கற்பாலது.

### குறித்த ஒரு தொகை மட்டுமே

குறித்த பணத்தொகை மட்டுமே செலுத்துவதற்கு அந்த ஆணை எழுதப்பட்டிருக்க வேண்டும். பிணையங்களை (securities) அல்லது குறித்த பிற பொருள்களை - அவற்றின் தன்மைகளை எளிதில் தீர்மானிக்க முடியும் என்றாலும் - கொடுக்குமாறு பாங்கருக்கு இடும் ஆணைகள், செக்குகள் ஆகா. மேலும் செலுத்த வேண்டிய பணத்தொகையும் குறித்த ஒன்றாக (திட்டவட்டமானதாக) இருக்க வேண்டும் என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். இந்தியாவிலுள்ள பாங்கு ஒன்றின்மேல்—ஸ்டெர்லிங் (sterling) நாணயத்திலோ அல்லது பிற அயல் நாட்டுச் செலாவணியிலோ (foreign currency)—எழுதப்பட்டுள்ள செக்கில் செலாவணி மாற்று வீதம் (foreign exchange rate) கூறப்பட்டிருந்தாலும், இந்தியச் செலாவணியாக அதை மாற்றிக்கொள்ள வேண்டிய வீதம், செலாவணி மாற்று நிலையின் போக்கால் (course of exchange) உறுதியாக்கப்படும் என்ற நிலைக்கு உட்படுத்தப்பட்டிருந்தாலும், அதன் தொகை மேலே ஆளப்பட்டுள்ள இலக்கணத்திற்கிணங்க, 'குறித்த ஒரு தொகையாக'வே கருதப்படும். அது போலவே, ஆணையில் காணப்படும் தொகையுடன், குறித்த ஒரு நிகழ்ச்சி நிகழும்வரை கொடுக்கப்பட்டுள்ள வீதத்தில் கூடும் வட்டியையும் சேர்த்துச் செலுத்தல் வேண்டும் என்று அது கூறினாலும், அந்த நிகழ்ச்சி, நிகழும் காலம் மட்டுந்தான் உறுதி

யற்றது. இருப்பினும், அது நிகழ்வது என்பது உறுதியே என்ற தன்மையுடையதாக இருந்தால், அந்தத் தொகை 'குறித்த' ஒரு தொகையாகும்.

செக்கின் தொகை

தம்முடைய பாங்கரைச் செலுத்துமாறு எழுதுபவர் விரும்பும் பணத்தொகையைத் தெளிவாக எழுதுதல் அவசியம். தவறுகளைத் தவிர்க்கும்பொருட்டு, வழக்கமாக, அது எழுத்தாலும் எண்ணாலும் கூறப்படுகிறது. எழுத்தாலும் எண்ணாலும் கூறிய தொகையின் முன்னும் பின்னும் வெற்று இடம் (blank space) விடக் கூடாது. உதாரணமாக, 80 ரூபாயுக்கு எழுதப்பட்டுள்ள செக்கு ஒன்றில், எழுத்தாலும் எண்ணாலும் தோன்றும் தொகைக்கு முன்பு வெறுமையான இடத்தை விட்டிருந்தால், அந்தத் தொகையை 'நானூற்று எண்பது ரூபாய்' என்று எழுத்தாலும் எண்ணாலும் மாற்றுதல் எளிது. வாடிக்கைக்காரர் (customer) ஒருவர், எழுத்தாலும் எண்ணாலும் எழுதப்பட்டுள்ள தொகைக்கு முன்னோ அல்லது பின்னோ அறியாமலும், கவனமில்லாமலும் வெறுமையான இடம் விட்டிருந்து, அந்த இடத்தில் கள்ளத்தன மாக உயர்ந்த தொகை எழுதப்பட்டு, பாங்கரிடம் செக்கொன்று சமர்ப்பிக்கப்படுகிறது என்று கொள்வோம். நியாயமான கவனம் (reasonable care) செலுத்தியும் அந்தக் கள்ளத் திருத்தம் (fraudulent alteration) பாங்கருக்குத் தென்படவில்லையென்றும் எண்ணிக்கொள்வோம். எனவே, அவர் அந்த மோசடித் தொகையைச் செலுத்தி விடுகிறார். அப்பொழுது உண்மையாகச் செலுத்திய தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கில் பற்று வைக்க அவருக்கு உரிமையும் நியாயமும் உண்டு [லண்டன் கூட்டுப் பங்கு பாங்கு (எ.) மேக்மில்லன் அவர்களும், ஆர்தர் அவர்களும் (1918) ஏ. சி. 777].

பெறற்குரியவர் குறித்த ஒருவராக இருக்க வேண்டும்

ஒரு முறி செல்லத்தக்க செக்காக வேண்டுமாயின், 'குறித்த' ஒரு நபரிடமாவது அல்லது அவருடைய ஆணையின்படியாவது அல்லது அதைக் கொணர்வோரிடமாவது (bearer) அதன் தொகையைச் செலுத்துமாறு அது எழுதப்பட்டிருக்க வேண்டும். 'ஆள்கள்' (persons) என்றால் மனிதர்கள் மட்டுமே என்று சட்டம் இயம்புவதில்லை. ஒப்புக்கொள்ளப்பட்ட சட்டத் தத்துவங்களுக்கு இணங்க, ஒப்பந்தம் செய்யும் உரிமையோடு, சட்டத்தால் அமைக்கப்படும் 'கூட்டமைப்புகளும்' (bodies corporate) ஆள்கள் என்னும் இலக்கணத்தில் உட்படுவன என்று சட்டம் அங்கீகரிக்கிறது. கூட்டுப் பங்குக் கம்பெனி, உள்ளாட்சி மன்றங்கள்,

கட்டட, நட்புச் சங்கங்கள், பொழுது போக்குச் சங்கங்கள் (clubs), தொழிற்சங்கம், வாணிகச் சங்கம், அறப்பணிச் சங்கம், பல்திறப்பட்ட நிலையங்கள் இவையனைத்தும் சட்ட 'ஆள்கள்' என்ற நெடும்பட்டியலில் இடம் பெறும். மேலும், பெறற்குரியவரை அறுதியிட்டுச் சுட்டிக் காட்ட, அவர் பெயரை முறியில் கூற வேண்டும் என்கிற தேவையில்லை. அவர் மேற்கொண்டுள்ள பதவியைக் குறிப்பிட்டாலே போதுமானது. எனவே, ஒரு கல்லூரியின் முதல்வர், ஒரு பள்ளியின் தலைமை ஆசிரியர், ஒரு சங்கத்தின் கருவூலர் (treasurer) அல்லது செயலாளர் ஆகிய இவர்களுக்குச் செலுத்த வேண்டிய முறிகளை, குறித்த ஓர் ஆளுக்குச் செலுத்த வேண்டியவையாகவே கருத வேண்டும். ஏனெனில், அந்தப் பதவிகளைத் தாங்கியிருக்கும் நபர்கள் சட்ட 'ஆள்களாக' அமைகிறார்கள். தவறாக ஒருவர் பெயரை எழுதினாலும் அல்லது ஒருவரை அவருடைய பதவியின் பெயரால் குறிப்பிட்டாலும் முறிகள் பழுதாவதில்லை.

### கேட்கும்போது செலுத்த வேண்டும்

கேட்கும்போது தவிர, செலுத்த வேண்டும் என்று சொல்லப்படாத ஆணையாக அது இருக்க வேண்டும். 'கேட்கும்போது' (on demand) என்ற சொல்லையோ அல்லது அதே பொருள் கொண்ட வேறு ஒரு சொல்லையோ செக்கில் எழுதத் தேவையில்லை. ஏனென்றால் முறியை எழுதுபவர், எழுதப் பெற்றவரைச் செலுத்துங்கள் என்று கேட்டு, அதைச் செலுத்துவதற்கான நேரத்தைத் திட்டவட்டமாகச் சொல்லவில்லையானால், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 19ஆம் பிரிவுப்படி, அந்த முறி, கேட்கும்போது செலுத்தப்படத்தக்கதாகவே கருதப்படும்.

### செக்குகளை எழுதுதல்

பாங்கர் ஒருவரின்மீது செக்கு எழுதும் உரிமை, நடப்புக் கணக்கு (current account) அல்லது அதன்மீது செக்கு எழுத அனுமதிக்கப்பட்ட சேமிப்பு பாங்கு கணக்கை உடைய வாடிக்கைக்காரருக்கே உண்டு. அதுவும் பாங்கருக்கும், அவருடைய வாடிக்கைக்காரருக்கும் இடையேயுள்ள தொடர்பின் தன்மையைச் சார்ந்துள்ளது என்பதை மூன்றாம் அத்தியாயத்தில் கண்டோம். இந்த உரிமைக்கு மேலும் ஒரு வரம்பு உள்ளது. செக்கின் தொகை, அந்த வாடிக்கைக்காரரின் கணக்கிலுள்ள வரவு இருப்பை (credit balance) மீறக் கூடாது; அல்லது அவருக்கு அதிகப் பற்று (overdraft) அளிக்க பாங்கர் ஒப்புக்கொண்டிருந்தால், செக்கின் தொகை அதிகப் பற்றுத்தொகைக்கு உள்ளாக இருக்க வேண்டும். இருப்பினும், செக்கை எழுதும்போது அவருடைய (வாடிக்கைக்காரருடைய) கணக்கில் போதுமான வரவு இருப்பு இருக்க வேண்டும் என்கிற தேவையில்லை; ஆனால், பாங்கர் அதை மதிக்க இயலும்

வண்ணம், அது சமர்ப்பிக்கப்படும் (presented) முன்னர் போது மான பணத்தைத் தம் கணக்கில் வைக்கத் தம்மால் இயலும் என்று எதிர்பார்க்க நியாயமான வாய்ப்பு இருக்க வேண்டும். அது போன்று நியாயமான வாய்ப்பு இல்லாதபோது, அவர் மற்ருெருவரைத் தம் செக்குக்கு எதிராக அவருடைய சரக்கு கஃளயோ அல்லது மதிப்புள்ள பொருள்கஃளயோ கொடுக்குமாறு வற்புறுத்தி அவரை இணங்கச் செய்திருந்து, அது மெய்ப்பிக்கப் பட்டால், அவர் ஏமாற்றிய குற்றத்திற்காகத் தண்டிக்கப் படுவார்.

## அச்சிட்ட செக்கு தாஃளப் பயன்படுத்தல்

### அச்சிட்ட செக்கு தாளின் நன்மைகள்

பாங்கர் வழங்கும் அச்சிட்ட செக்கு தாஃள வாடிக்கைக்காரர் கள் பயன்படுத்துதல் நன்மை பயக்க வல்லது. முதலாவது, கள்ளக் கையெழுத்து கொண்ட செக்குகள் எழுதுவதை, அது மிகவும் கடினமாக்குகிறது. வாடிக்கைக்காரர் ஒருவருடைய கையெழுத்தைக் கள்ளத்தனமாக இடுமுன், அவருக்கு அளிக்கப் பட்டுள்ள செக்கு தாளில் ஒன்றை அவன் அடைய வேண்டும்; இரண்டாவது, சாதாரணத் தாஃளக்காட்டிலும் அச்சிட்ட தாளில் எழுதப்பட்ட செக்கின் தொகை திருத்தப்பட்டிருப்பதைக் கண்டு பிடித்தல் மிகவும் எளிது; மூன்ருவது, எழுதுபவரின் கையொப்பம் தெளிவானதாகப் புரிந்துகொள்ளத் தக்கதாக இல்லாதபோது, செக்கு புத்தகப் பதிவேடுகஃளப் பார்த்து (யார் யாருக்கு எவ் வெண்கஃளக்கொண்ட தாள்கள் கொடுக்கப்பட்டன என்ற விபரங் கஃளக்கொண்டு) எழுதுபவரின் பெயரை அறிய அச்சிட்ட செக்குகள் துஃணயாயிருக்கும்; நான்காவது, சட்டத்தின் தேவைகள், நிபந்தஃனகள் இவற்றிற்கு ஏற்ப, செக்குகஃள எழுதும் தொந்தரை யினின்றும் வாடிக்கைக்காரர்கள் காப்பாற்றப்படுகிருர்கள்; ஐந்தாவது, குறித்த ஒரு செக்கின் தொகையைச் செலுத்தாமல் தடுத்து நிறுத்துமாறு பாங்கருக்குக் கொடுக்கும் அறிவிப்பில் அதன் எண்ஃணக் குறித்து அனுப்புதல் எளிதாகிறது; இறுதியாக, செக்கு மூலம் செய்த பல்வேறு செலுத்துகளுக்கு (payments) அவற்றின் சரிநேர்படிகஃளப் (counterfoils) பதிவேடுகளாகப் (records) பயன் படுத்தலாம். மேலும், செக்கு தாள்கள் அச்சிட்டவையாக இருந்தால், அவற்றை எழுத வேண்டிய சொல்லமைப்பில் (wording) தவறுகள் நேரா. எனவே, சட்ட இலக்கணத்திற்கு முரண்பட்டதாக அவற்றை எழுத இடமேயில்ஃல. பாங்கருடைய முகவரி, ஏற்கெனவே அச்சிடப்பட்டுள்ள வசதியும், செக்குகள் முத்திரை வரிக்கு இலக்காளுல், ஏற்கெனவே முத்திரைகள் ஒட்டப் பெற்றுள்ள வசதியும் கிட்டுகின்றன.

**வாடிக்கைக்காரர்களின் தொழிலை விளம்பரப்படுத்த சிறப்பாக அச்சிட்ட தாள்**

சில வாடிக்கைக்காரர்கள், குறிப்பாக வணிகர், தங்கள் பெயர் அச்சிடப்பட்டுள்ள சிறப்புத்தாளைக் கொடுக்குமாறு பாங்கரை வேண்டுகின்றனர். தங்கள் பெயருக்கும் தொழிலுக்கும் விளம்பரம் கொடுக்கும் நோக்கத்துடன்தான் பெரும்பாலும் அவர்கள் அவ்வாறு கேட்கின்றனர். சிறப்புத்தாள்களை அச்சிடக் கூடுதல் செலவாகும். எனினும், பெருங்கணக்கு வைத்திருக்கும் பெரிய வாடிக்கைக்காரர்கள் விரும்பி வேண்டும்பொழுது அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கும்பொருட்டு, பாங்கர்கள் சிறப்புத்தாளை அச்சிட்டு இலவசமாகவே வழங்குகிறார்கள். இந்தச் சலுகையை விரும்பும் பிற வாடிக்கைக்காரர்களிடம் அதற்கான கூடுதல் செலவை பாங்கர்கள் வசூலித்து விடுகின்றனர். இத்தகைய தாளின் அளவு பொதுவாக வழக்கத்திலிருக்கும் தாளின் அளவைக்காட்டிலும் பெரியதாக இருப்பின், அதைக் கையாளுவதைச் சிறிது கடினமாகவே பாங்கர் உணருவர். சில நேரங்களில் வாடிக்கைக்காரர்கள் விரும்பும் சிறப்புத்தாள், பெறற்குரியவர் பணத்தைப் பெறுமுன், நிரப்ப வேண்டிய ரசீதைத் தன்னுள் கொண்டிருக்கும். அப்பொழுது அவரிடமிருந்து இழப்பீடு செய் உறுதிப் பத்திரம் (letter of indemnity) ஒன்றைப் பாங்கர் பெற்றுக்கொள்ள வேண்டும். அந்த செக்கின் புறக்குறிப்பைப் போல், அந்த ரசீதும் கள்ளக் கையெழுத்திடப்பட்டிருப்பினும், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85, 128ஆம் பிரிவுகள் அளிக்கும் பாதுகாப்புக்கு அவர் உரியவராவார் என்ற உறுதிமொழியை அந்தப் பத்திரம் கொடுக்க வேண்டும். [சிறப்புத்தாளின் மாதிரிக்கு, பின்னிணைப்பு 'ஆ'வின் 5 (ஈ) என்ற எண்ணைத் தாங்கியுள்ள படிவத்தைக் காண்க.]

**சாதாரணத் துண்டுச் சீட்டில் எழுதிய செக்குகளை மதித்தல் (Honouring)**

செக்குகள், தாங்கள் அளித்த தாளில் எழுதப்பெறாமல், பிற சீட்டுகளில் எழுதப்பட்டிருப்பினும், அவற்றை மதித்துப் பணம் செலுத்துதல், இங்கிலாந்திலுள்ள பெரும்பான்மையான பாங்குகளின் வழக்கமாகும். இந்தியாவிலும் சில பாங்கர், தங்கள் ஆங்கிலக் கூட்டாளிகளைப் (confreres) பின்பற்றி அம்மாதிரியான செக்குகளைச் செலுத்துகின்றனர்; ஆயினும், பிற பாங்கர் அவற்றை வாங்கிக்கொள்ள மறுக்கின்றனர். பாங்கர் அளிக்கும் தாளில்தான் செக்கை எழுத வேண்டும் என்று சட்டம் வற்புறுத்தவில்லை. எனவே, பிற துண்டுச் சீட்டில் எழுதப்படும் செக்குகளை அவமதித்தல் (dishonouring), அந்தச் செயலை நியாயமான

தாக்கும் சரத்துகளைத் தாங்கிய சிறப்பு ஒப்பந்தம் ஒன்று பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமிடையே இருந்தாலன்றிச் சட்டத்திற்குப் புறம்பான செயலாகும். இருப்பினும், கணக்கைத் துவக்கும்போதுதான் கையொப்பமிட்ட விண்ணப்பத்தாளில் சுட்டிக் காட்டப்படும் அந்த பாங்கின் விதிகளுக்கு வாடிக்கைக் காரர் ஒருவர் உடன்பட்டவராகிறார். தாங்கள் வழங்கும் தாளில் தான் செக்குகளை எழுத வேண்டும் என்ற விதிக்கு எல்லா பாங்கு களும் தங்கள் வாடிக்கைக்காரரை இவ்வாறு கட்டுப்படுத்து கின்றன. எனவே, பிற துண்டுச் சீட்டில் எழுதிய செக்குகளை அவ் மதிக்கும் உரிமையை அவர்கள் பெறுகின்றனர். இருப்பினும், பிற துண்டுச் சீட்டில் அல்லது அவருக்கு அளிக்காத ஒரு தாளில் செக்கு எழுத ஒரு வாடிக்கைக்காரருக்கு நேர்ந்து, அது முறைப்படி எல்லா அமிசங்களையும் பெற்றிருந்து, அதன் தொகையைப் பற்றிய ஐயப்பாட்டை விளைவிக்கத் தக்கதாக எதுவும் இல்லையானால், பாங்கர், அதை மதித்துப் பணம் செலுத்துதல் விரும்பத்தக்க தாகவே தோன்றுகிறது. ஆயினும், அவருக்கு அளிக்கப்பட்டுள்ள தாளில் மட்டுமே செக்குகளை எழுதுவதன் பயனை வற்புறுத்தல் நன்று. எனவே, பாங்கர் தமக்கு அளித்துள்ள தாளில் மட்டுமே வாடிக்கைக்காரர்கள் செக்குகளை எழுதுதல் சாலச் சிறந்தது. தம்முடைய பாங்கின் பிற வாடிக்கைக்காரர்களுக்கு அளிக்கப் பட்ட தாளைக்கூடப் பயன்படுத்தாமல் இருத்தல் மிகமிகச் சிறந்தது.

## செக்குகளில் தேதியிடல்

செக்கை எழுதுபவர் அதைப் பிறரிடம் கொடுக்குமுன் அதில் தேதியிட வேண்டும். இல்லாவிடில், செக்கொன்று நியாயமான காலத்திற்கும் மேலாகப் புழக்கத்திலிருந்ததா இல்லையா என்று தீர்மானிப்பது கடினம். எழுதுபவர் அதில் தேதியிடாதிருந்தால், அதை வைத்திருப்பவரெவரேனும் தேதியிடலாம். 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 20ஆம் பிரிவு செக்கை வைத்திருப் பவருக்கு, அதில் தேதியிட முதல் தோற்ற (prima facie) உரிமையை அளிக்கிறது. நியாயமான காலவரம்புக்குள் ஆங்கில வழக்கு நீதியின்படி, அவர் அவ்வுரிமையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற தீர்ப்பு கிரிஃப்த்ஸ் (Griffiths) (எ.) டால்டன் என்ற வழக்கில் வழங்கப்பட்டது. செக்கு எழுதப் பெற்ற பாங்கரும் அதில் தேதியிடலாம். எனினும், பெரும் பான்மையான பாங்குகள் தேதியிடாத (undated) செக்குகளைச் செலுத்தாமல் திருப்பி அனுப்பி விடுவதே வழக்கமாக நிலவுகிறது,

**(செக்கில்) முன் தேதியிடலும், பின் தேதியிடலும்**

எழுதுபவர், எந்தத் தேதியில் அதை உண்மையிலேயே எழுதுகிருரோ, அதற்கும் முந்தைய அல்லது பிந்தையத் தேதியை அதில் இடலாம். அதன் வெளியீட்டுத் தேதிக்கும் (date of issue) முந்தைய தேதியை அது கொண்டிருந்தால், முன் தேதியிட்ட செக்கு (anti-dated cheque) என்றும், பிந்தைய தேதியைக் கொண்டிருந்தால், பின் தேதியிட்ட செக்கு (post-dated cheque) என்றும் அது அழைக்கப்படும். செக்கொன்று பின் தேதியிடப்பட்டு இருந்தால், காண்பித்துக் கேட்கும்போது (on demand) செலுத்த வேண்டிய அதன் இயல்பை இழந்து விடுகிறது. எனவே கண்டிப்பாகச் சொல்ல வேண்டுமாயின், அதை ஓர் உண்டியல் எனக் கருதுதலே சாலப் பொருந்தும். இருப்பினும், அதில் இடப்பட்டிருக்கும் தேதியன்ரு அல்லது அதற்குப் பின்போ அது சமர்ப்பிக்கப்படுமாஞல், அது தொடக்கத்தில் பின் தேதியிட்டதாக இருந்தது என்ற கருத்தின் அடிப்படையில், அதை மதித்துச் செலுத்த (honour), செலுத்தும் - பாங்கர் மறுக்கக் கூடாது. சட்டமன்றம் இந்தச் செக்குகளுக்குப் பெருமளவுக்கு உரிமை இணக்கமும் (sanction), ஊக்கமும் கொடுத்து விட்டது. முன் தேதியிடல் அல்லது பின் தேதியிடலிஞல் உண்டியல்கள் செல்லாததாக ஆவதில்லை. எந்தச் சட்ட நடவடிக்கையிலும் அதன் முத்திரைக்கு மறுப்புத் தொடுக்க முடியாது (பேஜட் என்பவரது பாங்கியலின் சட்டம் என்ற நூல், 5ஆம் பதிப்பு, பக்கம் *112*). பின் தேதியிடப்பட்ட செக்கை எழுதியவரின்மீது, அதில் காணும் வெளியீட்டுத் தேதிக்குப் பிறகு வழக்குத் தொடுக்கலாம் [வால்டர் மிட்செல் (எ.) ஏ. கே. டென்னெட் (Walter Mitchel v. A. K. Tennett) *52* கல். *677* (*1682*)]. சமர்ப்பிக்கப்பட்டவுடன் செலுத்துதலுக்கு உரியதாகும் செக்கைப் போலவே, பின் தேதியிட்ட செக்கும் அந்த அளவுக்குச் செலாவணித் தன்மையுடன் மாற்றத் தக்கது (negotiable). என்வே, அதைச் செலுத்த வேண்டிய தேதிக்கு முன், தமக்குச் சாதகமாகப் புறங்குறித்துப் பெற்றவரை, முறைப்படி பெற்றவரல்லர் என்று கூறுதல் ஆதாரமற்றது (ஹாஜி முகமது ஹனீஃப் சாகிப் & கம். (எ.) எஸ். எஸ். அபூபேக்கரும் பிறரும், *1956*, எம். எல். ஜே. *471*).

**பெறற்குரியவர் (payee)**

குறித்த ஒருவரின் ஆணையின்படியோ அல்லது அதைக் கொணர்வோரிடமோ செலுத்துமாறு செக்கை எழுதலாம் என்று முன்பே கண்டோம். '.........ஆணையின்படி செலுத்துக' ('pay to.........order') என்ற சொற்களை 'என் ஆணையின்படி செலுத்துக' என்று பொருள் கொள்ளலாம் (பாங்கியலின்

சட்டமும் நடைமுறையும், நூலாசிரியர் ஹெச். பி. ஷெல்டன், 2ஆம் பதிப்பு, பக். 8). இருப்பினும், சேம்பெர்லின் (எ.) எங்ஃ (1893) எல். ஆர். 2 ஒ. பி. 206 என்ற வழக்கில் கூறிய தீர்ப்பை நோக்குமிடத்து, '.........என்பவருக்கு அல்லது ஆணை யின்படி' செலுத்துக என்று எழுதப்பட்டுள்ள செக்கின் வெறுமை யான இடம் நிரப்பப்படும்வரை, அது செல்லத் தக்கதாகுமா என்பது ஐயம்தான். ஆயினும், 'என்பவருக்கு' என்ற சொல்லுக்கு முன்னுல் விடப்பட்டிருக்கும் வெறுமையான இடத்தை, வைத்திருப்பவர் நிரப்பிச் சமர்ப்பித்தால், அதில் காணும் நபருக்கோ அல்லது அவருடைய ஆணையின்படியோ, செலுத்தும் - பாங்கர் அதன் தொகையைச் செலுத்துதல் முறையேயாகும் [ஹீனே (எ.) அட்டி (1910) 2 ஐ. ஆர். 688]. அதற்கு மாருக, '.........அல்லது கொணர்வோரிடமாவது' செலுத்துக என்று எழுதப்பட்டுள்ள செக்கு செல்லத் தக்கதாகவே கருதப்படுகிறது. 'உண்டியல் ஒன்று கொணர்வோரிடம் செலுத்தத் தக்கதாக (payable) இல்லாவிட்டால், பெறற்குரியவரை அதில் குறிக்க வேண்டும்' என்று செலாவணி முறிச்சட்டத்தின் 7 (1)ஆம் பிரிவு கூறுகிறது. 'எழுதுபவர், எழுதப்பெற்ற பாங்கர், பெறற் குரியவர் அல்லது பெறற்குரியவரைக் குறிக்கவில்லையென்றுல், கொணர்வோர் முதலியவர்களைக்கொண்டதே இயல்பான செக்கு' என்று சர். ஜான் பேஜட் அவர்கள் கூறுகிருர்.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆள்களுக்குக் கூட் டாகவோ அல்லது அவர்களில் ஒருவருக்கோ செலுத்தத் தக்கதாக செக்கை எழுதலாம். சிலபொழுது கற்பனை (fictitious) ஆள்களுக்குச் செலுத்துமாறு அவை எழுதப்படலாம். ஆனுல், அவை உடையவர் செக்காகவே நடத்தப்படும். இனப் பெறற் குரியவர்களுக்குச் (impersonal payees) சாதகமாக எழுதப்படும் செக்குகளும் (மேற்கோள், கூலி, சில்லரை, ரொக்கம், இன்ன பிற) உடையவர் செக்கைப் போலவே பொதுவாக ரொக்கமாக்கப் படுகின்றன. 'ரொக்கம்' அல்லது 'கூலி' இன்ன பிற அல்லது 'ஆணையின்படி' என்று இனப் பெறற்குரியதுக்குச் சாதகமாக எழுதும் செக்கு, செக்கே அல்ல. அதைச் சமர்ப்பிப்பவருக்கு அதன் தொகையைச் செலுத்துமாறு பாங்கருக்கு இடும் வெறும் கட்டளையைக் கொண்டது அது என்ற கருத்தை நார்த், சவுத் இன்சூரன்ஸ்கார்ப்பொரேஷன் லிமிடெட்,(எ.)நேஷனல் ப்ரொவின் ஷியல் பாங்கு லிமிடெட் (1936) 1 கே. பி. 328 என்ற வழக்கில் நீதிபதி பிரான்சன் (Branson) அவர்கள் அறிவித்தார். நீதிபதி அவர்கள் அந்த முடிவுக்கு வந்ததற்குக் காரணம், செக்கின் இலக் கணமே. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 73ஆம் பிரிவு

(45 & 46 விக்ட். சி 61) வகுக்கும் இலக்கணப்படி செக்கு என்பது, கேட்கும்போது செலுத்துமாறு பாங்கருக்கு எழுதப்பட்ட ஓர் உண்டியலே; அதே சட்டத்தின் 3ஆம் பிரிவு கூறும் இலக்கணத் திணங்க, உண்டியல் என்பது குறித்த ஓர் ஆளுக்கோ அல்லது அவருடைய ஆணையின்படியோ அல்லது அதைக் கொணர் வோருக்கோ செலுத்துமாறு கூறும் நிபந்தனையற்ற ஆணையைக் கொண்டுள்ள பத்திரமாகும். 'ரொக்கம்' அல்லது 'ஆணையின்படி' செலுத்துக என்ற கட்டளையைத் தாங்கியுள்ள பத்திரம், மேற் கூறிய 3ஆம் பிரிவு வேண்டும் வண்ணம், குறிப்பிட்ட ஆளுக்குச் செலுத்தத் தக்கதல்ல. அம்மாதிரியான பத்திரம் உண்டியல் அல்லவாதலின், முறையின்றி (wrongful) வைத்திருப்பவர் அவருக்கு அதன்பாலுள்ள உரிமையைக்காட்டிலும் செம்மையான உரிமையைப் பிறருக்கு வழங்க முடியாது என்ற கருத்தையும் நீதிபதி அவர்கள் வலியுறுத்தினர். இருப்பினும், இம்மாதிரியான முறிகளுக்கும், 'நீர் வரி அல்லது ஆணையின்படி' அல்லது 'வருமான வரி அல்லது ஆணையின்படி' செலுத்துமாறு எழுதப்படும் முறி களுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை அறிதல் வேண்டும். பின் சொன்ன செக்குகள் நீரளிப்பு மேலாண்மைக்கு அல்லது வருமானவரித் துறைக்குச் செலுத்த வேண்டியவையாகும்.

**வரையறை செய்த பெறற்குரியவர் (Restrictive Payee)**

பெறற்குரியவரிடம் மட்டுமே செக்கின் தொகை செலுத்தப் பட வேண்டும் என்று விரும்பினால், 'மட்டுமே' என்ற சொல்லைப் பெறற்குரியவரின் பெயருக்குப் பின்னால் சேர்த்துவிட்டு, 'ஆணை யின்படி அல்லது கொணர்வோரிடம்' என்ற சொற்களை அடித்து விட வேண்டும். 1919ஆம் ஆண்டுச் செலாவணி முறிச் (திருத்தப் பெற்ற) சட்டம் இயற்றப்படுவதற்கு முன் நிலவிய சட்டம் பெறற் குரியவரின் பெயருக்கு அடுத்துக் காணப்படும் 'ஆணைக்கிணங்க' அல்லது 'கொணர்வோரிடம்' என்ற சொற்களை அடித்து விடுதல், அச்செக்கை செலாவணித் தன்மையோடு மாற்றத் தக்கதை (negotiability) வரையறுக்கும் என்று கூறியது. இருப்பினும், இந்தியாவிலுள்ள பாங்கர், இங்கிலாந்தில் உள்ள அவர்கள் கூட்டாளிகளைப் போல், அம்மாதிரி செக்குகளை 'ஆணைச் செக்கு' (order cheque) என்றே பாவித்தார்கள் (treated). சட்டத் திற்கும் நடைமுறைக்கும் இடையே இருந்த இந்த முரண் பாட்டைப் பம்பாய் உயர்நீதி மன்றம் [தொஸ்ஸாபாய் (எ.) விர்ச்சண்டு (1919), 21 பம். எல். ஆர். 1] சுட்டிக் காட்டியது. அந்த வழக்கின் தீர்ப்பைச் செல்லாததாக, கட்டுப்படுத்தாததாக ஆக்கும் நோக்கத்துடன்தான் மேற்கூறிய திருத்தச் சட்டம் இயற்றப்பட்டது. எனவே, தற்பொழுது இம்மாதிரியான செக்குகள் செலாவணித் தன்மையுடன் மாற்றத் தக்கவையே,

### செக்கு தொகையைத் திருத்தும் மோசடியைத் தடுக்க ஏற்பாடுகள் (Devices to Prevent Fraudulent Alteration of Amount)

செக்கிலுள்ள தொகையை மோசடியாகத் திருத்துவதைத் தடுக்க, தற்காலத்தில் பல வேறு ஏற்பாடுகளைச் செய்கின்றனர். மனநிறைவை அளிக்கும்வண்ணம், 'புரொடெக்டோகிராப்' என்ற பொறியும், துளையிடும் கருவியும் பயன்படுத்தப்படுகின்றன. இயைபுப் பொருள்களின் (chemicals) துணையுடன் செய்யப்படும் திருத்தங்களை அப்பட்டமாகக் காட்டும் சிறப்பியல்பைக் கொண்ட தாளில் செக்குகளை அச்சிட்டு, சில பாங்குகள் வழங்குகின்றன. 'நூறு ரூபாயுக்குக் கீழ்' போன்ற சொற்கள், செக்கின் தலைப்பு அல்லது குறுக்கே சிலபொழுது எழுதப்படுகின்றன.

### வெளிநாட்டுச் செலாவணியில் எழுதப்படும் செக்கு

வெளிநாட்டுச் செலாவணியில் செக்குகளை எழுதச் சட்டத்தில் மறுப்பேதும் இல்லை என்று முன்பே கண்டோம். அவ்வாறு எழுதப் பட்டால், சமர்ப்பிக்கும்பொழுது நிலவும் வெளிநாட்டுச் செலாவணி மாற்று வீதத்தில், உள்நாட்டுச் செலாவணியாக அது செலுத்தப்படும். கோன் (எ.) பவுல்கன் (1920), 36 டி. எல். ஆர். 767 என்ற வழக்கில், லண்டன் கவுண்டி வெஸ்ட்மின்ஸ்டர் அண்ட் பார்ஸ் பாங்கு லிமிடெட் என்ற பாங்கின் லண்டன் கிளையகங்களில் ஒன்றின்மீது 7,680 ஃபிராங்குக்கு (பாரிஸ்) செக்கு ஒன்று எழுதப் பட்டது. அம்மாதிரியான செக்குகளைச் சமர்ப்பிக்கும் நாளன்று அந்த மணியில் நிலவும் செலாவணி மாற்று வீதத்தில், ஸ்டெர்லிங் காக அவற்றை, அவற்றின் பெறற்குரியவர்களுக்குச் செலுத்து வதும், அந்தத் தொகையை எழுதுபவர் கணக்கில் பற்று வைத்துக் கொள்வதும், பாங்கரின் நிலைபெற்ற வழக்கமாகும் என்று சான்று தரப்பட்டது. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 8ஆம் பிரிவின் பொருளுக்கிணங்க, அப்பத்திரத்திலுள்ள தொகை குறித்த ஒரு தொகைதான் என்றும், எனவே அப்பத்திரம் ஒரு செக்குதான் என்றும் அவ்வழக்கில் நீதிபதி அவர்கள் தீர்ப் பளித்தார். வெளிநாட்டுச் செலாவணியை, உள்நாட்டுச் செலா வணியாக மாற்றுவதற்குச் செலுத்தும்-பாங்கர் அளிக்கும் வீதம், செக்கை வைத்திருப்பவருக்கு ஏற்புடைத்தாக இல்லையென்றால், அவருக்கு வெளிநாட்டுச் செலாவணியில் எழுதிய வரைவைக் கொடுத்து விடுதலே இங்கிலாந்திலுள்ள பாங்கரிடையே நிலவும் பழக்கமாகும்.

### அம்ச திருத்தங்கள் (முக்கிய மாற்றங்கள்)

முறியின் இயக்கத்தையும், அதனுடைய கட்சியாளர்களின் (parties) பொறுப்பையும் முக்கியமாகவோ அல்லது பெருமளவோ

எவ்வகையிலேனும் மாற்றத் தக்க திருத்தங்களை அம்ச திருத்தங்கள் (material alterations) என்று பொதுமுறையாகக் கூறலாம். பெறற்குரியவருக்குக் கெடுதி விளைவிப்பவையாகவே அவை இருக்க வேண்டும் என்கிற தேவை இல்லை. வாணிக நோக்கோடு எழுதப்படும் பத்திரத்தின் (வாணிக நடப்பில் அதற்குக் கொடுக்கப்படும்) சிறப்பியல்புகளை மாற்றத் தக்க திருத்தங்களும் இவ்வகையில் சேரும் [ஆல்டஸ் (எ.) கார்ன்வெல் (1868), எல். ஆர். 3, க்யூ. பி. 573]. ஒரு முறியைச் சட்டப்படி வேறு மொழியில் (பாணியில்) பேச வைக்கும் மாறுதல்களையும், அதன் சட்ட அடையாளங்களையோ அல்லது இயல்பையோ மாற்றுவதன் மூலம் அதனுடைய கட்சியாளர்களையோ அல்லது அவர்களிடையே யுள்ள உறவையோ மாற்றவல்ல திருத்தங்களையும் அம்ச திருத்தங்கள் எனலாம் (கவுர் சந்திர தாஸ் (எ.) பிரசன்ன குமார சந்திரா, 33 கல். 812, 816). அவ்வாறு திருத்தப்பெற்ற முறி, செக்கே அல்ல என்று கருதப்படலாம். இந்தியச் சட்டத்தில், அது செல்லாத ஒன்று (1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டம், 87ஆம் பிரிவு), சிலிங்ஸ்பியும், பிறரும் (எ.) வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு லிமிடெட் (1931), 1 கே. பி. 173 என்ற வழக்கின் முக்கிய நிகழ்ச்சிகள் பின் வருமாறு: சிலிங்ஸ்பி அவர்களும் அவரைச் சார்ந்தோரும் நிறைவேற்றுபவர்களாகவும் (executors), கம்பர்பர்ச் என்பவர் அவர்களின் வழக்குரைஞராகவும் (solicitor) செயலாற்றி வந்தனர். கம்பர்பர்ச் என்பவர் புகழும் செல்வமும் வாய்ந்தவர். போர்க்கடன் பத்திரங்களை வாங்குவதற்காக ஜான் பிரஸ்டு & கம். என்ற நிறுவனத்திற்கு £ 5000க்கு செக்கு அனுப்ப அவர்கள் முடிவு செய்தனர். எனவே, அவர்களின் வழக்குரைஞர் என்ற தகுதியில் கம்பர்பர்ச் என்பவர் 'ஜான் பிரஸ்டு & கம்பெனிக்கு அல்லது ஆணையின்படி செலுத்துக' என்று செக்கொன்று எழுதி, நிறைவேற்பாளர்களின் கையொப்பங்களைப் பெற்ருர். உடனே அவர், ஜான் பிரஸ்டு & கம். என்னும் பங்குத் தரகு நிறுவனத்திற்குப் போர்க்கடன் பத்திரங்களை வாங்கும்பொருட்டு, அதை அனுப்பியிருக்க வேண்டும். அதற்கு மாருக, அவர் திட்டமிட்டுச் செய்த இடத்தில் 'அல்லது ஆணைப்படி' என்ற சொற்களுக்கு முன்னேயுள்ள வெறுமையான இடத்தில் 'கம்பர்பர்ச் அண்டு பாட்ஸ் மூலமாக' என்ற சொற்களை நிரப்பி, அதன் இயல்பையே மாற்றிவிட்டார். எழுதுபவர்களின் கையொப்பங்களைத் தவிர, அச் செக்கில் நிரப்பப்பட்ட பிறவெல்லாம் கம்பர்பர்ச் என்பவர் கைப்பட எழுதியவை என்பது இங்கு நினைவிற்கொள்ளத் தக்கது. நிறைவேற்பாளர்கள், இந்தத் திருத்தத்தை அறியவோ, அங்கீகரிக்கவோ இல்லை என்பதும் இங்கு அறியற்பாலது. பிறகு

கம்பர்பர்ச் என்பவர் அதில் 'கம்பர்பர்ச் அண்டு பாட்ஸ்' என்று புறங்குறித்து, வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கின் மான்செஸ்டரிலுள்ள கிளையகத்தில் செலுத்துச்-சீட்டு (paying-in-slip) ஒன்றை நிரப்பி, பேலடைன் தொழில் நிதியம் என்னும் கம்பெனியின் கணக்கில் அதைச் செலுத்தினர். அவர் அந்தக் கம்பெனியின் தலைவராகவும், கட்டளையாகவும் இருந்தார். நான்கு மாதங்களுக்குப் பிறகு இந்த மோசடி வெளி வந்தது. அதை வசூலித்ததன்மூலம் அந்தப் பாங்கு சட்ட முரண்பாடான உரிமை மாற்றம் (conversion) செய்தது என்ற குற்றச்சாட்டின் அடிப்படையில், நிறைவேற்பாளர்கள் அச்செக்கின் உண்மையான உரிமையாளர் என்ற முறையில் வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கின்மீது வழக்குத் தொடுத்தனர். அதில் செய்யப்பட்ட அங்கீகாரமற்ற திருத்தத்தின் விளைவாக, அந்தப் பத்திரம் பிரதிவாதிகளிடம் கொடுக்கப்பட்டபோது, செல்லத்தக்க செக்கு அல்ல என்றும், எனவே, அதன் அடிப்படையில் பிரதிவாதிகளின்மீது எந்த நடவடிக்கையையும் எடுக்க வியலாதென்றும், அந்த வழக்கை விசாரித்த நீதிபதி பின்லே அவர்கள் கூறினர். பிரதிவாதிகள் செக்கையோ அல்லது வாதிகளின் பணத்தையோ கையாளவில்லை. 'வாதிகள் பிரதிவாதிகளிடையே ஒப்பந்த உறவு இன்மையால், புறக்கணிப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை. அந்தப் பத்திரம் அந்த பாங்கின் கையுக்கு வந்தபோது செக்கு அல்லவாதலால், 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 82ஆம் பிரிவு, இங்குப் பொருந்தாது என்று நான் கருதுகிறேன்' என்று கூறி வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு (கடமையைப்) புறக்கணித்த குற்றத்திற்கு ஆளாகாது எனத் திட்டவட்டமாக நீதிபதி அவர்கள் தெளிவுபடுத்தினர். அதற்குப் பிறகு, நிறைவேற்பாளர்கள், செலுத்தும்-பாங்கரான, மாவட்ட பாங்கின்மேல் வழக்குத் தொடுத்தனர்[1931, (2 கே. பி. 588]. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 64 (1)ஆம் பிரிவின் பொருளுக்கிணங்க, கம்பர்பர்ச் என்பவர் சட்டத்திற்குப் புறம்பாகவும் அங்கீகாரமின்றியும் செக்கில், அம்சத் திருத்தம் செய்தார். அவர் அதிலிட்ட புறக்குறிப்பும் முறையற்றது என்ற வார்த்தைகளின் அடிப்படையில், அந்த பாங்கு சட்ட முரண்பாடான உரிமை மாற்றம் செய்தது என்ற குற்றத்தைச் சாட்டி, தங்கள் கணக்கில் வைக்கப்பட்ட £ 5,000 பற்றை நீக்குமாறு ஆணை பிறப்பிக்க அந்த வழக்கில் நிறைவேற்பாளர்கள் வேண்டியிருந்தனர்; அந்தச் செக்கைத் தீர விசாரிக்காமல் செலுத்தியதன்மூலம், தங்களுக்கு அது செய்ய வேண்டிய கடமையினின்றும் வழுவிய (breach of duty) குற்றத்திற்கும், புறக்கணிப்பு என்னும் பழிக்கும் அந்த பாங்கு ஆளாகிறது என்றும் வற்புறுத்தினர். 'பாங்கு தவருக எடுத்துக்கொள்ளுவதற்கும், கள்ளக் கையொப்பத்திற்கும்

இடம் தராவண்ணம், நியாயமான கவனத்தோடு தங்கள் உத்தரவுகளை எழுதும் கடமையை வாடிக்கைக்காரர்கள் ஏற்றுக் கொள்கிருர்கள்' என்று அட்கின் பிரபு கூறும் வாதத்தைப் பிரதி வாதிகள் வற்புறுத்தினர். இருப்பினும், அவ்வழக்கில் கூறப்பட்ட சான்றுகள், மெய்ப்பிக்கப்பட்ட நிகழ்ச்சிகளின் அடிப்படையில், செக்கை எழுதுபவர் நியாயமான கவனம் செலுத்தவில்லை என்று கூற முடியாது. எனவே, ஒப்பந்தக் கடமையினின்றும் வழுவிய குற்றத்திற்கு அவர்கள் இலக்காக மாட்டார்கள் என்று நீதிபதி ரைட் அவர்கள் தீர்ப்பளித்தார்; மேலும், பெறற்குரியவரின் பெயருக்கும், 'அல்லது ஆணைக்கிணங்க' என்ற சொற்களுக்கும் இடையே வெறுமையான இடம் விடுதல் கடமை வழுவுதலாகாது; எனவே, அவர்கள் வேண்டிய விடுப்புக்கு (relief) அவர்கள் உரியவ ராகிருர்கள் என்றும் தீர்ப்பில் கூறினுர். மேலும், அப்பத்திரத்தைச் செல்லத்தக்க செக்கு என்று வைத்துக்கொண்டாலும், அதிலிடப் பட்ட புறக்குறிப்பு முறையற்றது, செக்கிலுள்ள ஆணைக்கேற்ப புறக்குறிப்பு இருக்க வேண்டும் என்ற கூற்றுக்களையும் நீதிபதி அவர் கள் தெளிவாக்கினுர். பிறகு மாவட்ட பாங்கு தொடுத்த மேல் வழக்கிலும் அந்தத் தீர்ப்பு உறுதியாக்கப்பட்டது. மேல்நீதி மன்றத்தின் தீர்ப்பை அறிவித்த பிரபு நீதிபதி[1] ஸ்கரட்டன் அவர் கள் பெறற்குரியவரின் பெயருக்கு முன்னே அல்லது பின்னே கோடிடும் 'எச்சரிக்கை அப்பொழுது வழக்கத்திலில்லை' என்றும், அது போன்ற மோசடி வழக்குகள் அடிக்கடி எழுந்தால் கோடிடும் 'எச்சரிக்கை வழக்கத்திற்கு' வந்துவிடும் என்றும் பகன்றுர்.

### அம்ச திருத்தத்திற்கு எடுத்துக்காட்டுகள்

சமர்ப்பிக்கப்படும் செக்குகளில் திருத்தங்கள் எவையேனும் இருந்தால், பாங்கர் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும் என்பது மேற்கூறிய தீர்ப்பிலிருந்து தெளிவாகிறது. செய்யப்படும் திருத் தங்களுக்கு எழுதுபவர் ஒப்புதல் அல்லது அங்கீகாரம் கொடுப்ப துடன், அந்த இடத்தில் கையொப்பமிட்டு அவற்றை உறுதிப் படுத்த வேண்டும். அம்ச திருத்தங்களுள் கீழ்க்கண்டவை முக்கிய மானவை :

(1) செலுத்த வேண்டிய நேரத்தை வேகப்படுத்தும் அல்லது ஒத்திப்போடும் நோக்கத்துடன் முறி யொன்றின் தேதியை மாற்றுதல்.

(2) செலுத்த வேண்டிய இடத்தைத் திருத்துதல்.

[1] பிரபு நீதிபதி (Lord Justice) — L. J.

(3) செலுத்த வேண்டிய தொகையைத் திருத்துதல்.

(4) முறிகளுடைய கட்சியாளர்களின் எண்ணிக்கை, அல்லது அவர்களிடையே உள்ள உறவு, அல்லது அவர்களின் சட்ட இயல்பு இவற்றை மாற்றுதல்.

செக்கின் தேதியைத் திருத்துதல் அல்லது ஆணைச் செக்கை உடையவர்-செக்காக மாற்றுதல் இவற்றை உறுதிப்படுத்தும் முறையில் பெயரின் முதலெழுத்துக்களை எழுதினால் போதும். ஆயினும், சில பாங்குகள் பின்சொன்ன திருத்தத்தை உறுதிப்படுத்த முழுக்கையொப்பமும் தேவை என்று வற்புறுத்துகின்றன. பிற திருத்தங்கள் அனைத்தையும் தமது முழுக் கையொப்பத்தின்மூலம் எழுதியவர் உறுதிப்படுத்த வேண்டும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆள்கள் கூட்டாக எழுதும் செக்குகளில் செய்யப்படும் திருத்தங்களை உறுதிப்படுத்த அவர்கள் அனைவரும் தம்முடைய பெயரின் முதலெழுத்துக்களை அல்லது கையொப்பத்தைத் திருத்தங்களுக்குத் தக்கவாறு இட வேண்டும். பதிவு செய்த கம்பெனிகள், கூட்டமைப்புகள் முதலியவை எழுதும் செக்கிலுள்ள திருத்தங்களை அவற்றின் அமைப்புப் பத்திரங்களில் கையொப்பமிட்டவர்களனைவரும் உறுதிப்படுத்த வேண்டும்.

### கையொப்பம்

செக்கு, செல்லத் தக்கதாக இருக்க வேண்டுமாயின், எழுதுபவரின் கையொப்பத்தைத் தாங்கியிருக்க வேண்டும். அல்லது முறைப்படி அவரது அங்கீகாரம் பெற்றவர் அதில் கையெழுத்திட்டிருக்க வேண்டும். இரண்டாவதாகச் சொன்ன தறுவாயில், வாடிக்கைக்காரரர் சார்பாகச் செக்கு எழுத அங்கீகரிக்கப்பட்டவரது மாதிரிக் கையொப்பத்தை பாங்கருக்கு அனுப்பியிருக்க வேண்டும்; இல்லையேல், செக்கில் காணப்படும் கையெழுத்தின் வாய்மையை (genuineness) அறிய வழியில்லையாகையால், பாங்கர் அதை அவமதித்துப் பணம் செலுத்த மறுத்து விடுவார். பதிலாண்மைப் பத்திரத்தினால் (power of attorney) முகவரை அமர்த்தினால், அந்த முகவர் எழுதுகிற செக்குகளை பாங்கர் மதிக்க வேண்டுமாயின், அப்பத்திரத்தை அவரிடம் பதிவு செய்ய வேண்டும். கைப்பொறிப்பு (rubber stamp) மூலம் கையெழுத்திடப்பட்ட செக்குகளை மதித்து பாங்கர் பணம் செலுத்தக் கூடாது; ஏனெனில், எழுதுபவரின் அங்கீகாரத்துடன் கைப்பொறிப்பு வைக்கப்பட்டதா அல்லது மூன்றும் ஆள் கள்ளத்தனமாக அதைச் செய்தாரா என்று அறுதியிட்டுக் கூற முடியாது. பென்சிலால் செக்குகளில் கையொப்பமிடுவதற்குச் சட்டத்தில்

மறுப்பொன்றும் இல்லை ஆயினும், அக்கையொப்பங்கள் எளிதில் மங்கிவிடும் அல்லது அழிக்கக் கூடியனவாகையால் இந்த வழக்கம் விரும்பத் தக்கதல்ல. எழுதுபவர், மிகவும் நோய்வாய்ப்பட்டுக் கையொப்பமிட இயலாதவராக இருந்தால், அவருடைய மருத்துவர், பிறிதோர் ஆள் இருவருடைய சாட்சிக் கையெழுத்தைக் (witness) கொண்ட அவரது பெருவிரல் ரேகை போதுமானது. பெருவிரல் ரேகையைப் பதிக்கும்போது கையொப்பமிட இயலாதவாறு நோய்வாய்ப்பட்டிருப்பினும், அவர் முழு மனத்திறனோடு இருந்தார் என்று அந்த மருத்துவர் சான்றளிக்க வேண்டும். சில பொழுது அதிகமான செக்கு எழுதும் வாடிக்கைக்காரர்களுக்கு, பெரும்பாலும் வணிகருக்கு, குறிப்பாக ஐ. அ. நாட்டில் (U. S. A.), அவர்களின் பெயரும் முகவரியும் அச்சிடப்பெற்ற சிறப்புத்தாளை அளிப்பது வழக்கம். சில பாங்குகள் நடப்புக் கணக்கு வைத்திருக்கும் ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும் ஓர் எண் கொடுத்து (ஒதுக்கி), அவருக்கு அளிக்கும் வெற்றுச் செக்குப் புத்தகத்திலுள்ள செக்குத்தாளில் அந்த எண்ணைப் பதிய வைத்துக் கொடுக்கின்றன. இவ்வழக்கத்தைப் பின்பற்றுகிற பாங்குகளின் செக்குகள் அனைத்தும் இரண்டு எண்களைக் காட்டும்: ஒன்று, செக்கு எண்; மற்றொன்று, வாடிக்கைக்காரரின் எண். படிக்க இயலாதவாறு கையொப்பமிடும் வாடிக்கைக்காரரின் பெயரைக் கண்டு பிடிக்க, இது மிகவும் உதவுகிறது. வாடிக்கைக்காரர், தாம் பாங்குக்கு அனுப்பிய மாதிரிக் கையொப்பத்திற்கு ஒப்ப, செக்குகளில் கையொப்பமிட வேண்டும்; இல்லாவிட்டால், பாங்கு அவற்றை அவமதித்து, 'கையொப்பம் மாறுபடுகிறது' என்று எழுதிய துண்டுச் சீட்டை அவற்றுடன் இணைத்துத் திருப்பியனுப்ப நேரும். எழுதுபவர் அவருடைய சொந்தப் பெயரைத்தான் எப்பொழுதும் கையொப்பமிட வேண்டும் என்கிற அவசியமில்லை. எடுத்துக்காட்டாக, 'டெல்லி எழுதுபொருள் கடை' என்ற பெயரில் தம் வியாபாரத்தை அல்லது தொழிலை நடத்துபவர், அதே பெயரில் பாங்கில் கணக்கைத் தொடங்கியிருந்தால், செக்கில் 'டெல்லி எழுதுபொருள் கடை' என்று கையொப்பமிடலாம்(பாங்கியலின் சட்டமும் நடைமுறையும், நூலாசிரியர் ஹெச். பி. ஷெல்டன், 5ஆம் பதிப்பு, பக். 4). இருப்பினும், இவ்வகையான கையொப்பத்திற்கு பாங்கர், ஊக்கம் கெடுக்கின்றனர்.

### எழுதப் படிக்கத் தெரியாதவர்கள்

எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் பெருவிரல் ரேகைமூலம் செக்கில் கையொப்பமோ அல்லது புறக்குறிப்போ இடலாம்; இதில், பாங்கருக்குத் தெரிந்த ஒருவர், பாங்கரின் முன்னிலையில்

சாட்சிக் கையொப்பமிட்டு, அவருடைய முகவரியையும் எழுத வேண்டும். கூடுமானவரை அவர், அந்த பாங்கில் பணியாற்றுத வராக இருக்க வேண்டும்.

**வெளிப்படையான தவறுகள் செக்கைப் பழுதாக்குவதில்லை**

வெளிப்படையான, எளிதில் கண்டு பிடிக்கக்கூடிய தவறுகள் செக்கைப் பழுதாக்குவதில்லை. எழுதுபவருடைய நோக்கம் மிகவும் தெளிவாக இருக்கும்போது, வெளிப்படையான தவறுகள் எ. கா.[1] சொற்களில் சிறுவிடுப்பு, முறியைச் செல்லாததாக்குவதில்லை— இங்கிலாந்தின் சட்டம், நூலாசிரியர் ஹால்ஸ்பரி அவர்கள், 2ஆம் பதிப்பு, நூற்பகுதி II, பக். 713ஐக் காண்க. உண்டியல் ஒன்றில் 'பவுண்டுகள்' என்று எழுதுவதற்கு மாறுகப் 'பவுண்டு' என்று எழுதுவதால்மட்டும், அது செல்லாததாகாது.

## கீறிய செக்குகள்

**கீறலின் தோற்றம்**

செக்கை எழுதிய பின், அதனைக் கீறல் வேண்டுமா அன்றி வேண்டாமா என்று அதை எழுதியவர் தீர்மானிப்பார். 1782, 1815ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்து நாட்டில் இயற்றப்பெற்ற முத்திரைச் சட்டங்கள் (stamp acts) தொகைக்கு ஏற்றுற்போல் விதிக்கப்படும் பெறுமான விகித வரி களுக்கு (*ad valorem* duties) உண்டியல்களை உட்படுத்தின; ஆயினும், கேட்கும்பொழுது கொணர்வோரிடம் செலுத்தப்பட வேண்டிய பாங்கு வரைவுகளின்(bank drafts)மீது, சீராக ஒரு பென்னியையே (penny) வரியாக விதித்தன. எனவே, சென்ற நூற்றுண்டின் முற்பாதிவரை, அங்குக் கொணர்வோரிடம் செலுத்தப்பட வேண்டிய செக்குகளே (payable to bearer) பெரும் பான்மையாக எழுதப்பெற்றன. அந்நாட்டில் 1853ஆம் ஆண்டு தொட்டு, கேட்கும்பொழுது அவற்றின்கண் உள்ள ஆணையின்படி செலுத்தப்பட வேண்டிய (payable to order on demand) பாங்கு வரைவுகள், அதுவும் ஒரு பென்னி மதிப்புள்ள முத்திரை அவற்றின் மீது ஒட்டப் பெற்றிருந்தால்மட்டுமே செல்லுபடியாக்கப்பட்டன. அவ்வாண்டுக்கு முன்பு, செக்குகளைத் தீர்வகத்தில் சேர்ப்பிக்கும் முன்னர், எந்தெந்தப் பாங்குகளின் வழிவகையாக அவை வருகின்றன எனச் சுட்டிக்காட்டும் வண்ணம், அவற்றின் குறுக்கே அந்தந்த பாங்கின் பெயரைப் பொறித்தல், பாங்கு எழுத்தர் களிடையே (banker's clerks) ஒரு வழக்கமாக நிலவியது. பொது

வாகச் செக்குகள் கொணர்வோரிடம் செலுத்தப்பட்டன வாதலால், தங்களுடைய செக்குகளின் தொகையை அவற்றின் பால் உரிமையற்றவர்கள் பெற முடியாமல் தடுக்கும் வண்ணம் இவ்வழக்கையொட்டி மற்றோரும், எந்தெந்தப் பாங்குகளின் மூலமாகப் பணம் பெற விரும்பினரோ, அவ்வப்பாங்குகளின் பெயர்களைக் கீறலில் சேர்த்தனர். பணம் பெறுவோருடைய பாங்கின் பெயர் தெரியாதபோது, ஏதாவது ஒரு பாங்கின்மூலந் தான், அதன் தொகையைச் செலுத்த வேண்டும் எனச் சுட்டிக் காட்டும்பொருட்டு, செக்கின் குறுக்கே இரு கோடிட்டு அவற்றி னூடே '& கோ' என்ற வார்த்தைகளை இடைப்படுத்துதல் வழக்க மாயிற்று. அந்நாளில் கூட்டுப் பங்கு பாங்குகளின் (Joint stock banks) எண்ணிக்கை குறைவு; கூட்டமைப்புகளின் (firms) கைகளில் பாங்குத் தொழில் பெரும்பாலும் செறிந்திருந்தது. தீர்வகத்திற்குச் செக்குகளைக் கொண்டு செல்லும் எழுத்தர்கள் தாக்குதலுக்கும், வழிப்பறிக்கும் ஆளாவார்கள் ஆதலின், செக்கு களின் பாதுகாப்பைக் கீறல் முறை அதிகரித்தது. வாணிபமும், தொழிலும் செழித்தோங்கியதையொட்டிக் கீறல் முறையும் பாதுகாப்பை நல்கும் ஒரு சாதனமாகப் படிப்படியாக வளர்ந்தது.

### கீறல் முறையைச் சட்டம் ஏற்றுக்கொள்ளல்

பாங்கரின் நினைவுக்குறிப்பாக (memorandum) அதுவரை கருதப்பட்டு வந்த கீறல் முறை, 1856ஆம் ஆண்டு, சட்டத் தின் அங்கீகாரம் பெற்றது. 'அண்டு கோ' என்னும் வார்த்தை களை ஊடே கொண்டிருப்பினும், அன்றியும் இரண்டு கோடு களை மட்டும் கொண்ட கீறலைத் தாங்கியுள்ள செக்கின் தொகையை ஏதாவதொரு பாங்கின் மூலமாகத்தான் பெற வேண்டும்; மேலும், ஒரு குறிப்பிட்ட பாங்குக்குச் சாதக மாகக் கீறலிடப்பட்டிருந்தால், அப்பாங்கினிடமோ அன்றி அதனுடைய வசூலிக்கும் பதிலாளாகச் (agent for collection) செயல்படும் பிறிதொரு பாங்கினிடமோ மட்டுந்தான், அதன் தொகையைச் செலுத்த வேண்டும். கீறலினூடே உள்ள ஆணைப் படி, பிறிதொரு பாங்குக்கோ அல்லது அதன் மூலமாகவோதான், கீறலிட்ட செக்கின் தொகையைக் கொடுக்க வேண்டும் என்ற கடமையை 1856ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் (19 & 20 விக்ட்., சி. 25) செலுத்தும்-பாங்கரின்மீது (paying banker) சுமத்திற்று. எனினும், செக்கில் இன்றியமையாத பகுதியன்று கீறல்; எனவே, அதனை அழித்தல் மோசடிக் குற்றமன்று என சிம்மன்ஸ். (எ.) டெய்லர் என்ற வழக்கில் கருவூலவறை, பொது வழக்குகளுக்குரிய நீதிமன்றம் தீர்ப்பு வழங்கிற்று. இத்தீர்ப்பு. மேல்வழக்கில் (appeal) ஆதரவு பெற்று வலிவடைந்தது. 'இத்

தீர்ப்பின் விளைவுகளைப் பயனற்றதெனப் புறக்கணிக்க (nullify) 1858ஆம் ஆண்டுச் சட்டம் (32 & 22 விக்ட்., சி. 79 - 18) இயற்றப்பட்டது. கீறல் ஒருமுறை இடப்பட்ட பின், அது அச் செக்கின் முக்கிய பகுதியாகிறது என்ற கூற்றை வலியுறுத்துவ துடன், இப்புதிய சட்டம் இன்றும் நிலவும் சிறப்புக் கீறல் பற்றிய சட்ட விதிகளின் அடித்தளமாக அமைகிறது. கீறலிடும் உரிமை, ஒரு செக்கை வைத்திருப்பவருக்கு (holder) இருப்பினும், அக்கீறலை மதியாது அதற்குப் புறம்பாகப் பணத்தைச் செலுத்திய பாங்கரின் மீது நடவடிக்கை எடுப்பதற்கான பரிகார உரிமைகள் அவருக்கு வெளிப்படையாக ஈயப்படவில்லை. மோசடி எண்ணத்துடன் எவராவது கீறலை அழித்தாலோ, கூட்டினாலோ (addition) அல்லது மாற்றினாலோ, அவர் ஆயுள் முழுவதும் இடமாற்றல் (transportation) தண்டனைக்கு ஆளாவர் என்று இச்சட்டம் மேலும் அறிவித்தது.

இவ்விரண்டு 1856, 1858ஆம் ஆண்டுச் சட்டங்களைக் களைந்து (repeal), 1876ஆம் ஆண்டு, முதல் எட்டு சரத்துகளில் பழைய சட்டங்களின் மொத்த விளைவுகளைத் தன்னகத்தே கொண்டு புதிய சட்டம் பிறந்தது.

### பொதுக் கீறலின் வரையறுப்பு (இலக்கணம்)

1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 123ஆம் பிரிவு 'பொதுக் கீறலுக்கு'க் கீழ்க்கண்டவாறு இலக்கணம் வகுக்கிறது:

> இரு இணையான சாய்வுக் கோடுகளையோ, அல்லது 'அண்டு கம்பெனி' என்னும் சொற்களையோ, அல்லது அவற்றின் சுருக்கத்தையோ கொண்டுள்ள இரு இணையான சாய்வுக் கோடுகளையோ, செலாவணித் தன்மையற்றது என்ற சொல்லுடனோ, அன்றித் தனித்தோ செக்கொன்றின் குறுக்கே சேர்த்தால், அச்சேர்க்கை கீறலென்று கொள்ளப்படும்; அச் செக்கு பொதுக் கீறலிடப்பட்டதென்றும் கருதப்படும்.

### சிறப்புக் கீறலின் வரையறுப்பு (இலக்கணம்)

மேற்கூறிய செலாவணி முறிச்சட்டத்தின் 124ஆம் பிரிவு, சிறப்புக் கீறலின் இலக்கணத்தைக் கீழ்க்கண்டவாறு சமைக்கிறது:

> ஒரு பாங்கரின் பெயரைச் 'செலாவணித் தன்மையற்றது' என்ற சொல்லுடனோ, அன்றித் தனித்தோ ஒரு செக்கின் குறுக்கே சேர்த்தால், அச்சேர்க்கை கீறல்

எனக் கருதப்படும்; அச்செக்கு அந்த பாங்கரின் பெயரில் சிறப்புக் கீறலிடப்படுகிற தென்றும் கொள்ளப்படும்.

## பொதுக் கீறலின் முக்கியத்துவம்

45ஆம் பக்கம் காணப்படும் முதல் நான்கு வகைகளும் பொதுக் கீறலின் எடுத்துக்காட்டுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. (கீறலின்) கோடுகள் இணையாகவும் சாய்வாகவும் இருத்தல் வேண்டும். X போன்ற குறுக்குக் குறிகள் கொண்ட செக்கைக் கீறலிட்ட செக்கு என்று பொதுவாகக் கருதவியலாது. அது போன்ற நிகழ்ச்சிகளில் செலுத்தும்-பாங்கர் தம் வாடிக்கைக் காரரிடம் அதைப் பற்றிய விவரத்தையறிய முற்படலாம். ஏறக்குறைய செக்கின் நடுவில் அக்கோடுகள் வரையப் படுதல் வேண்டும். ஒரு மூலேயில் (கீறல்) கோடுகளைக் கொண்ட செக்கை கீறுச் செக்கென்று எடுத்துக்கொள்ள ஒரு பாங்கர் மறுத்துவிடலாம். 'அண்டு கோ' என்ற வார்த்தைகள் கீறலின் இன்றியமையாத அமிசமன்று; செக்கின் பணத்தைப் பெறுவோருடைய பாங்கின் (payee's bank) பெயர் தெரியாத காரணத்தால், அச்சொற்கள் எழுதப்படுவனவாகும். பிறிதொரு பாங்கின்மூலமாகவேதான் பணத்தைச் செலுத்துதல் வேண்டும் என்ற கட்டளையைப் பொதுக் கீறல் தாங்கியிருக்கிறது. எனவே, ஒரு செக்கின்பால் உரிமையற்ற ஒருவர், கீறலின் விளைவாகச் செலுத்தும்-பாங்கரின் பணம் பெறும் முகப்பிலிருந்து (counter), அப்பணத்தைப் பெற இயலாமல் தடுக்கப்படுகிறார்.

## சிறப்புக் கீறலின் முக்கியத்துவம்

45ஆம் பக்கத்தில் காணப்படும் (5) முதல் (8) முடியவுள்ள எண்களைத் தாங்கியுள்ள வகைகள் சிறப்புக் கீறலின் மாதிரி களாகும்(specimens). எந்த பாங்கிடம் அல்லது அதனுடைய வசூலிக்கும் பதிலாளிடம் (மற்றொரு பாங்கு), செக் கொன்றின் பணத்தைச் செலுத்தல் வேண்டுமோ, அப் பாங்கின் பெயரை அச்செக்கின் முகப்பில் எழுதுதல், சிறப்புக் கீறலின் முக்கிய அமிசமாக அமைகிறது. ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) தொழில் நடத்தாத பாங்கொன்றின் பெயரைக் கீறலில் சேர்ப்பதால், அது சிறப்புக் கீறலாகாது என்ற கருத்தை, லண்டன் மாநகரிலுள்ள பாங்கர் கழகத்தின் ஆலோசனை மன்றம் (The Council of the Institute of Bankers, London) வெளியிட்டுள்ளது. சிறப்புக் கீறலுக்குக் கோடுகள் தேவை இல்லை. சிறப்புக் கீறலில் காணப்படும் பெயருள்ள பாங்கருக்கு அச்செக்கின் பெறற்குரியவரைத் (payee) தெரியக் கூடுமாகையால், பிறிதொருவருக்காக அவர் அதை வசூலிக்க

மாட்டார்; எனவே, உரிமையற்ற ஒருவர் அதன் பணத்தைப் பெறுதல் அரிதாகிறது. ஆகையால், சிறப்புக் கீறல், செக்கின் பாதுகாப்பை இன்னும் உயர்த்துகிறது. மேலும், செக் கொன்றைத் திருடிய கள்வன், உரியவருக்கு எதிராக அப் பணத்தைப் பெற வாய்ப்பாகவுள்ள எல்லா ஆபத்துகளையும் (risks) தவிர்க்கும் முகத்தான், 'பெறற்குரியவரின் கணக்குக்கு' (payee's account) என்ற சொற்களையும் கீறலில் சேர்த்தல் வேண்டும். அவ்வகைக் கீறலுள்ள செக்கொன்றைப் பெறும் பாங்கர் பெறற்குரியவரின் கணக்குக்காக மட்டுமே அதனை வசூலிக்க வேண்டும். பெறற்குரியவரின் நலனுக்காகவே அது வசூலிக்கப்படுகிறதென்று கேட்டறிதல் செலுத்தும்-பாங்கரின் பணியன்று. எனவே, இவ்வகைக் கீறல் அவரைப் பாதிப்பதில்லை. இருப்பினும், அந்தச் செக்கு பெறற்குரிய வரல்லாத மற்றொருவர் பொருட்டு வசூலிக்கப்படுகிற தென்பதை அதன் புறக்குறிப்பு (endorsement) காட்டிடு மாயின், அந்தப் பணம் பெறற்குரியவரின் கணக்கிலே வரவு வைக்கப்படுகிறதென்னும் உறுதிப்பாட்டை வசூலிக்கும்-பாங்கரிட மிருந்து அவர் (செலுத்தும்-பாங்கர்) பெறலாம்; மேல் மொழிந்த காரணத்தினால் இவ்வகைச் செக்குகளைப் பிற இடங்களுக்குச் சாதாரண அஞ்சல் மூலமாக அச்சமேதுமின்றி அனுப்பலாம். 9ஆம் எண் காட்டுகின்ற அவ்வகைக் கீறலும் செக்குகளில் சில நேரங்களில் இடப்படுகிறது. அது முரண்பாடுடையதாகத் தோன்றுகிறது; ஏனெனில், அம்மாதிரிக் கீறலுள்ள செக்கைப் பிறருக்கு மாற்றவும் (உரிமையாக்கவும்) இயலாது; அதே சமயம், பெறற்குரியவரும் ஒரு பாங்கின் மூலமேயன்றி, செலுத்தும்-பாங் கிடமிருந்து நேரடியாக அதன் தொகையைப் பெறவும் முடியாது. இருப்பினும், தன் வாடிக்கைக்காரரின் வசூலிக்கும் பதிலாள் என்ற நிலையில் அவருடைய பாங்கரிடம் அம்மாதிரி செக்கின் தொகையைச் செலுத்தலாமெனத் தோன்றுகிறது.

**'செலாவணித் தன்மையற்ற' கீறல்**

'செலாவணித் தன்மையற்ற' என்னும் கீறல், கீறலுள் ஒரு வகையைச் சேர்ந்தது. 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்னும் சொற்களைக்கொண்ட கீறல் ஆற்றும் பணியையே, இதுவும் ஆற்றுகிறது. 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 130ஆம் பிரிவு, இச்சொல்லின் விளைவை விளக்குகிறது. 'செலாவணித் தன்மையற்றது' என்ற சொல்லை யுடைய பொதுக் கீறலோ அல்லது சிறப்புக் கீறலோ இடப் பட்ட செக்கொன்றைப் பெறுபவர், தாம் யாரிடமிருந்து முதன் முறையாக அதைப் பெற்றாரோ அவரைக்காட்டிலும் செம்மை

யான உரிமையை (better title) அடையவும் முடியாது, பிறருக்கு வழங்கவும் முடியாது என அப்பிரிவு இயம்புகிறது. சில சமயங்களில் பிழையாக எடுத்துக்கொள்கிறவாறு, அது, செக்கை மாற்றத் தக்கதற்றதாகச் செய்வதில்லை. ஆயினும், செலாவணித் தன்மையின் சிறப்பு அமிசத்தை அது செக்கினின்றும் அகற்றி விடுகிறது. அத்தகைய செக்கு களவாடியவொரு பேணுவுக்கோ அல்லது கைகடிகாரத்துக்கோ ஒப்பாகும்—கள்வனுக்கு அவற்றின் பாலுள்ள உரிமையைக்காட்டிலும் அதிக உரிமையை, அவற்றை வாங்குபவர் பெற இயலாது[பெரிய மேற்கத்திய இரயில்வே கம்பெனி (எ.) லண்டன் & கவுண்டி பாங்குக் கம்பெனி (*190*) எ.சி. *414*]. 'செலாவணித் தன்மையற்றது' என்னும் சொல் கீறலின் ஓர் அமிசமாகச் செக்கொன்றின்மேல் தோன்றும்பொழுது, சட்டம் வலிந்து இணைக்கும் இந்தப் பொருளைத் தவிர வேறொரு கருத்தோ அல்லது முக்கியத்துவமோ அதற்குண்டா என்ற வினா எழுகிறது. இச்சொல் பொருளற்றதொன்று ; அதைப் புறக்கணிப்பதுவும் சரியேயென்பது சர். ஜான் பேஜெட் (Sir John Paget) என்பவரின் கூற்றுகும். 'செலாவணித் தன்மையற்றது' என்ற சொல் உண்டியலின்கண் தோன்றும்பொழுது சட்டம் ஈந்துள்ள சாதாரண பொருளையே—புறக்குறிப்பின்மூலம் உரிமை மாற்றம் (transferability by endorsement), குறைபாடுகளினின்றும் விடுவிக்கப்பட்ட உரிமை மாற்றம் (transferability free from defects) ஆகிய செலாவணித் தன்மையின் தனி இயல்புகளான இவ்விரண்டையும் அப்பத்திரம் இழக்கிறது என்ற பொருளையே—அதற்கும் கொடுக்க வேண்டும் என்ற கருத்தை ஹிபர்னியன் பாங்கு (எ.) கைசின் & ஹேன்சன் (*1938*) 2 கே. பி. *389* என்ற வழக்கில் நீதிபதி அவர்கள் வலியுறுத்தினர்.

**செக்கொன்றில் யார் கீறலிடலாம் ?**

செக்கொன்றை எழுதுகிறவர் விரும்பினால், அவரே கீறலிடலாம் என்பது மேற்கூறியவற்றினின்றும் தெளிவாகிறது. அன்றிக் கீறலிடாச் செக்கொன்றை அவர் கொடுத்தால், அதை வைத்திருப்பவர் அதில் பொதுக் கீறலிடலாம் ; பொதுக்கீறலைச் சிறப்புக் கீறலாக மாற்றி அமைக்கலாம் ; 'செலாவணித் தன்மையற்றது' என்ற சொல்லையும் சேர்க்கலாம். 'சிறப்புக் கீறலில்' காணப்படும் பாங்கர், தம்முடைய வசூலிக்கும் முகவராகச் செயல்படும் பிறிதொரு பாங்கரின் பெயரில் மறுபடியும் அச்செக்கில் சிறப்புக் கீறலிடலாம். தாம் முன்பு இட்டக் கீறலை நீக்க, அச்செக்கை எழுதியவருக்கு உரிமை உண்டு. அவ்வாறு நீக்கும்பொழுது, 'ரொக்கம் செலுத்தவும்' (pay cash) என்று செக்கின் குறுக்கே எழுதி, முழுக்கையொப்பமிட வேண்டும்.

## கீறலின் வெவ்வேறு வகைகள்

பொதுக் கீறலின் மாதிரிகள் :

1

2

& கோ

3

செலாவணித் தன்மை அற்றது

4

பெறற்குரியவரின் கணக்குக்கு

சிறப்புக் கீறலின் மாதிரிகள் :

5

தி பாங்கு ஆஃப் இந்தியா லிமிடெட்

6

தி சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா லிமிடெட்

7

பெறற்குரியவரின் கணக்குக்கு
இந்தியாவின் ஸ்டேட் பாங்கு

8

செலாவணித் தன்மை அற்றது
தி பஞ்சாப் நேஷனல் பாங்கு லிமிடெட்

9

பெறற்குரியவரின் கணக்குக்கு
செலாவணித் தன்மை அற்றது

செக்கு வெளியீடு (Issue of Cheque)

செக்குத்தாள் ஒன்றை நிரப்பி, அதன் தொகையை அதில் கூறியுள்ளபடி, பெறற்குரியவருக்கோ அல்லது அவரது ஆணையின்படியோ அல்லது அதைக் கொணர்வோருக்கோ செலுத்துதல் வேண்டும் என்ற எண்ணத்துடன், அதைப் பெறுவோரிடம் கொடுத்தாலன்றி எழுதியவர் அதை வெளியிட்டதாகக் கருதவியலாது. செக்கொன்றைச் சரிவர வெளியிட்டவுடன், அதை எழுதியவருடைய பொறுப்பு தொடங்குகிறது. அது வெளியாவதற்கு அவர்பாற்செய்த மோசடி காரணமாக இருப்பினும், அதனால் அவர் பொறுப்பு பாதிக்கப்படுவதில்லை. செக்கை வெளியிட்டாலன்றி அல்லது அதன் வெளியீட்டை மறுக்க வாயற்றிருந்தாலன்றி (precluded), எழுதியவருக்குப் பொறுப்பில்லையென்று 1882ஆம் ஆண்டு இயற்றப்பட்ட உண்டியல்கள் சட்டத்தின் (Bills of Exchange Act 45 & 46 விக்ட்., சி. 61), 21ஆம் பிரிவு கூறுகிறது. 1881ஆம் ஆண்டு இயற்றப்பட்ட செலாவணி முறிச்சட்டத்தின் 46ஆம் பிரிவிற்கு, இது இசைந்திருக்கிறது என்பது இங்கு நோக்கற்பாலது. எழுதியவர் பொறுப்பேற்க வேண்டுமாயின், அவர் செக்கை உண்மையாகவோ அன்றிக் குறியீடாகவோ (constructive) கொடுத்திருத்தல் வேண்டும் என்று இந்தியச் சட்டம் வற்புறுத்துகிறது. செக்கொன்று முறைப்படி பெற்றவரை (holder in due course) அடையுங்கால், அவருக்கு முந்திய ஆள்களனைவரும் அவருக்குப் பொறுப்பாகின்றனர். எனவே, அவரைச் சார்ந்த மட்டும் அந்தச் செக்கைச் செல்லத்தக்க முறையில் அவர்களனைவரும் சேர்ப்பித்தனர் (delivery) என்று அது மறுக்கப்பட்டு மெய்ப்பிக்கப்பட்டாலன்றிக் கொள்ளப்படும்.

இடப் பெயர்வில் (Transit) செக்குகளை இழத்தல்

பதிவற்ற அஞ்சலில் செக்குகளை அனுப்புங்கால், அவற்றிற்குச் சிறப்புக் கீறலிடல் நன்று. கொணர்வோரிடம் (பணம்) செலுத்தப்பட வேண்டிய செக்கொன்றைக் கீறலிடாமலோ அல்லது பொதுக் கீறலிட்டோ, பெறுவோரின் வேண்டுகோளுக்கிணங்க, சாதாரண அஞ்சலில் அனுப்பி, இடப் பெயர்வின்போது ஒரு கள்வனால் அது சுளவாடப்பட்டு அதன் தொகை பெற்றுக்கொள்ளப்பட்டால், அந்த இழப்புப் பெற உரியோரையே சாரும். ஏனெனில், அஞ்சலகத்தைத் தம்முடைய முகவராகத் தேர்ந்து அவர் அமர்த்தியதே ஆகும். அஞ்சல் மூலம் செக்கை அனுப்புதல் மட்டுமே, அதைச் சேர்ப்பிப்பதற்கு (delivery) ஒப்பாகாது என்று 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 46ஆம் பிரிவு கூறுகிறது. செக்குகளையும், (நம்) நாட்டு உண்டியல்களையும் (hundies) சாதாரண அஞ்சல் மூலமாக அனுப்பும் வாதியின் (plaintiff) வழக்கத்தையும்,

அவற்றின் புறக்குறிப்பாளியான (endorsee) கூட்டமைப்பொன்று அவ்வழக்கத்தை அனுமதித்ததையும் வைத்துக்கொண்டு, அதனை அங்கீகரித்ததற்கும், அதனையே தொடருமாறு இடும் வேண்டு கோளுக்கும் ஒப்பாகும் என்னும் வாதத்தை ஜகஜீவன்தாஸ் ஜமுனுதாஸ் (எ.) நகர் சென்ட்ரல் பாங்கு லிமிடெட் [28 பம்பாய் எல். ஆர். 226 (229)] என்ற வழக்கின் நீதிபதி அவர்கள் ஏற்க மறுத்தார். செலுத்தும்-பாங்கர், புறக்கணிப்புக்கு (negligence) இடமளிக்காமல், முறைப்படி பணத்தைச் செலுத்திவிட்டதால், அவ்வழக்கில் அவர் பொறுப்பாக்கப்படவில்லை. தந்நலனை முன்னிட்டேனும் எழுதுபவரெவராயினும், பத்திரங்களைப் பொது அஞ்சலில் (ordinary post) அனுப்ப மாட்டார்; அப்படிச் செய்து, அவை இடப் பெயர்வின்போது ஒருக்கால் இழக்கப்பட்டால், அஞ்சலகத்தை அவர் முகவராகக் கொண்டமையால் அந்த இழப்பு அவரையே (எழுதியனுப்பியவரையே) சாரும்.

### வைத்திருப்பவர் (Holder) என்பவரின் இலக்கணம்

பெறற்குரியவரின் சட்ட நிலைமையையும் உரிமைகளையும் ஆழ்ந்தறியப் புகுமுன், 'வைத்திருப்பவரின்' சட்ட ரீதியான இலக் கணத்தை இவண் ஆராய்தல் பொருத்தமற்றதன்று. 1881ஆம் ஆண்டின் செலாவணி முறிச்சட்டத்தின் 8ஆம் பிரிவு 'வைத் திருப்பவர்' என்பவரின் இலக்கணத்தைப் பின் வருமாறு வகுக்கிறது:

> வெண்கடன் பத்திரம் (promissory note), உண்டியல், செக்கு ஆகியவற்றைத் தம் வசம் வைத்திருக்கவும் (possess-ion), பணத்தை அவற்றின் பொறுப்பாளிகளிடமிருந்து தேவையானல் வழக்காடியாவது பெறவும் உரிமையுள்ளவரே 'வைத்திருப்பவர்' எனப்படுவார்.
>
> தற்செயலாக அவை இழக்கப்பட்டாலோ (lost) அல்லது அழிக்கப்பட்டாலோ, அவற்றின்பால் மேற்கூறிய உரிமைகளை அத்தருணத்தில் எவர் பெற்றிருந்தாரோ, அவரே அவற்றின் 'வைத்திருப்பவர்' எனக் கருதப்படுவார்.

### வைத்திருப்பவரின் நிலைமை

இந்தியச் சட்டம் கூறும் இந்த இலக்கணத்தைப் பற்றிப் பல விளக்கங்களும் வாதங்களும் எழுந்துள்ளன. முதலாவது, பத்திரத்தைத் தங்கள் வசம் வைத்திருப்பினும், அதன் பொறுப்பாளிகளிடமிருந்து வழக்காடிப் பணத்தைப் பெறும் உரிமையற்ற ஆள்களை—இழந்த பத்திரமொன்றைக் கண்

டெடுத்தவர் போன்ற ஆள்களை—இவ்விலக்கணப்படி 'வைத் திருப்பவர்'களாகக் கருதவியலாது. முன்னோர் இடத்தில் கூறிய (Supra) உண்டியல் சட்டம் (இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தது) இயம்பும் இலக்கணப்படி இந்த ஆள்கள் 'வைத்திருப் பவர்'களாகக் கருதப்படுவர் என்பது இங்கு நோக்கற்பாலது. இவ்வேறுபாடும் நினைவிற்கொள்ளத் தக்கது. இரண்டாவது, பத்திரமொன்றின் பெறற்குரியராகவோ அல்லது புறக்குறிப்பாளர் அல்லது கொணர்வோர் என்ற முறையில் அதன் உரிமையைப் பெற்றிருந்தாலோவன்றி, அதன்மேல் ஒருவர் வழக்குத் தொடுக்க (sue) இயலாது. மூன்றாவது, 'வைத்திருப்பவர்' என்று உரிமை பாராட்டும் ஒருவர் அதைச் சட்டப்படி அடைந்திருத்தல் வேண்டும். கள்ளக் கையெழுத்திடப்பட்ட அல்லது செல்லாப் (invalid) புறக்குறிப்பின் (அப்பத்திரத்தைக் களவாடியவனின் புறக்குறிப்பைப் போன்றதொரு) பயனாக ஒருவர் பத்திர மொன்றைப் பெறுவாராயின், அவர் அதனை 'வைத்திருப்ப வராக'க் கருதப்பட மாட்டார்.

### இழந்த செக்கின் பணத்தை அதை எழுதியவர் மூலமாகத் தடுத்து நிறுத்தல்

செக்கை அவமதித்துப் பணத்தைச் செலுத்த மறுக்கும் போது (dishonour) எழுதியவரிடமிருந்தோ, பெற உரிய வரிடமிருந்தோ அல்லது புறங்குறித்தவர்களிடமிருந்தோ (endor-sers), அதன் பணத்தைப் பெற வைத்திருப்பவருக்கு உரிமையுண்டு. எனினும், சில வகையான குறியிட்ட செக்குகளையும் (marked cheques), மற்றும் 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத் தின் 129ஆம் பிரிவு இயம்பும் சில சூழ்நிலைகளையும் தவிர, பிற தருவாய்களில், செலுத்தும்-பாங்கரின்மாட்டு, வைத்திருப்ப வருக்கு எந்த உரிமையும் இல்லை; ஏனெனில், அவர்கள் இரு வருக்கும் சட்ட ரீதியான எவ்விதத் தொடர்புமில்லை. எனவே தான், இழந்த செக்கின் பணத்தை உரிமையற்றவர்களிடம் செலுத்தாதவாறு தடுத்து நிறுத்த வேண்டுமாயின், செலுத்தும்-பாங்கருக்கு அந்தக் கட்டளையை இடுமாறு, எழுதியவரைக் கேட்க வேண்டிய நிலையில், அதை வைத்திருப்பவருள்ளார். அவ்வாறன்றி, வைத்திருப்பவரே நேரடியாக அந்தக் கட்டளையையிட்டால் செலுத்தும்-பாங்கர் அதைப் புறக்கணிக்கக் கூடும். இருப்பினும், செலுத்தும்-பாங்கரை விழிப்புறுத்தும்பொருட்டு, இழந்த செய்தியைத் தெரிவித்தல் ஊறுமாகாது; நன்மையையும் பயக்கும். பணம் கொடாதவாறு தடுத்து நிறுத்தும்படி உடனடி யாக எழுதுபவரிடம் தெரிவிக்க வேண்டும். செலுத்தும்-பாங்கரின் மேற்கூறிய மனப்பான்மை முற்றிலும் நியாயமானதுதான்; எவ்

வாறெனின், வாடிக்கைக்காரர்களின் செக்குகளை மதித்து, பணம் செலுத்தும் கடமையையும் தவறான அவமதிப்பால் (wrongful dishonour) வாடிக்கைக்காரருக்கு நேரும் இழப்புக்களை ஈடு செய்யும் பொறுப்பையும் சட்டம் அவர்மேல் சுமத்தியிருக்கிறது. தம் வாடிக்கைக்காரரிடமிருந்து தகவல் வராதவரை, வைத்திருப்பவரென்று பறைசாற்றிக்கொள்ளும் ஒருவரது செய்தியை எவ்வாறு அவர் ஏற்று நடப்பது? எவ்வாறிருப்பினும், இழப்புச் செய்தி அறிவிக்கப்பட்ட செக்குகளை மதித்துப் பணம் செலுத்தும் முன் தனி முன்னெச்சரிக்கைகளைக் (special precautions) கடைப் பிடித்தல் பாங்கர்களிடையே வழக்கமாக நிலவுகிறது.

### செக்குகளில் குறியிடல் (Marking of Cheques)

செக்கொன்றை எழுதுபவருக்கும், அதன் பணத்தைப் பெறற்குரியவருக்கும் ஒருவரையொருவர் நன்கு தெரியாதபோது, பின்னவர், முன்னவரின் செக்கைமட்டும் நம்பி, சரக்குகளைக் கைவிடல் அரிது. இவ்விடர்ப்பாட்டைப் போக்க, செக்கை எழுதுபவர், செலுத்தும்-பாங்கரை அணுகி, செலுத்த வக்குள்ளது (good for payment) என்று செக்கின்மேல் குறியிட்டுக் கொடுக்குமாறு வேண்டுதல் கூடும். குறியிடுதலின் விளைவும், முக்கியத்துவமும் உள்ளூர் வழக்கு, வணிகர்களிடையே நிலவும் மரபு இவற்றைப் பொருத்தது. குறியிடுதலின் பயனாக அச்செக்கைச் செலுத்தும்-பாங்கர் ஏற்றுக்கொண்டதற்கு (acceptance) இணையாகுமென்று அவைகள் கட்டுப்படுத்தலாம். இவ்வாறு கட்டுப்படுத்தலின் விளைவாக, குறிப்பிட்ட காலத்திற்குள்ளோ அல்லது காலம் குறிக்கப்படாதிருப்பின், நியாயமான (reasonable) காலவரையறைக்குள்ளோ, அந்தச் செக்கைத் தம்மிடம் சமர்ப்பிக்கும் (presenting). பெறற்குரியவரிடமோ அல்லது வைத்திருப்பவரிடமோ, குறியிட்ட பாங்கர் அதன் தொகையைச் செலுத்தக் கடமைப்படுகிறார். அன்றி, அவ்வாறு கட்டுப்படுத்தவில்லையெனின், அச்செக்கு நல்லெண்ணத்துடனும் (good faith), அதை மதித்துப் பணம் செலுத்தப் போதுமான நிதி வசதிகளின் வலுவைக்கொண்டும் எழுதப்பட்டதுவென்று காட்டி, அச்செக்கிற்குக் கூடுதல் செலாவணியையளிக்க மட்டுமே குறியிடுதல் பயன்படுகிறது. முன் கூறியதுபோல் பாங்கர் அதன் பணத்தைக் கொடுக்க ஏற்றுக்கொள்வதாகக் குறியிடுதல் அமைந்தால், அந்தச் செக்கு இருபாலருடைய (பாங்கர், வாடிக்கைக்காரர்) மொத்த நாணயத்தையும் பெற்று மிக்க வலுவடைகிறது. [காடென் (எ.) நியூ பவுண்டுலாந்து சேமிப்பு பாங்கு (1899) ஏ. சி. 281]. பஞ்சாப் நேஷனல் பாங்கு லிமிடெட், (எ.) பாங்கு ஆஃப் பரோடா லிமிடெட் (48 சி. டபிள்யூ. என் 810) என்ற வழக்கில்

மன்னரவை (Privy Council) வழங்கிய தீர்ப்பு இவண் நோக்கற்பாலது. அவ்வழக்கின் முக்கிய நிகழ்ச்சிகள் பின் வருமாறு :

கல்கத்தாவிலுள்ள பாங்கு ஆஃப் பரோடா வ. ய.[1]வில் திரு. கோஷ் என்பவர் 1939ஆம் ஆண்டு மேத் திங்களில், தமக்கு அட்போதைக்கப்போது 'தற்காலிகக் கடனுதவி அளிக்க வேண்டும்' என்ற உடன்பாட்டின்பேரில் ஒரு கணக்கைத் தொடங்கினார்; திரு. மைட்டர் என்பவர் அக்கணக்கிற்கு உத்தரவாதமளித்தார் (guarantee). திரு. எம். பி. அமீன் என்பவர் அப்பாங்கியின் நிருவாகியாகவும், திரு. பகவன்தாஸ் என்பவர் அந்நகரிலுள்ள பஞ்சாப் நேஷனல் பாங்கு வ.ய.வின் நிருவாகியாகவும் அப்போது பணியாற்றினர். பஞ்சாப் நேஷனல் பாங்கில் திரு. மைட்டர் என்பவர் கணக்கு வைத்திருந்தார். பரோடா பாங்கிலுள்ள திரு. கோஷின் கணக்கில் பற்றிருப்பாக (debit balance) 89,274 ரூபாயும், பஞ்சாப் நேஷனல் பாங்கிலுள்ள திரு. மைட்டரின் கணக்கில் பற்றிருப்பாக 35,000 ரூபாயும், 1939ஆம் ஆண்டு ஜூன் திங்கள், 13ஆம் நாளன்று இருந்தன. அன்றே திரு. கோஷ் என்பவர் பரோடா பாங்கின்மீது அதே தேதியிட்டு, திரு. மைட்டரைப் பெறற்குரியவராக எழுதிய செக்கிரண்டினைப் பஞ்சாப் நேஷனல் பாங்குக்குத் திரு. மைட்டர் கொணர்ந்தார். '1939ஆம் ஆண்டு ஜூன் 20ஆந் தேதி முடிய செலுத்த வக்குள்ளவை என்று குறியிடப்படுகிறது' என்ற சொற்களையும், பரோடா பாங்கின் சார்பிலிடப்பட்ட திரு. அமீனின் கையொப்பத்தையும் அவ்விரண்டு செக்குகளும் முகப்பில் தாங்கியிருந்தன. ஒன்று 1,40,000 ரூபாயுக்கும், மற்றொன்று 1,35,000 ரூபாயுக்கும் எழுதப் பெற்றிருந்தன. அவற்றைப் பஞ்சாப் நேஷனல் பாங்கின் நிருவாகியிடம் காட்டி, 1939ஆம் ஆண்டு ஜூன் 20ஆந் தேதிவரை அவற்றின் பணத்தைப் பெற முடியாதென்று கூறி, அவைகளின் எதிராக (ஈடாக) 2,40,000 ரூபாயைத் தம் கணக்கிலிருந்து (அதிகப் பற்றாக) எடுத்துக்கொள்ள இணக்கமளிக்குமாறு (permission) மைட்டர் என்பவர் வேண்டினார். இரண்டு செக்குகளுக்குப் பதிலாக, எந்தத் தேதியில் அதன் பணம் செலுத்தப்படுமோ அதே தேதியிட்ட ஒற்றைச் செக்கைப் பெற்று வருமாறு திரு. பகவன்தாஸ் கூறினார். அவற்றை எடுத்துச் சென்று விட்டு, திரு. பகவன்தாஸ் விரும்பியபடி, ஒற்றைச் செக்குடன் சிறிது நேரங்கழித்துத் திரு. மைட்டர் திரும்பி வந்தார். 1939ஆம் ஆண்டு ஜூன் 20ஆந்தேதியை இட்டு, திரு

[1] வ. ய. — வரையறுக்கப்பட்டது (limited).

மைட்டருக்கு அல்லது அவரது ஆணையின்படி செலுத்துதல் வேண்டும் என்று 2,75,000 ரூபாயுக்குத் திரு. கோஷ் என்பவர் பரோடா பாங்கின்மீது எழுதிய செக்காகும் அது. '& கோ' என்று கீறலிடப்பட்டு, '20—6—39ஆந்தேதியன்று செலுத்த வக்குள்ளது என்று குறிக்கப்படுகிறது; பாங்கு ஆஃப் பரோடா, வ.ய., சார்பில் எம். பி. அமீன், நிருவாகி' என்ற சொற்களைத் தன் முகப்பின் குறுக்கே எழுதப் பெற்றிருந்தது அச்செக்கு. அதில் பொதுப் புறக் குறிப்பிட்டு (general endorsement), பஞ்சாப் நேஷனல் பாங்கின் நிருவாகியிடம் அதைத் திரு. மைட்டர் கொடுத்தார்; 'தவணைத் தேதியில் பணமாக்கியதும்' (on realisation on due date) தமது கணக்கில் 2,75,000 ரூபாயை வரவு வைத்துக்கொள்ளும்படியும், ஏற்கெனவே உள்ளதற்கும் மிகுதியாக 2,40,000 ரூபாயை அதிகப் பற்றுகக் கொடுக்குமாறும் வேண்டி, 1939ஆம் ஆண்டு ஜுன் 20ஆந்தேதி அதைச் சரி கட்டுவதென்ற வாக்குறுதியுடன் இரண்டு கடிதங்களை எழுதி, அவற்றையும் அச்செக்குடன் கொடுத்தார். பஞ்சாப் நேஷனல் பாங்கு 2,40,000 ரூபாயுக்கு, கல்கத்தாவில் அன்று இருந்த இந்திய இம்பீரியல் பாங்கின்மீது செக்கொன்றை அன்றே எழுதி, மைட்டர் அவர்களிடம் கொடுத்தது. அவரும் அதன் பணத்தைப் பெற்றுக் கொண்டார்.

பரோடா பாங்கின் தலைமையகத்து (head office) அதிகாரிகள் ஒழுங்கீனமான செயல்களை அமீன் அவர்கள் செய்துவிட்டார் என்று ஐயங்கொண்டு, 1939ஆம் ஆண்டு ஜுன் 19ஆந்தேதியன்று வேலையினின்றும் அவரைத் தற்காலிகமாக விலக்கி வைத்தனர். அமீன் அவர்களுக்குத் தரப்பட்ட 'பதிலாண்மை அதிகாரத்தை' (power of attorney) நீக்கிவிட்ட செய்தியையும், அவருக்குப் பதிலாக அமர்த்தப்பட்டவரின் பெயரையும் குறிப்பிட்ட ஓர் அறிக்கையை பாங்குகளனைத்துக்கும் அடுத்த நாள் தொடக்கத்திலேயே அவர்கள் அனுப்பினர். பஞ்சாப் நேஷனல் பாங்கு அச்சமுற்று, தனது நிருவாகியின் புறக்குறிப்பைப் பெற்று, அந்தச் செக்கை உடனே சமர்ப்பித்து, 2,75,000 ரூபாயை வசூலிக்கத் தனது பணக்கணக்கர் (cashier), கணக்கர் (accountant) ஆகிய இருவரையும் பரோடா பாங்கிடம் அனுப்பியது. கோஷ் அவர்களின் கணக்கில் வரவு இருப்பாக (credit balance) ஏழு அணுவும் மூன்று பைசாவும் மட்டுமே அப்போது இருந்ததால், (தன்மேல் செக்கு) எழுதப்பெற்ற-பாங்கு (drawee bank), பணத்தைச் செலுத்த மறுத்து, 'அதற்கான வகையேதும் செய்யப்படவில்லை' (not arranged for) என்று எழுதப்பட்ட நினைவுக் குறிப்பொன்றை இணைத்து, அந்தச் செக்கைத் திருப்பிக் கொடுத்துவிட்டது.

அதைத் தொடர்ந்து, கடிதப் போக்குவரத்து அவைகளுக் கிடையே கொஞ்சம் நடந்தது. பின்பு பரோடா பாங்கின்மீது பஞ்சாப் நேஷனல் பாங்கு வழக்குத் தொடுத்தது. மேற்கூறிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு, பரோடா பாங்கின் நற்சான்று (certification) பெற்ற செக்கென்பதால்தான் அதன் பிணையமாக மைட்டர் அவர்களுக்கு 2,40,000 ரூபாயைக் கடனாக அளித்தது என்றும், அந்நற்சான்றின்படி அந்தச் செக்கு மதிக்கப்பட்டுப் பணம் செலுத்தப்படுமென்று தான் நம்பியதாகவும், பரோடா பாங்கின் சார்பில் அமீன் அவர்களளித்த நற்சான்று அவருடைய அதிகாரத்திற்குட்பட்ட செயல்தானென்றும், அது தன் முறை யீட்டில் (plaint) வற்புறுத்தியிருந்தது. கல்கத்தாவிலுள்ள பாங்கு களிடையே நிலவும் வழக்கு, மரபு இவற்றையொட்டித்தான் அந்த நற்சான்று அமைந்திருக்கிறது; நல்லெண்ணத்துடனும், அதை மதித்துப் பணம் செலுத்தப் போதுமான நிதி வசதி களின் வலுவிலும் அந்தச் செக்கு எழுதப்பட்டதென்று காட்டு தலே நற்சான்றின் பணியாகுமென்றும் அதில் பஞ்சாப் நேஷனல் பாங்கு விளக்கியிருந்தது. மைட்டர் அவர்களும், கோஷ் அவர்களும் அவ்வழக்கில் தோன்றவில்லை(இழுக்கப் படவில்லை). செக்கைக் குறியிடவோ அல்லது அதற்கு நற் சான்று பகரவோ அமீன் அவர்களுக்கு அதிகாரமில்லையென்றும், அவருக்கு அவ்வதிகாரமுண்டு என்று தான் யாரிடமும் சொல் லியதோ உணர்த்தியதோ இல்லையென்றும் பரோடா பாங்கு மறுத்தது. கல்கத்தாவிலுள்ள பாங்குகளிடையே நிலவுவதாக முறையீட்டில் கூறப்பட்ட மரபையும் அது மறுத்தது. அமீன் அவர்களின் (குறியிடும்) செயல் சட்டப்படி எந்தப் பொறுப்பையும் தன்மேல் சுமத்தவில்லை என்ற கருத்தையும் பரோடா பாங்கு வலி யுறுத்தியது.

செக்குகளைக் குறியிடும் வழக்கம் பாங்கர்களிடையே நிலவு வதாகக் கல்கத்தாவிலுள்ள பாங்கர்களில் சிலர், கீழ்வழக்கு மன்ற நீதிபதியிடம் (trial judge) வாக்குமூலம் கொடுத்தனர்; ஆயினும், பின் தேதியிட்ட செக்குகளைக் (post-dated cheques) குறியிடும் வழக்கத்தை வலியுறுத்தத்தக்க சான்றுகளேதும் இல்லை. இருப் பினும், பரோடா பாங்கு குறியிட்டதனால், செலாவணி முறிச் சட்டத்தின்படி, அந்தச் செக்கை ஏற்றுக்கொண்டதாகவும், குறி யிட்ட செக்குகளை உரியவர்கள் சமர்ப்பிக்குங்கால், அவற்றின் பணத்தைச் செலுத்த வேண்டியது (குறியிட்ட) பாங்குகளின் கடமையும் பொறுப்புமாகும் என்ற வழக்கம் கல்கத்தாவிலுள்ள பாங்கர்களிடையே நிலவியதை வலியுறுத்தப் போதுமான சான்று களுளவென்ற கருத்தையும் ஆதாரமாகக் கொண்டு, வாதியின்

சாதகமாகத் தீர்ப்பு வழங்கப்பட்டது. குறியிட்ட செக்குகள் பின் தேதியிடப்பட்டவையாயின், அவற்றின் விளைவுகள் யாதென, நீதிபதி அவர்கள் குறிப்பாக விளக்கவில்லை.

கீழ்வழக்கு மன்ற நீதிபதியின் தீர்ப்பு மேல்வழக்கிலும் உறுதிப் படுத்தப்பட்டது. பின் தேதியிட்ட செக்குகளைக் குறியிடல் நிரு வாகியின் அதிகாரத்திற்கும், மரபிற்கும் அப்பாற்பட்ட, அத்து மீறிய செயலாகும் என்ற கருத்தைத் தெளிவாக வலியுறுத்தி, பரோடா பாங்குமேல் வழக்குத் தொடுத்தது. கல்கத்தா உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பை அறிவித்த அதன் தலைமை நீதிபதி (Chief Justice) பின் வருகிற ஆதாரங்களின்பேரில் வழக்கைத் தள்ளி விட்டார் :

செக்குகளைக் குறியிடுதல், அவற்றை ஏற்றுக்கொள்ளுவதற் கொப்பாகுமென்று சட்டம் இயம்புகிறது; எனவே, இக்கூற்றுக் குப் புறம்பாகத் திகழ்வதாக மேல்வழக்கைத் தொடுத்த பாங்கு (appellant bank) கூறும் மரபுகளைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டிய தேவையேயில்லை ; அதற்கான சான்றுகளும் போதுமானவளவு இல்லை; செக்கொன்றைக் குறியிடுதல், அதனை ஏற்றுக்கொள் வதற்கு ஒப்பாகும். ஆகவே, குறியிட்ட பாங்கு அச்செக்கை மதித்துப் பணத்தைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளது என்ற கருத்து கல்கத்தாவிலுள்ள பாங்கர்களிடையே நிலவுகிறது என் பதற்கான சான்றுகள் போதுமானவளவு உள்ளன என்று அவர் பகன்றார். பின் தேதியிட்ட செக்குகளைக் குறியிடுதலுக்கான மறுப் புரைகளைப் (objections) பற்றி ஆழ்ந்த விளக்கத்தைத் தலைமை நீதிபதி அவர்கள் கூறுது விடுத்தார்.

பரோடா பாங்கு அதற்குப் பிறகு மன்னரவையில் வழக்குத் தொடுத்தது. மேல்வழக்கு நீதிமன்றத்தில் (Appellate Court) கொடுத்த தீர்ப்புக்கு நேர்மாறாக, பரோடா பாங்குக்குச் சாதக மாக மன்னரவை தீர்ப்பளித்தது. இத்தீர்ப்பின் அடிப்படைக் காரணங்கள் வருமாறு :

(1) செக்குகள், உண்டியல்கள் இனத்தின் அடிப்படையில் ஒத்திருப்பினும், சில சிறப்பு இயல்புகளைப் பெற்றுத் தனி வகை யாகப் பிரிந்து நிற்கின்றன. சாதாரண நடைமுறையிலே அவைகள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் (accepted) என்ற தேவையில்லை. உண்டியல் ஏற்காமையின் (non-acceptance) மூலம் மறுக்கப்படலாம்(dishonour) ; செக்குகளுக்கு இது பொருந் தாது. அதனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்து வதற்கு, செக்கொன்றை வைத்திருப்பவருக்கு உரிமையில்லை.

பாங்கரின் பொறுப்பு அவருக்கும் எழுதுபவருக்கு(அவருடைய வாடிக்கைக்காரர்)மிடையேயுள்ள ஒப்பந்தத்தைச் சார்ந்தது. உண்டியல் ஒன்றை ஏற்கும்வரை, எழுதப் பெற்றவருக்கு (drawee) அதன்பால் எந்தப் பொறுப்பும் இல்லை; அவர் பொறுப்பு அதன் ஏற்பைச் சார்ந்து நிற்கிறது. வாடிக்கைக்காரரின் செக்கு எழுதும் உரிமையும், பாங்கர் அதைக் கட்டளையாகக் கொண்டு பணம் செலுத்த வேண்டிய கடமையும், அவர்களிருவரும் செய்து கொண்ட ஒப்பந்தத்தைத் தழுவியிருக்கின்றன; எனவே, ஏற்பு என்பது செக்கிற்குத் தேவையற்ற, பொருந்தாதவொன்று. ஆனால், எழுதுபவரின் வேண்டுகோளுக்கிணங்க பாங்கர் செக் கொன்றில் குறியிட்டால், தற்காப்பை முன்னிட்டு, அதற்குச் செலுத்தத் தேவையான பணத்தை வாடிக்கைக்காரரின் கணக்கி லிருந்து ஒதுக்கி வைத்துக்கொள்ள அவருக்கு உரிமையுண்டு.

(2) குறியிடுதல் வடிவத்திலேனும் அல்லது விளைவிலேனும் ஏற்புக்கு இணையாகாது; எனவே, அதை ஏற்புக்கொப்பாகும் என வைத்திருப்பவரோ அல்லது பெறற்குரியவரோ வற்புறுத்திப் பயன் பெற முற்படவியலாது என்ற கருத்துரையைச் (opinion) சாமெர் (Chalmers) அவர்கள் அவருடைய 'உண்டியல்களின் சட்டம்' (Bills of Exchange Act) என்ற நூலிலும், பேஜட் (Paget) அவர்கள் அவருடைய 'பாங்கியலின் சட்டம்' (Law of Banking) என்ற நூலிலும் கூறியுள்ளனர்.

(3) தீர்வு நேரத்திற்குப் (clearing hours) பிறகு சமர்ப்பிக்கப் படும் செக்குகளைச் செலுத்த வக்குள்ளவை என்று செலுத்தும்-பாங்கர் குறியிடல் பாங்கர்களிடையே எழுந்தோங்கியுள்ள ஒரு வழக்கமாகும். கல்கத்தாவிலுள்ள தீர்வு பாங்குகள் சங்கத்தின் (Calcutta Clearing Banks' Association) விதிகளுக்குட்பட்டு இப் பழக்கம் அந்நகரிலும் நிலவியது. தீர்வுக்காகக் குறியிடப்படும் செக்கை, மறுநாள் தீர்வுத் தொழில் தொடங்கியதும் சமர்ப்பித் தால், அதன் தொகையைச் செலுத்தக் குறியிட்ட பாங்கு கடமைப் பட்டுள்ளது. இதை நீதிமன்றங்கள் அங்கீகரித்து நிலைநாட்டிய தொரு வழக்காகும். இருப்பினும், இவ்வகைக் குறியிடலும் ஏற்புக்கு இணையானதாகாது. (ஏற்பின் விளைவாகச் செலாவணித் தன்மையுள்ள ஒரு பொறுப்பு உண்டாகிறது.)

(4) குறியிடல் ஏற்புக்குச் சமமானது என்று அந்த வழக்கில் நம்பப்பட்டதாகக் கூறப்படினும், ஆங்கிலச் சட்டத்தின்படியோ அல்லது ஆங்கில வழக்கு நீதியின்படியோ (common law) அல்லது இந்தியச் சட்டப்படியோ அவ்வாறு பொருள் கொள்ள இடமில்லை.

(5) எழுதுபவரின் கணக்கில் போதுமான பணமிருப்பினும், இன்றியும், குறியிட்ட செக்கின் தொகையைச் செலுத்துவதற்கான வாக்குறுதியைக் குறியிடல் தாங்கியிருந்ததாவென்பது, இந்த வழக்கில் தோன்றும் பாங்குகளிடையே நிலவும் ஒப்பந்தத்தைச் சார்ந்தது. ஆனால், அந்த இரு பாங்குகளிடையே எவ்வித ஒப்பந்தமுமில்லை; அந்தச் செக்கைக் குறியிடல் சம்பந்தமாக எந்தப் பிரதிப்பயனும் (consideration) ஒன்றிடமிருந்து மற்றொன்றுக்குச் செல்லவில்லை. மேலும், குறியிடல் அல்லது நற்சான்று அளித்தல் (certification) ஏற்பைப்போல் செலாவணித் தன்மையுள்ளது அல்ல. எனவே, எதிர்வாதியான பாங்கை (respondent bank) முறைப்படி அந்தச் செக்கைப் பெற்றவராகக் கருத வியலாது. ஆகையால், பணமிருப்பினும், இன்றியும் செக்கின் தொகையைச் செலுத்த, பரோடா பாங்கு கடமைப்பட்டதல்ல.

(6) செக்கு, அதன் கையொப்பம் ஆகியவற்றின் வாய்மையை (genuineness) பகர்வதாகக் குறியிடலைக் கருதலாம். அந்தச் செக்கு பின் தேதியிடப்படாதிருப்பின், எழுதுபவர் கணக்கில் குறியிடும்போது தேவையான பணம் இருந்ததென்பதன் அறிவிப்பாகவும் குறியிடலைக்கொள்ளலாம். அடுத்த ஏழு நாள்கள் வரை பணம் பெறுவதற்கு அந்தச் செக்கு முதிர்வு பெறுதாகையால், குறியிடும்பொழுது இருந்த நிலையைப் பற்றிய தகவல் பயன் மிக்கதொன்றன்று. செக்கு முதிர்வடையும்போது தேவையான பணமிருக்கும் என்ற அறிவிப்பாக, அதை (குறியிடலை) எடுத்துக் கொண்டால், அது வாக்குறுதிக்கிணையாக அமையும். அப்போது கூடப் பிரதிப்பயன் இல்லாததன் விளைவாக, அவ்வாக்குறுதியை நிறைவேற்றுமாறு வற்புறுத்த (enforce) முடியாது.

(7) பின் தேதியிட்ட செக்கிற்குச் சான்று அளிக்கும் அதிகாரம் நிருவாகருக்குப் பொதுவாக இல்லை. இந்த வழக்கில் உண்மையாகவே அவருக்கு அந்த அதிகாரம் இல்லை.

(8) சட்டப்படித் தவிர்க்க வழியிருப்பினும், பாங்கர்கள் சொன்ன சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்கள்; இட்ட கையொப்பத்துக்கு மதிப்பு கொடுப்பவர்கள் என்பது நீதிபதிகள் அறியாததல்ல. பாங்கர்களுக்கிடையேயுள்ள உறவில் இப்பண்பு இன்னும் மிகையாக மிளிரும். ஆனால் நீதிமன்றம் சட்ட நோக்குடன்தான் வழக்குகளை ஆய்ந்து தீர்ப்பளிக்க வேண்டுமேயன்றி, பாங்கர்கள் கடைப்பிடிக்கத்தக்க நெறிமுறை (ethics), நன்னடக்கை (etiquette), திடமான கைக்கோள் (good policy) ஆகியவற்றின் கண்ணோட்டத்துடன் அல்ல. எனவேதான் பண்புாளர்கள் ஒப்பந்தம் (gentleman's agreement), பிரதிப்பயன்

சாராத கடமை (honourable obligation) ஆகியவைகள் சட்டப் படி செல்லத் தக்கவையல்ல.

மேற்கூறிய தீர்ப்பை நோக்குங்கால், குறியிடும் பழக்கம் பாங்கர்கள் விரும்பத் தக்கதொன்றல்ல ; எனவே, தீர்வுக்காகக் குறியிடுதலை மட்டும் வைத்துக்கொண்டு, அப்பழக்கத்திற்கே ஒரு முடிவு காணல் வேண்டும். வாடிக்கைக்காரரின் கணக்கில் போதுமான பணமிருப்பின், அவருடைய செக்கைக் குறியிடுதலுக்குப் பதிலாக அதனுடைய செக்கையே பாங்கு வழங்கலாம்.

### உறுதிப்படுத்திய செக்குகள் (Assured Cheques)

ஆர். சி. நைட் (R. C. Knight) அவர்கள் 'உறுதிப்படுத்திய செக்குகளைப்' பயன்படுத்துதல் பற்றி வெளியிட்ட சுவையான கருத்தினை இங்குக் கூறலாம். (1940ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் வெளிவந்த பாங்கர் இன்ஷுரன்ஸ் நிருவாகிகள் பதிலாள்களுக்கான மாத இதழின் 207ஆம் பக்கத்தைக் காண்க.) வாடிக்கைக் காரர்கள் பெரும்பாலும் எந்தத் தொகைக்குச் செக்குகள் கொடுக்கின்றனரோ, செக்குகள் ஒவ்வொன்றின் முகப்பிலும் அத்தொகை அச்சிடப்பட்ட செக்குப் புத்தகங்களை வெளியிட வேண்டும். அந்தச் செக்குப் புத்தகமொன்றை வாடிக்கைக்காரர் ஒருவரிடம் கொடுத்தவுடன் அதன் உச்சத்தொகையை (maximum sum) அவருடைய கணக்கில் பற்று வழியாகப் பதிவு செய்துகொள்ள வேண்டும். [பிரயாணச் செக்குகளை (travellers' cheques) கொடுக்கும்போது செய்வதைப் போலவே என்பது இங்கு நோக்கத்தக்கது.] முகப்பில் அச்சிடப்பட்டுள்ள தொகையைக்காட்டிலும் குறைவான எத்தொகைக்கும் செக்குகளை எழுதலாம். செக்குகள் ஒவ்வொன்றாகச் சமர்ப்பிக்கப்படும்பொழுது ஒவ்வொரு செக்கின் தொகையும் உச்சத் தொகையினின்றும் எவ்வளவு குறைவாகவுள்ளதோ அந்தக் குறைவை அவருடைய கணக்கில் வரவு வகையாகப் பதிவிடல் வேண்டும்.

### பெறற்குரியவரின் உரிமைகளும், கடமைகளும்

செக்கொன்றைப் பெறற்குரியவரை அடையுங்கால், அவருடைய உரிமைகளும், கடமைகளும் யாவை என்பனவற்றை நாம் அறிய வேண்டும். செக்கொன்றை அவர் பெற்றுக்கொள்வதனால், அது (பணம் செலுத்த) மறுக்கப்படுங்காலத்து (dishonoured), அவருக்குரிய தொகையைப் பெறும் உரிமையை அவர் இழப்பதில்லை. மூலக்கடனைச் (original debt) செலுத்துமாறு அவர் உரிமை கொண்டாடலாம். (மூலக்கடனைச் செலுத்துமுகத்தானே அவருக்கு அந்தச் செக்கு தரப்பட்டதென்பது இங்கு நினைவிற்

கொள்ளத் தக்கது.) அல்லது அச்செக்கைச் சமர்ப்பிப்பதில் சற்று விழிப்பின்றி இருந்தமையால், அதை எழுயதிவருக்கு இழப்பு நேர்ந்தது என்ற பழிக்கு ஆளாகாதவரை, அதன் தொகையைப் பெறும்பொருட்டு எழுதுபவர்மீது வழக்குத் தொடுக்கலாம். எடுத்துக்காட்டாக, செக்கொன்றைப் பெறற்குரியவரிடம், எழுது பவர் ஒரு குறிப்பிட்ட நாளில் கொடுக்கிருர் என்றும், அதனின்றும் ஒரு மாத காலத்திற்கு அவரோ அல்லது வைத்திருப்பவரோ அதைச் (பணம் பெற) சமர்ப்பிக்காமலிருக்கிருரென்றும், அதற்குள் எழுதப்பெற்ற-பாங்கு முறிகிறதென்றும் கொள்வோம். அது தக்க காலத்தில் சமர்ப்பிக்கப்பட்டிருப்பின், அதன் தொகை முழுதும் செலுத்த, எழுதுபவர் கணக்கில் போதுமான இருப்பு இருந்ததென்றும் எடுத்துக்கொள்வோம். செக்கைப் பெற்று நியாயமான கால வரையறைக்குள் (பெறற்குரியவரோ அல்லது வைத்திருப்பவரோ) அதைச் சமர்ப்பிக்காமல் சற்று விழிப்பின்றி இருந்ததன் விளைவாக எழுதுபவருக்கு எவ்வளவு இழப்பு நேருகிறதோ, அந்த அளவுக்கு அச்செக்கின்பால் அவர் பொறுப்பு குறைகிறது. கீறலுக்குப் புறம்பாகச் செக்கொன்றைச் செலுத்திஞலோ (1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 129ஆம் பிரிவைப் பார்க்கவும்.) அல்லது பாங்கர்களிடையே நிலவும் வழக்கத்திற்கொப்ப செலுத்த வக்குள்ளது என்று பாங்கர் செக்கைக் குறியிட்டாலோ அன்றி அவர்மீது வழக்குத் தொடுக்கும் உரிமையைச் செக்கை வைத்திருப்பவர் (அவர் பெறற்குரியவராகவோ அல்லது புறக்குறிப்பாளியாகவோ இருப்பினும்) பெறுவதில்லையென்று முன்பே விளக்கியுள்ளோம்.

### செக்குகளைச் சமர்ப்பிக்க நியாயமான காலம் (Reasonable Time) — எவ்வளவு?

செக்குகளை எந்தக் கால வரையறைக்குள் சமர்ப்பித்தல் வேண்டும், அதற்கான நியாயமான காலத்தின் அளவு என்ன என்ற விஞக்களின் விடை பல்வேறு சூழ்நிலைகளைப் பொருத்திருக்கிறது. சம்பந்தப்பட்ட ஆள்கள் வாழும் இடங்களின் தொலைவு, அதற்கொத்த பத்திரங்களைச் சார்ந்த நடைமுறை (course of dealings), பத்திரத்தின் தன்மை ஆகிய பல சூழ்நிலைகளைக் கருத்திலே கொண்டு இதற்கு விடை காண வேண்டும். [செலாவணி முறிச்சட்டத்தின் (Negotiable Instruments Act), 105ஆம் பிரிவு, இதே நூலில் (ibid) காண்க; 11 கல். 34] கள்வனெருவன், வரி திரட்டுபவர் (publican) ஒருவருக்கு ஒரு செக்கை மாற்றிஞன். அது மாற்றப்பட்ட தேதியினின்றும் பன்னிரண்டு நாள்களுக்கு முந்தைய தேதியிடப்பட்டிருந்தது. அந்தச் செக்கு தவணை கடந்த (overdue) ஒன்ருகும் என்ற கருத்தைக் கோட்ட வழக்கு மன்றத்தின்

நீதிபதி அவர்கள் ஒரு வழக்கில் தெரிவித்தார்(பாங்கர் அக்கரை செலுத்தத்தக்க தீர்ப்புகள் நூற்பிரிவு III, பக். 226). பொதுவாகக் கூறின், அடுத்த அலுவல் நாள் (working day) வாக்கில் செக்கைச் சமர்ப்பித்தாலோ அல்லது தன்னுடைய பாங்கிடம் வசூலிக்கச் செலுத்தலோ வேண்டும். செக்குகளைச் சமர்ப்பிக்கத் தக்க 'நியாயமான காலவரம்பைப்' (reasonable time) பின் வரும் எடுத்துக்காட்டுகள் தெரிவிக்கும் :

*1.* பம்பாயிலுள்ள பாங்கொன்றின்மேல் எ. கே. ஜோஷி அவர்கள் *500* ரூபாயுக்கு எழுதிய செக்கொன்றினை, அதே நகரிலுள்ள டி. எஸ். கராகா அவர்கள் *1932*ஆம் ஆண்டு மார்ச்சு *1*ஆந் தேதி பெற்றார். சுணக்கத்திற்குத் (delay) தக்கக் காரணம் இருந்தாலன்றி, செலுத்தும்-பாங்கிடம் அடுத்த அலுவல் நாளன்றே அவர் அதைச் சமர்ப்பிக்க வேண்டும் அல்லது அவருடைய பாங்கிடம் வசூலுக்காக அன்றே அனுப்ப வேண்டும் ; அதைத் தொடர்ந்து அவருடைய பாங்கும் (வசூலிக்கும்-பாங்கு) தான் பெற்றதற்கு அடுத்த அலுவல் நாளன்று அதைச் சமர்ப்பிக்க வேண்டும். அப்படிச் செய்வதன்மூலம் புறக்கணித்தாரென்ற (நியாயமற்ற முறையில் நீண்ட காலம் அதை வைத்திருந்த) பழிக்கு ஆளாகாதிருப்பர். அப்படி யாராவது குற்றம் சாட்டினும், அதை எதிர்த்துப் பேச அவருக்குத் தகுதியுண்டு.

*2.* டி.எஸ். கராகா அவர்கள் எங்கு தொழில் நடத்துகிறாரோ அவ்விடத்தில் அவர் வைத்துள்ள செக்கு எழுதப்பெற்ற-பாங்கு (drawee bank) இல்லையாயின், அது அமைந்துள்ள நகரத்திலுள்ள அவருடைய முகவருக்கு அஞ்சல் மூலமாக அவர் பெற்றதற்கு அடுத்த அலுவல் நாளுக்குள்ளாக அச்செக்கை அனுப்ப வேண்டும்; அல்லது மேற்கூறப்பட்ட காலத்துக்குள்ளாக அவருடைய பாங்கிடம் அதைச் செலுத்த வேண்டும்.

**நீண்டகாலப் புழக்கத்தின் (Circulation) குறைபாடுகள்**

இக்காரணம், இன்னும் பிற காரணங்கள் ஆகியவற்றை முன்னிட்டே செக்கொன்றைப் பெறுபவர், அதை அவருக்குக் கடனீந்தவருக்கு (creditor) மாற்றாமல், அவருடைய பாங்கிடம் வசூலிக்க அனுப்புமாறு வற்புறுத்தப்படுகிறார். செக்கைக் காலம் தாழ்ந்து சமர்ப்பித்தால் அது மறுக்கப்படலாம் ; ஏனெனில், எழுதியவர் அதற்குள் திவாலாவாகியிருக்கலாம் ; அல்லது அவர் கணக்கிலிருந்த பணம் வற்றியிருக்கலாம். இவையிரண்டும் இழப்பையும், தொந்தரவையும் விளைவிக்க மேலும் வாடிக்கையாளரிடமிருந்து (client) பெறும் செக்குகளை ஒருவர் மற்றவருக்கு மாற்றுவதனால் மாற்றப் பெற்றவர், மாற்றுபவரது வாடிக்கையாளரிடம் நேரடித்

தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள முனையலாம்; அதன் விளைவாக மற்றவர்களுக்குத் தொழிலை விட்டுக் கொடுக்க வேண்டிய நிலைமையுமேற்படும். செக்கு கைக்குக் கை மாறிக்கொண்டே செல்வதன் விளைவாக, அது மிகவும் காலம் தாழ்ந்து சமர்ப்பிக்கப்பட நேரும்; அதற்குள் அது எழுதப்பெற்ற-பாங்கு கலைக்கப்படலாம்(liquidation). நியாயமற்ற நீண்ட காலம் செக்குகள் புழக்கத்தில் இருக்குமானால், அவைகள் நாள்பட்டவை (stale)யாகி, அவற்றின்மேல் பணம் செலுத்த மறுக்கப்படலாம். நியாயமற்ற காலம் புழக்கத்திலிருந்த செக்கொன்று சமர்ப்பிக்கப் படுங்கால் 'நாள்பட்டது, உறுதிப்படுத்துங்கள்' (stale, requires confirmation) என்று எழுதிய சீட்டுடன் அந்தச் செக்கு திருப்பி அனுப்பப்படும். பொதுவாக, ஆறு மாதப் புழக்கத்தையே நியாயமற்றது எனப் பாங்குகள் கருதுவது வழக்கம். எனவே, தமது கடனாளியிடமிருந்து பெறும் செக்கைத் தமக்குக் கடனீந்தவரிடம் மாற்றாது, தமது பாங்கிடம் வசூலிக்க அனுப்புவதும் கடனையடைக்கப் புதிதாகத் தமது செக்குகளை எழுதிக் கொடுப்பதும் கடைப்பிடிக்கத் தக்க அறிவுரையாகும்.

### செக்கு கடனின் உரிமை அளிப்பு (Assignment) அல்ல

(எழுதப் பெற்ற) பாங்கின் வசம் உள்ள (எழுதுபவர்) பணத்தைப் பிறருக்கு உரிமை மாற்றம் செய்கிறது. செக்கு என்ற கருத்து இந்தியாவிலோ அல்லது இங்கிலாந்திலோ ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. எனவே, தன்மேல் பொறுப்பைச் சுமத்தும் சூழ்நிலைகளில் செக்கொன்றில் குறியிட்டிருந்தாலன்றி, எழுதப்பெற்ற-பாங்கிடம் எந்த உரிமையும் பெறற்குரியவர் கொண்டாட முடியாது. ஆனால், ஸ்காத்லாந்தில் நிலவும் நிலைமை இதற்கு வேறுபட்டது. எழுதப்பெற்ற-பாங்கிடம் சமர்ப்பிக்கப்பட்ட நேரத்திலிருந்து அதன் தொகையளவுப் பணத்தை எழுதியவரிடமிருந்து வைத்திருப்பவருக்கு உரிமை மாற்றம் செய்யும் இயல்புடையதாக ஸ்காத்லாந்தில் செக்கு கருதப்படுகிறது; எனவே, அந்தப் பாங்கிடமிருந்து பணம் பெற, பெறற்குரியவருக்கு உரிமையுண்டு. பிரான்ஸ் நாட்டிலே எழுதப்பெற்ற-பாங்கிடமிருந்து பணம் பெறச் செக்கை வைத்திருப்பவருக்கு உரிமையுண்டு; அதோடு எழுதியவரின் கணக்கில் வரவு இருப்பாக இருக்கும் தொகை, செக்கின் தொகையைக்காட்டிலும் குறைவாக இருந்தாலும், இருப்பில் இருக்கிற முழுத் தொகையையும் கேட்டுப் பெற உரிமையுண்டு.

### செக்குகளைப் பிறருக்கு மாற்றுதல் (Transfer)

உடையவர் செக்கை (bearer cheque) அதாவது, உடையவரிடம் (கொணர்வோரிடம்) செலுத்தப்பட வேண்டிய செக்கை,

சேர்ப்பித்தல் மூலமே, பிறருக்கு உரிமை மாற்ற முடியும். ஆனால், ஆணைச் செக்கை (order cheque) அதாவது குறிப்பிட்ட ஆளிடமோ அல்லது அவரது ஆணையின்படியோ செலுத்தப்பட வேண்டிய செக்கைப் புறங்குறித்துச் சேர்ப்பித்தல் (ஆகிய இரண்டு செயல் களின்) மூலமே பிறருக்கு மாற்ற முடியும்.

**புறக்குறிப்பின் இலக்கணம்**

'செலாவணி முறியொன்றை எழுதுபவரேனும் அல்லது வைத்திருப்பவரேனும் அதன் முகப்பிலோ அல்லது பின் புறமோ அல்லது அத்துடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு சீட்டிலோ, எழுதுபவர் என்ற முறையிலன்றி அதைப் பிற ருக்கு மாற்றும்பொருட்டு, கையொப்பமிட்டால்..............., அதில் அவர் புறங்குறிக்கிறார் என்றும், அவரைப் புறங்குறிப்பவர் (endorser) என்றும் கூறலாம்.' லத்தீன் சொல்லாகிய 'இன்டார் சம்' (in dorsum) என்பதிலிருந்து 'புறக்குறிப்பு' என்கிற சொல் பிறந்தது. லத்தீன் மொழியில் 'இன்டார்சம்' என்றால் 'பின் பக்கத்தில்' (upon the back) என்று பொருள். எனவே, முறியின் பின்பக்கமே புறங்குறிக்கத் தகுந்த இடமாகும். இந்த விதி எல்லாச் செலாவணித் தாளுக்கும் பொருந்தும். பிறருக்கு உரிமை மாற்றும் நோக்கத்துடன், ஒரு முறியின் பின்புறம் ஒருவரின் பெயரை எழுதுதலே, புறக்குறிப்பு என்பதன் பொருள். இருப் பினும், ஒரு முறியின் முகப்பில் தோன்றும் புறக்குறிப்பும் சட்டப் படி செல்லத் தக்கதுவே ; 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச் சட்டத்தின் 15ஆம் பிரிவு (மேலே ஆளப்பட்டிருக்கிறது) அதை அங்கீகரிப்பதால், செல்லாது என்று அதை மறுக்க முடியாது. புறக் குறிப்பை முறிகளின் பின்புறம்தான் இட வேண்டும் என்ற பழக்கம் தலைமுறை தலைமுறையாக (time-honoured) வழங்கி வருவதால், அதைப் பின்பற்றுதலே சாலச் சிறந்தது. ஆனால், இந்திய அரசாங் கம் வெளியிடும் கடன் பத்திரங்களைப் (securities) பொறுத்த வரை யில் பின்புறம் மட்டுந்தான் புறங்குறித்தல் வேண்டும். வேறு எங்கு புறங்குறித்தாலும் அது செல்லாது. 1886ஆம் ஆண்டு இந்திய ஈடுகள் சட்டத்தின் (Indian Securities Act) 6ஆம் பிரிவு இதை வலியுறுத்துகிறது. மிகவும் விரைவான புழக்கத்தினால் ஒரு முறியின் பின்புறம் முழுதும் தீர்ந்துவிட்டால், இனி இடப்பட விருக்கும் புறக்குறிப்புக்கு இடமளிக்கும் வகையில், ஒரு சிறு தாளை அத்துடன் இணைத்துக்கொள்ளலாம் ; அல்லது அதன்மேல் ஒட்டிக் கொள்ளலாம்; யார் அதை வைத்திருக்கிறாரோ அவர் அப் பணியைச் செய்யலாம். அவ்வாறு இணைக்கப்பட்ட (அல்லது ஒட்டப்பட்ட) தாளுக்கு 'உண்டியல் ஒட்டு' (allonge) என்று பெயர். அதற்குப் பிறகு செய்ய வேண்டிய புறக்குறிப்புகளை அந்த

ஓட்டின்மீது இடலாம் [மனமோகினி தேவி (எ.) இந்தியா மந்திரி (Secretary of State for India), *13 பி. எல். ஆர். 359, 376*].

**புறக்குறிப்பின் வகைகள்**

வெறும் புறக்குறிப்பு (endorsement in blank), முழுப் புறக்குறிப்பு (endorsement in full), நிபந்தனைப் புறக்குறிப்பு (conditional endorsement), வரையறைப் புறக்குறிப்பு (restrictive endorsement) போன்ற பல்வகையான புறக்குறிப்புகள் உள்ளன. வெறும் புறக்குறிப்பில், புறங்குறிப்பவரது (endorsee) கையொப்பம் மட்டுமே முறியொன்றின் பின்புறம் இருக்கும்; எவருக்குச் சாதகமாக அப்புறக்குறிப்பு இடப்பட்டதோ, அவருடைய பெயர் அதில் தோன்ருது. இவ்வகைப் புறக் குறிப்பு அந்த முறியை உடையவரிடம் செலுத்தத் தக்கதாக ஆக்குகிறது. எனவே, அந்த முறியைப் பிறருக்கு மாற்ற அதை அவரிடம் சேர்ப்பித்தால்மட்டுமே போதும். புறங்குறிக்கும் போது கையொப்பம் மட்டுமே இடாது அத்துடன் ஒரு குறிப்பிட்ட நபருக்கோ அல்லது அவரது ஆணையின்படியோ அதன் பணத்தைச் செலுத்தல் வேண்டும் என்ற கட்டளையையும் சேர்த்தால், அந்தப் புறக்குறிப்பு முழுப் புறக்குறிப்பாக மாறுகிறது. புறங்குறிப்பவர் முறிக்குப் பின்புறம் கையொப்பம் இடுவதன் வாயிலாகப் புறக் குறிப்பாளிக்கும், பின்னல் முறைப்படி பெறுகிறவர்களுக்கும் ஓர் உத்தரவாதம் அளிக்கிருர். அம்முறி தம்மிடமிருந்து சென்ற போது தமக்கு அதன்பால் சீரிய உரிமை (good title) இருந்தது; அதன் எல்லா அமிசங்களும் வாய்மையுடயவை என்பதே அந்த உத்தரவாதம். தமக்கு முன்பே செய்யப்பட்ட புறக்குறிப்புகள் யாவும் வாய்மையுடையவை என்றும் அவர் சான்றளிக்கிருர். புறங்குறிப்பவர், பெரும்பாலும் ஒரே ஒரு நிபந்தனையின்பேரில் தான் பணம் செலுத்த ஒப்புக்கொள்கிருர். அந்த முறி மறுக்கப் படும் காலத்து அதை வைத்திருப்பவர் மறுப்பு அறிவிப்பைத் தகுந்த முறையில் தமக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதான் அந்நிபந்தனை. இருப்பினும், அவர் விரும்பினுல் அவருடைய பொறுப்பைப் பிற நிபந்தனைகளுக்கு உட்படுத்திக்கொள்ளலாம்; அவ்வாறு நிபந்தனைகளுக்கு உட்படுத்தும் புறக்குறிப்பு, நிபந்தனைப் புறக்குறிப்பு என்று கூறப்படும். நிபந்தனைப் புறக்குறிப்பின்மூலம், அந்த முறி சுமத்தும் பொறுப்பிலிருந்து அவர் முற்றிலும் தப்பிவிட முடியும். எடுத்துக்காட்டாக, புறங்குறிப்பவர் அவரது புறக் குறிப்பில் 'என்னை நாடாதே' (without recourse to me) என்ற சொற்களைச் சேர்த்தலினுல் அவரது பொறுப்பை முற்றிலும் விலக்கிக்கொள்கிருர். மேலும், ஐயப்பாடான (contingent) நிகழ்ச்சிகள் நிகழ்தலை நிபந்தனைகளாகச் சேர்த்துக்கொள்ளலாம்;

அவைகள் புறங்குறிப்பவரது பொறுப்பைத் தீர்மானிக்கும் வகையில் அமையலாம் ; அல்லது புறங்குறிப்பாளியின் பணம் பெறும் உரிமையை அந்த நிகழ்ச்சியைச் சார்ந்து இருக்கும் வண்ணம் கட்டுப்படுத்தலாம். இவ்வாறு சேர்க்கப்படும் நிபந்தனைகளை முன்தடை நிபந்தனைகள் (conditions precedent), பின்தடை நிபந்தனைகள் (conditions subsequent) என இரு கூறுகளாகப் பகுக்கலாம். முன்தடை நிபந்தனையைப் புறக்குறிப்பில் சேர்ப்பதால், அந்த நிபந்தனை நிறைவேறும்வரை புறக்குறிப்பாளி, அந்த முறியின் பணத்தைப் பெறும் உரிமையை அடைய முடியாது போகிறது. பின்தடை நிபந்தனையைப் புறக்குறிப்பில் சேர்ப்பதால், புறக்குறிப்பாளியின் பணம் பெறும் உரிமை அந்த நிபந்தனை நிறைவேறுங்கால் பறிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, 'X அவர்கள் இங்கிலாந்திலிருந்து ஓர் ஆண்டுக்குள் திரும்புவாராயின், அவரிடம் செலுத்துக' என்று ஒரு புறக்குறிப்பு இருந்தால், புறங்குறித்த தேதியிலிருந்து ஓர் ஆண்டுக்குள் X அவர்கள் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்தால்தான், அவருடைய பணம் பெறும் உரிமை முழுமை (absolute) பெறுகிறது. இக்கருத்தைத் தெளிவாக்க, மற்றும் ஒரு மேற்கோளைக் காணுவோம் : 'உரிமை வயதை (majority) அடையும்போது, X அவர்களிடம் செலுத்துக' என்று ஒரு புறக்குறிப்பு இடப்படுகிறது என்று கொள்வோம். இதனுல் X அவர்கள் உரிமை வயதையடைந்தபொழுதுதான், அதன் பணத்தைப் பெற இயலும். 'பணத்தைச் செலுத்துமுன், நான் மாறுன அறிவிப்புக் கொடுக்காவிட்டால், X அவர்களுக்கோ அல்லது அவரது ஆணைப்படியோ செலுத்துக' என்னும் புறக்குறிப்பு ஓர் உண்டியலில் அல்லது வெண்கடன் பத்திரத்தில் இடப்பட்டால், அது பின்தடை நிபந்தனையுள்ள புறக்குறிப்பாகும். இந்த நிபந்தனை நிறைவேறுதவரை அவர் (புறக்குறிப்பாளி) பணம் பெறலாம் ; நிறைவேறிவிட்டால், அவர் உரிமை ப்யனற்றுப் போகிறது. பணம் செலுத்த வேண்டாம் என்ற அறிவிப்பு, அவருக்குப் பணம் செலுத்துமுன் கொடுக்கப்பட்டால், அவர் அந்த உரிமையை இழக்கிறுர். முறிகளின் செலாவணித் தன்மையைப் புறக்குறிப்பில் சேர்க்கப்பட்டுள்ள நிபந்தனைகள் பாதிப்பதில்லை. இக்காரணத்தால் நிபந்தனைப் புறக்குறிப்பு, வரையறைப் புறக்குறிப்பினின்றும் மாறுபட்டு நிற்கிறது. புறக்குறிப்பாளியின் மாற்றும் உரிமையை வரையறைப் புறக்குறிப்பு பறித்து விடுதலோ அல்லது குறைத்து விடுதலோ கூடும். சில நேரங்களில் வரையறைப் புறக்குறிப்பு புறக்குறிப்பாளிக்குத் தற்சார்ந்த உரிமை எதையும் கொடாமல், புறங்குறிப்பவரது சார்பிலோ அல்லது குறிப்பிட்ட பிறிதோர் ஆளின் சார்பிலோ புறங்குறித்தல் அல்லது அதன் பணத்தைப் பெறுதல் போன்ற செயல்களைச் செய்யும் உரிமையை மட்டுமே

அளித்து, அவர்களுடைய முகவராக மட்டுமே அமர்த்திவிடும். உதாரணமாக, கொணர்வோரிடம் செலுத்தப்பட வேண்டிய செலாவணி முறியொன்றில், பி. என். கபூர் அவர்கள் பின் வருமாறு புறங்குறித்தால், அதனுடைய செலாவணித் தன்மையை அவர் வரையறுப்பதாகக் கருதலாம்: (அ) 'எஸ். எம். ஜோஷி அவர்களுக்கு மட்டும் செலுத்துக', (ஆ) 'என் பயனுக்காக எஸ். எம். ஜோஷி அவர்களிடம் செலுத்துக', (இ) 'பி. என். கபூர் அவர்களுடைய கணக்குக்காக எஸ். எம். ஜோஷி அவர்களிடம் செலுத்துக', (ஈ) 'எஸ். எம். ஜோஷி அவர்களின் கணக்கில் இதன் பணத்தை வரவு வைக்கவும்' ஆகியவை.

### செலாவணி முறிகளின் சட்டச் சார்புகள் (சலுகைகள்-Legal Incidents)

இதுவரை செக்குகளின் சிறப்பியல்களைக் கண்டோம். அவை செலாவணி முறியின் இனத்தைச் சேர்ந்தவையாதலின், இங்கு அவற்றின் சட்டச் சார்புகளைக் (சலுகைகளைக்) காண்போம். இச்சலுகைகள் செலாவணி முறிகளைப் பிற அசையும் சொத்துக்களினின்றும் (movable properties) பிரித்துத் தனித்த ஓர் இனமாக ஆக்குகின்றன. பாங்கர் அவர்களது தொழிலின் நடைமுறையில், செலாவணி முறிகளை மிக விரிவான அளவில் கையாள வேண்டியிருப்பதால், அவற்றின் சலுகைகளை ஈண்டு ஆராய்தல் பயன் தரத் தக்கதாகும்.

### ஒப்பந்தக் கடனும் செலாவணி முறியும்

செலாவணி முறிகளைக் கடனின் சான்றாகவே ஒரு வகையில் கருதலாம். எனவே, சாதாரண ஒப்பந்தங்களைப் பற்றிய சட்ட விதிகளே, அவற்றின் நேர்முகத் தொடர்பாளர்களுக்கும் (immediate parties) பொருந்தும். ஆயினும், அவற்றை மாற்றிப் பெற்றவர்களின் உரிமைகளை ஆராயப் புகுங்கால், அவற்றின் சிறப்பு அமிசங்கள் தென்பட்டு ஒப்பந்தக் கடன்கள் போன்ற பிற இயங்குடைமைகளினின்றும் அவற்றைப் பகுத்துத் தனி இனமாக்குவதை அறியலாம். இரண்டு எடுத்துக்காட்டுகள் மூலம் இதை விளக்கலாம்:

**முதல் எடுத்துக்காட்டு:** B என்பவர் தமக்குச் செய்த உதவியொன்றின் பிரதிப்பயனாக (கைமாறாக) A என்பவர் அவருக்கு 1000 ரூபாய் செலுத்த இசைந்து ஒப்பந்தம் ஒன்றை எழுதிக் கொடுக்கிறார் என எடுத்துக் கொள்வோம். இது சாதாரணமான ஓர் ஒப்பந்தக் கடனாகும். B என்பவர் அவரது பணம் பெறும் உரிமையை C என்பவருக்கு அளிக்க விரும்பினால், உரிமை அளிப்பு (assignment) ஒப்பந்தப்

பத்திரமொன்றை எழுதிக் கையொப்பமிட்டுக் கொடுக்க வேண்டும். B என்பவர் A என்பவரிடமிருந்து பணம் பெறும் உரிமையை வற்புறுத்தி நிறைவேற்ற முடியாதவண்ணம் சூழ்நிலை உருவாகிறது என்று நாம் கொள்வோம். பின் வரும் நிகழ்ச்சிகளின் விளைவாக இச்சூழ்நிலை உருவாகலாம் : A என்பவர் கொடுத்த வாக்குறுதி பிரதிப்பயனின் (கைம்மாறின்) அடிப்படையில் எழாததொன்றாக இருக்கலாம். பிரதிப்பயன் இருந்திருந்தாலும், அது சட்ட முரண்பாடான(illegal)தொன்றாக இருக்கலாம்; அல்லது பொதுநலக் கைக்கோளுக்குப் (public policy) புறம்பானதாக இருக்கலாம் ; அல்லது A என்பவர் B என்பவரிடமிருந்த ஒப்பந்தப் பத்திரத்தைத் திரும்பப் பெறாமல், அவர் வசமே இருக்குமாறு விட்டுவிட்டுப் பணத்தை மட்டுமே செலுத்தியிருக்கலாம். இந்த நிகழ்ச்சி ஒவ்வொன்றின் விளைவாகவும், உரிமையை மாற்றிப் பெற்றவராகிய C என்பவர், B என்பவரைக்காட்டிலும் அதிக உரிமையைப் பெற மாட்டார். C என்பவர் A என்பவர்மீது வழக்குத் தொடுக்கலாம். B என்பவர் தம்மீது வழக்கிட்டிருந்தால், எவற்றைக் காரணங்களாக வற்புறுத்தித் தமது பொறுப்பை மறுப்பாரோ அவற்றையே இவ்வழக்கிலும் வாதித்து அவற்றை மெய்ப்பிக்க A என்பவர் முயலுவார். வழக்கு மன்றமும் அதற்கு அனுமதியளிக்கும். இக்கூற்றைச் சட்ட மொழியில் சொல்ல வேண்டுமானால், இவ்வாறு கூறலாம் : கடன் அல்லது பிற உடைமைகளின் உரிமை அளிக்கப் பெற்றவர், அளிப்பவரின் உரிமையிலிருந்த குறைகள், நிறைகள் அனைத்துக்கும் உட்பட்டுத் தான் தமது உரிமையைப் பெறுகிறார்.

**இரண்டாம் எடுத்துக்காட்டு :** B என்பவரது கைகடிகாரத்தை A என்பவர் திருடி, C என்பவருக்கு விற்றுப் பணம் பெற்றுக்கொள்கிறார். C என்பவருக்கு B என்பவர் அதைத் திருடி விற்கிறார் எனத் தெரியாது. C என்பவர் D என்னும் ஏலமிடுபவரிடம் (auctioneer) விற்கும்பொருட்டு அதைக் கொடுக்கிறார். D என்பவர் பொது ஏலத்தில் E என்பவருக்கு அதை விற்று விடுகிறார். B என்பவர் A, C, D, E ஆகிய நால்வரில் யாராவது ஒருவரையோ அல்லது அனைவரையோ சட்ட முரணான கையாளுகை (conversion) செய்த குற்றத்திற்கு ஆட்படுத்தலாம். இங்குக் குறிப்பிடத் தேவையற்ற சில விதிவிலக்குகளுக்குட்பட்டுப் பின்வரும் கோட்பாட்டை வகுக்கலாம்(formulate): ஓர் உடைமையின் உரிமையை மாற்றுபவர்( Transferor), தமக்குள்ள உரிமையைக்காட்டிலும் அதிக உரிமையை மாற்றிப் பெற்றவருக்கு வழங்க முடியாது. இந்த எடுத்துக்காட்டில் A என்பவருக்கு உரிமையேதுமில்லை ! எனவே, மாற்றிப் பெற்ற

வராகிய (Transferee) C என்பவருக்கும் உரிமையேதுமில்லை. கடைசியாக மாற்றிப் பெற்றவராகிய E என்பவரும் எந்த உரிமையையும் அடைய முடியாது.

### இந்த விதிக்குச் செலாவணி முறிகள் ஒரு விதிவிலக்கு

மேலே கூறப்பட்டுள்ள விதிக்குச் செலாவணி முறிகள் சிறந்த விதிவிலக்காக அமைகின்றன. முதல் எடுத்துக்காட்டில் A என்பவர் B என்பவரிடம் 'செலாவணித் தன்மையற்றது' என்று கீறப்படாத செக்கையோ அல்லது B என்பவரிடம் செலுத்துமாறு எழுதிய வெண்கடன் பத்திரம் ஒன்றையோ கொடுக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். B என்பவர் தம் உரிமையை C என்பவருக்கு மாற்ற விரும்பினால், அவர் உரிமை அளிப்புப் பத்திரம் எழுத வேண்டியதில்லை; மாறாக, அது ஆணை முறியாக (order instrument) இருந்தால் புறங்குறித்தல், சேர்ப்பித்தல் ஆகிய செயல்களினாலும், உடையவர் முறியாக இருந்தால் சேர்ப்பித்தல் என்ற செயலினாலும், அவருடைய உரிமையை மாற்ற முடியும். C என்பவர் அந்த முறியின் தவணை முடியுமுன் (maturity), B என்பவரது உரிமையிலுள்ள குறைகளை அறியாமல், அதற்குரிய மதிப்பைச் செலுத்தி அதைப் பெற்றால், முறைப்படி பெற்றவர் (holder in due course) என்று கருதப்படுவார். அவர் அவ்வாறு கருதப்படுவாராயின், அவருடைய பணம் பெறும் உரிமையை எந்தக் காரணத்தையுங்கொண்டு, A என்பவர் மறுக்க முடியாது. தாம் கொடுத்த செக்கு அல்லது வெண்கடன் பத்திரம் பிரதிப்பயனற்றது (கைம்மாறற்றது) என்றோ அல்லது சட்ட முரண்பாடான பிரதிப்பயனின் (கைம்மாறின்) அடிப்படையில் எழுந்தது என்றோ அல்லது பொதுநலக் கைக்கோளுக்குப் புறம்பானது என்றோ வலியுறுத்தி C என்பவருக்குப் பணம் செலுத்த வேண்டிய பொறுப்பைத் தவிர்க்க முடியாது. செலாவணி முறி ஒன்றை முறைப்படி பெற்றவர், அதை மாற்றுபவருடைய உரிமையிலிருந்த குறைபாடுகளனைத்திலிருந்தும் விடுபட்ட செம்மையான உரிமையைப் பெறுகிறார் என்பதே இங்கு உள்ளடங்கிய கோட்பாடு.

### முறைப்படி பெற்றவர், செலாவணி முறியைச் சட்ட முரணான கையாளுகை செய்த குற்றத்திற்கு ஆளாக மாட்டார்

இரண்டாம் எடுத்துக்காட்டைச் சில மாறுதல்களுடன் ஆராய்வோம். C என்பவர் B என்பவருக்கோ அல்லது அவருடைய ஆணையின்படியோ செலுத்த ஏற்றுக்கொண்ட வெண்கடன் பத்திரத்தை B என்பவருக்குக் கொடுக்கிறார். B என்பவர் அதில் வெறும் புறக்குறிப்பிட்டு, தமது இழுப்பறைப் பெட்டியில் (drawer) அதைப் பூட்டி வைக்கிறார். A என்பவர் அதைத் திருடி, D என்பவருக்கு

மாற்றுகிறார். (அது உடையவர் வெண்கடன் பத்திரமாதலின், சேர்ப்பித்தல் மூலம் மாற்றலாம்.) D என்பவர் அதை முறைப்படி பெற்றவராகிறார். எனவே, அவரது உரிமையை B என்பவர் பறிக்கவோ குறைக்கவோ முடியாது. C என்பவர் D என்பவருக்குத்தான் செலுத்தக் கடமைப்பட்டவரேயன்றி, B என்பவருக்கல்ல. ஒரு குற்றத்தின் வழியாகவோ அல்லது மோசடி செய்தோ செலாவணி முறி ஒன்றைக் கள்வனோ அல்லது பிறி தொருவரோ அடையலாம்; இருப்பினும், முறைப்படி பெற்ற வருக்கு அவர் செம்மையான உரிமையினைக் கொடுக்க முடியும் என்பதே இங்குத் தெளிவாகும் கோட்பாடு. மிகச் சிறந்த இந்தச் சலுகைகளைச் செலாவணிப் பத்திரங்கள் பெற்றிருப்பதால்தான், அவைகள் திட்டவட்டமான அமிசங்களைப் (வடிவம், மொழி, இன்ன பிற) பெற்றிருத்தல் வேண்டும் என்று (பிற பத்திரங்களி னின்றும் அவற்றை வேறுபடுத்திக் காட்ட) சட்டம் வற்புறுத்து கிறது.

### வழிகாட்டும் கோட்பாடுகள்

செலாவணி முறிகளுக்குப் பொருந்தும் கோட்பாடுகளை இப் பொழுது சுருக்கமாகக் கூறலாம் :

(அ) புறங்குறித்தல், சேர்ப்பித்தல் ஆகிய இரு செயல்களி னாலும் அல்லது சேர்ப்பித்தல் என்ற செயலினாலும் செலாவணி முறியின் உரிமையைப் பிறருக்கு மாற்ற லாம். மாற்றிப் பெறுபவரும் புறக்குறிப்பாளியும் தம் முரிமையின் அடிப்படையிலேயே அதன்மீது வழக்குத் தொடுக்கலாம்.

(ஆ) நேர்முகத் தொடர்பாளர்களுக்கிடையே ஒப்பந்தக் கடனைப் பயனற்றதாக்கும் வாதங்களும் மறுப்புக் களும் (pleas and defences) செலாவணி முறி களுக்கும் பொருந்துவனவாயினும், அவை முறைப் படி பெற்றவரின் உரிமையைப் பறிக்கவோ குறைக் கவோ முடியாது.

(இ) தமக்கு முன்பே அந்த முறியில் தொடர்புடையவர் களது உரிமையிலுள்ள குறைபாடுகளினின்றும் விடு பட்ட செம்மையான உரிமையுடன் முறைப்படி பெற்றவர், அந்த முறியைப் பெறுகிறார்.

**உண்மையான உரிமையாளரின் நிலை**

களவு போன உண்டியல் அல்லது வெண்கடன் பத்திரம் ஒன்று முறைப்படி பெற்றவரையடைந்தால், அதன் பணத்தைப் பெறும் உரிமையை எவரும் மறுக்க முடியாதவாறு அவர் பெறுகிறார் என்று முன்பே கண்டோம். எவரிடமிருந்து களவாடப்பட்டதோ, அவர் அதனுடைய உண்மை உரிமையாளர் (true owner) எனப் படுவார். ஆனால், அவர் அதன் பணத்தைப் பெற இயலாது; தமக்குமுன் அதில் சம்பந்தப்பட்டவர்கள்மீது இருந்த பரிகாரங் களையும் இழக்கிறார். இந்த நிலை, செலாவணி முறிச்சட்டத்தின் 82 (இ) என்னும் பிரிவு தோற்றுவிக்கும் விளைவாகும். கொணர் வோரிடம் செலுத்தப்பட வேண்டிய செலாவணி முறியொன்றின் மீது அதை எழுதியவரோ அல்லது ஏற்பவரோ அல்லது புறங்குறித் தவரோ, அதன் தொகையை முறைப்படி செலுத்தியிருந்தால், (payment in due course), அவருடைய பொறுப்பு நீங்குகிறது என்று அப்பிரிவு கூறுகிறது. இவருடைய நிலை களவு போன பொருளின் (செலாவணித் தன்மையற்ற) உரிமையாளருடைய நிலையினின்றும் எதிர்மாறாக உள்ளது. களவு போன பொருள், ஒன்றும் அறியாமல் நல்லெண்ணத்துடன் (bona fide) மதிப்பை ஈந்து வாங்கியவரை அடைந்தாலும், அதன் உரிமையாளர் பாதிக்கப்படுவதில்லை என்பது இங்கு நினைவிற்கொள்ளத் தக்கது.

**கள்ளக் கையெழுத்தின் விளைவுகள்**

இதுவரை கூறியவற்றில் கள்ளக் கையெழுத்தின் (forgery) விளைவுகளை நாம் ஆராயவில்லை. கள்ளக் கையெழுத்தையும் அங்கீகாரமின்றி இடப்பட்ட கையெழுத்தையும் முற்றிலும் செல்லாதவை (inoperative) என்று சட்டம் தள்ளி விடுகிறது. கள்ளக் கையொப்பத்தின் வழியாக உண்டியல் அல்லது வெண் கடன் பத்திரம் ஒன்றை அடைந்த ஒருவர், மற்றவர்கள் மறுக்க முடியாமல் முரண்தடை செய்யப்பட்டு (estoppel) இருந்தாலன்றி, அதன்மீது எவ்வித உரிமையையும் பெற இயலாது; அதை வைத்திருக்க முடியாது; அதன்மீது பணத்தைச் செலுத்துமாறு வற்புறுத்த இயலாது; பணத்தைச் செலுத்தியவருக்குச் செல்லத் தக்க பொறுப்பு நீக்கமும் (discharge) தர முடியாது. கள்ளக் கையெழுத்தைத் தாங்கிய செலாவணி முறியின் உண்மை உரிமை யாளர் நிலை, பிற பொருள்களுடைய உரிமையாளர்களின் நிலையைப் போன்றதே. இவர்களைப் போலவே, அவரும் எல்லோருக்கும் எதிராகச் 'சட்ட முரணான கையாளுகை' செய்த குற்றத்திற்காக வழக்குத் தொடுக்கலாம். கள்ளக் கையெழுத்து இல்லாதபொழுது அந்த முறி முறைப்படி பெற்றவரை அடைந்

தால், அவர் உரிமைகளை இழக்கிறார்; பிறரை அடைந்தால் இழப்பதில்லை.

### மேலே விளக்கப்பட்ட விதிக்கு ஒரு விலக்கு

கள்ளக் கையெழுத்தின் விளைவுகளைப் பகரும் விதிக்கு, ஒரு விலக்கு இருக்கிறது. அதாவது, கள்ளக் கையெழுத்தைத் தாங்கிய செக்கிற்கு பாங்கு, பணம் செலுத்துதல் முறைப்படி செலுத்து தலினால், அவருடைய பொறுப்பிலிருந்து பாங்கர் விடுவிக்கப்படு கிறார் என்ற கூற்றை நாம் அடுத்த அத்தியாயத்தில் காணவிருக் கிறோம். இங்கிலாந்து நாட்டிலே முறைப்படிச் செலுத்துதலினால் செலுத்தும்-பாங்கர் மட்டுமின்றி, எழுதுபவர், புறங்குறிப்பவர்கள் அனைவரும் விடுவிக்கப்படுகின்றனர். 1882ஆம் ஆண்டு ஆங்கில உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 59, 60ஆம் பிரிவுகள் இக்கருத்தை உணர்த்துகின்றன. ஆனால், 1881ஆம் ஆண் டின் இந்தியச் செலாவணி முறிச்சட்டத்தில் இதற்கு ஒத்த காப்பு வாசகம் (provision) இல்லை. எனினும், சுலைமான் ஹுசைன் (எ.) தி நியூ ஓரியண்டல் பாங்கு கார்ப்பரேஷன், 15, பம்பாய் 267 என்ற வழக்கில் நிலவும் சூழ்நிலையில் இந்தியாவில் எழுதுபவரும் புறங்குறிப்பவர்களும் (பொறுப்பிலிருந்து) விடுவிக்கப்படுவர் என்று தலைமை நீதிபதி சார்ஜெண்ட் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். கள்ளக் கையெழுத்து இல்லாதிருந்து, முறைப்படி பெற்றவர் குறுக் கிட்டால், உண்மை உரிமையாளரிடமிருந்து எல்லா உரிமைகளும் பறிக்கப்படுகின்றன; அது போலவே, கள்ளக் கையெழுத்து இருந்து, அந்தப் பத்திரம் செக்கு என்றால், அதன் பணத்தை பாங்கர் முறைப்படி செலுத்தினால், அப்பொழுதும் உண்மை உரிமையாளரது உரிமைகள் பறி போகின்றன. பிற சூழ்நிலைகளில் அவரது உரிமையும், இயங்குடைமைகளின் (அசையும் சொத்துக்களின்) உரிமையாளர்களது உரிமையும் ஒரே மாதிரி யானவை. சட்ட முரணான கையாளுகைத் தத்துவத்தை (doctrine of conversion) ஆராயுங்கால், இக்கோட்பாட்டை நினைவிற் கொள்ளுதல் பயனளிக்கும்.

# 7. வாடிக்கைக்காரரின் செக்குகளுக்குப் பணஞ்செலுத்துதல்

**வாடிக்கைக்காரரின் செக்குகளை மதிக்க வேண்டிய கடமையின் வரம்புகள்**

வாடிக்கைக்காரரின் செக்குகளை மதிக்க வேண்டிய கடமை பாங்கருக்குள்ளது என்பதை மேலெழுந்த வாரியாக அத்தியாயம் 3இல் கண்டோம். இக்கடமை பல வரம்புகளுக்குட்பட்டிருக்கிறது. முதலாவதாக, செக்கின் சட்ட இலக்கணம் வலியுறுத்தும் அமிசங்களை முற்றிலும் முறையாகப் பெற்றிராமலிருக்கும் (ஈரெட்டுத் தன்மையைக் கொண்ட) பொருள்மயக்க முறிகளை மதிக்க வேண்டிய கடமை பாங்கருக்கில்லை ; இருப்பினும், இம் மாதிரியான செக்குகளைச் செலுத்துவதனால் நேரும் இழப்பை ஈடு செய்ய, வாடிக்கைக்காரர் வாக்குறுதியளித்திருந்தால், அவற்றை மதித்து பாங்கர் பணஞ்செலுத்தலாம். செக்குகளாக உலவட்டும் என்று எண்ணப்படாத முறிகளை, பாங்கர் மதித்தலாகாது. ஏனெனில், அவை சில ஆபத்துகளுக்கு அவரை உள்ளாக்க வல்லன. இரண்டாவதாக, வாடிக்கைக்காரருடைய கணக்கின் நிலைமை அவருடைய செக்குகளைச் செலுத்த இடமளிக்கும் வரைதான், பாங்கர் அக்கடமைக்குக் கட்டுப்பட்டவராவர். சற்று விரிவாகக் கூற வேண்டுமானால், செக்கு எழுதப்பெற்ற கணக்கில் போதுமான வரவு இருப்பு இருக்க வேண்டும் ; அல்லது அந்த வாடிக்கைக்காரருக்கு அதிகப்பற்று அளிக்க வேண்டிய ஒப்பந்தம் நடப்பிலிருக்க வேண்டும் ; அதுமட்டுமன்றி, செக்கின் தொகை அளிக்க ஒப்புக் கொண்ட அதிகப் பற்றுத்தொகையை மீறுவண்ணம் இருக்க வேண்டும் ; மேலும், அதிகப்பற்றுத் தொகையை பாங்கர் குறைக்காமலோ அல்லது ரத்து செய்யாமலோ இருக்க வேண்டும். அதிகப்பற்று அளிக்க ஒப்புக்கொள்ளும்போது, அறிவிப்பின்றி அதைக் குறைக்க அல்லது ரத்து செய்யும் உரிமையைப் பொது

வாகப் பாங்கர் தங்களுக்கு ஒதுக்கிக்கொள்ளுவதுண்டு என்பதை இங்கு நினைவிற்கொள்ள வேண்டும். எழுதுபவர் கணக்கு முடிக்கப் பட்டதன் விளைவாக, பாங்கர், வாடிக்கைக்காரருக்கு நட்ட ஈடு கொடுக்க நேரும் என்ற அச்சமின்றி, செக்கை அவமதிக்கலாம்; செலுத்த மறுக்கலாம். செலாவணி முறிச்சட்டத்தின் 98ஆம் பிரிவிலுள்ள (இ) என்னும் சரத்தின்கீழ் மறுப்பு அறிவிப்பு கொடுக்க வேண்டிய தேவையில்லை[சூனிலால் பூபால் (எ.) ஏ. சி. டிட்டா அவர்களும் பிறரும் சி. சி. நூற்பிரிவு 23, பக். 195]. வாடிக்கைக்காரர்களின் செக்குகளை மதிக்க வேண்டிய பாங்கரின் கடமைக்கு வரம்பு வகுக்கும் பிற கட்டுத்திட்டங்களைப் பிறகு காண்போம்.

**செலுத்தும்-பாங்கரைச் சூழ்ந்துள்ள இடர்கள்**

தம்மேல் எழுதப் பெற்ற செக்குகளைப் பொறுத்தவரை, பாங்கரின் நிலைமை பிறர் நாட்டம் கொள்ளத்தக்க வகையில் வலுவானதாக இல்லை. எழுதுபவருடைய (கணக்கு) வரவில் பணமில்லாத போது, சற்று விழிப்பின்றி அவருடைய செக்கை மதித்துப் பணஞ் செலுத்தி விட்டாராளுல், அப்பணத்தை இழக்கக் கூடும்; மாருக, கவனக்குறைவால் அதை அவமதித்து விட்டால், தவருக மறுத்த (அவமதித்த) குற்றத்திற்கு, வாடிக்கைக்காரருக்கு நட்ட ஈடு செலுத்த இலக்காவார். இருதலைக் கொள்ளி எறும்பைப் போன்றது அவர் நிலை. சட்ட ஆலோசகரையோ வாடிக்கைக்காரரையோ அல்லது மற்ற எவரையோ கலந்து பேசக்கூட வாய்ப்பின்றி, சமர்ப்பிக்கப்பட்ட செக்கை மதிக்கவோ அல்லது அவமதிக்கவோ, உடனடியாக ஒரு முடிவு செய்ய வேண்டிய நிலையில் பாங்கர் உள்ளனர். செக்கு எழுதப்பெற்ற பாங்கர், அதை அவமதிக்க வேண்டிய இக்கட்டான நிலையிலிருந்தால், உடனடியாக அந்தச் (அவமதித்த) செக்கை வசூலிக்கும்-பாங்கருக்குத் திருப்பியனுப்ப வேண்டும். அவ்வாறு செய்யத் தவறினல், வசூலிக்கும்-பாங்கருக்கு அந்தச் செக்கின் தொகையைச் செலுத்த வேண்டிய பொறுப்புக்கு இலக்காவார்[ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு (எ.) ரங்கநாத் ரதி சி. சி. 1958, நூற்பிரிவு 29, பக். 161]. பிறரைக் கலந்து பேசி, செக்கை மதிக்கவோ அல்லது அவமதிக்கவோ ஒரு முடிவு செய்துகொள்ளலாம் என்ற நோக்கத்துடன் 'மறுபடியும் சமர்ப்பிக்க' என்ற குறியிட்டு, சமர்ப்பித்தவரிடம் திருப்பிக் கொடுத்தால், அச்செக்கு மறுக்கப்பட்டு விட்டது என்று எடுத்துக்கொள்ள அதன் பெறற்குரியவர் அல்லது புறக்குறிப்பாளிக்கு உரிமையுண்டு ; அதை மறுபடியும் அவர் சமர்ப்பிக்கத் தேவையில்லை. வாடிக்கைக்காரரின் கணக்கிருப்பு செக்கை மதிக்க இடமளிக்காதிருந்து, தாம் பிறகு செக்கைச் செலுத்துவதற்கேற்ப, வாடிக்கைக்காரர் அவருடைய

கணக்கிற்கு நிதி செலுத்தக் கூடும் என்ற தோதும் இல்லா திருந்தால், பாங்கர் மேற்கூறிய கருத்துரையைத் தெரிவிக்கக் கூடாது. எனவே, தம்மீது எழுதப்பெற்ற செக்கை மதித்தல் அல்லது அவமதித்தல் போன்ற செயல்களில் மிகவும் எச்சரிக்கை யோடும் விழிப்போடும் நடத்தலே பாங்கருக்குத் தகுதி வாய்ந்தது. இந்த அபாயங்களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள, பாங்கர் அனுசரிக்க வேண்டிய பல்வேறு முன்னெச்சரிக்கைகளை அடுத்துக் காணவிருக்கிறோம்; அதற்குமுன், பாங்கர், தமக்கு நெருங்கிய பழக்கமில்லாத புதிய வாடிக்கைக்காரர்களுடைய கணக்கைத் துவக்க ஒப்புக்கொள்ளுமுன், அறிமுகக் கடிதமோ அல்லது சான்று பகர்வோருடைய (reference) பெயர்களையோ தருமாறு அவர்களை வற்புறுத்த வேண்டிய அவசியத்தை இங்கு மறுமுறையும் வலியுறுத்தல் சாலப் பொருந்தும். செக்குகளை மதித்தலிலுள்ள அபாயங்களைப் பெருமளவு இந்த முன்னெச்சரிக்கை குறைக்கிறது.

## முன்னெச்சரிக்கைகள்

**கீறிய செக்கா? கீறாச் செக்கா?**

செக்கொன்று சமர்ப்பிக்கப்படும்பொழுது, அது கீறிய செக்கா அல்லது கீறாததாவென்றும், அது கீறிய செக்கென்றால் பொதுக் கீறலிடப்பட்டதா அன்றிச் சிறப்புக் கீறலைக் கொண்டதா வென்றும் பார்ப்பதுதான் பாங்கருடைய முதற்பணியாக இருக்க வேண்டும். செக்கு பொதுக் கீறலிடப்பட்டிருந்தால், ஒரு பாங்கர் மூலமாக அதைச் சமர்ப்பிக்குமாறு, வைத்திருப்பவரிடம் கூற வேண்டும்; சிறப்புக் கீறலை அது கொண்டிருந்தால், அக்கீறலில் குறிப்பிட்டுள்ள பாங்கரின் மூலமாகவோ அல்லது அதற்கு வசூலிக்கும் பதிலாளாகச் செயலாற்றும் பிறிதொரு பாங்கின் மூலமாகவோ, அந்தச் செக்கைச் சமர்ப்பிக்கும் வண்ணம் கூற வேண்டும். கீறிய செக்கின் தொகை, செலுத்தும்-பாங்கரிடம் உள்ள வசூலிக்கும்-பாங்கருடைய கணக்கில் வரவுதான் வைக்கப் படும் என்ற கூற்றை, இதிலிருந்து பெறக்கூடாது. இருப்பினும், கீறிய செக்கின் தொகையைப் பாங்கரல்லாத ஒருவருக்கு நேராகச் செலுத்தினால், அதனால் வாடிக்கைக்காரருக்கு விளையும் நட்டத்தை ஈடு செய்ய, செலுத்தும்-பாங்கர் இலக்காவார் (செலாவணி முறிச் சட்டம், 1881, பிரிவு 129).

**செலுத்தும்-பாங்கரும் கீறிய செக்கும்:** பின்வரும் செலாவணி முறிச்சட்டத்தின் 126, 127, 129ஆம் பிரிவுகள், செலுத்தும்-பாங்கருடைய கடமைகளைத் தெளிவுபடுத்துகின்றன:

பி. 126. பொதுக் கீறலைத் தாங்கியுள்ள செக்கின் தொகையை பாங்கரொருவரிடமன்றிப் பிறருக்கு எழுதப் பெற்ற-பாங்கர் செலுத்தக் கூடாது.

செக்கொன்று சிறப்புக் கீறலிடப்பட்டிருந்தால், எழுதப்பெற்ற-பாங்கர், அக்கீறலில் குறிப்பிட்டுள்ள பாங்கருக்கோ அல்லது அவருடைய வசூலிக்கும் பதிலாளுக்கோவன்றிப் பிறருக்கு அதன் தொகையைச் செலுத்தக் கூடாது.

பி. 127. வசூலிக்கும்பொருட்டு பதிலாள் ஒருவருக்குக் கீறலிடப்பட்டாலன்றி, ஒன்றுக்கும் மேற்பட்ட பாங்கரின் பெயர் சிறப்புக் கீறலில் தோன்றுமாயின், செக்கு எழுதப்பெற்ற பாங்கர் அதன் தொகையைச் செலுத்த மறுக்க வேண்டும்.

பி. 129. பொதுக் கீறலிடப்பட்ட செக்கின் தொகையை பாங்கரல்லாத ஒருவருக்குச் செலுத்தினுலும், அல்லது சிறப்புக் கீறலைக்கொண்ட செக்கை, அக்கீறலில் குறிப்பிட்டுள்ள பாங்கருக்கோ அல்லது அவருடைய வசூலிக்கும் பதிலாளாகச் செயலாற்றும் பிறிதொரு பாங்கருக்கோ இன்றி மூன்ரும் ஆளுக்குச் செலுத்தினுலும், அச்செக்கின் உண்மையான உரிமையாளருக்கு, அதனுல் விளையும் இழப்புக்கு, செலுத்தும்-பாங்கர் பொறுப்பாவார்.

**ஆங்கிலச் சட்டம் :** கீறிய செக்குகளைத் தழுவிய செலுத்தும்-பாங்கரின் கடமைகளை, இங்கிலாந்து நாட்டில் நிலவும் சட்டமான 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 79ஆம் பிரிவு பின் வருமாறு இயம்புகிறது :

(1) வசூலிக்கும் முகவரான பிறிதொரு பாங்கரின் பெயரில் கீறலிடப்பட்டாலன்றி, ஒன்றுக்கும் மேற்பட்ட பாங்கரின் பெயர் சிறப்புக் கீறலில் தோன்றுமாயின், செக்கு எழுதப்பெற்ற பாங்கர் அதன் தொகையைச் செலுத்த மறுக்க வேண்டும்.

(2) சிறப்புக் கீறலில் ஒன்றுக்கும் மேற்பட்ட பாங்கரின் பெயரைத் தாங்கியுள்ள செக்கை மேற்கூறியதற்குப் புறம்பாகச் செலுத்தினுலும் அல்லது பொதுக்

கீறலிடப்பட்ட செக்கின் தொகையை பாங்கரல்லாத ஒருவருக்குச் செலுத்தினுலும் அல்லது சிறப்புக் கீறலைக் கொண்ட செக்கை, அக்கீறலில் குறிப்பிட்டுள்ள பாங்கருக்கோ அல்லது அவருடைய வசூலிக்கும் முகவராகச் செயலாற்றும் பிறிதொரு பாங்கருக்கோயின்றி, மூன்றும் ஆளுக்குச் செலுத்தினுலும், அச்செக்கின் உண்மையான உரிமையாளருக்கு அதனுல் விளையும் இழப்புக்கு, செலுத்தும்-பாங்கர் பொறுப்பாவார்.

செக்கொன்று சமர்ப்பிக்கப்படும்பொழுது, கீறிய தாகவோ அல்லது அதில் முன்பு இடப்பட்ட கீறல் அழிக்கப்பட்டுள்ளது என்றே அல்லது இச்சட்டம் அங்கீகரிக்காத சேர்த்தலும் திருத்தமும் செய்யப்பட்டுள்ளது என்றே அது காட்டாதிருந்து, செலுத்தும்-பாங்கர் நன்னம்பிக்கையுடனும் சிறிதளவேனும் புறக்கணிப்புமின்றி அதன் தொகையைச் செலுத்தினுல், அவர் எவருக்கும் எந்த நட்டத்திற்கும் பொறுப்பாக மாட்டார்; செக்கு கீறலிடப்பட்டது அல்லது இட்ட கீறல் அழிக்கப்பட்டது அல்லது இச்சட்டம் அங்கீகரிக்காத சேர்த்தலும் திருத்தமும் செய்யப்பட்டது என்று காரணங்காட்டி அவர் செலுத்தலை மறுக்க முடியாது; மேலும், பாங்கரல்லாத ஒருவருக்கு அல்லது கீறலிலுள்ள பாங்கர் அல்லது அவருடைய வசூலிக்கும் முகவரான பிறிதொரு பாங்கருக்கோயின்றி மூன்றும் ஆளுக்குச் செலுத்தப் பட்டது என்ற காரணத்தினுலும் அவருடைய செலுத்தலை மறுத்தொதுக்க முடியாது.

**கீறலுக்குப் புறம்பாகப் பணஞ்செலுத்நுவதன் ஆபத்து :** வெவ் வேறு விதமான கீறலும் தெரிவிக்கும் கட்டளைக்குப் புறம்பாகப் பணஞ்செலுத்துவது பாங்கருக்கு முறையாகாது என்பது வெளிப் படை. முதலாவதாக, பாங்கர் அப்படிச் செய்வதனுல் வாடிக் கைக்காரருக்கு இழப்பு நேரிட்டால், அவர் வாடிக்கைக்காரருடைய கணக்கில் பற்று எழுதவியலாது. ஏனெனில், அவர் பணஞ்செலுத் தியது, வாடிக்கைக்காரரின் ஆணைக்குப் புறம்பானதாகும்[பாப் பெட் (எ.) பிங்கெட் (1876) 1 எக்ஸ். டி. 368, 372]. இரண்டா வதாக, அவ்வாறு செலுத்துதல், (செலாவணி முறிச்சட்டத்தின் 10ஆம் பிரிவு வகுக்கும்) முறைப்படி செலுத்தலுக்கொப்ப ஆகா தாகையால், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 128ஆம் பிரிவு அளிக்கும் சட்டப் பாதுகாப்பை, பாங்கர் இழக்க நேரிடும். மூன்றுவதாக, செலாவணி முறிச்சட்டத்தின் 126ஆம் பிரிவுக்குப் புறம்பாகச் செக்கின் தொகையைச் செலுத்தும்-பாங்

கருக்கு எதிராக அதன் உண்மையான உரிமையாளருக்கு 129ஆம் பிரிவு பரிகாரம் வழங்குகிறது. வைத்திருப்பவருக்கும் (உண்மை யான உரிமையாளர்), பாங்கருக்கும் ஒப்பந்த உறவு ஒன்றும் இல்லையாயினும், செக்கை அவ்வாறு செலுத்துவதனுல் உண்மை உரிமையாளருக்கு ஏற்படும் இழப்பை ஈடு செய்யும் பொறுப்புக்கு பாங்கர் தம்மை இலக்காக்கிக்கொள்ளுவார்[பெல்லமி (எ.) மார் ஜொரி பாங்குகள் (1852), 7 எக்ஸ். 389]. பாங்கர் ஒருவரின் மூலமாகச் சமர்ப்பிக்கப்படாத கீறிய செக்கின் பிற அமிசங்களைப் பற்றிக் கவலைப்படாமல், ஒரு பாங்கரின் வழியாகவே அதைச் சமர்ப்பிக்க வேண்டும் என்று குறிப்பிட்டு, அதற்குப் பணஞ் செலுத்தாமல் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். அதைச் சமர்ப்பிப்பவர் அவருடைய வாடிக்கைக்காரராக இருப்பினும், செலுத்தும்-பாங்கர் அதற்குப் பணஞ்செலுத்தாமல், வாடிக்கைக் காரருடைய கணக்கின் வரவுக்காக வைத்துக்கொள்ள வேண்டும். அந்த வாடிக்கைக்காரர் நல்ல நாணயம் உடையவராக இருப் பினும், அவருக்குப் பணஞ்செலுத்துவதனுல் (கீறிய செக்கின்மேல்) பாங்கருக்கு ஓர் அபாயமும் இல்லையாயினும், மேற்கூறிய கோட் பாட்டையே கடைப்பிடிக்க வேண்டும். முன்னமே கீறலிட்ட ஆணைச் செக்குத்தாளை (வெறும்) வாடிக்கைக்காரர் பாங்கரிட மிருந்து பெற்று, அதன் கீறலுக்குக் கீழே 'ரொக்கம் செலுத்துக' என்று எழுதிக் கையொப்பமிட்டு அதை வெளியிட்டாலும், எழுது பவருக்கு அல்லது அவருடைய முகவர்தான் என்று பாங்கருக்குத் தெரிந்தவருக்குத் தவிர, பிறருக்கு பாங்கர் அதன் தொகையைச் செலுத்த மாட்டார். இருப்பினும், 'கீறல் ரத்து செய்யப்பட்டது; தயவு செய்து ரொக்கம் செலுத்துக, இன்ன பிற' என்று எழுதி, தம் முழுக்கையொப்பமும் எழுதுபவர் இட்டிருந்தால், பாங்கர் அதற்கு ரொக்கம் செலுத்தலாம்; ஆனுல், பாங்கர் மிகவும் எச் சரிக்கையாயிருக்க வேண்டும்; இன்றேல், கீறிய நிலையில் அந்தச் செக்கைப் பெற்ற உண்மை உரிமையாளருக்கு (நேரும் இழப்புக்கு) அவர் பொறுப்பாவார்.

'செலாவணித் தன்மையற்றது' அல்லது 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்னும் கீறல்கள்: 'செலாவணித் தன்மையற்றது' என்னும் கீறல் செக்கைப் பிறருக்கு உரிமை மாற்றம் (transfera-bility) செய்வதைத் தடுப்பதில்லை என்று முன்பே கண்டோம். எனவே, செக்கைச் செலுத்தும்-பாங்கர், அது செல்லத் தக்கவாறு உரிமை மாற்றம் செய்யப்பட்டிருக்கிறதா இல்லையா என்ற வினைவைப் பற்றிக் கவலையே படவேண்டியதில்லை. அது போலவே 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று கீறலிடப்பட்டிருந்தாலும், அச்செக்கு பெறற்குரியவரின் கணக்காக வசூலிக்கப்படுகிறதா

இல்லையா என்று அறிந்து மனநிறைவைப் பெற்ற பின்புதான், அதைச் செலுத்த வேண்டும் என்ற கடமை அவர்மீது சுமத்தப்படவில்லை. இந்தச் சேர்ப்பு ('பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று சேர்த்தல்) அங்கீகாரமற்றது என்று கருதப்படுவதில்லை[அக்ரோகெரி (அட்லாண்டிக்) மைன்ஸ் லிமிடெட் (எ.) எக்னுமிக் பாங்கு (*1904*) 2 கே.பி.*472*]. அக்கீறல் வசூலிக்கும்-பாங்கருக்குக் கொடுக்கப்படும் ஓர் அறிவிப்பு என்று மறைமுகமாக ஒப்புக்கொள்ளப்படுகிறது ; அவர் அதற்குக் கவனம் செலுத்தாமல் புறம்பாகச் செயலாற்றினால், கடமையைப் புறக்கணித்ததாகக் கருதப்படுவார் [மாரிசன்ஸ் என்பவரின் வழக்கு (*1914*), *3* கே. பி. *356*, *373* ; சுட்ஸ் (எ.) பிரிக்ஸ் (*1921*), ஏ. சி. ஐ. *12*]. அக்கீறலிட்ட செக்கிலுள்ள புறக்குறிப்புகளில் ஒன்று கள்ளக் கையெழுத்தைக் கொண்டிருந்தாலும், அது முறைப்படி செலுத்தப்படவில்லை என்று வாடிக்கைக்காரர் குற்றஞ்சாட்டலாம். இம்போர்டர்ஸ் கம்பெனி லிமிடெட் (எ.) வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு லிமிடெட் (*1927*), 2 கே. பி. *297* என்ற வழக்கில் 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்ற சொற்கள் வசூலிக்கும்-பாங்குக்கு மட்டுமே இட்ட கட்டளையாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. A என்னும் பாங்கின் வாடிக்கைக்காரர் ஒருவர் இக்கீறலிட்ட(பெறற்குரியவரின் கணக்குக்கு என்ற)செக்கை வசூலிக்கும்பொருட்டுத் தமது கணக்கில் செலுத்துகிறார் என்று கொள்வோம். A என்னும் பாங்கு, அதை B என்னும் மற்றொரு பாங்குக்கு வசூலிப்பதற்காக அனுப்புகிறது என்றும் எடுத்துக்கொள்வோம். செக்கின் தொகை வசூலித்தபின் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பற்றிச் செலுத்தும்-பாங்கோ அல்லது B என்னும் பாங்கோ கவலைப்படவேண்டியதில்லை. உண்டியல் சட்டத்தின் 82ஆம் பிரிவுக்கிணங்க, (இது, இந்தியச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவுக்கு இசைந்தது.) A என்னும் பாங்கு B என்னும் பாங்கின் 'வாடிக்கைக் காரராவார்'. எனவே, B என்னும் பாங்கு முழுப்பாதுகாப்புக்கும் உரியது என்று அந்தத் தீர்ப்பில் மேலும் தெளிவாக்கப்பட்டது. ஆனால் சர். ஜான் பேஜட் அவர்கள், B என்னும் பாங்கு, 82ஆம் பிரிவின்கீழ்ப் பாதுகாப்பைப் பெற உரிமை கொண்டாட முடியாது என்று கருத்துரைத்தார். 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று கீறலிட்ட செக்கு செலுத்தும்-பாங்கரிடம் சமர்ப்பிக்கப்பட்டால், அதன் பெறற்குரியவரின் புறக்குறிப்பைத் தவிரப் பிற புறக்குறிப்புகளை அது கொண்டிருந்தால், 'பெறற்குரியவரின் கணக்குக்கு மட்டும் என்று குறியிடப்பட்டிருக்கிறது' என எழுதிச் செலுத்தும்-பாங்கர் அதைத் திருப்பியனுப்புவது நம் நாட்டில் பாங்கரிடையே நிலவும் ஒரு வழக்கமாகும்.

பிரிட்டிஷ் பாங்கு ஆஃப் மிடில் ஈஸ்ட் (எ.) அல்மால் சகோதரர்கள் (66 சி.டபிள்யூ.என்.285) என்ற வழக்கில் (கூட்டு) நிறுவனம் ஒன்று, கண்ணி டிரேடிங் கம்பெனி என்ற மற்றொரு நிறுவனத்திற்குச் சாதகமாக, இந்துஸ்தான் மெர்கன்டைல் பாங்கு லிமிடெட் என்ற பாங்கின்மேல் செக்கொன்று எழுதியது. 'கண்ணி டிரேடிங் கம்பெனியிடம் அல்லது கொணர்வோரிடம் செலுத்துக' என்று அச்செக்கு எழுதப்பெற்று, 'பெறற்குரியவரின் கணக்குக்கு மட்டுமே' என்ற கீறலிடப்பட்டிருந்தது. பிரிட்டிஷ் பாங்கு ஆஃப் மிடில் ஈஸ்டு என்னும் பாங்கு அந்தச் செக்கைப் பணம் பெறச் சமர்ப்பித்தது. ஆனால், எழுதுபவர் தடை ஆணை விடுத்ததனால், அது செலுத்தப்படவில்லை. பிரிட்டிஷ் பாங்கு ஆஃப் மிடில் ஈஸ்டு, அச்செக்கின் தொகையை வட்டியுடன் வசூலிக்கும் பொருட்டு, எழுதுபவர்மீது வழக்குத் தொடுத்தது. கண்ணி டிரேடிங் கம்பெனிக்குச் சாதகமாகச் செக்கு எழுதியதை, எழுதுபவரான நிறுவனம் ஒப்புக்கொண்டு, ஒரு குறிப்பிட்ட ஏற்பாட்டைத் தொடர்ந்துதான் அச்செக்கு எழுதப்பட்டது என்றும், அந் நிறுவனம் (பெறற்குரிய) அந்த ஏற்பாட்டை நிறைவேற்றாததனால், செக்கைச் சமர்ப்பித்துப் பணம் பெறும் உரிமை அதற்கு இல்லை என்றும் அது வாதித்தது.

கண்ணி டிரேடிங் கம்பெனி, தன்மீது எழுதவிருக்கும் செக்குகளை மதித்துப் பணம் செலுத்த வாய்ப்பளிக்கும்பொருட்டுத்தான், தான் அந்தச் செக்கை விலைக்கு வாங்கிக்கொண்டது; அவ்வாறு வாங்கிக்கொள்ளவில்லையாயின், கண்ணி டிரேடிங் கம்பெனிக்குத் தன்னிடம் இருக்கும் கணக்கில் போதுமான நிதியில்லாமல் போகும்; எனவே, அது தன்மீது எழுதிய செக்குகள் மறுக்கப்படும்; இந்த இடர்ப்பாட்டைப் போக்கும்பொருட்டுத்தான் அது அந்தச் செக்கை ஏற்றுக்கொண்டது; ஆகவே, விலைக்கு வாங்கியற்கு ஒப்பாகும் என்று பிரிட்டிஷ் பாங்கு ஆஃப் மிடில் ஈஸ்டு வாதித்தது. ஆனால், அந்தச் செக்கு 'பெறற்குரியவரின் கணக்குக்கு மட்டும்' என்று குறியிடப்பட்டு இருந்ததால், செலாவணித்தன்மையுடன் அதை மாற்றுதல் செல்லாததாகும் என்று 'எழுதுபவர்' மறுப்புத் தெரிவித்தார். இருப்பினும், செலாவணி முறிச்சட்டம் வரையறை செய்துள்ள 'செலாவணித் தன்மையற்றது' என்ற சொல்லைத் தவிர, செக்கின்மேல் எழுதப்படும் பிற சொற்கள் செலாவணித் தன்மையற்றதாக அதை ஆக்காது என்று நீதிமன்றம் கருத்துரைத்தது.

வாடிக்கைக்காரர் ஒருவர் வசூலிக்கும்பொருட்டு ஒப்படைத்த செக்கொன்றுக்கு எதிராக (ஈடாக) அவர் எழுதும் செக்குகளை மதித்துப் பணஞ்செலுத்தும் பாங்கு அவருடைய வசூலிக்கும் பதிலாள் என்னும் நிலையிலிருந்து உயர்ந்து, அந்தச் செக்கை

முறைப்படி பெற்றவர் என்ற நிலையை எய்துகிறது என்ற வாதத்தைப் பிரிட்டிஷ் பாங்கு தனது சார்பில் எழுப்பியது. ஆனுல், நீதிமன்றம் இந்தக் கூற்றை மறுத்தொதுக்கியது; வாடிக்கைக் காரரின் இசைவு பெருத பாங்கின் ஒருதலைச் செயல் மட்டுமே அதை வசூலிக்கும் பதிலாள் என்னும் நிலையிலிருந்து முறைப்படி பெற்றவர் என்னும் நிலைக்கு மாற்ருது என்ற கோட்பாட்டை வற் புறுத்தி, அந்த பாங்கு தொடுத்த வழக்கைத் தள்ளியது.

## இரட்டைக் கீறலின் விளைவுகள்

கீறலில் இரண்டு பாங்குகளின் பெயர் தோன்றினுல், அவற்றில் ஒரு பாங்கு மற்றென்றின் வசூலிக்கும் பதிலாளாகச் செயலாற்றி ஞல் அன்றி, அந்தச் செக்கை மதித்துப் பணஞ்செலுத்தலாகாது என்று செலாவணி முறிச்சட்டத்தின் 127ஆம் பிரிவு இயம்புகிறது. ஒரே பாங்கின் இரண்டு கிளையகங்களின் பெயர், இரு கீறலில் குறிக் கப்பட்டிருந்தால், இந்த விதி பொருந்தாது. 'உங்களுக்கே'(your-selves) என்று கீறலில் குறிக்கப்பட்டிருந்தால், அது சிறப்புக் கீறலா கக் கருதப்படுகிறது. சிறப்புக்கீறலில் தன் பெயருள்ள பாங்கு செக்கைச் சமர்ப்பிக்கும்பொழுது ஏதோ காரணத்தால் செலுத் தப்படாமல் அது திருப்பியனுப்பப்பட்டால், அந்தச் சிறப்புக் கீறல் தகுந்த முறையில் ரத்து செய்யப்பட்டாலன்றி, பிறிதொரு பாங்கு மூலமாக அதே செக்கு சமர்ப்பிக்கப்படும்பொழுது அதனுடைய தொகையைச் செலுத்துதல் கூடாது. பாங்கொன்று செக்கொன்றின்மீது பொறித்த கைப்பொறிப்புக்களை ரத்து செய்ய, 'எங்கள் கைப்பொறிப்புக்களனைத்தும் ரத்து செய்யப் பட்டன' என்றெழுதிக் கையொப்பமிடல் வழக்காகும்.

## சமர்ப்பிக்கப்படும் குறிப்பான அலுவலகத்தின்மீதுதான் செக்கு எழுதப் பட்டுள்ளதா ?

சமர்ப்பிக்கப்படும் கிளையகம் அல்லது பாங்கலுவலகத்தின்மீது தான் அது எழுதப்பட்டுள்ளதாவென்பது, செக்கைப்பற்றி நாம் ஆய்ந்தறிய வேண்டிய இரண்டாவது செய்தியாகும். வாடிக்கைக் காரர் கணக்கு வைத்துள்ள கிளையகம் அல்லது பாங்கலுவலகத் தைத் தவிர, பிற கிளையகங்களுக்கு அவருடைய செக்குகளைச் செலுத்த வேண்டிய பொறுப்பு சாதாரணமாக இல்லை. இருப்பி னும், சில பொழுது வாடிக்கைக்காரர் வேறொரு நகரத்திற்குச் சென்று வர வேண்டிய சூழ்நிலையேற்பட்டால், ஒத்துக்கொண்ட வரம்புவரை அவர் எழுதும் செக்குகளை மதித்துப் பணஞ்செலுத்து மாறு அந்நகரிலுள்ள தமது பாங்கின் கிளையகங்களுக்கு அல்லது பதி லாள்களுக்கு அங்கீகாரமளிக்குமாறு அவர் தமது பாங்கரைக் கோரும்பொழுது, அதற்கு இசைய அந்த பாங்கருக்கு மறுப்பொன்

றும் இருக்காது. அவ்வாறு அவருடைய வேண்டுகோளை ஏற்பின், தகுந்த கிளையகம் அல்லது பதிலாளுக்கு அந்த வாடிக்கைக்காரரின் மாதிரிக் கையொப்பம் அனுப்பப்படுகிறது. அவருடைய செக்குகளைச் செலுத்துமாறு தம்முடைய கிளையகம் அல்லது பதிலாளுக்கு அங்கீகாரமளித்த தொகையை வாடிக்கைக்காரருக்கு அறிவிக்காமல் அவருடைய கணக்கிலிருந்து பாங்கர் ஒதுக்கி வைக்கலாமாவென்பது ஐயப்பாடே ; இருப்பினும், அவருடைய கணக்கு தோன்றும் பெயரேட்டில் இதைப்பற்றிய குறிப்பை எழுதிக்கொள்வது இன்றியமையாதது ; பாங்கு முன்னெச்சரிக்கையாகவிருக்க இந்தக் குறிப்பு உதவுகிறது. இது போன்ற ஏற்பாட்டைச் செய்யுங்கால், கணக்குள்ள அலுவலகம் அந்தச் செக்குகளுக்குப் பணஞ்செலுத்துவது போன்று அதே கடமைகளுக்கும் உரிமைகளுக்கும் அந்த பாங்கு இலக்காகும்[ஆர். டபிள்யூ. ஜோன்ஸ் அவர்களின் பாங்குத் தொழிலின் நடைமுறை பற்றிய ஆராய்ச்சிகள் (Studies in Practical Banking) பக். 251]. செக்கெழுதப்பெற்ற பாங்கின் பதிலாளாகப் பணியாற்றும் மற்றொரு பாங்கு கள்ளப்புறக்குறிப்பைக்கொண்ட செக்கிற்குப் பணஞ்செலுத்தினால், எழுதப்பெற்ற பாங்கிற்கு அளிக்கப்படும் சட்டப் பாதுகாப்புக்குச் செலுத்தும்-பாங்கு உரியதல்ல.

**சிதைந்த செக்குகள்**

செக்கு சிதைக்கப்பட்டோ, ரத்து செய்யப்பட்டோ அல்லது கிழிக்கப்பட்டோ இல்லை என்பது, அதைச் செலுத்துமுன் பாங்கர் கண்டறிய வேண்டிய மூன்றாவது அமிசமாகும். ரத்து செய்யும் எண்ணத்தைப் போதுமான அளவு எடுத்துக்காட்டும் வண்ணம் வாடிக்கைக்காரர் கிழித்த செக்கை பாங்கர் மதித்துப் பணஞ் செலுத்தினால், அந்தத் தொகையை அவருடைய கணக்கில் பற்று வைக்க முடியாது. செக்கொன்று தற்செயலாகக் கிழிய நேர்ந்தால், 'தற்செயலாகக் கிழிந்தது' என்று எழுதிக் கையொப்பமிடுவதன் மூலம் எழுதுபவர் அதை உறுதிப்படுத்த வேண்டும். பெறற்குரியவரோ அல்லது வைத்திருப்பவரோ அதைத் தவறுதலாகக் கிழித்துவிட்டால், செலுத்தும்-பாங்கர் எழுதுபவருடைய உறுதிப்பாட்டைப் பெற வேண்டும்; அன்றி, பெறற்குரியவரின் பாங்கரிடமிருந்து செலுத்துவதற்கான உத்தரவாதத்தைத் தருமாறு வினவ வேண்டும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட துண்டுகளாகக் கிழிக்கப்பெற்ற செக்கு 'சிதைந்த செக்கு' (mutilated cheque) என்ற குறிப்புடன் பொதுவாகத் திருப்பியனுப்பப்படும். கிழிக்கப்பட்ட பகுதி கீறலைக் கொண்டிருக்கக்கூடும் என்ற ஐயப்பாட்டுக்கு இடமிருந்தாலன்றி, மூலையில் கிழிக்கப்பட்ட செக்குகள் பொதுவாகச் செலுத்தப்படுகின்றன. 'பெறற்குரியவரின் கணக்குக்கு'

என்பது போன்ற சொற்களைத் துளையிட்டுள்ள செக்கில், அதன் முக்கிய அமிசமோ அல்லது பகுதியோ அத்துளைகளால் அழிக்கப்பட்டிருந்தாலன்றி, 'சிதைந்த செக்கு' என்று அதைக் கருத முடியாது. ஹாங்காங்கு & ஷாங்கை பாங்கிங் கார்ப்பரேஷன் (எ.) லோ லி ஷி (எ. ஐ. ஆர். 1928 மன்னரவை) என்ற வழக்கில் அடையாளத்திற்காக ஓரம் வெட்டப்பட்ட (indentifiable) நோட்டு ஒன்று தற்செயலாகச் சிதைவுற்று அதன் எண்ணை இழந்திருந்தால், அதைச் செலுத்திய பாங்கர் உரிமையாளருக்கு ஏற்பட்ட இழப்பை ஈடு செய்யப் பொறுப்பாவார் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. சிதைவுற்ற பிற செலாவணி முறிகளுக்கும் இந்தக் கோட்பாடு பொருந்தும்.

**ஒழுங்கான முறையில் எழுதப்பட்டிருக்க வேண்டும்**

நான்காவதாக, அந்தச் செக்கு ஒழுங்கான முறையில் தேதியிடப்பட்டு, சட்ட இலக்கணத்திற்கிசைய வரையப்பட்டிருக்கிறதா என்று பாங்கர் நிச்சயப்படுத்திக்கொள்ள வேண்டும். செக்கின் இன்றியமையாத அமிசங்களை முன்பே கண்டோம். பாங்கர் தமக்கு அளித்த அச்சிட்ட செக்குத்தாளைப் பயன்படுத்தினால், வாடிக்கைக்காரருக்குத் தொல்லைகள் எதுவும் எழாது என்பது இங்கு மறு முறையும் கூறத் தக்கது. சாதாரணத் துண்டுச் சீட்டிலே செக்கொன்று எழுதப்பட்டிருக்குமாயின், அது நிபந்தனையிணைந்த ஆணையைத் தாங்கியிருக்கவில்லை என்று குறிப்பாக நோக்குதல் செலுத்தும்-பாங்கருடைய பணியாகிறது. ஏனெனில், நிபந்தனையிணைந்த ஆணையைக்கொண்டிருப்பின் அந்த முறி செக்காகக் கருதப்பட மாட்டாது; எனவே, பாங்கர் அதைச் செலுத்தினால், அதனால் விளையும் இழப்பை ஏற்க நேரிடும். இவ்வாறான ஆணைகளைக்கொண்ட முறியின் தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கில் பற்றுவைக்க விரும்பினால், அவற்றிலிணைந்துள்ள நிபந்தனை நிறைவேற்றப்பட்டுள்ளதாவென்று பாங்கர் தேர்ந்தறிதல் வேண்டும். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச் சட்டத்தின் 85, 128ஆம் பிரிவுகள் செக்குகளுக்கு மட்டுமே சில சூழ்நிலைகளில் பாதுகாப்பை அளிக்கின்றன. நிபந்தனையற்ற ஆணைகளைத் தாங்கியவைகளே செக்குகள் என்று முன்பே விளக்கியுள்ளோம். எனவே, நிபந்தனையிணைந்த ஆணைக்கிணங்க, பணஞ் செலுத்தும் பாங்கருக்கு இந்தச் சட்டப்பாதுகாப்பு மறுக்கப்படும். நிபந்தனையிணைந்த ஆணைக்குப் பணஞ்செலுத்துமாறு பாங்கர் கேட்கப்பட்டால், இழப்பீடுசெய் வாக்குறுதியை அளிக்குமாறு வாடிக்கைக்காரரை அவர் வேண்ட வேண்டும். ஸ்காட்லாந்து, ஒரு சில அமெரிக்க மாநிலங்களில் நிலவும் சட்டம், பணத்தின் உரிமையளிப்பாக (assignment) செக்கைக் கருதுகின்றது; எனவே அங்கு, செக்கொன்று சமர்ப்பிக்கப்பட்டு, கணக்கில் போதுமான

நிதியின்மையால் திருப்பியனுப்பப்பட்டால், கிடைக்கும் பணத்தை அந்தச் செக்குக்குச் செலுத்துவதற்காக ஒதுக்கி வைக்க வேண்டும்; பிறகு சமர்ப்பிக்கப்படும் வேறெந்த செக்குக்கும் அப் பணத்தைப் பயன்படுத்தக் கூடாது.

**நாள்பட்ட, பின்தேதியிட்ட செக்குகளை மதிப்பதனுலெழும் இடர்கள்**

சமர்ப்பிக்கப்பட்ட செக்கைச் செலுத்துமுன் பாங்கர் ஊன்றிப் பார்க்க வேண்டிய ஐந்தாவது செய்தி, அந்தச் செக்கு பின்தேதி யிட்டதாகவோ, நாள்பட்டதொன்ருகவோ இருக்கக் கூடா தென்பது. கீழ்க் கண்ட காரணங்களுக்காக, வைத்திருப்பவர் சமர்ப்பிக்கும் தேதியினும் பின்தேதிகொண்ட செக்கை பாங்கர் மதித்துப் பணஞ்செலுத்தக் கூடாது:

(அ) அந்தச் செக்கின் உரிய தேதிக்கு முன், அதற்குப் பணஞ் செலுத்தலை நிறுத்துமாறு வாடிக்கைக்காரர் தடை யாணை விடலாம்; எனவே, உரிய தேதிக்குமுன் அதை மதித்துப் பணஞ்செலுத்தினுல், பாங்கர் அந்தப் பணத்தை இழக்க நேரிடலாம்.

(ஆ) அதன் உரிய தேதிக்கு முன் வாடிக்கைக்காரரின் கணக்கில் அந்தச் செக்கின் தொகையைப் பற்று வைக்க பாங்கருக்கு உரிமையில்லை; அவ்வாறு செய்தால், பெருத்த ஆபத்தை அவர் ஏற்க நேரிடும். எடுத்துக்காட்டாக, 500 ரூபாய்க்கு வாடிக்கைக்காரர் ஒருவர் எழுதும் செக்கில் 1937ஆம் ஆண்டு மார்ச்சு 12 என்று அவர் தேதியிடுகிருர். அது அவ்வாண்டு மார்ச்சு 2ஆந்தேதியன்று சமர்ப்பிக்கப்படுகிறது. பாங்கர் அதை மதித்துப் பணஞ்செலுத்துவதனுல், அந்த வாடிக்கைக்காரரின் வரவிருப்பு 600 ரூபாயி லிருந்து 100 ரூபாயாகக் குறைகிறது. இதையடுத்து, 300 ரூபாயுக்கு 1937ஆம் ஆண்டு மார்ச்சு 2ந்தேதி யிட்டு அதே வாடிக்கைக்காரர் எழுதும் இரண்டாவது செக்கு, அதே ஆண்டு மார்ச்சு 3ஆம் தேதி சமர்ப்பிக் கப்பட்டு, போதுமான நிதியின்மையின் காரணமாக மறுக்கப்பட்டால், இரண்டாவது செக்கை முறை யின்றி அவமதித்த குற்றத்திற்காக பாங்கரிடமிருந்து இழப்பீடு பெறும் உரிமையை வாடிக்கைக்காரர் பெறுவார்.

(இ) பின்தேதியிட்ட செக்கினை அதன் உரிய தேதிக்கு முன் செலுத்தியிருந்தால், அந்தச் செக்கு முதிர்வடையுமுன்,

வாடிக்கைக்காரர் திவாலாஞலோ அல்லது இறந்து போஞலோ அல்லது அவருக்குப் பைத்தியம் பிடித்தாலோ, அவருடைய கணக்கில் அந்தத் தொகையைப் பற்று வைக்கப் பாங்கருக்கு உரிமையில்லை.

(ஈ) இவ்வகைச் செக்குக்கு அதன் உரிய தேதிக்கு முன் பாங்கர் பணஞ்செலுத்திஞல், அவர் முறைப்படி செலுத்திஞர் என்று கருதப்படமாட்டாராகையால், சட்டப்பாதுகாப்பைப் பெற முடியாது. துவக்கத்தில் செக்கொன்று பின்தேதியிட்டதாயினும், அதில் கண்டுள்ள தேதியன்ருே அல்லது அதற்குப் பின்போ அது சமர்ப்பிக்கப்பட்டால், அது துவக்கத்தில் பின்தேதியிட்டதாக வெளியிடப்பட்டது என்று காரணங்காட்டி, அதை மதித்துப் பணஞ்செலுத்த பாங்கர் மறுக்கக் கூடாது[வால்டெர் மிட்செல் (எ.) ஏ. கே. டெனன்ட், 52, கல். 677 (628)].

பின்தேதியிட்ட செக்குகளுக்குப் பணஞ்செலுத்தி, அவற்றின் கெடுவுநாள் (உரிய தேதி) வரை வைத்திருந்து, அவை முதிர்வு பெற்றபின் அவற்றின் பணத்தைப்பெற்று, கழிவு நீக்கி அவற்றை வாங்குதல் போன்று கணக்கேடுகளில் பதிவு செய்தல் பாங்குத் தொழிலின் நடைமுறையில் செய்யப்படும் ஒரு மோசடியாகும். அது கடனீதலுக்கொப்பாகும்[சி. சி. 1963 (32) பக். 1001].

**நாள்பட்ட செக்குகள்**

சமர்ப்பிக்கப்படும் செக்கு பழைமைப்பட்ட அல்லது நாள் பட்டதாவென்று செலுத்தும்-பாங்கர் நோக்கல் வேண்டும். நியாயவரம்பைக் கடந்த நெடுங்காலம் செக்கொன்று புழக்கத்திலிருக்குமாயின், நாள்பட்ட செக்கு என்று அது சொல்லப்படும். முறியொன்றின் தன்மை, வாணிக வழக்கு, பாங்கரிடையே நிலவும் நடைமுறை, குறிப்பிட்ட நிகழ்ச்சியின் சூழ்நிலைகள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் நியாயவரம்பு கடந்த நெடுங்காலமா அன்ருு என்று தீர்மானிக்கப்படுகிறது. லாயிட்ஸ் பாங்கு (எ.) ஸ்விஸ் பாங்குவரீன், 29 டைம்ஸ் எல்.ஆர். 219 பக். 222 என்ற வழக்கில் பேர்வெல் என்னும் பிரபு நீதிபதி அவர்கள் 'அது வாணிக மரபு அல்லது ஒன்றுமில்லை' என்று கூறிஞர். ஆறு திங்களுக்கும் அதிகமாகப் புழக்கத்திலுள்ள செக்கை நாள்பட்டதென இந்தியாவிலுள்ள பாங்கர் கருதுகின்றனர் என்பதை நாம் அறிவோம். நம் நாட்டிலுள்ள பல்வேறு பகுதிகளில் இதைப்பற்றிய வேறுபாடுகள் பழக்கத்திலிருக்கலாம். இலாப ஈவு ஆணைகளைப் பொறுத்த

மட்டில், அவற்றை வெளியிடும் கம்பெனிகள், வெளியிட்ட மூன்று திங்களுக்குப் பிறகு அவை சமர்ப்பிக்கப்படும்பொழுது, மறுபடியும் செல்லத்தக்கவையாக்கப்பட்டாலன்றி, அவற்றை மதித்துப் பணஞ்செலுத்துவதில்லை. இதைப்பற்றிய உறுதியற்ற ஈரெட்டு நிலையைப் போக்கும்பொருட்டு, செக்கு, இலாப ஈவு ஆணை, இன்ன பிறவற்றின் புழக்கத்திற்கு ஆறு திங்களுக்கும் குறைவான கால வரம்பை விதிக்க எண்ணும்பொழுது, 'மூன்று திங்கள் மட்டுமே புழக்கத்திலிருக்கும்' என்பது போன்று, அவற்றில் தெளிவாகக் குறித்தல் வழக்கமாகும். எழுதுபவர் அதை உறுதி செய்தபின், எழுதப்பெற்ற-பாங்கு நாள்பட்ட செக்கையும் மதித்துப் பணஞ் செலுத்தலாம்.

## எழுத்தாலும் எண்ணாலும் எழுதப்பட்ட தொகை மாறுபடும்போது செக்குகளைத் திருப்பியனுப்புதல்

### எழுத்தாலும் எண்ணாலும் எழுதப்பட்ட தொகை மாறுபட்டால்

முன்பே கூறியுள்ளவாறு, செலுத்தப்பட வேண்டிய தொகை முற்றிலும் திட்டவட்டமாக இருக்க வேண்டும். இல்லாவிடில், அந்த முறியைச் செல்லத்தக்க செக்காகக் கருதவியலாது. எனவே, அதிலுள்ள தொகை திருத்தப்படவில்லை அல்லது திருத்தப்பட்டிருப்பின், வாடிக்கைக்காரரின் முழுக்கையொப்பத்தால் அத் திருத்தம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது என்பதைக் கூர்ந்தறிய வேண்டும். எழுத்தால் வரையப்பட்ட தொகையினின்றும் எண்ணால் எழுதப்பட்ட தொகை மாறுபட்டிருந்தால், இங்கிலாந்து நாட்டிலுள்ள பாங்கர் எழுத்தால் வரையப்பட்ட தொகையைச் செலுத்தலாம் [1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டம் (45 & 46 விக்ட்., சி. 61) பிரிவு 9]. இருப்பினும், பாங்கர், அந்த இரண்டு தொகைகளில் எது குறைவானதோ அதைச் செலுத்துகின்றனர்; அல்லது 'எழுத்தாலும் எண்ணாலும் எழுதப்பட்டுள்ள தொகை மாறுபடுகிறது' என்று குறித்து, அந்தச் செக்கைத் திருப்பிக் கொடுத்துவிடுகின்றனர். மேலே குறிப்பிட்டுள்ள 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 9(2)ஆம் பிரிவுக்கு இசைந்த, 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 18ஆம் பிரிவு கீழ்க்கண்டதை அறுதியிட்டுக் கூறுகின்றது :

> செலுத்த ஏற்றுக்கொண்ட அல்லது செலுத்துமாறு ஆணையிட்ட தொகை எழுத்தாலும் எண்ணாலும் வெவ்வேறாகக் கூறப்பட்டிருப்பின், எழுத்தால் வரையப்பட்ட தொகையே செலுத்த ஏற்றுக்கொண்ட அல்லது ஆணையிட்ட தொகையாகும்.

இது போன்ற சூழ்நிலைகளில் அச்செக்கைச் செலுத்தாமல் திருப்பியனுப்பிவிடுவதை பாங்கரிடையே நிலவும் வழக்கு நியாயப் படுத்தினும், எழுத்தால் மொழியப்பட்ட தொகையைச் செலுத்தும்-பாங்கர், வாடிக்கைக்காரரின் எதிர்ப்புக்கு இலக்காக மாட்டார். 'வாடிக்கைக்காரர் தமக்குக் கட்டளை இடும்பொழுது, தாம் என்ன செய்ய வேண்டும் என்பதை எந்த ஐயப்பாட்டுக்கும் இடமளிக்காமல் திட்டவட்டமாகக் கூற வேண்டும் என்பதை வற் புறுத்தும் உரிமை, கட்டளைபெறுபவர் என்ற முறையில் பாங்கருக்கு உண்டு' என பிரபு ஹால்டேன் எல். சி. அவர்கள் கூறுகிறார் *[லண்டன் கூட்டுப்பங்கு பாங்கு (எ.) மாக்மில்லன் (1918), ஏ. சி. 777].* எழுத்தால் மட்டும் தொகை வரையப்பட்டிருந்தால், பாங்கர் அதைச் செலுத்தக் கடமைப்பட்டவர்; செலுத்த மறுத் தால், வாடிக்கைக்காரரின் செக்கை முறையின்றி அவமதித்த குற்றத்திற்காக, நட்ட ஈடு செலுத்த இலக்காவார். எண்ணால் மட்டுமே தொகை எழுதப்பட்டுள்ள செக்கை 'தொகையை எழுத் தாலும் கூற வேண்டும்' என்று குறித்து, பாங்கர் திருப்பியனுப்பி விடுகின்றனர் ; எழுதுபவரன்றி மற்றொருவரால் தொகை எழுதப் பட்டு, அச்செக்கு மறுபடியும் சமர்ப்பிக்கப்பட்டால், எழுதுப வரின் உறுதிப்பாட்டைப் பெற்றுவரும்படி, பாங்கர் அதைத் திருப்பிக்கொடுத்துவிட வேண்டும்.

**பாங்கு அலுவல் நேரத்திற்குப்பின் செலுத்தக் கூடாது**

தம்மீது எழுதப்பெற்ற செக்குகளை அலுவல் நாளன்று அலுவல் நேரத்தில் சமர்ப்பித்தால், அவற்றைச் செலுத்த பாங்கர் கடமைப்பட்டவர். முடிவுநேர மணியடித்தவுடன், அன்றைக் கான அலுவலை நிறுத்திவிட வேண்டும் என்று இதற்குப் பொரு ளல்ல*[பெய்ன்ஸ் (எ.) நேஷனல் புரொவின்ஷியல் பாங்கு (1927), 32, கம். காச். 216].* பாங்கு நேரம் பழக்க வழக்கங்களால் நிர்ணயிக்கப்படுகின்றது. இந்த நிலைபெற்ற அலுவல் நேரத்தை மாற்றியமைக்கும் எண்ணம் இருந்தால், செய்தித்தாள், மற்ற சாதனங்கள் இவற்றின் வழியாக அதற்குத் தக்க அறிவிப்புக் கொடுக்க வேண்டும். போரின் விளைவாக இங்கிலாந்து நாட்டி லுள்ள பாங்குகளின் சில கிளையகங்கள் தங்கள் அலுவல் நேரத் தைக் குறைத்தன. போதுமான அறிவிப்புடன் மாற்றத்தை நிறைவேற்றும்வரை, எவரும் அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்க முடியாது. பாங்கு நேரத்திற்குப் பிறகு செக்குக்குப் பணஞ் செலுத்துவது பற்றி, இந்திய ரிசர்வ் பாங்கு பிற பாங்குகளுக்கு விடுத்த கீழ்க்கண்ட கடிதம், இங்குக் கவனிக்கத் தக்கது:

'இயல்பான பாங்கு நேரத்திற்குப் பிறகு, அட்டவணையிலிட்ட

பாங்குகளில் (scheduled banks) சில செக்குகளுக்குப் பணஞ் செலுத்தும் பழக்கம் எமது கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. பாங்கு நேரத்தை மதிக்கும் பாங்குகள், அதைப் புறக்கணிக்கும் பாங்குகள் இவற்றிடையே நேர்மையற்ற போட்டியை இது உண்டாக்குவதாலும், கணக்குகளை இருப்புக்கட்டுவதில் காலதாமதத்தை விளைவித்துப் பணியாளரனைவருக்கும் மிக்க சோர்வையும் வேலைப் பளுவையும் உண்டாக்குவதாலும் இது விரும்பத்தக்க வழக்கமல்ல. பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் சாதாரண நேரங்களில் இந்த வசதியைப்பெற்றுப் பழகிக்கொண்டால், வைப்புக்களைத் திரும்ப எடுத்தலினால் அவற்றின் ரொக்கக் கையிருப்பு விரைவாக வற்றிக்கொண்டு போகும் நெருக்கடி நிலைமையிலும் இதுபோன்ற சலுகைகளை அளிக்குமாறு அவற்றை வற்புறுத்தக்கூடும் என்ற கூற்று இவ்வழக்கத்திற்குக் கடும் எதிர்ப்பாக அமைகிறது. பெருமளவு ரொக்கக் கையிருப்புள்ள, ரிசர்வ் பாங்கின் கடன்வசதி விரைவில் கிடைக்கக்கூடிய இடங்களிலமைந்துள்ள பாங்குகளுக்கு, அலுவல் நேரத்திற்குப் பிறகு வைப்போருக்குப் பணஞ்செலுத்தும் பழக்கம் எளிதாக இருக்கலாம். ஆனால், பெருமளவு எடுப்புக்களைச் (withdrawls) செலுத்தச் சிறிது அவகாசம் தேவைப்படும்; பிற இடங்களிலமைந்துள்ள பாங்குகள், இவ்வசதியை அளிப்பது அவ்வளவு எளிதல்ல; எனவே, வழக்கமான பாங்கு நேரத்தை நெறி வழுவாமல் கடைப்பிடித்தல் இவைகளுக்கு மிக்க உதவியாக இருக்கும். எனவே, குறிப்பிட்ட நேரத்தில் மட்டுமே எடுப்புக்கள் செலுத்தப்படும் என்று மக்களுக்கு அறிவுறுத்தலும், அந்த நேரத்திற்குப் பிறகு பணஞ் செலுத்துமாறு மக்களிடும் வேண்டுகோளுக்கு ஊக்கங்கெடுத்தலும் பொது நலனை முன்னிட்டுக் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளாகும். மேற்கூறிய கருத்துக்கள் ஒருபுறமிருக்க, சட்டக் கண்ணோட்டத்துடன் நோக்குங்கால், அலுவல் நேரத்திற்குப் பிறகு எல்லாச் செக்குகளுக்கும் பணஞ்செலுத்துதல், முறைப்படி செலுத்தியதாகுமா என்பது ஐயப்பாடே; எனவே, செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு அளிக்கும் பாதுகாப்பை அவை இழக்க நேரிடலாம். இந்தக் கைக்கோளின் செம்மை ஏற்புடைத்தாயின், வழக்கமான பாங்கு நேரத்திற்குப் பிறகு செக்கு, இன்ன பிறவற்றிற்குப் பணஞ்செலுத்த மறுக்குமாறு பாங்குகளை வேண்டுகிறோம். முடிவு நேரத்திற்கு முன் சமர்ப்பிக்கப்பட்ட செக்குகளின்மீது செய்யப்படும் செலுத்தலுக்கு இந்தப் பரிந்துரை பொருந்தாது; பாங்குத் தொழிலின் நடைமுறைக்கேற்ப அவற்றைச் செலுத்தலாம்.[2]

குறிப்பு. என்.டிபிஓ. 100/94-45, 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு 30ஆந்தேதியன்று எழுதிய கடிதம்.

**உயர்த்திய தொகை**

செக்கின் தொகை திருத்தப்படாமலிருக்கிறதாவென்று பாங்கர் ஊன்றிப் பார்க்க வேண்டும். எழுதுபவரின் கையொப்பம் கள்ளக் கையொப்பமா, செக்கு காட்டும் தொகை கள்ளத்தனமாகத் திருத்தப்பட்டதா என்பவற்றைக் கண்டுபிடிக்க, அமெரிக்காவிலும் இங்கிலாந்திலுமுள்ள பாங்குகள் புலப்படா ஊதா நிறக் கதிரைப் (ultra violet rays) பயன்படுத்துகின்றன. மோசடி எண்ணத்துடன் அதன் தொகையை உயர்த்தும் (எளிதில் புலப்படக் கூடிய) வாய்ப்பை அளிக்காத வண்ணம், மிக்கக் கவனத்துடன் செக்கொன்று எழுதப்பட்டு, அதன் தொகை பிறகு உயர்த்தப்பட்டுச் செலுத்தப்பட்டால், அந்தச் செக்கின் மூலத்தொகையைக் காட்டிலும் செலுத்திய அதிகமான தொகையை அந்த வாடிக்கைக்காரரின் கணக்கில் செலுத்தும்-பாங்கர் பற்று வைக்க முடியாது. செக்கொன்றின் தொகை கள்ளத்தனமாக உயர்த்தப்பட்டு, அந்தத் திருத்தத்தைக் கவனியாது பாங்கர் அதைச் செலுத்தியிருந்தால், செலுத்திய அந்தத் தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கில் அந்த பாங்கர் பற்று வைக்க இயலுமா இயலாதா என்ற வினு எழுகிறது. முதலாவதாக, நியாயமான கவனத்தையும் விடாமுயற்சியையும் செலுத்தியிருந்தால், பாங்கர் அந்தக் கள்ளத் திருத்தத்தைக் கண்டுபிடித்திருக்கக்கூடும் என்கிற நிலையிலிருந்தால், அந்த இழப்பை அவர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது தெளிவு. எண்ணுலும் எழுத்தாலும் வரையப்பட்ட தொகைக்கு முன்னே அல்லது பின்னே, வேண்டுமென்றே அல்லது போதுமான விழிப்பின்றியோ, வெறுமையான இடம் விடுதலின்மூலம் அந்தத் தொகையைக் கள்ளத்தனமாக உயர்த்துவதற்கு வசதி செய்திருந்து, பாங்கர் மோசடி செய்யப்பட்டதற்கு அது வழிகோலியிருந்தால், செலுத்திய தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கில் பற்றிடலாம் என்பதுவும் ஏறக்குறைய திட்டவட்டமான கூற்ருகும். இருப்பினும், செக்கை எழுதும்போது, எண்ணுலும் எழுத்தாலும் கூறிய தொகைக்கு முன்னே அல்லது பின்னே, அறியாமலும் கவனியாமலும் கள்ளத் திருத்தத்திற்கு இடமளிக்கும் வகையில் வாடிக்கைக்காரர் வெற்றிடம் விட்டிருந்து, பாங்கர் அந்தத் திருத்தத்தைக் கண்டுபிடிக்கத் தவறி, உயர்த்திய தொகையைச் செலுத்தியிருந்தால், இந்த இழப்பை யார் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதைத் தீர்மானிப்பது எல்லாச் சூழ்நிலைகளிலும் எளிதன்று. யங்க் (எ.) குரோட்(1827), 4 பிங்க். 253 என்ற வழக்கில் பாங்கருக்குச் சாதகமாக வழங்கப்பட்ட தீர்ப்புப் பொருந்தும் என்று நீண்ட காலம் கருதப்பட்டது. குறிப்பாக, கலோனியல் பாங்கு ஆஃப் ஆஸ்திரலேசியா (எ.) மார்ஷல் (1906), எ. சி. 559.

என்ற வழக்கின் தீர்ப்புக்குப் பிறகு, இது திடமான சட்டந்தாஞ என்ற பலத்த ஐயப்பாடுகளெழுந்தன. பாங்கருடைய நற்பேறின் பயஞக, தி லண்டன் கூட்டுப்பங்கு பாங்கு (எ.) மாக்மில்லன் அண்ட் ஆர்தர் (1918), A. C. 777 என்ற வழக்கில் பிரபுக்கள் மன்றம் (House of Lords) வழங்கிய தீர்ப்பு, முந்தைய கருத்தை உறுதிப் படுத்தியது. பாங்கரைத் தவறுன வழிப்படுத்தாதவாறு, நியாய மான கவனத்துடன் வாடிக்கைக்காரர் தமது செக்குகளை எழுத வேண்டும் என்பது அவர்களிடையேயுள்ள ஒப்பந்தத்தின் குறிப் பான (implied) ஒரு வாசகமாகும்; எனவே, மோசடிக்கு இட மளிக்கும்வண்ணம் அவர் செக்குகளை எழுதிஞல், கடுமையினின் றும் வழுவிய குற்றத்திற்கு அவர் ஆளாவார் என்று, அந்த வழக்கில் ஐயந்திரிபறத் தெளிவாக்கப்பட்டது. ஆனுல், வாடிக் கைக்காரர் செக்குகளை எழுதுவதில் சிறப்புக் கவனம் செலுத்தக் கட்டுப்பட்டவரல்லர் என்பதையும் இங்கு உணர வேண்டும். எனவே, பெறற்குரியவரின் பெயரை அடுத்து வெறுமையான இடம் விடப்பட்டபோது [சிலிங்ஸ்பியும், பிறரும் (எ.) தி டிஸ்டிரிக்டு பாங்கு லிமிடெட் (1931), 2 கே.பி. 588 & (1932), 1 கே. பி. 544] என்ற வழக்கில், அதுபோல் (பெறற்குரியவரின் பெயரை அடுத்து) இடம் விடுதல் வழக்கத்திற்குப் புறம்பானது அல்ல என்றும், எழுதுபவர், பாங்கின்பால் தமக்குள்ள கடமையி னின்றும் வழுவவில்லை என்றும் நீதிபதி அவர்கள் கருதிஞர்.

**வாடிக்கைக்காரரது பொறுப்பின் அடிப்படை**

லண்டன் கூட்டுப் பங்கு பாங்கு (எ.) மாக்மில்லன் என்ற வழக்கிற்கும், அதற்கும் முந்தைய ஸ்கோபீல்டு (எ.) லான்டஸ் பரோ கோமான் (1896) எ. சி. 514 என்ற வழக்கில் பிரபுக்கள் மன்றம் வழங்கிய தீர்ப்புக்குமுள்ள வேறுபாட்டை ஆழ்ந்தறிய வேண்டும். பிந்தைய வழக்கின் நிகழ்ச்சிகளாவன: பிரதிவாதியிடம் £ 500க்கு எழுதப்பட்ட உண்டியல் ஒன்று ஏற்புக்காகச் சமர்ப்பிக் கப்பட்டது. அது தேவைக்கும் அதிகமான முத்திரை ஒட்டப் பெற்று, '£ 500' என்னும் எண், "ஐந்நூறு" என்னும் சொல் இவை யிரண்டுக்கும் முன்னும் பின்னும் வெறுமையான இடம் விடப்பட் டிருந்து, பிரதிவாதி ஒப்பிட்டு அதை எழுதுபவரிடம் கொடுத்து விட்டார். எழுதுபவர் கள்ளத்தனமாக அதை நிரப்பி, அதன் தொகையை £ 3,500 ஆக உயர்த்திவிட்டார். ஒன்றும் அறியாமல் நல்லெண்ணத்துடன் அதை விலைக்கு வாங்கி வைத்திருப்பவர், பிரதிவாதியிடமிருந்து £ 3,500ஐப் பெறும்பொருட்டு, அவர்மீது வழக்குத் தொடுத்தார். அந்த உண்டியலின்மேல் பிரதிவாதியின் பொறுப்பு £ 500தான் என்றும், அதில் கள்ளத்திருத்தம் செய்யாத வாறு எச்சரிக்கை எடுப்பதற்குப் பிரதிவாதிக்குக் கடமைப்பட்டவ

ரல்லர் என்றும், எனவே பிரதிவாதியின் புறக்கணிப்பு (வாதியைப் பொறுத்தமட்டில்) முக்கியமானதுவல்லவென்றும் தீர்ப்பளிக்கப் பட்டது.

**பொறுப்பு கடமையினின்றும் எழுவது**

கவனம் செலுத்த வேண்டிய கடமை இருக்கிறதா இல்லையா என்பதே ஒரு நிகழ்ச்சியின் பொறுப்பைத் தீர்மானிக்கும் உரைகல் ஆகும் என்பது மேலெழுந்தவாரியாக ஒத்தவைபோல் புலப் படும். மேற்கூறிய வழக்குகளில் பிரபுக்கள் மன்றம் வழங்கிய தீர்ப் புக்களிலிருந்து தெளிவாகிறது. புறக்கணிப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை. கடமையிருந்தாலன்றி, புறக்கணிப்பு என்ற கேள்வி பொறுத்தமற்றது ; பொருளற்றது. கவனம் செலுத்துகிறேன் என்ற வாசகம் ஒப்பந்தத்தில் இருந்தாலன்றி, கடமை என்பது எழாது. இதனால்தான் லண்டன் கூட்டுப் பங்கு பாங்கு (எ.) மாக்மில்லன் என்ற வழக்கில் அந்த வாசகம் தொக்கியிருப் தாக உணரப்பட்டது. ஓர் ஒப்பந்தத்தில் இந்த வாசகம் கண் கூடாகத் தோன்றுமலிருந்து, அந்த வழக்கின் சூழ்நிலைகள் அல்லது நிகழ்ச்சிகளின் போக்கும் நோக்கங்களும் அதன் தேவையை வற் புறுத்தினல், அந்த வாசகம் அவ்வொப்பந்தத்தில் தொக்கி நிற் கிறது என்று கருதுவதைத் தவிர வேறு வழியில்லை; இதையேதான் பிரபுக்கள் மன்றம் அந்த வழக்கில் செய்யவிழைந்தது.

**அம்ச திருத்தங்களைக் (முக்கிய மாற்றங்களைக்) கொண்ட செக்கு**

பெரிய தொகையிலிருந்து சிறிய தொகைக்கு வெளிப்படை யாகப் புலப்படும்வண்ணம் திருத்திய செக்குகளையும், எழுதுபவரின் உறுதிப்பாட்டையும் அவை பெறுமலிருந்தால், செலுத்த வேண்டும் என்ற தேவையில்லை. இருப்பினும், அவற்றை மதித்துப் பணஞ் செலுத்த இங்கிலாந்திலுள்ள பாங்குகள் மறுப்பதில்லை. அம்ச திருத்தத்தைச் செய்தவர், அதை அங்கீகரித்தவர், அதற்கு உடன் பட்டவர், அத்திருத்தத்திற்குப் பிறகு வந்த புறக்குறிப்பாளிகள் இவர்களின் எதிராகத் தவிர, அந்த முறி தவிர்க்கப்படும் என்று அம்ச திருத்தத்தைப்பற்றிய சட்டம் கூறுகிறது (1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 87ஆம் பிரிவு). வெளிப்படையாகத் தெரியாதவாறு அம்ச திருத்தம் செய்யப்படினும், அந்தத்தாள் பயனற்ற செல்லாப்பத்திரமாக ஆக்கப்படுகிறது ; அதற்குப் பிறகு அது செக்காகவே கருதப்படுவதில்லை. எனவே, அந்தத் தாள் சமர்ப்பிக்கப்பட்டபொழுது, எழுதப்பெற்ற-பாங்கர் அதைச் செலுத்தியதனல், 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத் தின் 80, 82 ஆகிய பிரிவுகள் (45 & 46 விக்ட்., சி. 61) அளிக்கும் பாதுகாப்பு, அவருக்கு மறுக்கப்பட்டது[பிரபு நீதிபதி ஸ்கரட்டன்

அவர்கள் சிலிங்ஸ்பியும் பிறரும் (எ.) தி டிஸ்டிரிக்ட் பாங்கு லிமிடெட் (1931), 2 கே.பி. 588 & (1932), 1 கே. பி. 544 என்ற வழக்கிலளித்த தீர்ப்பு]. அவ்வழக்கின் செக்கில் செய்யப்பட்ட திருத்தம் 'வெளிப்படையாகத் தெரியாதது' என்பதை அந்தப் பிரபு நீதிபதி ஒத்துக்கொண்டார். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 89ஆம் பிரிவு இயம்புவதை நோக்கின், பிரபு நீதிபதி ஸ்கரட்டன் அவர்களுடைய தீர்ப்பு இந்தியாவுக்குப் பொருந்துமாவென்பது ஐயப்பாடே. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 79ஆம் பிரிவின் வரம்பு வாசகத்தின் (proviso) அடிப்படையில் மேற்குறிப்பிட்ட வழக்கில் டிஸ்டிரிக்ட் பாங்கு மறுப்பெழுப்பியது. ஆனல், கீறலில் செய்யப் படும் சேர்ப்பு, திருத்தங்கள் ஆகியவற்றை அப்பிரிவு குறிப்பிடு கிறது என்று நீதிபதி அவர்கள் கருத்துரைத்தார். இதைப் பொறுத்தமட்டில், நம் நாட்டிலுள்ள பாங்கரின் நிலே மிகவும் விரும்பத்தக்கது. வெளிப்படையாகத் தோன்ருதவாறு அம்ச திருத்தம் செய்யப்பட்டிருந்து, பாங்கர் அந்தச் செக்கை, முறைப் படி, அதன் வெளிப்படை நோக்கத்திற்கிணங்கச் (apparent tenor) செலுத்தியிருந்தால், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத் தின் 10, 89 ஆகிய பிரிவுகள் முழுப்பாதுகாப்பை அளிக்கின்றன. எனவே, இந்தப் பாதுகாப்புக்கு உரியவராக வேண்டுமாயின், இரண்டு நிபந்தனேகளேப் பாங்கர் நிறைவேற்ற வேண்டும். அவை யாவன: (1) செய்யப்பட்ட திருத்தம் வெளிப்படையாகத் தெரியாதிருக்க வேண்டும். (2) அந்தச் செக்கு முறைப்படி செலுத் தப்பட்டிருக்க வேண்டும். அதாவது, தூய்மையான நம்பிக்கை யுடன், புறக்கணிப்பின்றி முறியின் வெளிப்படை நோக்கத்திற் கேற்பச் செலுத்தப்பட்டிருக்க வேண்டும். இயைபு முறையின் (chemical process) துணேகொண்டு, எழுதுபவரின் பெயரைத் தவிர, மற்ற அமிசங்களனேத்தும் வெளிப்படையாகத் தெரியாதவாறு திருத்தப்பெற்ற செக்கை, அதனுடைய வெளிப்படை நோக்கத் திற்கேற்ப முறைப்படி செலுத்திய பாங்கு, பாதுகாப்புக்கு உரியது என்று தீர்ப்பளிக்கப்பட்டது[டிக் ஜாய்ஸ் (எ.) தி பாங்கு ஆஃப் இந்தியா லிமிடெட், எஸ்—எண் 548/19390 ஆஃப் 1933, சிறு வழக்கு நீதிமன்றம் (court of small causes) பம்பாய்]. செக் கொன்றின் தேதி திருத்தப்பட்டு, சில நாள்களுக்குப் பிறகு சமர்ப் பிக்கப்படும்பொழுது, எழுதுபவர் அதை உறுதிப்படுத்த வேண்டும் என்று பாங்கர் கேட்பது முறைப்படி சரியே; இருப்பினும், நடை முறையில் பாங்கர் இதை வற்புறுத்துகின்றனரா்வென்பது ஐயம் தான்.

**இருப்பைக் கணக்கிடல்**

வாடிக்கைக்காரருடைய கணக்கின் நிலை, சமர்ப்பிக்கப் படும் அவருடைய செக்கை மதிக்க இடமளிக்கிறதாவென்று பாங்கர் கண்டறிய வேண்டும். அவருடைய செக்கு சமர்ப்பிக்கப் படும்பொழுது அவர் கணக்கில் வரவிருப்பு இருக்க வேண்டும் என்பதில்லை; ஏற்கெனவே செய்யப்பட்ட அதிகப்பற்று ஏற்பாட் டின்கீழ்ப் போதுமான வரவு இருந்தால், பாங்கர் அந்தச் செக்கை மதிக்க வேண்டும். ஒன்றைக்காட்டிலும் மற்றொன்றின் தொகை அதிகமான இரண்டு செக்குகள் ஒரே நேரத்தில் சமர்ப் பிக்கப்பட்டு, அந்த வாடிக்கைக்காரரின் இருப்பு குறைந்த தொகைச் செக்கை மட்டுமே மதிக்கப் போதுமானதாக இருந் தால், பாங்கர் அச்செக்கை மதிக்க வேண்டும்; பெரிய தொகைச் செக்குக்கு முதன்மையளிக்கும்முகத்தான், மற்றதை மறுக்கக் கூடாது[செட்நூ ஜாஸ்பா நகாஸ் & கம். லிமிடெட் (எ.) ஆங்கிலோ-ஆஸ்டிரியன் பாங்கு (1909) என்ற வழக்கின் தீர்ப்பு]. வாடிக்கைக்காரர் ஒருவருடைய ஒரு கணக்கின் வரவு இருப்பை, அவருடைய மற்றொரு கணக்கிற்கு, பின்ன தன்மேல் எழுதப்பெற்ற செக்கை மதிக்க வழிசெய்யும்பொருட்டு, பாங்கர் மாற்ற வேண் டியதில்லை. ஆயினும், ஒரே ஆளுக்கு ஒரே தகுதியில் இரண்டு நடப்புக் கணக்குகள் இருப்பதைப் பாங்கர் நன்கு அறிவாராயின், அவருடைய செக்கை மதிக்க வகை செய்யும்பொருட்டு, ஒன்றி லிருந்து மற்றொன்றுக்கு வரவு இருப்பை மாற்றலாம். அவ்வாறு மாற்றியதை அந்த வாடிக்கைக்காரருக்குத் தெரிவிக்க வேண்டும். மேலும், தமது கணக்கில் வரவு வைக்குமாறு வாடிக்கைக்காரர் செக்குகளைப் பாங்கரிடம் கொடுத்தல் வழக்கம்; அவற்றை ரொக்கமாகப் பாவிக்க வெளிப்படையாகவோ அல்லது குறிப் பாகவோ பாங்கு உடன்பட்டிருந்தாலன்றி, அந்த வாடிக்கைக் காரரின் இருப்பைக் கணக்கிடும்போது அச்செக்குகளின் தொகை யைச் சேர்த்துக்கொள்ள வேண்டியதில்லை. அவ்வாறு சேர்க்காத இருப்பு, சமர்ப்பிக்கப்படும் அவரது செக்கொன்றைச் செலுத்தப் போதாது என்றால், 'வர வேண்டியவை வசூலாகவில்லை, மறுபடி யும் சமர்ப்பிக்கவும்' (effects not cleared, present again) என்று குறிப்பிட்ட ஒரு துண்டுச்சீட்டுடன் அந்தச் செக்கைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். வாடிக்கைக்காரரின் கணக்கை மூன்றும் ஆள்களிடம் ஒப்படைக்குமாறு (சமர்ப்பிக்குமாறு) பாங்கர் வேண்டப்படும்பொழுது, அவரது கணக்கில் வரவு இருப்புடன் வசூலாகாத இனங்களும் (uncleared items) சேர்க்கப்படலாம். இதைப்பற்றி பாங்கர் வாளாவிருக்கக் கூடாது. உதாரணமாக, வாடிக்கைக்காரர் திவாலானவுடன், அவரது கணக்கை உரிமை யளிக்கப்பெற்ற அதிகாரியிடம் (official assignee) ஒப்படைக்

குமாறு பாங்கர் வேண்டப்படலாம். அல்லது அடமானம் பெற்றவரிடமோ (mortgagee) அல்லது பாங்கு இருப்பின் உரிமை அளிக்கப்பெற்றவரிடமோ (assignee) அல்லது பாங்கரின் வசமுள்ள (வாடிக்கைக்காரரின்) இருப்பை நீதிமன்றப்பற்றும் உத்தரவு(garnishee order)மூலமாகப் பற்றிய கடனீவோரிடமோ ஒப்படைக்கும்படி பாங்கர் வேண்டப்படலாம். எனவே, வசூலாகாத இனங்களை அனுமத்துக் கணக்கிலிட்டு (suspense account) வைத்தலும் சரியே; இருப்பினும், அவற்றிற்கு உடனடியாகப் பணஞ்செலுத்த பாங்கர் ஒப்புக்கொண்டிருந்தால், இவ்வாறு செய்யக் கூடாது.

**ஐயப்பாடான பொறுப்புக்களைச் செலுத்த இருப்பை ஒதுக்கி வைக்கக் கூடாது:** வாடிக்கைக்காரரின் ஐயப்பாடான (contingent) பொறுப்புக்களைச் செலுத்த, அவரது இருப்பு முழுவதையுமோ அல்லது அதன் ஒரு பகுதியையோ ஒதுக்கி வைக்கப் பாங்கருக்குரிமையில்லை. எடுத்துக்காட்டாக, அவருடைய வாடிக்கைக்காரர் சம்பந்தப்பட்ட உண்டியல்களை அவர் கழிவுநீக்கி வாங்கியிருந்து, அவை உரிய தேதிகளில் மறுக்கப்படும்பொழுது அதனுல் வாடிக்கைக்காரரைச் சார நேரும் ஐயப்பாடான பொறுப்பைச் செலுத்த உதவும் வண்ணம், பின்னவரது இருப்பின் எந்தப் பகுதியையும் பாங்கர் நிறுத்திவைக்கக் கூடாது. ஆயினும், வாடிக்கைக்காரர் தமக்குக் கடன்பட்டிருந்து, வரவு இருப்பு உள்ள அவர் கணக்கு எந்தத் தகுதியில் தொடங்கப்பட்டதோ, அதே தகுதியில் அந்தக் கடனும் அவரிடமிருந்து உரியதாயின், அவருடைய செக்குக்குப் பணஞ்செலுத்த பாங்கர் மறுக்கலாம். ஆனுல் இவ்வாறு செய்ய, இதற்குப் புறம்பான உடன்பாடு எதுவும் (வெளிப்படையானதோ அல்லது குறிப்பானதோ) நடப்பில் இருக்கக் கூடாது.

**செக்கின் தொகையில் ஒரு பகுதியை மட்டும் செலுத்த முற்படக் கூடாது:** செக்கின் தொகையின் ஒரு பகுதியைச் செலுத்தலும், வாடிக்கைக்காரரின் கணக்கு நிலையைப் பிறருக்குத் தெரிவித்தலும் பாங்கர் செய்யக்கூடாதவைகளாகும். வாடிக்கைக்காரர் ஒருவருடைய கணக்கு நிலையை அவருக்குக் கடனீந்தவர்களில் ஒருவரிடம் தெரிவிப்பதால், பிற கடனீந்தவர்கள் பெருத ஒரு சலுகையை, ஒரு முக்கியச் செய்தியை, அந்த ஒருவர் மட்டும் பெற்றுப் பயன் துய்க்க வழியேற்படுகிறது. எனவே, வாடிக்கைக் காரருக்கு அதனுல் விளையும் நட்டத்திற்கு பாங்கர் பொறுப்பாவார்(ஹார்ட் அவர்களின் பாங்கியலின் சட்ட அமைப்பு என்னும் நூல், 3ஆம் பதிப்பு, பக். 221). செக்கு எழுதப்பெற்ற கணக்கில் எவ்வளவு இருப்பு இருக்கிறதோ (செக்கின் தொகையைக்காட்டிலும் அது குறைவாக இருக்கும்போது) அந்தக் கேட்டுப் பெறும்

**உரிமை** பிரெஞ்சு நாட்டில் பெறற்குரியவருக்கு உண்டு. எனவே, ஒரு பகுதியைச் செலுத்துதலைப் பிரெஞ்சுச்சட்டம் அனுமதிக்கிறது. ஃபாஸ்டர் (எ.) பாங்கு ஆஃப் லண்டன் (*1862*), *3* எஃப் & எஃப் *214* என்ற வழக்கில் வாதி ஏற்றுக்கொண்ட உண்டியல் ஒன்றை வைத்திருப்பவரிடம், பிரதிவாதி, வாதியின் கணக்கு நிலையைத் தெரிவித்தார். இதன் விளைவாக வாதியின் செக்கை வைத்திருப்பவர், அச்செக்கின் தொகையைக்காட்டிலும் அவருடைய இருப்பு எவ்வளவு குறைவாக இருந்ததோ அந்தக் குறைவை அவருடைய கணக்கின் வரவுக்குச் செலுத்தி, அந்தச் செக்கை மதித்துப் பணஞ்செலுத்தவியலுமாறு செய்து, அதைப் பெற்றார். எனவே, வாதியின் மற்ற கடனீவோரைக்காட்டிலும், அவர் தனிச்சலுகையை (வாதியின் கணக்கிருப்பைத் தந்திரமாகப் பெறுவதை) அடைந்தார். தீர்ப்பை வழங்கிய தலைமை நீதிபதி அவர்கள், 'போதுமான நிதியில்லை' (not sufficiant assets) என்று மட்டும் அச்சூழ்நிலையில் பாங்கர் கூறலாம் ; அதற்குமேல் ஒன்றையும் தெரிவிக்கக் கூடாது என்று கூறினர்.

**செலுத்திய பணத்தை ஈடுபடுத்துதல்:** வாடிக்கைக்காரர் செலுத்திய தொகைகளை ஈடுபடுத்துதல் பற்றிய பொது விதி இங்கு அறியற்பாலது. தாம் செலுத்தும் தொகைகள் எந்தெந்தக் கணக்குகளில் வரவிடப்பட வேண்டும் என்று வலியுறுத்த வாடிக்கைக்காரருக்கு உரிமையுண்டு. இரண்டு, அதற்கு மேற்பட்ட கணக்குகள் அவருக்கு இருக்குமாயின், எந்தக் கணக்கில் தாம் செலுத்தும் தொகையை வரவு வைக்கவேண்டும் என்பதை அவர் அறுதியிட்டுக் கூறலாம். தொகையைச் செலுத்தும்பொழுது இந்த உரிமையை ஓச்ச (exercise) அவர் தவறினல், தம் விருப்பத்திற்கேற்ப பாங்கர் அதை ஈடுபடுத்தலாம். பாங்கரிடம் செலுத்தும் தொகையை ஈடுபடுத்துதல் பற்றி, வாடிக்கைக்காரர் அறிவிக்கத் தவறி, பாங்கரும் அவர் விருப்புரிமையைப் (discretion) பயன்படுத்தத் தவறினல், கிலேடன்ஸ் என்பவருடைய வழக்கில் வகுக்கப்பட்ட விதிக்கேற்ப அதை ஈடுபடுத்த வேண்டும்[டீலே (எ.) லாயிட்ஸ் பாங்கு லிமிடெட் (*1912*), ஏ. சி. *756*]. பாங்கருக்கு அல்லது வாடிக்கைக்காரருக்குரிய கொடுபடாக் (unpaid) கடனில் மிகப் பழையதை அடைக்க, செலுத்தும் தொகையை ஈடுபடுத்த வேண்டும் என்பதே கிலேடன்ஸ் என்பவருடைய வழக்கின் விதியாகும்.

**தவணைச் செலுத்துகளை எவ்வாறு ஈடுபடுத்த வேண்டும் என்று குறிப்பிடக் கடனளிக்கு உரிமையில்லை:** நீதிமன்றத் தீர்ப்பிற்கு ஏற்பச் செலுத்தும் தவணைகளை, எந்தக் கடனையடைக்க ஈடுபடுத்த

வேண்டும் என்று குறிப்பிட வாடிக்கைக்காரருக்கு உரிமையில்லை. ஹ ரி கி ஸ ன் த ா ஸ் (எ.) நாரிமன் (1927), 29, பம்பாய் எல். ஆர். 953 என்ற வழக்கில் நான்கு சம தவணைகளில் கடனைச் செலுத்துமாறு தீர்ப்புக்கடனாளிக்கு (judgment-debtor) நீதி மன்றம் ஆணை பிறப்பித்தது. முதல் தவணையை நீதிமன்றத்தில் அவர் செலுத்தும்போது தீர்ப்புக்கடனீவோருக்குத் (judgment-creditor) தெரியாமல், இரண்டாவது தவணையைச் செலுத்திய தாக அதிகாரபூர்வமான ரசீதைப் (official receipt) பெற்றுக் கொண்டார்; அடுத்து இரண்டு தவணைகளைச் செலுத்தி, முறையே மூன்ருவது நான்காவது தவணைக்கான ரசீதுகளைப் பெற்ருர். இது வெளிப்பட்டபோது, முதல் மூன்று தவணைகளை மட்டுமே செலுத்தியதாகக்கொள்ள வேண்டும் என்று கடனீவோர் உரிமை பாராட்டி, நான்காவது தவணையைப்பெறக் கடனாளியின் மீது வழக்குத் தொடுத்தார். செலுத்திய மூன்று தவணைகளும் முறையே இரண்டாவது, மூன்ருவது, நான்காவது தவணைக்காக ஏற்கெனவே ஈடுபடுத்தப்பட்டதால், முதல் தவணையை மட்டுமே கடனீவோர் கேட்கலாம். ஆனுல், அத்தவணை காலாவதியாகி விட்டது (time-barred) என்று கடனாளி மறுப்புவாதம் செய்தார். கடனீவோருக்கு அறிவிக்காமல், நீதிமன்ற அதிகாரி கொடுத்த ரசீமுன்னதுவரைக் கட்டுப்படுத்தாது என்றும், 'முதல் தவணையைச் செலுத்தாமல் ஏமாற்றும்பொருட்டு, தீர்ப்புக்கடனாளி மூன்று தவணைகளை மட்டும் செலுத்தி, இரண்டு மூன்று நான்காவது தவணைக்கான ரசீதைத் தீர்ப்புக்கடனீவோருக்குத் தெரியாமல் பெற்ருல், பின்னவரை மோசடி செய்வதாகும்' என்றும் நீதிபதி அவர்கள் வலியுறுத்தினுர். இந்த வழக்குக்குக் 'கிலேடன்ஸ் விதி' பொருந்தாது. இரண்டு வேறுபட்ட காரணங்களுக்காக இரண்டு கடனைப்பெற்ற ஒருவர், பணத்தைச் செலுத்தும்பொழுது எந்தக் கடனுக்கு அதை ஈடுபடுத்த வேண்டும் என்று குறிப்பிட அவருக்கு உரிமையுண்டு என்பதே கிலேடன்ஸ் விதியாகும். எனவே, இந்த விதி பொருந்த குறைந்தபட்சம் இரண்டு வேறு பட்ட கடன் இருக்க வேண்டும். ஆனுல், இந்த வழக்கில் இருப் பதுவோ ஒரே ஒரு கடன்தான். பல தவணைகளில் செலுத்தலாம் என்பதால், அந்தக் கடனை ஒன்றுக்கும் மேற்பட்டதாகக் கருதுதல் முறையன்று. எனவே, 1872ஆம் ஆண்டு இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 59ஆம் பிரிவுக்கிணங்க, இந்த வழக்கின் கடனாளி பல கடன் பட்டிருக்கிருர் என்று சொல்ல முடியாது; ஆகையால், பணஞ்செலுத்தும்பொழுது குறிப்பிட்ட கடனுக்கு அதை ஈடுபடுத்த அவருக்கு உரிமையில்லை.

**புறக்குறிப்பு**

சமர்ப்பிக்கப்படும் செக்கு, புறங்குறிக்கப்பட வேண்டுமா? அவ்வாறு வேண்டுவதாயின், அதில் காணும் புறக் குறிப்புக்கள் முறையானவைதானுவென்று கண்டறிதல் பாங்கரின் முக்கிய கடமையாகும்.

**உடையவர் செக்கைப் புறங்குறித்தலும், அவற்றை வைத்திருப்ப வரைப் பற்றிய ஆளடையாளச் சான்றும் (Identification):** இங்கி லாந்து நாட்டில், உடையவர் செக்கு புறக்குறிப்பைத் தாங்கி யிருக்க வேண்டும் என்று செலுத்தும்-பாங்கர் வற்புறுத்துவதில்லை. ஆனுல், உடையவர் செக்குகளைச் சமர்ப்பிப்பவர்களையும் புறங் குறிக்குமாறு நம் நாட்டிலுள்ள பாங்குகள் வேண்டுகின்றன. சட்ட படிக் கட்டுப்பட்டவரல்லவெனினும், அவ்வாறு புறங்குறிக்க, உடையவர் செக்கை வைத்திருப்பவர் பெரும்பாலும் மறுப்ப தில்லை. ஏனெனில், புறங்குறிக்க அவர் மறுத்தால், அவருக்குச் செலுத்தவிருக்கும் தொகைக்கேற்ப முறைப்படி முத்திரை ஒட்டப் பெற்ற ரசீதைத் தருமாறு பாங்கர் அவரை வற்புறுத்தலாம். உடையவர் செக்கை வைத்திருப்பவரை அடையாளச்சான்று தரு மாறு பாங்கர் கேட்பது நியாயமற்றது ; இருப்பினும், பாங்கர் ஐயப்படுவதற்கான சூழ்நிலையேதேனும் தென்பட்டால், குறிப்பாக அந்தச் செக்கு பெரிய தொகைக்கு எழுதப்பட்டிருந்தால், தொலை பேசியின் மூலமாக எழுதுபவரின் உறுதியைப் பெற பாங்கர் விழைதல் நல்லது. கார்ப்பரேஷனுக்குச் செலுத்த வேண்டிய செக்குகள், உடையவர் செக்காக இருந்து, புறக்குறிப்பின்றிச் சமர்ப்பிக்கப்பட்டால், சமர்ப்பிப்பவரிடம் அவற்றின் பணஞ் செலுத்துமுன், பாங்கர் சற்று விசாரித்தல் நல்லது. அவ்வாறே வரையறுத்த கம்பெனிகளுக்குச் சாதகமாக அவைகளே எழுதிக் கொண்ட செக்குகள் புறக்குறிப்பின்றிப் பணம் தருமுகப்பில் (counter) சமர்ப்பிக்கப்பட்டால் பாங்கர் சற்று விசாரித்தல் சிறந்தது.

**உடையவர் பத்திரம் இறுதிவரை உடையவர் பத்திரமே (Once a Bearer, Always a Bearer)** உடையவரிடம் செலுத்த வேண்டியதாக உண்டியல் ஒன்றை வெளியிட்டால், அது இறுதிவரை உடையவர் உண்டியலாகவே இருக்கும் என்று நம் நாட்டிலும் நெடுங் காலம் பாவிக்கப்பட்டது. ஆனுல் ஃபோப்ஸ், ஃபோப்ஸ் கேம்ப் பெல் & கம். (எ.) பம்பாயின் உரிமை அளிக்கப்பெற்ற அதிகாரி (1925) 27 பம்பாய் எல். ஆர். 34 என்ற வழக்கில், பெறற்குரியவ ரிடமோ அல்லது கொணர்வோரிடமோ செலுத்துமாறு எழுதப் பட்ட நாட்டு-உண்டியல் (hundi) ஒன்றில், மூன்ரும் ஆளிடம்

அதைச் செலுத்துமாறு, பெறற்குரியவர் புறங்குறித்தார். எனவே, அது அந்த மூன்றும் ஆளிடமோ அல்லது அவரது ஆணைக் கிணங்கவோ செலுத்தப்பட வேண்டுமேயன்றி, கொணர்வோ ரிடம் செலுத்தத் தக்கதல்லவென்று தலைமை நீதிபதியாகத் தற்கா லிகமாகப் பணியாற்றிய ஷா அவர்களும், நீதிபதி கின்கெய்டு அவர்களும் தீர்ப்பளித்தனர். இந்தத் தீர்ப்பு பாங்குத் தொழிலின் நடைமுறையை முற்றிலும் சீர்குலைத்துவிடவே, இந்தியாவிலும் சிலோனிலுமிருந்த வணிகர் சங்கக் கூட்டமைப்புகள், பழைய நிலைமையை—ஆங்கிலச் சட்டம் அனுமதிக்கும் அந்நிலையை-மீட்கு மாறு இந்திய அரசாங்கத்தை வேண்டினர். இக்குறைபாட்டைக் களைந்தெறியும் முயற்சியாக, 1929ஆம் ஆண்டு செப்டெம்பர் 2ஆம் தேதியன்று சட்டமன்றத்தில் ஒரு மசோதா (bill) சமர்ப் பிக்கப்பட்டது. உடையவர் முறியை ஆணை முறியாக மாற்று வதற்கு வைத்திருப்பவருக்கு அப்பொழுது இருந்த உரிமையில் குறுக்கிடுதல் முறையன்று என்று அப்பொழுது கருதப்பட்டதால், நிலைமை சிறிதும் மாறவில்லை. பழைய நிலைமையைத் திருப்பு மாறு, மாநில பாங்கு விசாரணைக் குழுக்கள் பலவற்றிடம் முறை யிடப்பட்டது. அதன் விளைவாக அக்குழுக்களும், மத்திய பாங்கு விசாரணைக்குழுவும் நிலைமையைச் செம்மையாக்கச் சட்டத்தைத் திருத்துமாறு பரிந்துரைத்தன. இருப்பினும், நாட்டு உண்டி யல்கள் செக்கினின்றும் வடிவம், இயல்பு முதலியவற்றால் மிகவும் வேறுபட்டு நின்றமையால், ‘உடையவர் பத்திரம் இறுதிவரை உடையவர் பத்திரமே’ என்ற கோட்பாட்டை நாட்டு உண்டிய லுக்கும் பொருந்துமாறு செய்ய, மத்திய பாங்கு விசாரணைக்குழு விரும்பவில்லை. 1934ஆம் ஆண்டு இயற்றப்பட்ட செலாவணி முறிச் (திருத்தச்) சட்டம், ‘உடையவர் பத்திரம் இறுதிவரை உடையவர் பத்திரமே’ என்ற கோட்பாட்டைச் செக்குகளுக்கு முற்றும் பொருந்துமாறு செய்தது மட்டுமின்றி, ஆங்கிலச் சட்டத் திற்கும் இந்தியச் சட்டத்திற்குமிடையே இருந்த இந்த வேறுபாட் டைக் களைந்தெறிந்தது. 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச் சட்டத்தின் பிரிவு 85இன் (2)வது விதியாக உருப்பெற்ற இத் திருத்தம் கீழ்க்கண்டதைக் கூறுகிறது :

> கொணர்பவரிடம் செலுத்துமாறு தொடக்கத்தில் எழுதப்பட்ட செக்கை, எழுதப்பெற்றவர், கொணர்பவ ரிடம் முறைப்படி செலுத்துங்கால், அதிலிருந்து பொறுப்பு நீக்கப்பெறுவார்; அதில் காணும் முழுப் புறக் குறிப்போ அல்லது வெறும் புறக்குறிப்போ, செலாவணித் தன்மையுடன் அதை மாற்றுவதை வரையறுத்திருந்தா லும் அல்லது முற்றிலும் விலக்கியிருந்தாலும், அவரது பொறுப்பு நீக்கத்தைச் சிறிதேனும் பாதிக்காது.

**வெறும் புறக்குறிப்பைக்கொண்ட செக்கு :** செலாவணி முறி யொன்று தொடக்கத்தில் ஆணைக்கிணங்கச் செலுத்தத்தக்கதாக இருந்திருப்பினும், அதிலிட்ட வெறும் புறக்குறிப்பு, உடையவர் முறியாக அதை ஆக்கிவிடும் என்பதே 1881ஆம் ஆண்டுச் செலா வணி முறிச்சட்டத்தின் பிரிவுகள் 16, 54 ஆகியவற்றின் கூட்டுப் பலனாகும். தொடக்கத்தில் ஆணைச் செக்காக எழுதப்பட்டிருப்பி னும், பிறகு செய்த வெறும் புறக்குறிப்பு, அதை உடையவர் செக் காக ஆக்குகிறது. எனவே, அதன் உரிமையைப் பிறருக்கு மாற்ற வேண்டுமாயின், அதை அவரிடம் சேர்ப்பித்தாலே போதுமானது; மாற்றுபவர் அதில் புறங்குறிக்கத் தேவையில்லை. வெறும் புறக் குறிப்பைக்கொண்ட ஒரு வெண்கடன் பத்திரத்திற்கும், கொணர்வோரிடம் செலுத்த வேண்டிய மற்றொரு வெண்கடன் பத்திரத்திற்கும் இடையே வேறுபாடெதுவும் இல்லை ; இரண்டின் உரிமையையும் சேரிப்பித்தல் மூலம் பிறருக்கு மாற்றலாம் ; அவற்றை வைத்திருப்பவரே அவற்றின் உரிமையாளர் ஆவார் என்று மான்ஸ்பீல்டு பிரபு, பீகாக் (எ.) ரோட்ஸ் (1781) 2, டக். 633 என்ற வழக்கில் கூறினார்.[ஜேத்பர்க்கா (எ.) ராமச்சந்திர விதோபா, 16, பம்பாய் 689, 695 என்ற வழக்கின் தீர்ப்பையும் காண்க.] ஆனால், குறிப்பிட்ட ஆளிடமோ, பிறரிடமோ அல்லது கொணர்வோரிடமோ செலுத்துமாறு எழுதப்பட்ட உண்டியல் ஒன்றில் 'பெறற்குரியோரின் கணக்குக்கு' என்று கீறலிடப்பட்டது; அது கொணர்வோரிடம் செலுத்தத்தக்க உண்டியல் அல்ல ; குறிப்பிட்ட பெறற்குரியோரிடமே அதைச் செலுத்த வேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது[ஹவுஸ் ப்ராபெர்டி கம்., (எ.) லண்டன் கண்ட்ரி வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு (1915), டபிள்யூ. என். 247]. செக்கொன்று ஒரு வெறும் புறக்குறிப்பையும், அதை யடுத்து ஒரு முழுப்புறக்குறிப்பையும் பெற்றிருந்தால், இறுதி யாகக் கூறப்பட்டுள்ள புறக்குறிப்பாளியிடமோ அல்லது அவரது ஆணைக்கிணங்கவோ அதைச் செலுத்த வேண்டும். மேலும், பணஞ்செலுத்துமுன், அவரது புறக்குறிப்பைப் பெற வேண்டும்.

**ஆணைச் செக்குகளைப் புறங்குறித்தல் :** ஆணைச் செக்கின்மேல் பணம் பெறுமுன் அதில் புறங்குறிக்க வேண்டும். ஆனால், பெறற் குரியவரே நேராக அதைச் சமர்ப்பித்தால், அவர் அதில் புறங் குறிக்காமலேயே பணம் பெறலாம். அவர் அதில் புறங்குறிக்கக் கட்டுப்பட்டவரல்லர் எனினும், இந்தியாவிலுள்ள பாங்கர், புறங்குறிக்குமாறு அவரை வேண்டுகின்றனர். அவர் மறுத்தால், கொடுக்கும் தொகைக்குச் சான்றாக முத்திரை ஒட்டப்பெற்ற ரசீதைத் தருமாறு வற்புறுத்துவர். (செலுத்தும் தொகை 20 ரூபாயுக்கு அதிகமானதாக இருந்தால்தான் முத்திரை ஒட்ட

வேண்டும்.) எழுதப்பெற்ற பாங்கின் பணம் தருமுகப்பில் செக்கைச் சமர்ப்பிப்பவர் அதன் பெறற்குரியவராயினும் அல்லது புறக்குறிப்பாளியாயினும், ஆளடையாளச் சான்றைக் காட்டுமாறு அவரை நம் நாட்டிலுள்ள பாங்கர் கேட்பர். செக்கொன்றின் பெறற்குரியவர், வசூலிப்பதற்காகத் தமது பாங்கருக்கு அதை அனுப்பும்பொழுது, அதில் புறங்குறிக்கத் தேவையில்லை. அந்த பாங்கு அவருடைய பதிலாள் என்ற முறையில் அதை வசூலித்து, அவர் கணக்கில் வரவு வைக்கும். ஆனால், தமது பாங்கருக்கு அச் செக்கை விற்கும்நோக்கத்துடன் அதை அனுப்பினால், அப்பொழுது புறங்குறித்து அனுப்ப வேண்டும். அதைப் பெறும் அந்த பாங்கரும், விலைக்கு வாங்கி வைத்திருப்பவராகக் கருதப்படும்.

**புறக்குறிப்புக்கள் விதிப்படி ஒழுங்காகவுள்ளனவா என்று சரி பார்க்க வேண்டும் :** ஆணைச்செக்குகளில் உள்ள புறக்குறிப்புக்கள் விதிப்படி ஒழுங்கானவையா என்று சரிபார்த்தல் பாங்கரது முக்கியப் பணியாகும் ; இல்லாவிடில், அவர் பணஞ்செலுத்தியது, முறைப்படி செலுத்தியதாகக் கருதப்படாது. இந்தியாவிலுள்ள பாங்கருக்குப் பெரும்பாலும் தெரியாத மொழியொன்றில், உதாரணமாகச் சீனமொழியில், புறக்குறிப்பொன்று இடப்பட்டிருந்தால், அதை உறுதி செய்துகொள்ளும்பொருட்டு, உடனே பணஞ்செலுத்த பாங்கர் மறுக்கலாம் ; ஆனால், பணஞ்செலுத்தலைத் தள்ளிப்போடுவதற்கான காரணத்தைப் பொறுத்தமான சொற்களால் அறிவிக்க வேண்டும்[கார்லைல் அண்ட் கம்பெர்லாண்டு பாங்கு என்னும் வழக்கு (*1911*), *1* கே.பி. *489*). வாடிக்கைக் காரரிடமிருந்து செக்குகளை வசூலிப்பதற்காகப் பெறும்போதே, அவற்றிலுள்ள புறக்குறிப்புக்கள் சரிவர இருக்கின்றனவா என்று வசூலிக்கும்-பாங்கர் சரிபார்க்க வேண்டும். இல்லையென்றால், செலுத்தும்-பாங்கர் அவற்றிலுள்ள புறக்குறிப்பு முறைப்படியில்லை என்று திருப்பியனுப்பலாம். அதன் விளைவாக வசூலிக்கும்-பாங்கர் அவற்றை வாடிக்கைக்காரரிடம் திருப்பியனுப்ப நேரும். இவ்வாறாக அவற்றின்மீது பணம் பெறுவதில் தேவையற்ற சுணக்கம் ஏற்படுகிறது.

**நிபந்தனைப் புறக்குறிப்பு :** செக்கொன்றின் மீதுள்ள புறக்குறிப்பு அதன் தொகையைச் செலுத்துவதை ஒரு நிபந்தனைக்குட்படுத்தியிருந்தால், அந்த நிபந்தனை நிறைவேறும்வரை, பாங்கர் அதை மதிக்க முடியாது என்னும் நிலை இந்தியாவில் நிலவுவதாகத் தோன்றுகிறது. இது, பாங்கருக்கு இக்கட்டான ஒரு நிலையாகும். ஏனெனில், அதன் இலக்கணப்படி, கேட்கும் பொழுது செலுத்தத்தக்க நிபந்தனையற்றவோர் ஆணையே செக்கு

எனப்படும். எனவே, நிபந்தனையுடன் செக்கை எழுத முடியாது ; கேட்கும்பொழுது அதன் தொகை செலுத்தப்பட வேண்டும். இவ் வாறிருக்க, பணஞ்செலுத்துமுன், புறக்குறிப்பிலுள்ள நிபந்தனை நிறைவேறிவிட்டதாவென்று பார்க்குமாறு செலுத்தும்-பாங்கர் வேண்டப்படுதல், புதுமையாகவும் சற்று முரண்பட்டதாகவும் தெரிகிறது. நிபந்தனையுள்ள ஓர் ஆணை செக்கல்ல. எனவே, அதை எழுதும் வாடிக்கைக்காரர், பாங்கருக்கு இழப்பீடுசெய் உறுதியளித்திருந்தாலன்றி, பாங்கர் அதை மதிக்கத் தேவையில்லை என்று முன்பே கண்டோம். இங்கிலாந்து நாட்டில், நிபந்தனை யுள்ள ஆணையைப்பெறும் பாங்கர், அந்த நிபந்தனை நிறைவேறி யிருந்தாலும் இல்லாவிட்டாலும், அதன் தொகையைச் செலுத்தலாம் (1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டம், பிரிவு 31). புறங்குறிப்பவர், புறக்குறிப்பாளி ஆகிய இருவருக் குள்ளேயுள்ள தனிப்பட்ட விவகாரமாக, அவர்களை மட்டுமே கட்டுப்படுத்தக்கூடியதாக, நிபந்தனையை நாம் எடுத்துக்கொள்ள லாம். நிபந்தனையை நிறைவேற்றும் வரை, புறக்குறிப்பாளி அதன் தொகையைக் கேட்க முடியாது என்பது தெளிவு. ஆனால், நிபந்தனை நிறைவேறி விட்டதோ இல்லையோ, பணஞ்செலுத்து மாறு பாங்கரைக் கேட்கும்பொழுது, அந்த ஆணையின்—கேட்கும் பொழுது செலுத்த வேண்டிய ஆணை—தொகையைச் செலுத்த மறுக்கவோ அல்லது கொடாமல் வைத்துக்கொள்ளவோ (withhold) பாங்கருக்கு என்ன உரிமையிருக்கிறது ? இந்த முரண் பாட்டை அறிந்துதானோ என்னவோ, 1882 ஆம் ஆண்டு உண்டி யல் சட்டத்தின் (45 & 46 விக்ட், சி. 61) 33ஆம் பிரிவு, நிபந் தனையைப் புறக்கணித்துப் பணஞ்செலுத்தினாலும் பாதுகாப்பை நல்குகிறது ; மேலும், நிபந்தனையை நிறைவேற்றியிருந்தாலும் இல்லாவிடினும், புறக்குறிப்பாளியிடம் பணஞ்செலுத்துவதை அது அங்கீகரிக்கிறது.

இதற்கு இசைந்த (ஒத்த) வாசகம், நம் நாட்டிலுள்ள 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. இதன் விளைவாக, நிபந்தனைப் புறக்குறிப்பைக் கொண்டுள்ள செக்கைப் பொறுத்தவரை, நம் நாட்டில், பாங்கர் மேற்சொன்ன முரண்பட்ட நிலையிலுள்ளனர். இருப்பினும் அச்செக்கு, செலாவணி முறிச்சட்டத்தின் 5, 6 ஆகிய பிரிவு களின்படி, பாங்கர்மீது எழுதப்பெற்ற, கேட்டாலன்றிச் செலுத்தப்படும் என்று சொல்லாத, நிபந்தனையற்ற ஆணையாகும்.

**ஆள்சாரா, கற்பனையான பெறற்குரியவர்களுக்குச் செலுத்தத் தக்க செக்குகளைப் புறங்குறித்தல் :** 'குடும்பம் நடத்துவதற்கு

அல்லது ஆணைக்கிணங்க', 'கூலி அல்லது ஆணைக்கேற்ப' அல்லது 'ரொக்கம் அல்லது ஆணைக்கு' என்பன போன்ற ஆள்சாராப் (impersonal) பெறற்குரியவருக்குச் செலுத்த வேண்டிய செக்கு களைப் புறங்குறிக்க வேண்டுமா என்ற வினு எழத்தான் செய் கிறது. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 3, 73 ஆகிய பிரிவுகளைக் கருத்திலிருத்தி நோக்குங்கால், இதுபோன்ற முறிகள் செக்குகளே அல்ல; கொணர்பவரிடம் பணஞ்செலுத்துமாறு எழுதப்படும் வெறும் கட்டளைகளே அவை என்பது தெளிவாகும் என்று நீதிபதி பிரான்சன் அவர்கள் கருத்துரைத்தார். மேலும், 'அல்லது ஆணைக்கிணங்க' என்னும் சொற்களின் முக்கியத்துவத் தைப்பற்றி அவர் ஆராய்ந்தார். உதாரணமாக, 'ரொக்கம் அல்லது ஆணைக்கு' என்று எழுதப்பட்ட செக்கில் 'ரொக்கம்' புறங்குறிக்க முடியாது; ஏனெனில், அது ஒரு குறித்த ஆளல்ல; எனவே, 'அல்லது ஆணைக்கு' என்னும் சொற்களைப் புறக்கணித்துக் கொணர்பவரிடம் செலுத்த வேண்டிய கட்டளையாகவே நீதி மன்றம் அப்பத்திரத்தைப் பாவிக்கும் என்று அவர் கருதினர். நார்த் அண்ட் சவுத் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் லிமிடெட் (எ.) தி நேஷனல் புரொவின்ஷியல் பாங்கு லிமிடெட் (1936), 1 கே.பி. 328 என்னும் வழக்கிலளிக்கப்பட்ட தீர்ப்பு, இப்பத்திரங்களை உண்டியல் என்னும் இனத்திலிருந்து விலக்கிவிட்டது. எனவே, அவற்றைப் பொறுத்தவரை பாங்கருக்குச் சட்டப்பாதுகாப்பு மறுக் கப்படலாம். இதன் விளைவாக, அப்பத்திரங்களில் ஐயப்பாட் டுக்கு இடமிருந்தால், 'ஒழுங்கற்ற முறையில் எழுதப்பட்டுள்ளது' (irregularly drawn) என்று குறித்து, அவற்றைத் திருப்பியனுப்பி விடவேண்டும்; மேலும், அவற்றைச் சமர்ப்பிப்பவர் எழுதுபவ ராகவோ அல்லது கொணர்பவராகவோ இருப்பினும், அவற்றைச் செலுத்தியதன் சான்ருக முத்திரை ஒட்டப்பெற்ற ரசீதைப் பெறுதல் சாலச் சிறந்தது. 'கிருஷ்ண பரமாத்மா அல்லது ஆணைக் கிணங்க', 'இந்தியத்தாய் அல்லது ஆணைக்கு', 'அராபிய இரவு கள் அல்லது ஆணைக்கேற்ப', 'நிலவு மனிதர் அல்லது ஆணைப்படி' என்பன போன்ற கற்பனை ஆள்களுக்குச் செலுத்துமாறு எழுதப் படும் செக்குகளை உடையவர் செக்காகவே பாவித்தல் வழக்கம் [க்ளட்டன் (எ.) ஆட்டென்பரோ (1897) ஏ. சி. 90]. 'ரொக்கம் அல்லது ஆணைக்கேற்ப', 'கூலி அல்லது ஆணைக்கேற்ப', 'அலுவல கம் அல்லது ஆணைக்கேற்ப' செலுத்துமாறு எழுதப்படும் பத்திரங் களைப் பாங்கர் மிகவும் விழிப்புடன் கையாள வேண்டும் என்பது கோல் (எ.) மில்சம் (1951) 1, அல. இ. ஆர். 311 என்ற வழக் கின் தீர்ப்பிலிருந்து தெளிவாகிறது. செக்கின் அம்ச தேவைகளை அப்பத்திரங்கள் நிறைவேற்றுவதில்லை; எனவே, செக்காக அவ்றைப் பாவிக்க முடியாது என்று அவ்வழக்கில் தீர்ப்பு

வழங்கப்பட்டது. இக்கருத்து பாங்குத் தொழிலின் நடைமுறைக்கு முரண்பட்டதெனினும், பின்னைய தீர்ப்பொன்றால் மாற்றப்படும் வரை அதைப் பின்பற்றுதல் தவிர்க்க முடியாதது; கூலிக்காக எழுதும் செக்குகளைக் 'கூலி அல்லது கொணர்வோரிடம்' செலுத்துமாறு எழுதுக என்றும், தங்களுக்குப் பணம் தேவைப்படும்போது எழுதும் செக்குகளை, 'தமக்கு அல்லது ஆணைக்கேற்ப' செலுத்தத்தக்கவையாக எழுதுகவென்றும் வாடிக்கைக்காரர்களிடம் வலியுறுத்தல் விரும்பத் தக்கதாகும். இதுபோன்ற சூழ்நிலைகளில் 'கூலி அல்லது ஆணைக்கேற்ப' என்று எழுதும் பழக்கத்தைப் பாங்கர் அனுமதிக்கக் கூடாது(வாணிக, தொழில் நிருவாகம் 1951, பக். 259—260).

**பொதுப்பணி நிலையங்களுக்குச் செலுத்த வேண்டிய செக்கை எவ்வாறு புறங்குறிப்பது ?** வரிகள், உள்வரி (cess) ஆகியவற்றின் நிமித்தம், உள்ளாட்சி மன்றம் அல்லது பிற பொதுப்பணி அமைப்புக்கள் (public bodies) தங்களுக்குச் சாதகமாக எழுதப்பட்ட செக்குகளைப் பெறுகின்றன. அந்தச் செக்கின்மேல் சம்பந்தப்பட்ட பொதுப்பணி அமைப்பு, புறங்குறிக்க வேண்டும் என்று பாங்கர் வற்புறுத்த வேண்டும். எனவே, 'இந்திய உச்சநீதி மன்றத்திற்கு அல்லது ஆணைக்கிணங்க' என்று எழுதப்பட்ட செக்கை, அந்த நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி அல்லது அங்கீகாரம் பெற்ற அதிகாரி புறங்குறிக்க வேண்டும். அது போலவே 'பம்பாய்ப் பல்கலைக்கழகத்திற்கு அல்லது ஆணைக்கேற்ப'ச் செலுத்துமாறு எழுதப்பட்ட செக்கை, அப்பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் அல்லது பதிவாளர் (அதற்கான அங்கீகாரம் பெற்றிருந்தால்) புறங்குறிக்கலாம். 'நாசிக் அரசாங்கக் கருவூலத்திற்கு அல்லது ஆணைக்கேற்ப'ச் செலுத்துமாறு எழுதப்பட்ட செக்கை அக்கருவூல அதிகாரி புறங்குறிக்க வேண்டும்.

வசூலிப்பதற்காகப் பாங்குக்கு ஆணைச்செக்குகளையும், அதைப் போன்ற பிற முறிகளையும் அனுப்பும்போது, அனுப்புகிறவரது புறக்குறிப்பைத் தவிர்த்தல் விரும்பத் தக்கதுதானா என்பதை ஆராய, இங்கிலாந்தில் 1955ஆம் ஆண்டு அரசியின் அறிவுரைஞரான (Q. C.) திரு. எ. ஹெச். மொகட்டா என்பவரது தலைமையில் செக்குப் புறக்குறிப்புக் குழுவொன்று அமைக்கப்பட்டது. பெறற்குரியவரின் சார்பில் பாங்கு வசூலிக்கும் செக்குகளில், பெறற்குரியவர் புறங்குறிக்கத் தேவையில்லை என்ற அக்குழுவின் பரிந்துரையை ஏற்று, பிரிட்டிஷ் அரசாங்கம் 1957ஆம் ஆண்டு செக்குச் சட்டத்தை (Cheques Act) இயற்றியது. 1957ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் தேதியன்று அச்சட்டம் நடை

முறைக்கு வந்தது. இதன் விளைவாக, செக்கு, இன்ன பிற முறிகளின் பெறற்குரியவர் புறங்குறிக்க வேண்டியதில்லை என்ற நிலை உண்டாயிற்று. புறக்குறிப்பு ஒழுங்காக இருக்கிறதா என்று கண்டறிய வேண்டிய தொல்லையினின்றும் செலுத்தும்-பாங்கரும், வசூலிக்கும்-பாங்கரும் விடுபடுகின்றனர். அவர்கள் பணியை இச்சட்டம் மிகவும் எளிதாக்கியதோடு, பாங்குத் தொழில் பெருகவும் துணை புரிகிறது. எனவே, வாடிக்கைக்காரரின் சார்பில் வசூலிப்பதற்காக, பாங்குக்கு அனுப்பப்படும் செக்குகளில் புறக்குறிப்புகளைத் தவிர்க்கத் தேவையான திருத்தத்தை நம் சட்டத்திலும் செய்ய வேண்டியது நன்மை பயக்கத் தக்கதாகும். இதற்கான தக்க நடவடிக்கைகளை இந்நூலாசிரியர் ஏற்கெனவே எடுத்திருக்கிறார். இதற்கான சட்டத்தை இயற்றுமுன், பாங்கர், வாணிப அமைப்புகள் ஆகியவற்றின் கருத்தை நமது அரசாங்கம் பெற முயல வேண்டும்.

ஐக்கிய அரசாங்கத்தில் செக்குச் சட்டம் எவ்வாறு நடைமுறையில் இயங்குகிறது என்பதை அறிய, இந்திய பாங்கர் நிலையம் 1960ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் வெளியிட்ட இதழ் எண். 1-இல் (பக். 17-இல்) காணும் திரு. மாரிஸ் மெக்ரா அவர்களின் கட்டுரையைப் படியுங்கள்.

இங்கிலாந்து நாட்டிலுள்ள 1957ஆம் ஆண்டுச் செக்குச் சட்டத்தின் 4ஆம் பிரிவு, வசூலிக்கும்-பாங்கருக்கு, உண்மையான உரிமையாளருக்கெதிராகக் கீழ்க்கண்ட பாதுகாப்பை அளிக்கிறது :

(1) (அ) இந்தப் பிரிவு பொருந்தும் முறியின் தொகையை வாடிக்கைக்காரரின் சார்பில் பெறும்போது அல்லது

(ஆ) வாடிக்கைக்காரருக்கு எந்த உரிமையும் இல்லாத முறி ஒன்றை அவர் அனுப்பும்போது பெற்று, உடனே அவருடைய கணக்கில் அதன் தொகையை வரவு வைத்து, பிறகு அதன் தொகையைத் தமக்காகப் பெற்றுக்கொள்ளும்பொழுது, அந்தப் பாங்கர் செம்மையான நம்பிக்கையுடனும், எந்தப் புறக்கணிப்புக்கும் இலக்காகாமல், அவர் செயலாற்றினால், பாதுகாப்புக்கு உரியவராவார்.

(2) இந்தப் பிரிவு கீழ்வரும் முறிகளுக்குப் பொருந்தும் :

(அ) செக்குகள்,

(ஆ) ஒரு தொகையை ஒரு பாங்கரிடமிருந்து, ஓர் ஆள் பெறும்வண்ணம், அந்தப் பாங்கின் வாடிக்கைக் காரர் வெளியிடும் ஒரு பத்திரம்; அது உண்டியல் அல்லாததாக இருக்கலாம்.

(இ) ஒரு தொகையைக் கருவூலத் தலைமை அதிகாரியிடமிருந்து ஓர் ஆள் பெறும்வண்ணம், அரசாங்க அதிகாரி ஒருவர் கொடுக்கும் பத்திரம்; ஆனால் அது உண்டியலல்ல.

(ஈ) கேட்கும்பொழுது செலுத்துமாறு ஒரு பாங்கு தனக்குத்தானே எழுதும் ஒரு டிராஃப்டு. அதன் தொகை அந்தப் பாங்கின் தலைமையகத்திலோ அல்லது பிற கிளையகத்திலோ செலுத்தப்படலாம்.

(3) முறியொன்றில் புறக்குறிப்பு விதிப்படி ஒழுங்காக இருக்கிறதா என்று சற்றேனும் சரி பார்க்காமல் பாங்கர் அதை வசூலித்திருந்தாலும், அந்த பாங்கரை, கடமையைப் புறக்கணித்தவர் என்று, இப்பிரிவைப் பொறுத்தவரை கருதக் கூடாது. வசூலிக்கும்-பாங்கருக்கு அளிக்கப்படும் பாதுகாப்பு கீறுச் செக்குகள் (திறந்த செக்குகள்) இந்த விதியிலடங்கும். பிற பத்திரங்களுக்கும் கிடைக்க, இது துணை செய்கிறது. இப்பாதுகாப்புக்கு உரியவையாக வேண்டுமானால், செலாவணித் தன்மையுடன் பிறருக்கு அவை மாற்றப்படாமல் இருக்க வேண்டும். பெறற்குரியவர் அல்லாத மற்றோர் ஆளுடைய கணக்கின் வரவுக்காக, பாங்கருக்கு அனுப்பப்படும் செக்கு முன்போலவே (இச்சட்டம் இயற்றப்படுமுன் இருந்தவாறே) புறங்குறிக்கப்பட வேண்டும். அப்பொழுதுகூட, அந்தக் கணக்கு வைத்திருப்பவருக்குச் சாதகமாக அது சிறப்புப் புறக்குறிப்பிடப்பட்டிருந்தால், அவர் அதைப் புறங்குறிக்க வேண்டியதில்லையென்பது இங்கு அறியற்பாலது.

## பல்வேறு ஆள்களின் புறக்குறிப்பு

### பொதுக் கைக்கோள்

புறக்குறிப்பைப்பற்றிய பொதுவான கோட்பாடுகளை இப்பொழுது நாம் காணுவோம். பாங்கரிடையே நிலவும் நடைமுறை தான், குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சியில் இட்ட புறக்குறிப்பு பொருத்தமானதா இல்லையா என்பதைப் பெரும்பாலும் தீர்மானிக்கிறது. புறக்குறிப்பை மையால் எழுதுதலே சிறந்ததாயினும், பென்சிலால் எழுதும் புறக்குறிப்பும் சட்டப்படி செல்லத்தக்கதே [கியரி (எ.) பிஸிக் (1826), 5 பி & சி 234]. பென்சிலால் இடும் புறக்குறிப்பைத் திருத்துவதும் அழிப்பதும் எளிது; எனவே, இப்பழக்கத்திற்கு பாங்கர் ஊக்கங்கெடுக்கின்றார். பென்சிலால்

இட்ட புறக்குறிப்பின் முன்னும் பின்னும் (மேலும் கீழும்) மையால் எழுதிய புறக்குறிப்புக்கள் இருந்தால், பாங்கர், அதற்குப் பொது வாக மறுப்புரைப்பதில்லை. பெறற்குரியவர் அல்லது புறக்குறிப் பாளியின் அங்கீகாரத்தோடு கைப்பொறிப்பால் முற்றிலும் இடப் பட்ட புறக்குறிப்பு, இணக்கமளிக்கத்தக்கதாகவே தோன்றுகிறது. இது போன்ற நிகழ்ச்சிகளில் தக்க அங்கீகாரத்தோடுதான் கைப் பொறிப்பு பொறிக்கப்பட்டது என்பதற்கான சான்றைக் காட்டு மாறு கேட்க, செலுத்தும்-பாங்கருக்கு உரிமையுண்டு. எனவே, இந்தப் பொறிப்புக்குத் தற்சார்ந்த (independent) ஒருவரின் சாட்சிக் கையெழுத்தைப் பெறுதல் விரும்பத் தக்கது. அச்சிட்ட புறக்குறிப்பைப் பொதுவாக பாங்கர் ஏற்றுக்கொள்ளுவதில்லை யாயினும், போதுமான அங்கீகாரத்தோடுதான் அச்சிடப்பட்டது என்பதற்குத் தக்க சான்றிருந்தால் அதை பாங்கர் மறுத்தொதுக்க முடியாது. நீதிமன்றத்தின் ஆணையால் புறங்குறிக்கத் தடை செய்யப்பட்ட ஒருவரின் புறக்குறிப்பு செல்லாதது அல்ல; அந்த ஆணையைப்பற்றி அறிந்திருந்தாலன்றி, செலுத்தும்-பாங்கர் பாதிக் கப்பட மாட்டார் [சுப்ரமணிய ஐயர் (எ.) சொக்கலிங்க முதலியார் 46 மதராஸ், 415].

**நன்மதிப்பு அல்லது மரியாதை அடைமொழிகள்:** பெறற்குரிய வரின் அல்லது புறக்குறிப்பாளியின் சாதாரணக் கையெழுத்து மாதிரியே புறக்குறிப்பு இருக்க வேண்டும் என்பதே வழிகாட்டும் கோட்பாடாகும். 'மரியாதை அடைமொழியைக்கொண்ட புறக் குறிப்பு, சட்டப்படி செல்லத்தக்கதாயினும், வழக்கமாக இந் நாட்டில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை'(பாங்கியலின் சட்டமும் நடைமுறையும், ஹெச். பி. ஷெல்டன் அவர்களின் நூல், 6ஆம் பதிப்பு, பக். 26). நன்மதிப்பு அசை (complimentary prefix), நன்மதிப்பு விகுதி (complimentary suffix), இன்ன பிற மரியாதை அடைமொழிகள் புறக்குறிப்பின் பகுதிகள் ஆகமாட்டா. இருப் பினும், சில வெளிநாடுகளில் புறக்குறிப்பில் மரியாதை அடை மொழிகளைச் சேர்க்கின்றனர். எனவே, திரு, திருமதி, குமாரி, லாலா, கனவான் (Babu), அவர்கள் (Esquire) ஆகிய சொற்கள் பெறற்குரியவர் அல்லது புறக்குறிப்பாளிகளின் பெயர்களுக்கு முன்போ அல்லது அடுத்தோ, அவர்களுடைய புறக்குறிப்புகளில் தோன்றக் கூடாது. 'பா', 'லா' ஆகிய எழுத்துக்கள் முறையே 'பாபு', 'லாலா' ஆகிய அடைமொழிச் சொற்களின் சுருக்கங்களா என்பது உள்ளூர் வழக்கைப் பொறுத்திருக்கிறது. 'பாபு', 'லாலா' என்னும் அடைமொழிகளின் சுருக்கமாக முறையே 'பா', 'லா' என்னும் எழுத்துக்களைப் பயன்படுத்துதல், செக்கொன்று எழுதப் படும் இடத்தின் நிலைபெற்ற வழக்கமானால், புறக்குறிப்புக்களில்

அவ்வெழுத்துக்களை விட்டுவிடுதலுக்கு எந்தவித மறுப்பும் இருக்க முடியாது. இந்த வழக்கம் அங்கு நிலவவில்லையானால், அந்த எழுத்துக்கள், புறக்குறிப்புகளில் சேர்க்கப்பட வேண்டும். இவ் வழக்கத்திற்கு—'பாபு', 'லாலா' என்னும் சொற்களின் சுருக்க மாக முறையே 'பா', 'லா' என்னும் எழுத்துக்களைப் பயன்படுத்தும் ஊக்கங்கொடுத்தல் நன்று. ஏனெனில், சிலபொழுது, இவ்வெழுத் துக்கள் பெறற்குரியவரது பெயரின் தொடக்க எழுத்துக்களாக (initial letters) அமைவதுண்டு. எடுத்துக்காட்டாக, 'பா. பூஷன் லாலுக்கு அல்லது ஆணைக்கேற்ப'ச் செலுத்துமாறு செக்கொன்று எழுதப்பட்டால், பெறற்குரியவர் பெயர் பாபு பூஷன்லாலா, அல்லது பாரத் பூஷன்லாலா (பாரத் என்பது பெயரின் முதற் பகுதியாக இருக்கலாம். அதன் சுருக்கமாக 'பா' என்னும் தொடக்க எழுத்து உபயோகிக்கப்படலாம்.) என்ற ஐயப்பாடு எழும். புறக்குறிப்பு ஒன்று, தன்னுள் கொண்டுள்ள மரியாதைப் பட்டப்பெயர் வெறும் விரித்துரையாக (descriptive) அமைந்தால், அது ஏற்றுக் கொள்ளப்படும். எடுத்துக்காட்டாக, டாக்டர் ஏ. பி. கூப்பர் என்பருக்குச் செலுத்துமாறு எழுதப்பட்ட செக்கை, ஏ. பி. கூப்பர் (எம். டி.[1]) என்று புறங்குறிக்கலாம். அதுபோ லவே சர். கங்கா ராம் என்பவருக்குச் செலுத்தத் தக்க செக்கை, கங்கா ராம் (கே. டி.[2]) என்று புறங்குறிக்கலாம். புறங்குறிப்பவ ரது கையெழுத்தின் முன்புதான், பட்டப்பெயர் இருக்கக் கூடாது; ஆனால், அந்தப் புறக்குறிப்பில் தோன்றும் மற்றொரு பெயரின் பகுதியாக அது தோன்றலாம். மேற்கோளாக, மணமான பெண் புறங்குறிக்கும்போது, திரு. என்னும் நன்மதிப்பு அசையைத் தனது கணவரின் பெயருக்கு முன்பகுதியாகப் பயன்படுத்தலாம்.

பெயரைச் சரியாகவும் தவறாகவும் எழுதுதல்: பெறற்குரியவர் அல்லது புறக்குறிப்பாளரின் பெயர் தவறாக எழுதப்பட்டிருந் தால், அவருடைய புறக்குறிப்பு, தவறாக எழுதப்பட்டுள்ள அவரது பெயரோடு முற்றிலும் இசைந்திருக்க வேண்டும். எடுத் துக்காட்டாக, 'ப. சு. ராமனுக்கு அல்லது ஆணைக்கேற்ப'ச் செலுத்துக என்று எழுதப்பட்டுள்ள செக்கை, அவரது (பெறற் குரியவரின்) சரியான பெயர் 'ப. சு. இராமன்' என்றாலும், 'ப. சு. ராமன்' என்றே அவர் புறங்குறிக்க வேண்டும்; விரும்பினால், அவரது சரியான பெயரை, புறக்குறிப்பின்கீழ் எழுதி அடைப் புக்குறி இடலாம்.

சொந்தப் பெயர் (Christian Name): ஒருவருடைய சொந்தப் பெயரை முற்றிலும் எழுத வேண்டும் என்று

எம். டி.—M. D.—Doctor of Medicine
கே. டி.—K. T. —Knight of the Thistle

இங்கிலாந்திலுள்ள பாங்குகள் வற்புறுத்துவதில்லை. ஆனால், முதற்பெயரை (சொந்தப் பெயரை-first name) முற்றிலும் எழுத வேண்டும் என்று இந்தியாவிலுள்ள பாங்குகள் வேண்டுகின்றன.

**பெண்கள் :** மணமாகா மங்கை ஒருத்தியின் புறக்குறிப்பில் அவளுடைய முதற்பெயரும், குடும்பப் பெயரும் (surname) இணைந்திருக்கும். குமாரி ஹிராபாய் கண்ட்ராக்டர் என்பவர், ஹிராபாய் கண்ட்ராக்டர் என்று புறங்குறிப்பார். 'குமாரி' என்னும் சொல்லை மதிப்புப் பட்டமாகவும், விரிவுரையாகவும் கொள்ளலாம். எனவே, அச்சொல், 'திரு', 'அவர்கள்' போன்ற அடைமொழிகளினின்றும் வேறுபட்டு நிற்கிறது. திருமதி செசில் ஜோன்ஸ் என்பவருக்குச் செலுத்துமாறு எழுதப்பட்டுள்ள செக்கைப் போன்று, செக்கொன்றின் பெறற்குரியவர் திருமணமான பெண்ணாக இருந்தால், அவர் 'கே. ஜோன்ஸ்'[1] என்று தம் சொந்தப் பெயரைப் புறங்குறித்து, அதற்குக் கீழே, திரு. செசில் ஜோன்ஸின் மனைவி அல்லது விதவை என்று குறிக்க வேண்டும். 'திருமதி ஜோன்ஸ்' என்று பெறற்குரியவரின் பெயர் எழுதப் பட்டிருந்தால், 'கேதரின் ஜோன்ஸ்' அல்லது 'கே. ஜோன்ஸ்' (முன்னதே சிறந்தது) என்று தமது வழக்கமான கையெழுத்தைப் புறங்குறிக்க வேண்டும். திருமணமான பெண்ணுக்குச் செலுத்துமாறு அவருடைய கன்னிப் பெயரால் (maiden name) செக்கொன்று எழுதப்பட்டால், அவர் தமது முதற்பெயரை எழுதி, அதையடுத்துக் கணவரின் பெயர், 'பிறப்பு' (nee) கன்னிப்பெயர் ஆகியவற்றை எழுதுதலே முறையான புறக்குறிப்பாகும். எனவே, 'குமாரி கேதரின் ஜோன்ஸ்'க்குச் செலுத்துக என்று எழுதப்பட்டுள்ள செக்கில், அவர், தற்பொழுது திரு. ராபின்சன் என்பவரின் மனைவியாதலால், 'கேதரின் ராபின்சன் பிறப்பு ஜோன்ஸ்' என்று புறங்குறிக்க வேண்டும்.

**கல்லாதவர்கள் (Illiterate Persons) :** கல்லாதவர் ஒருவர், தமது இடது கைப்பெருவிரல் ரேகையைப் பதித்து, மற்றொருவரின் கையெழுத்தைச் சாட்சியாகப் பெறுதலே, ஒழுங்கான புறக்குறிப்பாகும். சாட்சியாளர், அவரது முகவரியை அங்கு எழுத வேண்டும். செக்கொன்று A என்பவரிடம் செலுத்துமாறு, உடையவர்-செக்காக எழுதப்படுகிறது. A என்பவர் கல்லாதவர். எனவே, தமது பெருவிரல் ரேகையைப் பதித்து, B என்பவருக்குச் சாதகமாக அவர் புறங்குறிக்கிறார். செலுத்தும்-பாங்கர் B என்ப

[1] 'கே. ஜோன்ஸ்' என்பது 'கேதரின் ஜோன்ஸ்' என்பதன் சுருக்கமாக இருக்கலாம்.

வரை அறிந்திருந்தால், A என்பவரின் பெருவிரல் ரேகையைச் சரி பார்க்கத் (verify) தேவையில்லை; ஏனென்றால், கொணர்பவரிடம் செலுத்தத் தக்க செக்காகும் அது.

**கூட்டு நிறுவனங்கள் (Firms):** கூட்டு வியாபார நிறுவனத்திற்குச் செலுத்த வேண்டிய செக்கில், உதாரணமாகத் தேசாய் வகீல் & கம்., என்னும் நிறுவனத்திற்குச் செலுத்த வேண்டிய செக்கில், தேசாய் வகீல் & கம்., என்று அந்த நிறுவனத்தின் பெயரையே புறங்குறிக்க வேண்டும்; அது செல்லத்தக்க புறக்குறிப்பாகும். ஆனால், அந்த நிறுவனத்தின் பெயர் தேசாய் வகீல் வியாபாரக் கம்பெனி என்றால், 'தேசாய் வகீல் வியாபாரக் கம்பெனியின் சார்பாக, டி. தேசாய், உரிமையாளர் அல்லது கூட்டாளி' என்று புறங்குறித்தல் நல்லது.

**கூட்டுப் பெறற்குரியவர்கள் (Joint Payees):** கூட்டு நிறுவனமாக அமையாத இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பெறற்குரியவர்களுக்குச் சாதகமாகச் செக்கு எழுதப்பட்டிருந்தால், அவர்கள் ஒவ்வொருவரும் அதில் புறங்குறிக்க வேண்டும். 'திரு. ஏ. கே. தேசாய், திரு. ஆர். சி. தலால் ஆகியோருக்கு'ச் செலுத்துக அல்லது 'திருவாளர்கள் ஏ. கே. தேசாய், ஆர். சி. தலால் ஆகியோருக்கு'ச் செலுத்துக என்று எழுதப்பட்ட செக்கில், அவர்கள் இருவரும் புறங்குறிக்க வேண்டும். இது போன்ற செக்கில், இருவர் கையொப்பங்களையும் ஒருவரே இட்டதாகத் தோன்றினால், உறுதிப்படுத்தும்பொருட்டு, அச்செக்கை பாங்கர் திருப்பியனுப்பலாம். ஆனால், அந்த இருவரில் ஒருவர் மாண்டிருந்து, பாங்கர், அவர் மரணத்தைப்பற்றி அறிந்திருந்தாலும் அல்லது அனைவரின் சார்பாக அவர்களுள் ஒருவரைக் கையொப்பமிட அங்கீகரித்திருந்து, அந்த அங்கீகாரம் பாங்கருக்கு அறிவிக்கப்பட்டிருந்தாலும் பாங்கர் அந்தச் செக்கை மேற்கூறிய வண்ணம் திருப்பியனுப்ப வேண்டியதில்லை.

**பொழுதுபோக்குச் சங்கங்கள் சபைகள், இன்ன பிற:** பொழுது போக்குச் சங்கம், சபை, பிற நிலையங்கள் ஆகியவற்றிற்குச் செலுத்த வேண்டிய செக்குகளைப் புறங்குறிக்கும்பொழுது, அவற்றின் சார்பாகப் புறங்குறிப்பவர், அந்தச் சங்கத்தின் பெயரை எழுதி, அதையடுத்துத் தமது பெயரையும், தமது பதவிப் பெயரையும் (designation) எழுத வேண்டும். அவ்வாறின்றி, அவர் தமது கையெழுத்தைமட்டும் அதில் குறித்தால், எந்தப் பதிலாண்மைத் தகுதியோடு (representative capacity) அவர் புறங்குறிக்கிறார் என்பதை அதிலிருந்து உணர முடியாது. இச்சங்கங்களில் பதவி வகிக்கும் ஒருவருக்கு அவருடைய சொந்தப்

பெயரில் இல்லாமல், பதவிப்பெயருக்குச் செக்கொன்று எழுதப்பட்டிருந்தால், அவர் அதில் புறங்குறிக்கும்பொழுது, தமது கையெழுத்துடன் பதவியின் பெயரையும் குறிக்க வேண்டும். உதாரணமாக, 'சிடென்ஹாம் கல்லூரி மாணவர் மன்றத்தின் மதிப்பியல் (honorary) செயலருக்கு'ச் செலுத்துக என்று எழுதப் பட்டுள்ள செக்கில், அந்தச் செயலர் கையெழுத்திட்டு, 'மதிப்பியல் செயலர், சிடென்ஹாம் கல்லூரி மாணவர் மன்றம்' என்றும் சேர்க்க வேண்டும். மாருக, அந்த மன்றத்தின் மதிப்பியல் செயலர்களுள் ஒருவருக்குச் செலுத்துமாறு, அவருடைய சொந்தப் பெயரில் அச்செக்கு எழுதப்பட்டிருந்தால், அவர் தமது பெயரைப் புறங்குறித்தாலே போதுமானது. அந்தச் செக்கு அவருக்குரியதல்ல; அச்சங்கத்திற்கு உரியது; இருப்பினும், மேற் கூறிய புறக்குறிப்பே போதுமானது.

**கம்பெனிகள் :** கம்பெனியொன்றுக்குச் செலுத்த வேண்டிய செக்கில் அதன் அங்கீகாரத்திற்கிணங்க, அதனுடைய பெயரை எழுதினுலோ அல்லது கைப்பொறிப்பின் துணையோடு பதித் தாலோ, அதுவே செல்லத்தக்கப் புறக்குறிப்பு ஆகும். ஆனுல், அது உறுதி செய்யப்பட்டாலன்றி அல்லது அந்தக் கம்பெனியின் சார்பாகப் புறங்குறித்தவர் தமது அங்கீகாரத்தையும் தகுதி யையும் அதில் தெளிவாகச் சுட்டிக்காட்டியிருந்தாலன்றி, பாங்கர்கள் அதை ஏற்றுக்கொள்ளுவதில்லை. கம்பெனியைக் கட்டுப்படுத்தும் தகுதி, அதில் சில பதவிகளை வகிப்பவருக்கு உண்டு. உதாரணமாக கம்பெனியின் இயக்குநர், நிருவாகி, செயலர் ஆகியோரின் புறக்குறிப்புக்களைப் பாங்கர் ஏற்றுக் கொள்ளுகின்றனர்; ஆனுல் பணக்கணக்கர், கணக்கர், பேரேட்டு எழுத்தர் (ledger clerk) ஆகியோரின் புறக்குறிப்புக்களை ஏற்றுக் கொள்ளுவதில்லை. பிற வகைப் புறக்குறிப்புக்களைப்போல், கம்பெனியின் சார்பில் இடப்படும் புறக்குறிப்பும், அந்தக் கம்பெனியின் பெயர் செக்கில் அல்லது உண்டியலில் எவ்வாறு எழுதப்பட்டுள்ளதோ, அதற்கு இசைந்தே இருக்க வேண்டும்; கம்பெனியின் பெயர் தவருக எழுதப்பட்டிருந்தால், புறக்குறிப்பும் அந்தத் தவருன பெயருக்கு இசைந்தே இருக்க வேண்டும்.

**முகமைப் புறக்குறிப்பு (per pro Endorsement) உள்ள செக்குகள்:** 'சார்பாக' (per pro) என்னும் சொல்லைக்கொண்ட புறக்குறிப்பை, அது உறுதி செய்யப்பட்டாலன்றி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்கிற கட்டாயம் பாங்கருக்கில்லை. சார்புப் (முகமைப்) புறக் குறிப்பில் கையெழுத்திடுகிறவர், தமது முழுக் கையொப்பத் தையும் இட வேண்டும். பெறற்குரியவரின் அங்கீகாரம் பெற்ற

முகவர் இடும் புறக்குறிப்பிற்கு ஏற்ப, செக்கின் பணத்தைச் செலுத்துவதனுல், செலுத்தும்-பாங்கர் எந்த ஆபத்தையும் ஏற்ப தில்லே. அவ்வாறு புறங்குறிப்பவர் தமக்குள்ள அங்கீகாரத்தைக் கடந்திருந்தாலும், செலுத்தும்-பாங்கர் பாதிக்கப்படுவதில்லே. இங்கிலாந்து நாட்டில், சார்புப் (முகமைப்) புறக்குறிப்பு உள்ள இலாப ஈவு ஆணேச்சீட்டை, அப்புறக்குறிப்பு செல்லத்தக்கதா என்று விசாரித்தறியாமல் பாங்கர் செலுத்துவதில்லே. சார்புப் புறக்குறிப்புள்ள இலாப ஈவு ஆணேச்சீட்டு சமர்ப்பிக்கப்படும் பொழுது, பங்குதாரரின் பொறுப்பு நீக்கம்(shareholder's discharge) தேவை என்று குறித்து, செலுத்தும்-பாங்கர் அதைத் திருப்பிக் கொடுத்துவிடுகின்றனர். ஆனுல், சார்புக்கையொப்பம் செல்லத் தக்கதா என்பதைப்பற்றிய ஐயப்பாடு இருந்தால்தான் அவ்வாறு செய்கின்றனர். இவ்வகைப் புறக்குறிப்புக்கள் இந்தியாவில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. ஒருவருக்கு மேற்பட்ட பெறற் குரியவர்களுக்குச் செலுத்துமாறு, வடிவத்தில் செக்கினின்றும் மாறுபட்ட, இலாப ஈவு ஆணேச்சீட்டு எழுதப்பட்டிருந்தால், அவர்களில் ஒருவர் புறங்குறித்தால் போதுமானது என்று கருதப் படுகிறது; அவ்வாறு புறங்குறிப்பவர், அச்சீட்டிலுள்ளதுபோல், தமது முழுப்பெயரையும் எழுத வேண்டும். பங்குதாரர் பொறுப்பு நீக்கம் அளிக்கும்பொருட்டு அச்சீட்டின் முகப்பில் தனி இடம் ஒதுக்கப்பட்டிருந்தால், அதைச் செலுத்துமுன், அந்த இடத்தை நிரப்பி, பொறுப்பு நீக்கம் தருமாறு பங்குதாரரை (shareholder) வற்புறுத்த வேண்டும்.

**பொதுப்பணி மன்றங்கள் அல்லது கார்ப்பரேஷன்கள்:** துறை முகப் பொறுப்பாண்மை மன்றம் (port trust), அபிவிருத்திப் பொறுப்பாண்மை மன்றம் (improvement trust), நகராட்சி மன்றங்கள் போன்ற பொதுப்பணி மன்றங்கள், கார்ப்பரேஷன்கள் ஆகியவற்றின் பெயரில் எழுதப்படும் செக்குகள், அவற்றுக்காக, அவற்றின் சார்பில் இடப்பட்ட புறக்குறிப்புகளேப் பெற்றிருத்தல் வேண்டும்; மேலும், புறங்குறிப்பவர் தமது பதவிப் பெயரையும் அதில் சேர்க்க வேண்டும். குறிப்பிட்ட அதிகாரிக்குச் செலுத்த வேண்டும் என்று செக்கு எழுதப்பட்டால், அவர் தமது சொந்தக் கையெழுத்திட்டு, அவர் பதவியைக் குறித்தலே முறையான புறக் குறிப்பாகும். உதாரணமாக, நாசிக் நகராட்சி மன்றத் தலேவர் அல்லது வரி மதிப்பிடுபவருக்குச் (assessor) செலுத்துமாறு எழுதப் பட்ட செக்கில், 'டி. கே. தேசாய் நாசிக் நகராட்சித் தலேவர் அல்லது வரி மதிப்பிடுபவர்' என்று புறங்குறித்தல் முறையானது எனக் கருதப்படுகிறது.

**X என்பவர் வழியாக A.B. என்பவருக்குச் செலுத்துக என்று புறங் குறிக்கப்பட்ட செக்கு :** சிலிங்ஸ்பியும் பிறரும் (எ.) தி டிஸ்டிரிக்ட் பாங்கு லிமிடெட் (*1913*), *2* கே. பி. *588*, (*1932*), *1* கே. பி. *544* என்னும் வழக்கில் (முன்பே ஓர் இடத்தில் கூறப்பட்டுள்ளது), **A. B.** என்பவருக்கு **X** என்பவர் மூலமாகச் செலுத்தும்படி செக் கொன்று வரையப்பட்டது. அச்செக்குகளை **X** என்று புறங்குறித் தலே,—**A. B.** மூலம் **X** என்றல்ல—பாங்கரிடையே நிலவும் நடை முறையாகும் என்பதற்குத் தக்க சான்று கிடைத்தது. இந்த வழக்கம் சட்டத்தின் அங்கீகாரத்தைப் பெற முடியாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இதுபோன்ற நிகழ்ச்சியில் **A. B.** என்பவரது அங்கீகாரத்தின் அடிப்படையில்தான் **X** என்பவர் கையொப்பமிட வேண்டும் ; **A. B.** என்பவரின் அங்கீகாரத்தைப் பெற்றிருந்தால், **X** என்பவர் பதிலாண்மைத் தகுதியோடுதான் கையொப்பமிட முடியும்; அதை அவர் புறக்குறிப்பு வெளிப்படை யாகத் தெளிவாக்க வேண்டும் என்று ரைட் என்னும் நீதிபதி அவர்கள் விளக்கினர். 'இந்த வழக்கம் வசதியானது, பல தொல்லைகளைத் தவிர்க்க வல்லது என்று பிரதிவாதியின் சாட்சிகள் கூறினர் ; அவ்வாறே இருப்பினும், சட்டம் அதை முறையென்று கருதாது என நான் முற்றிலும் நம்புகிறேன்' என்று நீதிபதி அவர்கள் கருத்துரைத்தார்.

**இறந்தவர்களுக்குச் செலுத்த வேண்டிய செக்கை எவ்வாறு புறங்குறிப்பது ?** இறந்தவர்களுக்குச் செலுத்த வேண்டிய செக்குகளை அவர்களின் சட்டச் சொத்துரிமையாளர் (legal representative) புறங்குறிக்க வேண்டும். நிறைவேற்பாளர்கள் தாங்கள் பெற்ற அங்கீகாரத்தைப் பிறருக்குத் தர உரிமையுள்ள வர்கள் ; எனவே, அவர்களில் ஒருவர், அனைவர் சார்பிலும் கையொப்பமிட மறுப்பேதும் இருக்க முடியாது. ஆனால், தாம் ஒரு நிறைவேற்பாளர் என்றும், தமது சார்பாகவும், பிற நிறைவேற் பாளர்களின் சார்பாகவும் கையொப்பமிடுவதாக அவர் சுட்டிக் காட்ட வேண்டும். நிறைவேற்பாளர்கள் தங்கள் சார்பாகக் கையொப்பமிடும் அங்கீகாரத்தைத் தங்களில் ஒருவருக்குக் கொடுக் கலாம் ; வெளி ஆளுக்குத் தர முடியாது. ஒரு நிறைவேற்பாளர் (மற்ற நிறைவேற்பாளர்களின் சார்பில்) புறங்குறிக்கலாம்; ஆனால், ஒரு பொறுப்பாண்மையாளர் (trustee) பிற பொறுப்பாண்மை யாளரின் சார்பில் கையொப்பமிட முடியாது. எல்லாப் பொறுப் பாண்மையாளரும் தங்கள் கையொப்பத்தை இட வேண்டும்.

மேற்கூறிய கோட்பாடுகளை இன்னும் தெளிவாக்க, அடுத்து வரும் பக்கங்களில் பல வகைப் புறக்குறிப்புக்களின் முறையான, முறையற்ற இரண்டு மாதிரிகளையும் கொடுக்கிறோம்.

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள்

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **தனி நபர்கள் :** | | | |
| திரு. ஹிராலால் | ஹிராலால் | ஹிராலால் சராப் | இந்துக்களிடையே ஹிராலால் என்னும் பெயர் பெருவாரியாக வழங்குவதால், ஆளடையாளத்தை எளிதாக்கும் வண்ணம் குடும்பப் பெயரை அல்லது துணைப்பெயரைச் சேர்த்தல் சிறந்தது.[1] வட இந்திய மக்கள், தங்கள் பெயரோடு குடும்பப் பெயரைச் சேர்த்துக்கொள்ளுதல் வழக்கமில்லையாதலால், அங்கு இது தேவைப்படாது. |
| திரு. எச். ஜோன்ஸ், இளையவர் | எச். ஜோன்ஸ் | எச். ஜோன்ஸ், இளையவர் | |
| லாலா பண்ண லால் | லாலா பண்ண லால்<br>ப. லால் | பண்ண லால்<br>பண்ண லால் | லாலா என்பது மரியாதைப் பட்டம்.<br>முழுக்கையொப்பத்தையும் இட வேண்டும். |
| திரு. டேவிட் கூப்பர் | திரு. டேவிட் கூப்பர்<br>டேவிட் கூப்பர், இளையவர் | டே. கூப்பர்<br>டேவிட் கூப்பர் | கிறித்துவர்களுக்கு மட்டும் இது அனுமதிக்கப்படும்.<br>முதல் தோற்றத்திலேயே திரு. டேவிட் கூப்பர் என்பது மூத்த (senior) டேவிட் கூப்பரைக் குறிக்கிறது. |
| கல்லூரி முதல்வர் நாயுடு | கல்லூரி முதல்வர் நாயுடு | ஆர். நாயுடு | |
| பேராசிரியர் எம். ஜி. சிங், அரசினர் கல்லூரி, லாகூர் | பேராசிரியர் எம். ஜி. சிங், அல்லது பேராசிரியர் எம்.ஜி.சிங், அரசினர் கல்லூரி, லாகூர் | எம். ஜி. சிங், அரசினர் கல்லூரி, லாகூர் | |

[1] இந்திய பாங்கர் நிலைய ஏடு, ஜூலை 1930, பக். 62.

முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **தனி நபர்கள்:** (தொடர்ச்சி) | | | |
| சர். ஜிந்தா ராம் | சர். ஜிந்தா ராம் | ஜிந்த ராம் (கே. தி) அவர்களின் அங்கீகாரம் பெற்ற சட்ட முகவர் ஆர். கே. பல்லா | செக்கைச் செலுத்துமுன், ஆர். கே. பல்லா என்பவர் பெறற்குரியவரின் அங்கீகாரம் பெற்ற சட்ட முகவர்தானு வென்று பாங்கர் கண்டறிய வேண்டும். |
| டாக்டர் ராம் நாத் | டாக்டர் ராம் நாத் | ராம் நாத் | எம்.டி. அல்லது எம்.பி. பி.எஸ். என்பதைப் பெயருக்குப் பின் சேர்க்கலாம். |
| கங்கா பிரசாத் | க. பிரசாத் | பயணைப் பெற்றேன் கங்கா பிரசாத் | புதுமையான புறக்குறிப்பு; ஆயினும் முறையாக உள்ளது. |
| எம். ஜே. துபாசுக்கு ஆர். ஜே. மோதி மூலமாக | ஆர். ஜே. மோதி | எம். ஜே. துபாசுக்கு ஆர். ஜே. மோதி மூலமாக | பெறற்குரியவர் எவ்வாறு எழுதப்பட்டு இருக்கிருரோ அதற்கு இசைந்தே இப்புறக்குறிப்புப் பெரும்பாலும் இருக்க வேண்டும் (ரைட் என்னும் நீதிபதி அவர்கள்.[1]) |
| **பெண்கள் :** | | | |
| குமாரி கபூர் | குமாரி கபூர் | கமலா கபூர் | |

| | | | |
|---|---|---|---|
| திருமதி தேசாய் | திருமதி தேசாய் | ப்ரேம் தேசாய் (திரு. எச். தேசாய் அவர்களின் மனைவி அல்லது விதவை) (திருமதி) ப்ரேம் தேசாய் | இதுவும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. |
| திருமதி. எச். தேசாய் | திருமதி எச். தேசாய் | லீலாவதி தேசாய் (திருமதி) எச். தேசாய் | |
| திருமதி கேப்டன் பத்ரா | திருமதி பத்ரா | ராணி பத்ரா கேப்டன் பத்ராவின் மனைவி | |
| குமாரி கே. தேசாய் (தற்பொழுது மணமானவர்) | திருமதி கே. தேசாய் | கே. திவான் (பிறப்பு, தேசாய்) | |
| **சங்கம், பள்ளி, இன்ன பிற:** | | | |
| டி. ஏ. வி. பள்ளி | ஹிரமால் ஹண்டா, தலைமையாசிரியர், டி. ஏ. வி, பள்ளி[2] | டி. ஏ. வி. பள்ளி - அதற்காகவும் அதன் சார்பிலும், ஹிரமால் ஹண்டா, தலைமையாசிரியர் | |

1 சிலிங்ஸ்பியும் பிறரும் (எ.) தி டிஸ்டிரிக்ட் பாங்கு லிமிடெட் (1931), 2 கே. பி. 588 : (1932) கே. பி. 544

2 சிலபொழுது இதுவும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **சங்கம், பள்ளி, இன்ன பிற :** (தொடர்ச்சி) | | | |
| தலைமையாசிரியர், புதிய உயர்நிலைப்பள்ளி | புதிய உயர்நிலைப்பள்ளி, தலைமை ஆசிரியர் | ஆர். முர்பன், தலைமையாசிரியர், புதிய உயர்நிலைப்பள்ளி | |
| பஞ்சாப் சங்கம் | டி. ஆர். கண்ணு, செயலர், பஞ்சாப் சங்கம் | பஞ்சாப் சங்கம்—அதற்காகவும் அதன் சார்பிலும், டி. ஆர். கண்ணு, மதிப்பியல் கருவூலர் | |
| செயலர், பஞ்சாப் சங்கம் | எஸ். ஆர். ரேல்லன், செயலர் | பஞ்சாப் சங்கம்—அதற்காகவும் அதன் சார்பிலும் எஸ். ஆர். ரேல்லன், செயலர் | |
| ஹேரிங்டன் சேம்பர்ஸ் | தி. தல்மகி, நிருவாகி, ஹேரிங்டன் சேம்பர்ஸ் | ஹேரிங்டன் சேம்பர்ஸ்—அதற்காகவும், அதன் சார்பிலும் தி. எல். தல்மகி, நிருவாகி | |
| மதிப்பியல் கருவூலர், ஓரியன்ட் சங்கம் | மதிப்பியல் கருவூலர், ஓரியன்ட் சங்கம் | ஓரியன்ட் சங்கம்—அதற்காகவும் அதன் சார்பிலும் தி. சி. சென், மதிப்பியல் கருவூலர் | தி. சி. சென், மதிப்பியல் கருவூலர், ஓரியன்ட் சங்கம் என்னும் புறக்குறிப்பும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. |

| கூட்டுப் பெறற்குரியவர்கள் : | | | |
|---|---|---|---|
| திருவாளர்கள் ஹிராலால் தேசாய், சல்மோதி இருவருக்கும் | ஹிராலால் தேசாய் சல்மோதி (ஒரே கைப்பட எழுதியது) | ஹிராலால் தேசாய் சல்மோதி | வெவ்வேறு கைப்பட எழுதியது. |
| ஏ. பி. சி. டி. | பி. சி. டி. | ஏ. பி. சி. அல்லது ஏ. பி. டி. அல்லது ஏ. சி. டி. | அடிக்குறிப்பைக் (footnote) காண்க.[1] |
| ஹிராலால் தேசாய், திருமதி தேசாய் இருவருக்கும் | ஹிராலால், திருமதி தேசாய் இருவரும் | ஹிராலால் தேசாய் லீலாவதி தேசாய் | வெவ்வேறு கைப்பட எழுதியது. |
| | | எனக்காகவும் திருமதி தேசாயுக்காகவும் ஹிராலால் தேசாய் | அங்கீகாரம் இருக்கும் என்று எடுத்துக் கொள்ளலாம். |

1 இந்த நால்வரும் இணைந்து துவக்கிய கணக்கின்மீது எழுதப்படும் செக்குகளிலும், அக்கணக்கிற்குச் செலுத்தப்படவேண்டிய செக்கில் தோன்றும் புறக்குறிப்புகளிலும் மூவர் கையொப்பமிட்டால் போதும்; பாங்கு ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தொடக்கத்தில் கட்டளையிடப்பட்டது. இந்த இணைந்தவர் கணக்கின் சார்பாகத் தமது கையொப்பமில்லாத எந்த முறியையும் ஏற்கக் கூடாது என்று 'ஏ' என்பவர் பின்பு அறிவிக்கிறார்.

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **பதிலாள்கள் :** | | | |
| தாமஸ் ராபர்ட்ஸ் | தாமஸ் ராபர்ட்ஸ் என்பவருக்காக ஜே. ப்ரௌன் | தாமஸ் ராபர்ட்ஸ் என்பவருக்காகவும், அவர் சார்பிலும் ஜே. ப்ரௌன் | அவருக்காக (அதற்காக) அல்லது ப்ரோ (pro) என்பது அங்கீகாரத்தைக் குறிக்காது. |
| | தாமஸ் ராபர்ட்ஸ் என்பவரின் சார்பில் (per pro.) ஜே. ப்ரௌன் | தாமஸ் ராபர்ட்ஸ் அவர்களின் சார்பில் ஜே. ப்ரௌன் | முதல்வரின் பெயருக்கு முன்னால் 'அவருடைய சார்பில்' (per pro) என்பதை எழுத வேண்டும். (இது ஆங்கில மரபிற்கு மட்டுமே ஒத்துவரும் என்பதை அறிக.) |
| | தாமஸ் ராபர்ட்ஸ் என்பவரின் சார்பில் கேப்டன் ஜே. ப்ரௌன் | தாமஸ் ராபர்ட்ஸ் அவர்களின் சார்பில் அவருடைய அங்கீகாரம் பெற்ற சட்ட முகவர் ஜே. ப்ரௌன் | முதல்வரின் சார்பாகக் கையொப்பமிடத் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தை, மூன்றும் ஆளுக்கு, முகவர் தர முடியாது. இவ்வாறு தந்ததைக் காட்டும் புறக்குறிப்பைக் கொண்ட முறியை உறுதி செய்வதற்காக அல்லது முகவரின் கையெழுத்துக்காகத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். |
| | | | முகவர் புறங்குறிக்கும்பொழுது, முதல்வரின் பெயரில் தோன்றும் மரியாதை அடைமொழிக்கு எவரும் மறுப்புரைக்க முடியாது. |

| | | | |
|---|---|---|---|
| **கூட்டு நிறுவனங்கள் :** | | | |
| ஸ்மித் & கம். | ஜான் ஸ்மித் & கம். | ஸ்மித் & கம். | நிறுவனத்தின் சார்பாகத் தமது கையெழுத்திட அங்கீகாரம் உள்ள எந்தக் கூட்டாளியும், நிறுவனத்தின் பெயரையே கையொப்பமாக இடலாம். |
| | ஜான் ஸ்மித் கூட்டாளி | ஸ்மித் & கம். ஜான் ஸ்மித் கூட்டாளி | புறங்குறிப்பவரின் பதவிப்பெயரை, புறக் குறிப்பு காட்ட வேண்டும். |
| | | 'ஸ்மித் & கம்'-இன் சார்பில் ஜான் ஸ்மித் கூட்டாளி | |
| பாரிங் சகோதரர்கள் | ஏ. பி. பாரிங் இருவரும் | பாரிங் சகோதரர்கள் பாரிங் சகோதரர்கள் - அவர்களின் சார்பில் ஏ. பாரிங் கூட்டாளி | |
| சோப்ரா பிள்ளைகள் (Sons) | பி. என். சோப்ரா பிள்ளைகள் | சோப்ரா பிள்ளைகள் | |
| திருவாளர்கள் கண்ணு | கண்ணு & கம். | கண்ணு & கண்ணு கண்ணு & மகன் | பெறற்குரியவர், கண்ணு என்னும் பெயருடைய குறைந்தது இரண்டு ஆள்களைக் கொண்ட நிறுவனம் என்பது பெயரிலிருந்தே தெரிகிறது. எனவே, முன் பத்தியில் காணும் புறக்குறிப்புகளில் ஒன்றை, அதில் இட வேண்டும். |
| | தி. கண்ணு & கம். | தி. எச். கண்ணு & பிள்ளைகள் கண்ணுக்கள் | |

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **கூட்டு நிறுவனங்கள் :** (தொடர்ச்சி) | | | |
| திருவாளர்கள் கே. எல். சோப்ரா | கே. எல். சோப்ரா | கே. எல். & கே. எல். சோப்ரா | |
| குமாரிகள் ஸ்மித் | குமாரிகள் ஸ்மித் | ஸ்மித் சகோதரிகள் | |
| திருவாளர்கள் பூரி & மேத்தா | தி. பூரி | பூரி & மேத்தா | |
| ஜெனரல் ஸ்டோர்ஸ் & ஏஜென்சி | | ஜெனரல் ஸ்டோர்ஸ் & ஏஜென்சி அதற்காகவும் அதன் சார்பிலும் பி. ராஜ், உரிமையாளர் அல்லது ஜெனரல் ஸ்டோர்ஸ் & ஏஜென்சி அதன் சார்பில் பி. ராஜ், கூட்டாளி | |
| **கூட்டுப் பங்குக் கம்பெனிகள் :** | | | |
| சர்மா ட்ரேடிங் கம்., லிமிடெட். | சர்மா ட்ரேடிங் கம்., லிமிடெட் அதற்காக தயா ராம் | சர்மா ட்ரேடிங் கம்., லிமிடெட் அதன் சார்பில் அல்லது அதற்காக அல்லது அதற்காகவும் அதன் சார்பிலும் ஜகதீஸ் சேத்தி & கம்., நிருவாகப் பதிலாள்கள் | கையெழுத்திடுபவர் வகிக்கும் பதவி, புறங்குறிக்கும் அங்கீகாரத்திற்கு முரண்பட்டது என்ற குறிப்பான (தொக்கி நிற்கும்) செய்தியை பாங்கர் புறக்கணிக்கக்கூடாது என்பது சர். ஜான் பேஜட் அவர்களின் கூற்று. |

| | | |
|---|---|---|
| தி போத்தார் மில்ஸ் லிமிடெட் | தி போதார் மில்ஸ் லிமிடெட் | தி போத்தார் மில்ஸ் லிமிடெட் அதற்காக, தி போத்தார் பிள்ளைகள் லிமிடெட் அதற்காக ராம் நாத் நிருவாக இயக்குநர், நிருவாகப் பதிலாள்கள் |
| பி. டி. & கம்., லிமிடெட் (கலைக்கப்படுகிறது) | | பி. டி. & கம்., லிமிடெட் (கலைக்கப்படுகிறது) அதற்காகவும் அதன் சார்பிலும் தயா ராம், கலைப்பாளர். |
| தி ஈஸ்டெர்ன் இந்தியா லைஃப் அச்சூரன்ஸ் கம்., லிமிடெட் | எம். ஜே. மிஸ்த்ரி & கம்., நிருவாகிகள் | தி ஈஸ்டெர்ன் இந்தியா லைஃப் அச்சூரன்ஸ் கம்., லிமிடெட் அதற்காகவும் அதன் சார்பிலும் எம். ஜே. மிஸ்த்ரி & கம்., நிருவாகப் பதிலாள்கள் |

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புகள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **கூட்டுப் பங்குக் கம்பெனிகள் :** (தொடர்ச்சி) | | | |
| தி சியால்கோடு இரயில்வே கம்., லிமிடெட் | தி சியால்கோடு இரயில்வே கம்., லிமிடெட் | தி சியால்கோடு இரயில்வே கம்., லிமிடெட், அதற்காகவும் அதன் சார்பிலும் ஜான் ப்ரௌன் & கம்., லிமிடெட், நிருவாக முகவர்கள் ஹெச்.ஜி. ப்ராக்டர், இயக்குநர் | |
| தி கல்கத்தா எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட் | தி கல்கத்தா எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட், அதற்காக, பி. தாஸ், பணக்கணக்கர். | தி கல்கத்தா எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட் அதற்காகவும் அதன் சார்பிலும் பி. தாஸ், பணக்கணக்கர் செக்குகளைப் புறங்குறிக்க அங்கீகரிக்கப்பட்டுள்ளவர் | |
| **நிறைவேற்பாளர்களும் காப்பாட்சியாளர்களும்: (Executors & Administrators)** | | | |
| கே. கரன்ஜியா (தற்பொழுது இறந்துபட்டவர்) | திருபீ கரன்ஜியா, கே. கரன்ஜியா அவர்களின் விதவை | எஸ்.பெராம்ஜி, எல். கெஷ்வாலா மறைந்த கே. கரன்ஜியா அவர்களின் நிறைவேற்பாளர்கள் | தங்களில் ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்டவருக்குத் தங்கள் அதிகாரத்தைத் தர, நிறைவேற்பாளர்களுக்குத் தொக்கி நிற்கும் உரிமை இருக்கிறது. |
| | எஸ். பெராம்ஜி | மறைந்த கே. கரன்ஜியா அவர்களின் நிறைவேற்பாளர்களாகிய எனக்காகவும், இணை-நிறைவேற்பாளருக்காகவும் எஸ். பெராம்ஜி | |

| | | | |
|---|---|---|---|
| மறைந்த கே. கரன்ஜியா அவர்களின் நிறைவேற்பாளரான எஸ். பெராம்ஜியும், மற்றொருவரும் | மறைந்த கே. கரன்ஜியாவின் நிறைவேற்பாளர்களுக்காக எஸ். பெராம்ஜி | மறைந்த கே. கரன்ஜியாவின் நிறைவேற்பாளர்களுக்காக எஸ். பெராம்ஜி, நிறைவேற்பாளர் | புறங்குறிக்கும் நிறைவேற்பாளர், தாம் ஒரு நிறைவேற்பாளர் என்றும், தமக்காகவும், இணை-நிறைவேற்பாளர்களின் சார்பாகவும் தாம் கையெழுத்திடுவதாகவும் அவர் புறக்குறிப்பில் குறித்திருந்தால், அதற்கு எவரும் மறுப்புரைக்க முடியாது. |
| | எனக்காகவும், இணை-நிறைவேற்பாளருக்காகவும் எஸ். பெராம்ஜி | மறைந்த கே. கரன்ஜியாவின் நிறைவேற்பாளர்களாகிய (காப்பாட்சியாளர்களாகிய) எனக்காகவும், இணை-நிறைவேற்பாளர் (இணை-காப்பாட்சியாளர்) சார்பிலும் எஸ். பெராம்ஜி | |
| மறைந்த கே. கரன்ஜியாவின் முகவர் | எஸ். பெராம்ஜி | மறைந்த கே. கரன்ஜியாவின் நிறைவேற்பாளர்களாகிய எனக்காகவும், இணை-நிறைவேற்பாளர் சார்பிலும் எஸ். பெராம்ஜி | நிறைவேற்பாளர் என்று கையொப்பமிடுபவர் அவருடைய தகுதியைக் குறிக்க வேண்டும். |

முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **பொறுப்பாண்மை யாளர் (டிரஸ்டி) :** | | | |
| மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர்களின் பொறுப் பாண்மையாளர்கள் | மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் பொறுப்பாண்மை யாளராகிய எனக்காகவும், இணைப்பொறுப்பாண்மையா ளர் சார்பிலும் எச். தேசாய் | எச். தேசாய், எல். பதக் மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் பொறுப்பாண்மையா ளர்கள். | ஒரு பொறுப்பாண்மையாளர் அனைவர் சார்பிலும் கையொப்பம் இட முடி யாது. |
| மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர்களின் பொறுப் பாண்மையாளர்களாகிய எச். தேசாய், எல். பதக் இருவருக்கும் | எச். தேசாய் எல். பதக் | எச். தேசாய், எல். பதக் மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் பொறுப்பாண்மை யாளர்கள் | எந்தத் தகுதியில் கையொப்பமிடப்படு கின்றன என்பதைக் கையொப்பம் சுட்டிக் காட்ட வேண்டும். |
| மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் பொறுப் பாண்மையாளர்கள் | மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் பொறுப்பாண்மையா ளர் சார்பில் எச். தேசாய் | மறைந்த சர். விதல்தாஸ் தாமோதர் ரதன்சி அவர் களின் ஒரே பொறுப்பாண்மை யாளர், எச். தேசாய் | பொறுப்பாண்மைப் பத்திரத்தில் வெளிப் படையாகக் கொடுக்கப்பட்டாலன்றி, பொறுப்பாண்மையாளர் தமது அதி காரத்தைப் பிறருக்குத் தர முடியாது. |
| **அதிகாரப் பெறற்குரிய வர்கள் : (Official Payees)** | | | |
| கே. எல். சர்மா & கம்., இன் உரிமை பெறும் அதிகாரி (official receiver) | கே. எல். சர்மா & கம்.,-இன் உரிமை பெறும் அதிகாரி எச்.தேசாய், அவர் சார்பில் பி. ராம் | எச். தேசாய், கே. எல். சர்மா & கம்.,-இன் உரிமை பெறும் அதிகாரி | |

| | | | |
|---|---|---|---|
| வரி வசூலிப்பவர் | வரி வசூலிப்பவராகிய ஆர். ஸ்மித் அவர் சார்பில் தி. எஸ். ஜேம்ஸ்[1] | ஆர். ஸ்மித் வரி வசூலிப்பவர் | அவருடைய பதவிப் பெயரைக் குறிக்க வேண்டியதில்லை. |
| கராச்சி மாநகராட்சித் தலைவர் (Mayor) | 'கராச்சி மாநகராட்ரி' அதற்காக எம். அதானி, மாநகராட்சித் தலைவர் | எம். அதானி, கராச்சி மாநகராட்சித் தலைவர் | |
| **கல்லாதவர்கள் :** | | | |
| நூர்தின் | ஜலால்தின் | நூர்தின் அவர்களின் பெருவிரல் ரேகை (X), சாட்சி கே. எம். ஷா, பல் மருத்துவர், 125, எஸ்பிலனேடு சாலை, பம்பாய் | சாட்சியாளர், தற்சார்ந்தவராகவும், கல்லாதவருக்கும் செலுத்தும்-பாங்கருக்கும் தெரிந்தவராகவும் இருக்க வேண்டும். மேலும், அவருடைய பெயர், தொழில், முகவரி அனைத்தையும் தெளிவாகக் குறிக்க வேண்டும். |
| **பல்திற ஆள்கள் :** | | | |
| எச். தேசாய்க்கு அல்லது கொணர்பவரிடம் | | | புறக்குறிப்பு தேவையில்லை. (1924ஆம் ஆண்டு XVII சட்டத்தால் திருத்தப் பெற்ற) 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85 (2)ஆம் பிரிவைக் காண்க. |

[1] அதிகார பூர்வ உறுதிப்பாடு தேவை.

## முறையான, முறை வழுவிய புறக்குறிப்புக்கள் (தொடர்ச்சி)

| பெறற்குரியவர்கள் | முறை வழுவிய புறக்குறிப்புக்கள் | முறையான புறக்குறிப்புக்கள் | பொது விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|---|---|
| **பல்திற ஆள்கள் :** (தொடர்ச்சி) | | | |
| கொணர்பவராகிய என் மனைவிக்கு (செசில் ஜோன்ஸ் என்பவரால் எழுதப்பட்டது) | கேதரின் | கேதரின் ஜோன்ஸ் (திரு. செசில் ஜோன்ஸ் என்பவரின் மனைவி) | எழுதுபவருடைய மனைவியின் புறக்குறிப்பு தேவை. |
| எனக்கு அல்லது ஆணைக்கு | | | எழுதுபவர் புறங்குறிக்க வேண்டும். |
| **ஆள்சாரா அல்லது கற்பனைப் பெறற்குரியவர்கள் :** | | | |
| வருமான வரி அல்லது ஆணைக்கேற்ப | | | வருமானவரி அதிகாரி புறங்குறிக்க வேண்டும். |
| இந்திய வாரக் குறிப்பேடு | இந்திய வாரக் குறிப்பேடு | இந்திய வாரக் குறிப்பேடு ஆர். என். தாஸ், உரிமையாளர் | |

**எடுத்துக்காட்டாகவுள்ள சில புறக்குறிப்பு**

ஈரெட்டுத்தன்மை அல்லது முரண்பாடு கொண்ட செக்கு களின் பெறற்குரியவர்கள் எவ்வாறு புறங்குறிக்க வேண்டும் என் பதைப் பற்றிய சில எடுத்துக்காட்டுகளை, விளக்கத்துடன் கீழே தந்துள்ளோம். செக்குகளை வசூலிப்பவருக்கும் செலுத்துபவருக் கும் இவை பயன்படலாம்.

| பெறற்குரியவர் | விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|
| நர்சிங் மேத்தா | இது ஆணைக்கேற்பச் செலுத்தப்பட வேண்டியது ; பெறற்குரியவரின் புறக்குறிப்பைப் பெற்றிருக்க வேண் டும். ஆனால், அந்தச் செக்கின் தொகை பெறற்குரியவரின் கணக் குக்கு வரவு வைக்கப்பட்டது என்று வசூலிக்கும்-பாங்கர் சான்றளித் தால், பெறற்குரியவரின் புறக் குறிப்பு தேவையில்லை. |
| நர்சிங் மேத்தாவுக்கு மட்டும் | (1) நர்சிங் மேத்தா புறங்குறிக்க வேண்டும் ; அப்புறக்குறிப்பை வசூலிக்கும்-பாங்கர் உறுதிப்படுத்த வேண்டும். (2) நேராகச் சமர்ப்பிக்கப்பட்டால் (பாங்கர் மூலமாக அல்லாது), ஆளடையாளச் சான்று காட்டுமாறு வற்புறுத்த வேண்டும். |
| கொணர்பவருக்கு (திரு மதி மேத்தா) அல்லது ஆணைக்கேற்ப | திருமதி மேத்தாவின் புறக்குறிப்பு இன்றியமையாதது. |
| கொணர்பவருக்கு (என் மனைவி) அல்லது ஆணைக்கேற்ப | மேலுள்ளது போன்றே. |
| கொணர்பவருக்கு அல் லது ஆணைக்கேற்ப | பெறற்குரியவரைக் குறிப்பிடாததால், முறை வழுவியவாறு எழுதப்பட் டுள்ளது என்று செக்கைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். |

| பெறற்குரியவர் | விளக்கக் குறிப்புக்கள் |
|---|---|
| சசிகந்த் ஷா என்பவருக்கு அல்லது ராமகந்த் பாரிக் என்பவரின் ஆணைக்கேற்ப | இருவருள் ஒருவர் புறங்குறித்திருந்தால் போதும். இருவரில் ஒருவருக்குச் செலுத்திஞல், பாங்கர் பொறுப்பு நீக்கம் பெறலாம். |
| எனக்கு அல்லது ஆணைக்கேற்ப | எழுதுபவர் பாங்கரிடமிருந்து நேரடியாகப் பணம் பெறலாம்; இல்லாவிட்டால், அவருடைய புறக்குறிப்பு தேவை. |
| சசிகந்த் ஷா என்பவருக்கு அல்லது ஆணைக்கேற்ப | சசிகந்த் ஷா என்பவர் புறங்குறிக்க வேண்டும். |
| கசிகந்த் ஷா என்பவருக்கு அவருடைய கடனை முற்றிலும் அடைக்கும் வண்ணம் (in full settlement) | 'சசிகந்த் ஷா என்பவருக்கு அவருடைய கடனில் பகுதியைச் செலுத்தும் முகத்தான்' என்று எழுதப்படும் செக்கு முறையற்றது. இங்கிலாந்து நாட்டில் அந்தச் செக்கைச் செலுத்தும்-பாங்கர் எந்தப் பொறுப்புக்கும் இலக்காக மாட்டார். இருப்பினும், வாடிக்கைக்காரரின் நலனை முன்னிட்டு அது அவமதிக்கப்படலாம் (மறுக்கப்படலாம்). |
| பொ.க[1] (M. V.) 'விக்டோரியா' என்பதற்கு அல்லது ஆணைக்கேற்ப | 'விக்டோரியா' என்னும் பொறி இயங்கு கலத்தின் (motor vessel), தலைவன் அல்லது அங்கீகாரம் பெற்ற மற்ற அதிகாரி, அதைப் புறங்குறிக்க வேண்டும். பெரிய தொகைக்கு அச்செக்கு எழுதப்பட்டிருந்தால், அந்தக் கலத்திற்கு உரிய கம்பெனியின் உள்ளூர் முகவர் அதில் புறங்குறிக்க வேண்டும். |
| ராபின்சன் குருசோ | பெறற்குரியவர் கற்பனையான ஆள்; எனவே, அது கொணர்வோரிடம் செலுத்தத் தக்கது. அதில் புறங்குறிக்கத் தேவையில்லை. |

[1] பொ. க. (M. V.)—பொறி இயங்கு கலம் (motor vessel) என்பதன் சுருக்கம்.

**கள்ளப் புறக்குறிப்பு (Forged Endorsement)**

கள்ளப் புறக்குறிப்பைக் கொண்ட செக்குகளைப் பொறுத்த வரை செலுத்தும்-பாங்கரின் நிலைமை என்ன என்பதை இங்கு ஆராய்வோம். செக்கை எழுதிய வாடிக்கைக்காரரின் கையொப்பம் கள்ளக் கையெழுத்தாக இருந்தால், செலுத்தும்-பாங்கர் அந்தச் செக்கின் தொகையை அவருடைய கணக்கில் பற்று வைக்க முடியாது. ஏனெனில் அது, வாடிக்கைக்காரரின் உண்மையான ஆணையல்ல. வாடிக்கைக்காரர் அளித்துள்ள மாதிரிக் கையொப்பத்தோடு, செக்கில் காணப்படும் எழுது பவரின் கையொப்பத்தை ஊன்றி ஒத்திட்டுப் பார்த்தல் மூலம், இந்த ஆபத்திலிருந்து பாங்கர், தம்மைக் காத்துக்கொள்ள இயலும். வாடிக்கைக்காரர் எழுதும் செக்குகளை அவற்றின் வெளிப்படை நோக்கத்திற்கேற்பச் செலுத்துதல் பாங்கரின் கடமை என்பது உண்மைதான்; ஆயினும், வெவ்வேறு செக்கு களின் பெறற்குரியோர், புறக்குறிப்பாளி ஆகிய அனைவரின் கையொப்பத்தையும் பாங்கர் அறிந்திருத்தல் வேண்டும் என்பது எதிர்பார்த்தற்கரியது. எனவேதான், கள்ளப் புறக்குறிப்பு இருந்தபோதிலும் சில சூழ்நிலைகளில் செலுத்தும்-பாங்கருக்குச் சட்டம் பாதுகாப்பளிக்கிறது.

மோசடிச் செக்கு ஒன்றை, அதில் இருந்த கையெழுத்தின் மொழியை அறியாத ஒருவர் அளித்த சான்றின் அடிப்படையில், ஒரு பாங்கு மதித்துப் பணஞ்செலுத்தியபொழுது, அது புறக் கணிப்புடன் செயலாற்றியது என்று தீர்ப்பளிக்கப்பட்டது (கே. எம், அபு செட்டியார் (எ.) தி ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு, சி. சி. நூற்பிரிவு 24, பக். 221).

**உத்தரவாதம் பெற்ற புறக்குறிப்புக்கள் (Guaranteed Endorsements)**

சிறிது முறை வழுவிய புறக்குறிப்பு அல்லது படித்தற்கரிய புறக்குறிப்பைக் கொண்டுள்ள செக்கு, நன்மதிப்புள்ள (respectable) வாடிக்கைக்காரரது கணக்கின் வரவில் சிலபொழுது இடப்படுகிறது. அப்பொழுது வாடிக்கைக்காரர் குறைபாடுள்ள புறக்குறிப்புக்கு உத்தரவாதம் அளித்தால், பாங்கர், மறுப்பும் தயக்கமும் இன்றி அதை ஏற்றுக்கொள்கின்றனர். பாங்குகளும் சிற்சிலபொழுது, இம்மாதிரிப் புறக்குறிப்புகளுக்குச் சான்று அல் லது உத்தரவாதம் அளிக்கின்றன. செக்கொன்றைச் சமர்ப்பிக்கும் பாங்கர், அதன் தொகையை நிலைமைக்குத் தக்கவாறு, பெறற் குரியவர் அல்லது புறக்குறிப்பாளியின் கணக்கில் வரவு வைப்ப தாக உத்தரவாதம் அளித்தால், அல்லது பெறற்குரியவரின் புறக் குறிப்பு இல்லாதிருப்பதை அது உறுதிப்படுத்தினால், புறக்குறிப்

பற்ற செக்குகளும் சிலபொழுது செலுத்தப்படும். செலுத்தும்-பாங்கர் அறியாத அயல்மொழியில் புறக்குறிப்பு ஒன்று எழுதப் பட்டிருந்தால், அதை உறுதிப்படுத்தும்படி கேட்பதற்கு அவருக்கு உரிமையுண்டு என்னும் கருத்து நிலவுகிறது.

**பாங்கருக்குச் சட்டம் அளிக்கும் பாதுகாப்பு எவ்வாறு தோன்றியது?**

1853ஆம் ஆண்டுவரை, இங்கிலாந்து நாட்டில், ஆணைச் செக்குகள் அருகலாகவே (seldom) பயன்படுத்தப்பட்டன; ஏனெனில் உண்டியலைப்போலவே, அவையும் அவ்வளவு முத்திரை வரிக்கு உட்பட்டிருந்தன. 1853ஆம் ஆண்டு முத்திரைச் சட்டம் (16 & 17 விக்ட்., சி. 59), அந்த செக்குகளின்மீதுள்ள வரியை ஒரு பென்னியாகக் குறைத்தது. மேலும், கேட்கும்பொழுது, அதிலுள்ள ஆணைக்கேற்பக் குறித்த தொகையைச் செலுத்துமாறு பாங்கர் ஒருவரின்மீது எழுதப்படும் வரைவை அல்லது ஆணை ஒன்றை, உரியவரின் புறக்குறிப்போடு சமர்ப்பிக்கும் கொணர்பவ ரிடம், பாங்கர் அதன் தொகையைச் செலுத்தலாம் என்றும் அச்சட்டம் வகுத்தது. பெறற்குரியவரின் புறக்குறிப்போ அல்லது அதற்குப் பிறகு இடப்பட்ட புறக்குறிப்போ அவ்வவ்வாள் களால் அல்லது அவ்வவர்களின் அங்கீகாரத்தோடுதான் இடப் பட்டது என்று மெய்ப்பிக்கும் கடமையும் பாங்கருக்கு இல்லை என்று அச்சட்டம் இயம்புகிறது. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 60ஆம் பிரிவு கூறுவதாவது:

> கேட்கும்பொழுது, அதிலுள்ள ஆணைக்கேற்பச் செலுத்த வேண்டும் என்று பாங்கர் ஒருவர்மீது எழுதப்பட்ட உண்டி யலை, அந்தப் பாங்கர், தொழில் நடப்புக்கேற்ப நன்னம் பிக்கையுடன் செலுத்தியிருந்தால், பெறற்குரியவரின் புறக் குறிப்போ அல்லது அதை அடுத்துள்ள ஏதாவது ஒரு புறக் குறிப்போ யாரால் புறங்குறிக்கப்பட்டது என்று காட்டு கிறதோ, அவரால்தான், அல்லது அவரது அங்கீகாரத்தோடு தான் இடப்பட்டது என்று மெய்ப்பிக்க, பாங்கர் கடமைப் பட்டவரல்லர். அப்புறக்குறிப்பு கள்ளத்தனமாகவோ அல்லது அங்கீகாரமின்றியோ இடப்பட்டிருந்தாலும், அந்த உண்டியலை முறைப்படி செலுத்தியதாக, பாங்கர் கருதப்படு வார்.

ஆங்கிலேய முத்திரைச் சட்டத்தின் 19ஆம் பிரிவு, செக்கைப் பொறுத்தவரை நீக்கப்பட்டுவிட்டது என்றே கருத வேண்டும். [வொர்ஷிப்ஃபுல் கம்பெனி ஆஃப் கார்ப்பென்டர்ஸ் ஆஃப் தி சிடி ஆஃப் லண்டன் (எ.) பிரிட்டிஷ் மியூட்சுவல் பாங்கிங் கம்., லிமிடெட் (1938) 1 கே. பி. 511].

இந்தியச் சட்டம் அளிக்கும் பாதுகாப்பு

1934ஆம் ஆண்டு திருத்தச்சட்டம் திருத்தியமைத்த 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு கூறுவ தாவது :

> ஆணைக்கேற்பச் செலுத்த வேண்டிய செக்கொன்று, அதன் பெறற்குரியவராகவோ அல்லது அவரது சார்பாகவோ புறங்குறிக்கப்பட்டதாகக் காட்டினுல், முறைப்படி அதைச் செலுத்துவதன் மூலம், எழுதப்பெற்றவர், பொறுப்பு நீக்கம் பெறுகிருர் 'அடைகிருர்).

1853ஆம் ஆண்டு ஆங்கிலேய முத்திரைச் சட்டத்தின் (16 & 17 விக்ட்., சி. 59) 19ஆம் பிரிவு அந்நாட்டிலுள்ள பாங்கருக்கு எவ்வளவு பாதுகாப்பை அளித்துள்ளதோ, அவ்வளவு பாதுகாப் பையே இந்தியாவிலுள்ள பாங்கருக்கும் அளிப்பதுதான் இந்தச் சட்டத்தை இயற்றியவர்களின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும். ஆனுல், சில நூலாசிரியர்கள் கருதுவது போல, 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு அந்த நோக்கத்தை எய்தவில்லை. செக்கிலுள்ள கள்ளப்புறக் குறிப்பு, பெறற்குரியவருடையதாயினும் அல்லது அடுத்து வரும் புறக்குறிப்பாளிகளில் எவருடையதாயினும், செலுத்தும்-பாங்கர் இங்கிலாந்து நாட்டில் பாதுகாப்புப் பெறுகிருர். ஆங்கிலேய முத்திரைச் சட்டத்தின் 19ஆம் பிரிவும், 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 60ஆம் பிரிவும் இந்த நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. ஆனுல், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு, பெறற்குரியவரின் புறக்குறிப்பு மட்டுமே கள்ளப் புறக்குறிப்பாக இருந்தால், பாங்கருக்குப் பாது காப்பை அளித்தது; அடுத்து வரும் புறக்குறிப்பாளிகளின் புறக் குறிப்பு கள்ளத்தனமாக இடப்பட்டிருந்தால், அவை சம்பந்தமாக பாங்கருக்குப் பாதுகாப்பை அளிப்பதில்லை என்று மேலே குறித்த நூலாசிரியர்கள் கூறினர். 1934ஆம் ஆண்டுதான், (1881ஆம் ஆண்டுச்) செலாவணி முறிச்சட்டத்தின் 16ஆம் பிரிவுக்கு (2)ஆம் சரத்து சேர்க்கப்பட்டது. செலுத்தும்-பாங்கருக்கு அளிக்கும் இந்தப் பாதுகாப்பு கள்ளத்தனமாக இடப்படும் பிற புறக்குறிப்பு களுக்கும் வழங்கப்பட்டது. வெவ்வேறு செக்குகளின் புறக்குறிப் பாளிகளின் கையொப்பங்களைச் செலுத்தும்-பாங்கர் அறிந்திருப் பார் என்று எதிர் பார்க்க முடியாது. ஜகஜீவன்தாஸ் (எ.) தி நகர் சென்ட்ரல் பாங்கு, 50 பம்பாய் 118 என்ற வழக்கில் செலுத்தும்-பாங்கருக்கு அளிக்கும் பாதுகாப்பைக் கள்ளத்தன மாக இடப்படும் பிற புறக்குறிப்புகளுக்குப் பரப்பும் நோக்கம்

1934ஆம் ஆண்டுத் திருத்தச் சட்டத்திற்கு இல்லை என்ற வாதத்தை நீதிபதி அவர்கள் ஆணித்தரமாக மறுத்தொதுக்கினர்.

## முறைப்படி செலுத்துதல்

**முக்கிய அம்சங்கள்**

தமது மேல் எழுதப்பெற்ற செக்கை முறைப்படி செலுத்தினல் மட்டுமே, செலுத்தும்-பாங்கர், சட்டம் அளிக்கும் பாதுகாப்புக்கு உரியவராகிறர். எனவே, 'முறைப்படி செலுத்துதல்' என்றல் என்னவென்று அறிதல் இன்றியமையாதது. 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 10ஆம் பிரிவு கீழ்க்கண்டவாறு அதற்கு இலக்கணம் வகுக்கிறது:

முறியொன்றின் வெளிப்படையான நோக்கத்திற்கு ஏற்ப, நன்னம்பிக்கையுடனும் எந்த விதப் புறக்கணிப்புமின்றி அதை வைத்திருக்கும் ஆளிடம், அதன் தொகையைச் செலுத்தவேண்டும். அந்தத் தொகையைப் பெறுபவருக்கு அதைப் பெற உரிமையில்லை என்று நம்புவதற்கு நியாயமாக இடமளிக்காத சூழ்நிலையில் அவர் அதை வைத்திருந்திருக்க வேண்டும். இவ்வாறு செலுத்துதல் 'முறைப்படி செலுத்து'வதாகும்.

எனவே, முறைப்படி செலுத்துதல் என்பதன் முக்கிய தேவைகளாவன:

(1) முறியின் வெளிப்படை நோக்கத்திற்கிணங்கப் பணஞ்செலுத்த வேண்டும். அதாவது, அந்த முறி வெளிப்படையாகக் காட்டும் கட்சியாளரின் எண்ணத்திற்கு ஏற்பப் பணஞ் செலுத்தியிருக்க வேண்டும்.

(2) நன்னம்பிக்கையுடனும், எந்த விதப் புறக்கணிப்புமின்றிப் பணஞ்செலுத்தியிருக்க வேண்டும்.

(3) எவரிடம் செலுத்தப்படுகிறதோ, அவருக்கு அதன் தொகையைப் பெற உரிமையில்லை என்று நம்புவதற்கு நியாயமாக இடமளிக்காத சூழ்நிலையில் அவர் அந்த முறியை வைத்திருக்க வேண்டும்.

**உரிய காலத்தில் செலுத்துதல்**

செக்கொன்றை உரிய காலத்தில் உரியவருக்குச் செலுத்த வேண்டும் என்பது மேற்கூறிய முதல் தேவையிலிருந்து தெளிவா

கிறது. உரியவரெனப்படுபவர், அவருக்குச் செலுத்துவதன் மூலம், செலுத்தியவருக்கு முழுப்பொறுப்பு நீக்கமும் தர வல்லவர். எனவே, பின் தேதியிட்ட செக்கைச் செலுத்துவது முறைப்படி செலுத்துவதாகாது. பின் தேதியிட்ட செக்கை, அதன் தவணை முடியுமுன் செலுத்தும்-பாங்கர் மதித்துப் பணஞ்செலுத்தியிருந்து, அதன் பெறற்குரியவரின் புறக்குறிப்போ அல்லது மற்ற ஏதாவது புறக்குறிப்போ கள்ளத்தனமாக இடப்பட்டது என்பது வெளியானுல், சட்டம் அளிக்கும் பாதுகாப்புக்கு, அவர் உரியவராக மாட்டார்; அது மட்டுமின்றி, அதனுல் வாடிக்கைக்காரருக்கு ஏற்படும் நட்டத்தை ஈடு செய்யவும் கடமைப்பட்டவராவார்.

**நன்னம்பிக்கையுடனும் எந்த விதப் புறக்கணிப்பு இன்றியும்**

இரண்டாவது தேவையைப் பற்றிக் கூறப்புகுங்கால், பாங்கர் நன்னம்பிக்கையோடுதான் செயல்படுவார் என்று நாம் எடுத்துக்கொண்டதை நினைவிற்கொள்ள வேண்டும். எனவே, இத்தேவையைப்பற்றி நாம் அதிக விளக்கம் அளிக்க வேண்டியதில்லை. புறக்கணிப்பு என்ற குற்றத்திற்கு ஆளாகும் வண்ணம் செய்த செலுத்தலை முறைப்படிச் செலுத்தலாகக் கருத இந்தியச்சட்டம் இடமளிப்பதில்லை; ஆனுல் ஆங்கிலேயச் சட்டத்தில் நிலைமை வேறு மாதிரியாக உள்ளது. புறக்கணிப்பு என்பதற்கு எடுத்துக்காட்டாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்: எல்லாப் புறக்குறிப்புகளும் முறையாக இருக்கின்றனவா என்று சரி பார்க்கச் செலுத்தும்-பாங்கர் தவறினுல், புறக்கணிப்பு என்னும் குற்றத்திற்கு ஆளாகி, சட்டப்பாதுகாப்பு அளிக்க மறுக்கப்படுவார். அது போலவே செக்கில் சார்புப் புறக்குறிப்பு இருந்தால், பிறர் சார்பாகப் புறங்குறித்தவருக்கு அவ்வாறு செய்ய ஒழுங்கான அங்கீகாரம் இருக்கிறதா என்று செலுத்தும்-பாங்கர் கண்டறிய வேண்டும். அவ்வாறு சரி பார்க்காமல் செலுத்தியிருந்தால், முறைப்படி செலுத்தியதாக அது கருதப்படாது. கலைப்பாளர் எவ்வாறு கணக்கு வைக்க வேண்டும் என்பதைப் பற்றிய சட்டப்பகர்வுகளை (statutory provisions) பாங்கர் அறிந்திருத்தல் வேண்டும்; (கலைப்பாளராக) அமர்த்திய ஆணையைச் சரி பார்த்தால் மட்டும் போதாது. எனவே, இதைப்பற்றிய சட்டப்பகர்வுகளை நிறைவேற்ற அந்தப் பாங்கு தவறியதால், உண்மை உரிமையாளருக்கு நேர்ந்த இழப்பை ஈடு செய்யக் கடமைப்பட்டது என்று, சென்னை மாநிலக் கூட்டுறவு பாங்கு லிமிடெட், சென்னை (எ.) சவுத் இண்டியன் மேச் ஃபேக்டரி லிமிடெட் (கலைப்பிலுள்ளது) (ஏ. ஐ. ஆர். **1945**, மெட்ராஸ் **30**) என்ற வழக்கில், தலைமை நீதிபதி லீச், நீதிபதி ஷாபுத்தீன் அவர்கள் தீர்ப்புக் கூறினர். இந்த வழக்கின் நிகழ்ச்சிகளாவன: தென் இந்தியத் தீப்பெட்டித் தொழிற்சாலை லிமிடெட் (கலைப்பிலுள்ளது)

என்ற நிறுவனத்தின் கலைப்பாளராகத் திரு. எம். ராமச்சந்திரராவ் என்பவர் அமர்த்தப்பட்டார். அவருடைய பதவிப்பெயரில், அதாவது கலைப்பாளர் என்று, எழுதப்பட்ட கீறிய செக்கொன்றின் தொகையை அவரிடமே நேராகச் செலுத்துமாறு சென்னை மாநிலக் கூட்டுறவு பாங்கு லிமிடெட்-ஐ வற்புறுத்தினர். கலைப்பாளர் என்னும் பெயரில் கணக்கைத் துவக்கி, அந்தக் கணக்கில் அச்செக்கை இடுவதற்கு மாறாக, அந்தச் செக்கின் வசூலை (proceeds) மேற்கூறியவாறு நேரடியாகப் பெற்று அவர் கையாடினர் (misappropriated). பிறகு அவரைப் பதவியிலிருந்து விலக்கி, குற்றம் சாட்டி, தண்டித்தனர்.

### முறியை வைத்திருப்பவர்

மூன்றாவதாக, எவருக்குப் பணம் செலுத்தப்படுகிறதோ, அவர் அந்த முறியை வைத்திருப்பது மட்டுமின்றி, அந்த முறியின் பணத்தைப்பெற உரியவரல்லர் என்ற ஐயப்பாட்டுக்கு நியாயமாக இடமளிக்கும் எந்தச் சூழ்நிலையும் அவர் அதை வைத்திருத்தலைச் சார்ந்து இருக்கக்கூடாது. செலுத்தாதே என்று எழுதியவர் தடையாணை இட்ட செக்கை வைத்திருப்பது, இங்கு, வைத்திருப்பதாகக் (முறைப்படி செலுத்தலைப் பெறத் தகுதியுள்ள) கருத முடியாது. செலுத்தாதே என்ற தடை ஆணையே, அந்த முறியை வைத்திருப்பவர் அதன் தொகையைப் பெற உரியவரல்லர் என்று ஐயுறுவதற்குப் போதிய இடமளிக்கிறது. இம்மாதிரியான செக்கைச் செலுத்தும்-பாங்கர், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச் சட்டத்தின் 85ஆம் பிரிவு வழங்கும் பாதுகாப்பைப் பெற உரியவரல்லர்.

### கீறிய செக்குகளைச் சார்ந்த பாதுகாப்பு

1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு செலுத்தும்-பாங்கருக்கு அளிக்கும் பாதுகாப்பை, அதே சட்டத்தின் 128ஆம் பிரிவு, சற்று விரிவாக்கி, கீறிய செக்குகளுக்கும் பரப்புகிறது. அப்பிரிவு (128ஆம்) கூறுவதாவது :

> தம்மீது கீறிய செக்கொன்று எழுதப்பெற்ற பாங்கர், அதை முறைப்படி செலுத்தியிருந்தால், அந்த பாங்கரும், (அச்செக்கு பெறற்குரியவரை அடைந்திருக்குங்கால்) அதன் எழுதுபவரும், அந்தச் செக்கின் தொகை உண்மை உரிமையாளரிடம் செலுத்தப்பட்டு அவர் அதைப் பெற்றிருந்தால் எந்த உரிமைக்கும் எந்த நிலையில் வைக்கப்படவும் உரியவரோ, அதே உரிமைகளுக்கும் அதே நிலையில் வைக்கப்படவும் அவர்களிருவரும் உரியவராவர்.

பெறற்குரியவரைச் செக்கு அடைந்திருக்குங்கால், அதன் எழுதுபவருக்கும் பாதுகாப்பு அளிக்கப்படும் என்று இப்பிரிவு இயம்புவதைக் கூர்ந்தறிதல் நன்று.

'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று கீறிய செக்குகளைச் செலுத்துதல் பற்றிச் சிறிது கருத்து வேறுபாடு நிலவுகிறது. கீறலாக அமையும் சாய்ந்த கோடுகளின்றி, 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று மட்டும் எழுதப்படும் சொற்கள் பொருளற்றவை என்ற கருத்து பொதுவாகவே நிலவுகிறது. 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்பது போன்ற சொற்களுடன் செக்கொன்று கீறப் பட்டாலும், பெறற்குரியவரின் சார்பாக மட்டுமே அதை வசூலிக்கலாம், பிறரின் சார்பாக அதை வசூலிக்கக் கூடாது என்று வசூலிக்கும்-பாங்கருக்கு அது ஓர் எச்சரிக்கையாக அமை கிறதே தவிர, பெறற்குரியவரின் கணக்குக்காகவே அது வசூலிக் கப்படுகிறது என்று கண்டறியும் பொறுப்பை, செலுத்தும்-பாங்கர் மீது கிஞ்சுத்தும் சுமத்துவதில்லை. 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று கீறலிட்ட செக்கொன்றின் தொகை அந்தக் கணக்குக்காக வசூலிக்கப்படவில்லை என்பதை அதிலுள்ள புறக்குறிப்புகள் வெளிப்படையாகக் காட்டும்பொழுதும், பழிப்பும், தண்டிக்கப் படுவோம் என்ற அச்சமும் (impunity) இன்றிச் செலுத்தும்-பாங்கர் அந்தக் கீறலைப் புறக்கணிக்க முடியுமா என்ற வினவுக்கு, நிலையான விடை இன்னும் இறுக்கப்படவில்லை. 'பெறற்குரியவரின் கணக் குக்கு' என்னும் சொற்கள் கீறலில் அங்கீகாரமின்றிச் சேர்க்கப்படு வன; வாடிக்கைக்காரர் பாங்கருக்கு விடுக்கும் கட்டளையை, அவை எவ்வகையிலும் பாதிப்பதில்லை; அவை நீங்கலாக நிற்கும் கீற லுக்கு ஏற்பச் செலுத்தும்-பாங்கர் அதன் தொகையைச் செலுத்தி யிருந்தால், அவர் தமது கடமையை முற்றிலும் நிறைவேற்றியவ ராவார் என்ற கருத்தை இந்திய பாங்கர் நிலையத்தின் நிருவாகக் குழு வெளியிட்டிருப்பதை இங்கு நாம் உணர வேண்டும். பெறற் குரியவரின் கணக்குக்காகவே செக்கு வசூலிக்கப்படுகிறது என்ற உறுதிப்பாட்டைச் செலுத்தும்-பாங்கர் கேட்டுப்பெற வேண்டிய தேவையில்லை. இது போன்ற செக்கை வசூலித்த பாங்கர் திவாலாகி, அச்செக்கை (பாங்கர்) செலுத்துவதால் நட்டத்தை அடைந்த ஒருவர், அந்த பாங்குக்கு (வசூலித்த) எதிராக வழக்குத் தொடுக்க இயலாத நிலைமை ஏற்படும்போது, அவர் செலுத்தும்-பாங்கரிடமிருந்து தொகையை மீட்கத் தலைப்படுவார். பெறற் குரியவரின் கணக்குக்கு அன்றி, பிற கணக்குக்கு அது வசூலிக்கப் படுகிறது என்ற ஆதாரம் இருந்தபோதிலும், அதைப் பொருட் படுத்தாமல் செலுத்தியதனால், செலுத்தும்-பாங்கர் புறக்கணித்த குற்றத்திற்கு ஆளாகிறார் என்னும் வாதத்தை அவர் எழுப்பக் கூடும் என்று ஒரு சிலர் கருதுகின்றனர்.

**பாங்கு ஒன்றின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்தின்மீது எழுதும் வரைவுகளுக்குப் பாதுகாப்பு உண்டா ?**

செக்கை ஒத்திருப்பினும், அவ்வாறே தொழில் நடைமுறையில் அவை பாவிக்கப்படினும், பாங்கின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்தின்மேல் எழுதும் வரைவுகள் எல்லாச் சூழ்நிலைகளிலும் செக்காகக் கருதப்படுவதில்லை. 1934ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்(திருத்தச்)சட்டம் இயற்றப்படும்வரை, வரைவுகளைப் பொறுத்தவரை தமக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுமா என்ற ஐயம் செலுத்தும்-பாங்கருக்கு இருந்தது. அவ்வாறு திருத்தப்பட்ட 85ஆம் பிரிவு இயம்புவதாவது :

> கேட்கும்பொழுது, அதிலுள்ள ஆணைக்கேற்ப, ஒரு தொகையைச் செலுத்துமாறு, பாங்கொன்றின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்திற்கு விடுக்கும் ஆணை வரைவு எனப்படும். அது, பெறற்குரியவராலோ அல்லது அவரது சார்பாகவோ புறங்குறிக்கப்பட்டது என்று காட்டும்போது, பாங்கர் அதை முறைப்படி செலுத்துவதன் மூலம், பொறுப்பு நீக்கம் அடைய முடியும்.

செலுத்தும்-பாங்கரே வசூலிக்கும்-பாங்கராகவும் செயலாற்றும்பொழுது, புறக்கணித்த குற்றத்திற்காக வசூலிக்கும்-பாங்கருக்கு மறுக்கப்படும் பாதுகாப்பை, அவர் பெற முடியாது (கார்ப்பெண்டர்ஸ் கம்பெனி (எ.) பிரிட்டிஷ் மியூசுவல் பாங்கிங் கம்பெனி, இந்திய பாங்கர் நிலையத்தின் இதழ், 1938ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வெளியிடப்பட்டது, பக். 55).

பாங்கொன்றின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்தின்மீது எழுதும் காட்சி வரைவு (demand draft) செலாவணி முறியல்ல ; 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 84 (1)ஆம் பிரிவு, செக்குக்கு மட்டுமே பொருந்தும், பிற செலாவணி முறிகளுக்குப் பொருந்தாது என்ற தீர்ப்பைப் பம்பாய் உயர்நீதிமன்றம் ஹாஜி சேக் ஹசானூ (எ.) எஸ். நடேச முதலியார் & கம்., (61, பம்பாய் எல். ஆர். 1127) என்ற அண்மைய வழக்கில் வழங்கியது. கீழ்க்கண்ட காரணங்களுக்காக, இந்தத் தீர்ப்பு சட்டத்தின் உண்மையான நிலையை எடுத்துக்காட்டவில்லையாதலால், இதை மாற்ற வேண்டிய அவசியத்தைத் தக்க மதிப்புணர்வோடு முன்னிலைப்படுத்துகிறோம் :

(அ) பாங்கொன்றின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்திற்கு விடுக்கும் பாங்கு வரைவு, செலாவணி முறிச்சட்டத்தின் 5, 6ஆம் பிரிவுப்படி, உண்டியலோ செக்கோ அல்ல என்ற கூற்றுக்கு இடமே

யில்லை ; ஏனெனில், வரைவும், உண்டியல், செக்கு ஆகியவற்றின் இலக்கணங்கள் வகுக்கும் தேவைகளை நிறைவேற்றுகிறது.

(ஆ) இந்த நிலைமையைப் பல நீதிமன்றத் தீர்ப்புக்கள் ஆதரித்து விளக்கியிருக்கின்றன. உ-ம்., ராஸ் என்பவருடைய வழக்கு (1919) 1 கே. பி. 678, சிலிங்ஸ்பி என்பவரின் வழக்கு (1931) 1 கே. பி. 173.

(இ) ஆங்கிலேயச் சட்டத்தில் ஏற்பட்ட இப்பொருள் பற்றிய பிற்கால வளர்ச்சியை, (பம்பாய் உயர்நீதி மன்றத்தின்) இந்தத் தீர்ப்பு கருத்தில் கொள்ளவில்லை. ஆங்கிலேயச் சட்டத்தின்கீழ் எழுதுபவரும், எழுதப்பெற்றவரும் ஒரே ஆளாக அமைந்த முறியைச் செலாவணி முறியென்று கருத முடியாமல் இருந்தது. எனவே, 1932ஆம் ஆண்டு உண்டியல் (திருத்தச்) சட்டம் இயற்றப்படும் வரை, அங்கு, கீறிய செக்குகளின்மீது வசூலிக்கும்பாங்கருக்குக் கிடைத்த பாதுகாப்பு, எழுதுபவரும் எழுதப் பெற்றவரும் ஒரே ஆளாக அமைந்த பாங்கு வரைவுகளுக்குக் கொடுக்கப்படவில்லை.

(ஈ) செக்கைப் பொறுத்தவரை, அதைச் செலுத்துவதற்குத் தேவையான பணத்தை அந்தக் கணக்கில் வைத்திருக்க வேண்டிய கட்டாயம், எழுதப்பெற்ற பாங்கருக்கு உண்டு ; இந்தக் கட்டாயம் பாங்கு வரைவைப் பொறுத்தவரையில்லை என்ற கூற்றின் அடிப்படையில் வரைவைச் செக்கினின்றும் வேறுபடுத்த அறிவு சான்ற நீதிபதி அவர்கள் முயன்றார். இந்த நிலைமை எப்பொழுதும் இருப்பதில்லை ; சிலபொழுது வாடிக்கைக்காரர்கள் அவர்களுடைய கணக்கிலிருந்து அதிகப் பற்று எடுத்துக்கொள்ளவும், பாங்கர் இணங்குவதுண்டு.

(உ) பாங்கர் ஒருவர் ஒரு முறியைத் தம்மீது தாமே எழுதிக் கொள்ளும் ஒரே காரணத்திற்காக, அது செக்காகாது என்று கூறுதல் பொருந்தாது. (ராஸ் என்பவரின் வழக்கைக் காண்க.) பாங்குத் தொழிலின் நடைமுறையில், அவ்வாறு எழுதுதல் சரியே என்று ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

(ஊ) பாங்கொன்றின் ஒரு கிளையகம் மற்றொரு கிளையகத்திற்கு விடுக்கும் காட்சி வரைவுகளில் உள்ள அங்கீகாரமற்ற அல்லது கள்ளத்தனமான புறக்குறிப்புகளுக்கு எதிராக, இந்தியாவிலுள்ள பாங்கருக்கு அளிக்கப்படும் பாதுகாப்பைத் தெளிவாக்கவே செலாவணி முறிச்சட்டத்தின் 85, 131ஆம் பிரிவுகள் திருத்தப் பட்டன. எனவே, முன்பு இருந்த ஐயப்பாட்டை நீக்குவதற்குத்

தான் இத்திருத்தங்கள் செய்யப்பட்டனவேயொழிய, நிலைமையை மாற்றியமைக்க அல்ல.

இந்தக் காரணங்களைப் பாராளுமன்றம் நன்கு ஆராய்ந்து, பாங்குத்தொழிலின் நடைமுறைக்கு ஏற்ப, சட்டத்தைத் திருத்தியமைக்க வேண்டும். இதைப்பற்றிச் சட்ட ஆய்வுக்குழு (Law Commission) ஆராய்ந்து வருகிறது என்றும், அவர்கள் இந்த நூலாசிரியரின் கருத்தை ஏற்றுக்கொண்டு விட்டதாகவும் இந் நூலாசிரியர் அண்மையில் அறிந்தார்.

### வாடிக்கைகாரரின் கையெழுத்து

வாடிக்கைக்காரரின் பணத்தை அவரது அங்கீகாரத்திற்கேற்ப மட்டுமே செலுத்த பாங்கர் கடமைப்பட்டவராதலின், சமர்ப்பிக்கப்பட்ட செக்கு உண்மையிலேயே வாடிக்கைக்காரர் விடுத்ததா என்று அவர் அறிய வேண்டும். இரண்டு செய்திகளைப்பற்றி அவர் நன்கு உறுதி செய்துகொள்ள வேண்டும் : (1) வாடிக்கைக்காரர் அதை மதிக்குமாறு கட்டளையிட்ட கையொப்பத்தைச் செக்கு பெற்றிருக்கிறதா என்பதை முதலில் அறிய வேண்டும் ; அதாவது செக்கு வாடிக்கைக்காரரின் கையொப்பத்தையோ அல்லது அவரால் அதற்காக அங்கீகரிக்கப்பட்ட முகவரின் கையொப்பத்தையோ தாங்கியிருக்க வேண்டும். (2) செக்கிலுள்ள கையொப்பம் வாய்மையானதா என்பதை அறிவதே இரண்டாவது செய்தியாகும். கூட்டுக்கணக்கைப் பொறுத்தவரை, அதில் தொடர்புடைய ஒவ்வொருவரிடமிருந்தும் தெளிவான அறிவிப்பு இல்லாத போது, ஒரு கணக்கின்மேல் எழுதப்பட்ட செக்கில், அதில் தொடர்புடைய அனைவரும் கையொப்பமிட வேண்டும் என்று தற்காப்பை முன்னிட்டு, பாங்கர் வற்புறுத்தவேண்டும். கணவன், மனைவி இருவர் பெயரிலுமுள்ள கூட்டுக்கணக்கின்மேல் எழுதப்படும் செக்குகளுக்கும் இவ்விதி பொருந்தும் ; இந்த இருவரில் எவர் கையொப்பம் இருந்தாலும் செக்கை மதிக்கலாம் என்று தெளிவான அங்கீகாரம் கொடுக்கப்பட்டிருப்பின் அவ்வாறே கணவன் எழுதும் செக்குகளையும், மனைவி எழுதும் செக்குகளையும் மதித்துப் பணஞ்செலுத்தலாம்.

### மதிக்குமாறு பாங்கருக்குக் கட்டளையிடப்பட்ட கையெழுத்தைச் செக்கு பெற்றிருக்க வேண்டும்

வாடிக்கைக்காரரின் அறிவிப்புக்கு ஏற்பச் செயலாற்றினுல், பாங்கர் ஒரு தொல்லைக்கும் உள்ளாக மாட்டார் ; அன்றி அதைப் புறக்கணிக்குங்காலத்து, பல தொந்தரைகள் அவரை வந்தடையும். மேற்கோளாக, இரண்டு கூட்டாளிகளைக்கொண்ட ஒரு

கூட்டு நிறுவனத்தின் பெயரில் கணக்கொன்று துவக்கப்படுகிறது ; இந்தக் கணக்கின்மீது எழுதப்படும் செக்குகள், இரு கூட்டாளி களில் ஒருவரின் கையொப்பத்தையும், மற்றவரின் தொடக்க எழுத்துக்களையும் கொண்டிருக்க வேண்டும் என்று பாங்கர் அப் பொழுது அறிவிக்கப்படுகிறார். இது போன்ற சூழ்நிலையில், ஒரு கூட்டாளியின் கையொப்பத்தை மட்டும் கொண்டுள்ள மற்றவரின் தொடக்க எழுத்துக்களையும் கொண்டிராத—செக்குகளைச் செலுத் தும்-பாங்கர் இரண்டாவது கூட்டாளிக்கு அந்தச் செக்கின் முழுத் தொகைக்கும் பொறுப்பாகிறார்.

**வாடிக்கைக்காரரால் முறையாக அங்கீகரிக்கப்பெற்றவர் செக்குகளில் கையொப்பமிடலாம்**

வாடிக்கைக்காரரே செக்குகளில் கையொப்பம் இடவேண்டும் என்னும் நியதியில்லை. வாடிக்கைக்காரரால் அதற்காக அங்கீகரிக் கப்பெற்ற ஒருவர் அவருக்குப் பதிலாகக் கையொப்பமிட்டாலே போதுமானது. ஆனால் அங்கீகரிக்கப்பட்டவரின் மாதிரிக் கையொப் பத்தை பாங்கரிடம் முன்பே அனுப்பியிருக்க வேண்டும். மேலும், செக்கின் அடியில்தான் கையொப்பம் இட வேண்டும் என்கிற நியதியும் இல்லை. அது செக்கின் எப்பகுதியிலும் தோன்றலாம் ; ஆனால், பணம் செலுத்துமாறு கொடுக்கும் ஆணையை ஐயந்திரி பறக் கூறியிருக்க வேண்டும். 'ஜான் ஸ்டைல்ஸ், ஆகிய நான் ................ செலுத்துமாறு உமக்கு ஆணையிடுகிறேன்' என்று எழுதப்படும் செக்கும் முறையானதுதான் என்று திரு. ஹார்ட் அவர்கள் கருதுகிறார்.

**வாடிக்கைக்காரரும் கள்ளக் கையொப்பமும்**

மேற்கூறிய இரண்டாவது செய்தியை நோக்குங்கால், வாடிக்கைக்காரருடைய கையொப்பத்தையும், அவருடைய அங்கீகாரம் பெற்ற முகவரின் கையெழுத்தையும் அறிந்திருக்க பாங்கர் கடமைப்பட்டவர் என்பது தெளிவாகிறது. தம்மீது செக்கு எழுத அனுமதிக்கப்பட்டுள்ள அனைவரின் மாதிரிக் கையொப்பத்தையும் பாங்கர் பெற்றிருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் செக்கில் தோன்றும் கையொப்பத்தை அதற்கு இசைந்த மாதிரிக் கையொப்பத்துடன் ஒத்திட்டுப் பார்க்க வசதி யாக இருக்கும். செக்கொன்றில் தோன்றும் கையொப்பம் அதை எழுதுபவரின் மாதிரிக் கையொப்பத்தினின்றும் வேறுபட்டிருந் தால், பாங்கர் அந்தச் செக்கை மதித்துப் பணஞ்செலுத்தக் கூடாது. வாடிக்கைக்காரரின் கையொப்பம் மிகத் திறம்படக் கள்ளத்தனமாக இடப்பட்டிருந்து, பாங்கர் அந்தக் கள்ளக் கையொப்பத்தைக் கண்டுபிடிக்கத் தவறினால், அவருடைய

கணக்கில் பாங்கர் அந்தத் தொகையைப் பற்று வைக்க இயலாது. ஏனெனில், பணஞ்செலுத்துமாறு வாடிக்கைக்காரர் கொடுக்கும் சட்டபூர்வமான அங்கீகாரமாக அந்தச் செக்கைக் கருத முடியாது [பகவன்தாஸ் (எ.) கிரீட் (1904), ஐ. எல். ஆர். 3 கல். 249]. பாங்கர் புறக்கணிப்புடன் செயலாற்றியதால் இந்தத் தொல்லை வந்துற்றது என்று கருத இடமில்லை. ஏனெனில், செக்கில் காணப்பட்ட கள்ளக்கையொப்பம் கண்டுபிடிக்க இயலாதவாறு மிகத் திறமையுடன் இடப்பட்டிருக்கலாம். வாடிக்கைக்காரர் தமது நடத்தையால் கையொப்பம் வாய்மையானது என்று பாங்கரை நம்பச் செய்திருந்தால் தாம் செலுத்திய அச்செக்கின் தொகையை, அவருடைய கணக்கில் பற்றிட, பாங்கர் உரியவரா கிறார். உதாரணமாக, X என்பவர் எழுதியதாகக் காணப்படும் செக்கொன்று பாங்கரிடம் சமர்ப்பிக்கப்படும்பொழுது, தற்செய லாக X அவர்கள் அங்கு வருகிறார். அச்செக்கில் தோன்றும் கையொப்பத்தின் வாய்மையை ஐயுற்ற பேரேட்டு எழுத்தர், X அவர்கள் அங்கு இருப்பதைக் கண்ணுற்று, அதை அவரிடம் காட்டினார். X அவர்கள், அந்தக் கையொப்பம் வாய்மையானதே என்று உறுதியளித்ததன் அடிப்படையில், அந்தச் செக்கைச் செலுத்துவதற்கு அவர் இணக்கமளித்தார். இந்தச் சூழ்நிலையில் செலுத்தும்-பாங்கர் புறக்கணிப்புடன் செயலாற்றினார் என்று கருத முடியாது. அந்தக் கையொப்பத்தின் வாய்மையையும் மறுக்க முடியாமல், அவருடைய கணக்கில் அத்தொகையைப் பற்றுவைக்கும் பாங்கரது உரிமையையும் கெடுக்க முடியாதவாறு X அவர்கள் வாயற்றுப் போகிறார். தமது கவனமின்மையால் ஏற்பட்ட கள்ளக் கையெழுத்தைக்கொண்ட செக்கை, மறுத்துத் தள்ள வாடிக்கைக்காரருக்கு உரிமையிருக்கிறதா இல்லையா என்பது ஐயப்பாடுள்ள ஒரு பொருளாகவே இன்னும் இருக்கிறது. கீழ்க்கண்ட இரண்டு வழக்குகளும் இப்பொருள்பற்றி நீதிமன்றங் களின் கருத்து என்ன என்பதைத் தெளிவாக்கும்.

**கள்ளக் கையொப்பமிட்டதற்காக முன்பு தண்டிக்கப்பட்ட ஒருவரிடம் நம்பிக்கை வைத்தல், பாங்கருக்கு எதிராக நடவடிக்கை எடுக்கத் தடையாக அமையாது**

ஓரயி சேனிடரி லாண்ட்ரி கம்., லிமிடெட் (எ,) பர்க்லி பெவான் & கம்., (1906), 11 கம்., கேஸ். 255 என்ற வழக்கில் நீராவிச் சலவையகம் (steam laundry) ஒன்றின் இயக்குநர் மூவர், தலைவரின் பிள்ளையை, அந்தக் கம்பெனியின் செயலராக அமர்த்தினர். நான்கு ஆண்டுகளுக்குமுன், கள்ளக்கையொப்ப மிட்டதற்காக அவர் தண்டிக்கப்பட்டதையும், அதற்குப் பிறகு அவர் புற உலகத் தோற்றத்திற்கு முறையோடு வாழ்வதையும்

அவர்கள் அறிவர். அவரை நம்பி, கம்பெனியின் செக்குப் புத்தகம் அவர் வசம் இருக்க, அவர்கள் அனுமதித்தனர். கம்பெனியின் சார்பாக எழுதப்பட்டதாகத் தோன்றும் பல செக்குகளில், இயக்குநர் ஒருவரின் கையொப்பத்தைக் கள்ளத்தன மாக இட்டு, கம்பெனியின் பாங்கரிடமிருந்து அவற்றின் தொகையை, அந்தச் செயலர் பெற்றுர். அந்த மோசடிச் செக்கு களின் தொகையைக் கம்பெனியின் கணக்கில் பாங்கு பற்றுவைக்க முடியாது என்று நீதிபதி கென்னடி அவர்கள் தீர்ப்பளித்து, அச்செக்குகளின் தொகையைப் பாங்கரிடமிருந்து மீட்கத் தகுதி யற்றதாகும் அளவுக்கு, அந்தக் கம்பெனி கவனமின்றிச் செயல்பட வில்லை என்று கூறினர்.

கெப்டிகல்லா ரப்பர் எஸ்டேட் லிமிடெட் (எ.) நேஷனல் பாங்கு ஆஃப் இந்தியா லிமிடெட் (1909) 2 கே. பி. 1010 என்ற மற்ருெரு வழக்கில் கம்பெனியொன்றின் செயலர் அதன் இரு இயக்குநரின் கையொப்பத்தைப் பல செக்குகளில் கள்ளத்தனமாக இட்டு, அதன் பாங்கரிடமிருந்து அவற்றின் தொகையைப் பெற்றுர். இந்த மோசடி இரண்டு மாதங்களாக நடந்து வந்தது. அந்த இரண்டு மாதங்களிலும் கம்பெனியின் செல்லுப் புத்த கத்தை (pass book), அதன் இயக்குநர் ஒருமுறையேனும் பார்க்க வில்லை. இருப்பினும், பாங்கரிடமிருந்து அந்த மோசடிச் செக்கு களின் தொகையை மீட்க, அந்தக் கம்பெனிக்கு உரிமையிருக் கிறது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

**செலுத்தியபின் நிகழும் வாடிக்கைக்காரரின் கவனமின்மை**

இதுவரை செக்கு சமர்ப்பிக்கப்பட்டு, பாங்கர் அதைச் செலுத்துமுன் நிகழ்ந்த வாடிக்கைக்காரரின் கவனமின்மையைப் பற்றிக் கண்டோம். பாங்கர் அதைச் செலுத்திய பிறகு நிகழும் வாடிக்கைக்காரரின் கவனமின்மையைப் பற்றி இப்பொழுது காணுவோம். சமர்ப்பிக்கப்படும் செக்கில் எழுதுபவரின் கையொப்பம் கள்ளத்தனமாக இடப்பட்டிருப்பின், பாங்கர் அதைச் செலுத்த மறுத்து, வாடிக்கைக்காரருக்கு அதை உடனே அறிவிக்கக் கடமைப்பட்டுள்ளார். அதுபோலவே தமது கள்ளக் கையொப்பத்துடன் மோசடிச் செக்குகள் பாங்கரிடம் சமர்ப்பிக் கப்பட்டு வருவதை வாடிக்கைக்காரர் அறிய நேர்ந்தால், உடனே அதை அவருக்கு அறிவிக்கக் கடமைப்பட்டுள்ளார். மோசடி யாளரிடமிருந்து (forger) பணம் மீட்கும் பாங்கருடைய வாய்ப்பு கள் பெருமளவு குன்றும்வரை வாளாவிருந்துவிட்டு, பிறகு மோசடி யைப் பற்றி வாடிக்கைக்காரர் பாங்கருக்கு அறிவிப்பாராயின், அக்கையொப்பத்தின் வாய்மையை மறுக்கவும், பாங்கரிடமிருந்து

அத்தொகையைப் பெறவும் அவர் தகுதியற்றவராவார்; தடை செய்யப்படுவார். [மெக்கென்ஸி (எ.) பிரிட்டிஷ் லின்னென் கம்., (1881), 6. ஏ. சி. 82].

கிரீன்வுட் (எ.) மார்டின்ஸ் பாங்கு• என்னும் வழக்கு; கிரீன் வுட் (எ.) மார்டின்ஸ் பாங்கு லிமிடெட் என்ற வழக்கில், பிரபுக்கள் மன்றத்தின் தீர்ப்பை அறிவித்த டாம்லின் பிரபு 'வெற்று மௌனம், தெரிவிப்பு ஆகாது; ஆனால் தெரிவிக்க வேண்டிய கடமை இருக்கும்பொழுது, வேண்டுமென்றே மௌனம் சாதித்தல், முக்கியத்துவம் பெற்றுத் தெரிவிப்பாக அமைய வல்லது' என்று கூறினார். இவ்வழக்கின் நிகழ்ச்சிகளாவன: பிரதிவாதி பாங்கின் கிளையகம் ஒன்றில் திரு. கிரீன்வுட் அவர்கள் கணக்கு வைத்திருந்தார். அவர் மனைவி அவருடைய செக்குப் புத்தகத்தை எப்படியோ பெற்று, நாற்பத்து நான்கு செக்குகளில் கள்ளக் கையொப்பமிட்டு அவற்றை வெளியிட்டு விட்டார். இந்த நிகழ்ச்சியைத் திரு. கிரீன்வுட் அவர்கள் கண்டுபிடித்தபொழுது, அதைப்பற்றி பாங்கருக்குத் தெரிவிக்க வேண்டாம் என்றும், தாம் அந்தப் பணத்தைத் தமது உடன்பிறந்தவளுக்கு நன்மையைப் பயக்கவல்ல குறிப்பிட்ட ஒரு வழக்குக்காகப் பயன்படுத்திய தாயும், அவ்வழக்கு முடிந்தவுடன் அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் அவர் மனைவி கனிவுடன் மன்றாடிக் கேட்டுக்கொண்டார். மனைவி சொல்வதை நம்பி, அவரைக் 'காட்டிக்கொடுக்க' மனமின்றி, திரு. கிரீன்வுட் அவர்கள் பாங்க ருக்கு அதைப்பற்றி அறிவிக்காமல் வாளாவிருந்துவிட்டார். இறுதியாக, அவர் மனைவி மேலும் பணங்கேட்டபொழுது, அவர் கொடுக்க மறுத்ததுமன்றி, அவள் செய்த குற்றத்தை பாங்கருக்கு அறிவிக்கப்போவதாக அச்சுறுத்தவே, அவள் அஞ்சி, தற்கொலை செய்துகொண்டாள். பிறகு, மோசடிச் செக்குகளின்மீது பணஞ் செலுத்தும் பாங்கர், மேலெழுந்தவாரியாகப் பார்ப்பின், வாடிக்கைக்காரருக்குப் பொறுப்பாவார் என்ற அப்பொழுதைய (contemporary) தீர்ப்பை நம்பி பாங்கருக்கு எதிராக வழக்குத் தொடுத்தார். இருப்பினும், இந்தத் தீர்ப்புக்குப் பிறகு, மற்ற வழக்குகளில் வழங்கிய பின்வரும் தீர்ப்புக்கள் அப்பொழுது நிலவி யிருந்தன: செக்குகளை நியாயமான கவனத்துடன் எழுதுவதற்கு வாடிக்கைக்காரர் பாங்கருக்குக் கடமைப்பட்டிருக்கிறார்; போது மான கவனமின்மையின் விளைவாக, பிறர் மோசடி செய்வதற்கு வாடிக்கைக்காரர் இடங்கொடுத்தால், பாங்கருக்கு எதிராகத் தமக்குள்ள பரிகாரங்களை இழக்க நேரிடும்; இதற்கு மாறாக, பாங்கரே கவனமின்றிச் செயலாற்றியிருந்து, அது அந்த இழப் புக்குத் துணை செய்திருந்தால், வாடிக்கைக்காரரது கவனமின்மை

யைச் சுட்டிக்காட்டிப் பயன் பெற முடியாது. இந்த வழக்கில் வாதியைக் கடமை பேசு, பேசு என்றறைகூவியழைத்தபோது அவர் மௌனம் சாதித்து வாளாவிருந்து விட்டதால், பாங்கருக்கு எதிராக எவ்வித உரிமையைக் கொண்டாடுவதற்கும் அவருடைய நடத்தையே அவருக்குத் தடையாக அமைகிறது என்பதை அறிகிறோம்.

**கள்ளக் கையொப்பத்தைப் பற்றி பாங்கு அறிவிக்கும்பொழுது வாடிக் கைக்காரர் செய்ய வேண்டிய கடமைகள்**

அவரது செக்கொன்று கள்ளக் கையொப்பமிட்டு வந்ததைப் பற்றி அவரது பாங்கின் நம்பிக்கையான முகவர் வாடிக்கைக்காரர் ஒருவருக்கு அறிவித்து, அந்த பாங்கின் நலனை முன்னிட்டு அவரை மௌனமாக இருக்கும்படி வேண்டிக்கொள்கிறார் என்று கொள் வோம். நேர்மையான எண்ணத்தோடுதான் அந்தப் பதிலாள் அவ்வாறு வேண்டிக்கொள்கிறார் என்று வாடிக்கைக்காரர் நம்பி அதற்கு இசைந்து வாளாவிருந்தால், புறக்கணிப்பு என்ற குற்றத் திற்கு அவர் ஆளாக மாட்டார். அவ்வாறின்றி, அந்தப் பதிலாள் அல்லது அதிகாரி வேண்டிக்கொள்ளும் பாணியும், அதற்காக அவர் காட்டும் காரணங்களும் சாதாரண அறிவுத்திறம் படைத்த எவரையும் அதன் வாய்மையைப்பற்றி ஐயுறச் செய்யுமாயின், அந்த பாங்கின் இயக்குநருக்கு வாடிக்கைக்காரர் அதைப்பற்றி உடனே அறிவிக்க வேண்டும் (ஒகீல்வ் (எ.) வெஸ்ட் ஆஸ்திரேலியன் மார்ட்கேஜ் அண்ட் ஏஜன்சி கார்ப்பரேஷன் (1896) அப். கேஸ். 257).

**வேண்டுச்சிட்டில் வாடிக்கைக்காரரின் கள்ளக் கையொப்பமிடல்**

மோசடிகளினின்றும் கூடுமானவரைத் தங்களைக் காத்துக் கொள்ளும்பொருட்டு, வேண்டுச்சீட்டை (requisition slip) இணைத்த செக்குப் புத்தகத்தை பாங்கர் வாடிக்கைக்காரருக்குத் தருகின்றனர்; எந்தெந்த வேண்டுச்சீட்டுகளை எந்தெந்த வாடிக் கைக்காரருக்குத் தந்தனர் என்பதைத் தாம் என்றும் அறிந்து நினைவிற்கொள்ளும் வண்ணம், அவற்றில் எண் இடுகின்றனர். நீக்கமற எங்கும் நிறைந்துள்ள (ubiquitous) கள்வன் ஒருவன், வேண்டுச்சீட்டு ஒன்றைத் திருடி, வாடிக்கைக்காரரின் கையொப் பத்தைக் கள்ளத்தனமாக இட்டு, செக்குப் புத்தகத்தைப் பெறு கிறான். அந்த வாடிக்கைக்காரரின் கணக்கின்மீது செக்கு எழுதும் வண்ணம் அவன் இவ்வாறு வசதி செய்யப்பட்டால், அதனால் விளையும் இழப்புக்கு யார் பொறுப்பு என்பதை அண்மைக்காலம் வரை, லிக்பர்ரோ (எ.) மேசன் (1787), 2 டெர்ம். ரெப். 63 என்னும் வழக்கில் வகுத்தத் தீர்ப்பிற்கு ஏற்ப, தீர்மானித்தனர்.

'மூன்றும் ஆள் ஒருவர் நடத்தையால், ஒன்றும் அறியாத ஆள்கள் இருவரில் ஒருவர் பாதிக்கப்பெற வேண்டிய இக்கட்டான நிலைமை யேற்பட்டால், அந்த மூன்றும் ஆள் நட்டத்தை விளைவிக்க இந்த இருவருள் எவர் காரணமோ, அவரே அதை ஏற்கவேண்டும்' என்ற விதியை அவ்வழக்கில் அசுர்ஸ்ட் என்னும் நீதிபதி அவர்கள் இயம்பினர். மேலெழுந்தவாரியாகப் பார்க்கின், இவ்விதி பொருத்தமானதாகவும், கையாள எளிதாகவும், மூன்றும் ஆள் ஒருவரால் ஏதுமறியாத இருவர் மோசடி செய்யப்பட்ட எந்தச் சிக்கலான வழக்கையும் எளிமையாகத் தீர்க்க வல்லதாகவும் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, என்னுடைய ஆணைக்கேற்ப, செலுத்தத்தக்க வெண்கடன் பத்திரம் ஒன்றை என் மேசையின் மேல் கவனமில்லாமலும் நினைவில்லாமலும் நான் விட்டுச் சென்றதனால், என் பணியாளர் அல்லது எழுத்தர் அதைக் களவாடி, நான் புறங்குறித்தல் போன்று அதைக் கள்ளத்தன மாகப் புறங்குறித்து, A என்பவருக்கு அதை மாற்றிவிடுகிறார். A என்பவர் அதை எழுதித் தந்தவரிடமிருந்து பணம் பெற்றுக் கொள்கிறார். விக்பர்ரோ (எ.) மேசன் என்னும் வழக்கின் விதிக் கேற்ப, நான்தான் அந்த இழப்பை ஏற்க வேண்டும். ஏனெனில், அது களவு போவதற்கு என்னுடைய கவனமின்மையே காரண மாகும்.

## 'காரண'க் கோட்பாடு (The 'Enabling' Theory)

'அபாயமான அளவு தெளிவற்றது, தவறான நெறியிலிறங்கச் செய்யும் அளவு பொதுவானது' என்பதே இந்தக் கோட் பாட்டைப் பற்றிய ஒருவரது கருத்துரை. இந்த மேற்கோளுரை (maxim) இறுதியாக ஏற்கப்பட்டிருப்பின், புறக்கணிப்பு பற்றிய ஆங்கிலேயச் சட்டம் இந்நேரம் நாடுவாரற்று மாண்டு மறைந் திருக்கும். ஆனால் அவ்வாறு ஏற்கப்படாமல், அது கடும் எதிர்ப்புக் குள்ளானது; ஏனெனில், ஸ்மித் (எ.) ப்ராஸ்ஸெர் (1907), 2. கே. பி. 735 என்ற வழக்கில் பிரபு நீதிபதி மௌல்டன் அவர்கள் இயம்பியவாறு, அறுதியான வரம்பிற்கு இந்த விதியை உட்படுத்தாவிட்டால், 'ஏமாற்றத்திற்குக் குறைந்தபட்ச இடமளித்து' ஒருவர் செய்த எல்லாக் காரியங்களுக்கும், அவரைப் பொறுப்பாக்கிவிடும். இதே கருத்தைப் பார்க். பி. அவர்கள் [பாங்கு ஆஃப் அயர்லாந்து (எ.) இவான்ஸ் டிரஸ்டீஸ் (1885), 5 ஹௌச். எல். சி. 385 என்னும் வழக்கில்] பின்வருமாறு வெளி யிட்டார்: ஒருவர் தமது செக்குப் புத்தகத்தை இழக்க நேர்ந்தால் அல்லது அதை வைத்துள்ள பெட்டியைப் பூட்டாது அசட்டை செய்தால், அவர் தமது பொருளைப் பாதுகாப்பாக வைக்காததால்,

அவற்றை மற்றவர் திருடி விற்க ஏதுவாயிற்று என்ற வாதத்தின் அடிப்படையில் அவற்றைச் சட்டமுரணுன கையாளுகை செய்த குற்றத்திற்காக மற்றவர்மீது வழக்குத் தொடுக்கும் அவரது உரிமையைப் பறிக்க முடியுமா ?

**புறக்கணிப்பு என்பதன் உண்மையான அடிப்படை :** மக்களிடையே புறக்கணிப்பு என்னும் சொல் விழிப்பின்மை, அறிவற்ற தன்மை, கவனமின்மை என்னும் பல பொருள்களில் வழங்குகிறது. ஆயினும், சட்டத்தில் அதன் பொருள் சிறிது மாறுபடுகிறது. பாதுகாக்கும் சட்டரீதியான கடமைக்கு ஒருவர் உட்பட்டிருந்தாலன்றி அவரைப் பொறுத்தவரைப் புறக்கணிப்பு என்னும் சங்கதி முரணுனதும் முக்கியமற்றதும் ஆகும் என்னும் சட்டவிதி நிலைபெற்றுவிட்டது. கடமையைச் சட்டம் சுமத்தலாம், அல்லது ஒப்பந்தம் இலக்காக்கலாம், அல்லது சம்பந்தப்பட்டவர்களிடையேயுள்ள உறவின் அடிப்படையில் அது எழலாம். அந்தக் கடமையின் அடிப்படையில் கொடுக்கப்படும் நடவடிக்கை வெறும் புறக்கணிப்பைத் தழுவி எழுவதல்ல ; கடமை வழுவிய குற்றத்தினின்றும் எழுவதாகும். இந்நூலின் பிற்பகுதியில் சட்டம் சுமத்தும் கடமையைப் பற்றிய மூன்று எடுத்துக்காட்டுகளை (வசூலிக்கும்-பாங்கர், செலுத்தும்-பாங்கர், முறைப்படி பெற்றவர் என்ற வெவ்வேறு தகுதிகளில் இந்தியாவிலுள்ள பாங்கரின் கடமை, முதலாவது அடமானம் பெற்றவரின்மீது சொத்து மாற்றுகைச் சட்டத்தின் 78ஆம் பிரிவு சுமத்தும் கடமை, இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 151ஆம் பிரிவு ஒப்பாளியின்மீது சுமத்தும் கடமை ஆகியவற்றை) விரிவாக ஆராய்ந்திருக்கிறோம். ஒப்பந்தம் சுமத்தும் கடமைக்கு யங்க் (எ.) குரோட் என்னும் வழக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். சம்பந்தப்பட்டவர்களிடையே நிலவும் உறவினின்றும் எழும் தனிப்பட்ட கடமைக்கு ஸ்கைரிங்கு (எ.) கிரீன்வுட் என்னும் வழக்கு மேற்கோளாக அமைகிறது. எனவே, சுருங்கச் சொல்லின், பாதுகாப்பேன் என்று சட்டரீதியாக ஏற்றுக்கொண்ட கடமையினின்றும் வழுவுதலே புறக்கணிப்பாகும்.

## பாங்கர் பணஞ்செலுத்த எப்பொழுது மறுக்க வேண்டும் ?

தம்மீது எழுதப்பட்ட செக்குகளைச் செலுத்த வேண்டிய பாங்கரது அதிகாரமும் கடமையும் கீழ்க் காணும் நிபந்தனைகளுக்கு உட்பட்டுள்ளன :

**(1) செலுத்தாதேயென்று வாடிக்கைக்காரர் விடுக்கும் தடை ஆணை**

குறிப்பிட்ட செக்கைச் செலுத்தாதே என்று வாடிக்கைக்காரர் இடும் தடை ஆணையைப் பெற்றவுடன், பாங்கர் அதைப்

பற்றிக் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும். செலுத்தாதே என்னும் தடை ஆணையை இடும் அந்தச் செக்கின் எழுதுபவர், செக்கை ரத்து செய்க என்று தெளிவான உத்தரவைப் பிறப்பிக்க வேண்டும். எனவே, அச்செக்கின் எண், தேதி, அதன் பெறற் குரியவரின் பெயர், அதன் தொகை ஆகியவற்றை விளக்கமாகக் குறித்துக் கையொப்பமிட்டு, பிறகு அதை பாங்கருக்கு அனுப்ப வேண்டும். மேலும் தடை ஆணை, எழுதப்பட்ட உத்தரவாக இருக்க வேண்டும் என்பதை இங்கு அறிதல் நன்று. பாங்குக்கு முன்பு இடப்பட்ட கட்டளைக்கு ஏற்ப, தடை ஆணையில் கையொப்பமிடல் சாலச் சிறந்தது. தடை செய்யப்படும் செக்கை எழுதியவர்களே, தடை ஆணையில் கையொப்பமிட வேண்டும் என்கிற தேவையில்லை. மேற்கோளாக, வரையறுத்த கம்பெனியொன்று அதன் A, B, C, D, E ஆகிய ஐந்து இயக்குநரில் மூவரும், S என்னும் செயலர், Y என்னும் கணக்கர் ஆகிய இருவரில் ஒருவரும் அதன் செக்குகளில் கையொப்பமிட வேண்டும் என்னும் கட்டளையை வாடிக்கைக்காரர் என்ற தகுதி யில் அதன் பாங்கருக்கு விடுத்திருக்கிறது எனக் கொள்வோம். A, B, C, S ஆகிய நால்வரும் எழுதிய செக்கை A, B, D, S ஆகிய நால்வரும் அல்லது B, C, D, Y ஆகிய நால்வரும் தடை செய்ய லாம். அந்த ஆணையை எழுதும்போது கம்பெனியின் அலுவலகத் தில் (அச்செக்கில்) கையொப்பமிட்டவர்களில் ஒருவரோ அல்லது செயலரோ அல்லது கணக்கரோ மட்டும் இருந்திருந்து, அவர் கையொப்பமிட்டு அனுப்பும் அவ்வாணையை பாங்கர் நிறைவேற்று வதும் முறையானதே. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கூட்டாளிகள், கூட்டுக்கணக்கு வைத்திருப்போர், நிறைவேற் பாளர்கள், பொறுப்பாண்மையாளர்கள் (டிரஸ்டிகள்) ஆகிய வர்கள் தங்கள் கணக்கின்மேல் எழுதிய செக்கை அவர்களில் யாரேனும் ஒருவர் தடை செய்யலாம். ஆனால், இட்ட தடை ஆணையை ரத்து செய்ய வேண்டுமானல், அந்த ரத்து வேண்டு கோளைக் (செக்கில்) கையொப்பமிட வேண்டிய அனைவரும் அங்கீக ரிக்க வேண்டும். இதற்கு மாருக, புதிய செக்கைத் தருதலே சிறந்த செயலாகும். அலுவல் நேரத்திற்கு முன்போ பின்போ (அலுவல் நேரம் முடியுமுன்பே பாங்குக்கு வந்தவர்களது பணியை அல்லது தேவையை முடித்து அனுப்பத் தேவையான காலம் தவிர), பாங்கு செக்கிற்குப் பணஞ்செலுத்துதல் முறையற்றது [பெய்ன்ஸ் (எ.) நேஷனல் ப்ரோவின்ஷியல் பாங்கு (1927) 32. கம், கேஸ். 216). 'தடை செய்யப்பட்ட செக்கைச் செலுத்துதல், முறையான செக் கைச் செலுத்தத் தவறுவதைப்போல் அவ்வளவு குற்றமானது; பாங்கின்மீது வழக்கைத் தொடுக்க வைக்க வல்லது. தீர்வு விதி களின்படி, செக்கு செலுத்தப்பட்டதா இல்லையா என்று பாங்கு

மாலை 3-30 மணிக்குள் தீர்வகத்திற்குத் தெரிவிக்க வேண்டும். பாங்கருக்கு வாதியின் முகவரி தெரியாது ; தடைசெய்யப்பட்ட செக்கின் அடையாளம் என்ன, அதை எவ்வாறு கண்டுபிடிப்பது என்னும் வினு எழும்போது, செக்கின் எண் அதன் அடையாளத்தை அறுதியிடும் ஓர் அமிசமாகும் என்பதை என்றும் நினைவிற் கொள்ள வேண்டும்' [ஹில்டன் (எ.) வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு லிமிடெட் (1927), 43 தி. எல். ஆர். 124]. எனவே, செக்கொன்றைச் செலுத்தாதே என்று தடையாணை இடும்பொழுது, அதில் அதன் எண்ணைக் குறித்தல் விரும்பத் தக்கதாகும். குறிப்பிட்ட செக்கைச் செலுத்தாதே என்று தொலைபேசி அல்லது தந்தி மூலமாகப் பாங்கர் பெறுகின்ற செய்தி வாடிக்கைக்காரரிடமிருந்து வந்ததைப்போல் தோன்றினுல், அதைப்பற்றித் தீர விசாரித்து அறியுமுன், பாங்கர் அந்தச் செக்கிற்குப் பணஞ்செலுத்துவதை ஒத்திப்போடலாம். இத்தன்மைத்தான தந்தி அல்லது தொலைபேசிச் செய்தி அங்கீகாரமற்றதாகக் காணப்பட்டால், அதைப் பாங்கர் ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை. அச்செய்தியை உறுதிப்படுத்துமாறு அவர் வாடிக்கைக்காரரைக் கேட்க வேண்டும் ; அது உறுதி செய்யப்படுமுன், அந்தச் செக்கு சமர்ப்பிக்கப்பட்டால், வாடிக்கைக்காரரது நாணயத்திற்கு ஊறு நேராவண்ணம், பணஞ்செலுத்துதலை ஒத்திப்போட வேண்டும். 'தந்தி மூலம் செக்கு தடைசெய்யப்பட்டிருக்கிறது—உறுதி செய்யப்படும்வரை பணஞ்செலுத்துதல் ஒத்திப்போடப்படுகிறது—மறுபடியும் சமர்ப்பிக்கவும்' என்று குறித்து, செக்கைத் திருப்பிக் கொடுத்துவிடுதலே சிறந்த முறையாகும். செலுத்தும்பாங்கரைப் பொறுத்தவரை, செலுத்தாதே என்று தடை செய்யப்பட்ட செக்கு அது எழுதப்படாமலேயே இருப்பதற்குச் சமமாகும் [கோஹன் (எ.) ஹேல் (1878) 3 க்யூ.பி.டி. 371). வீன்ஹோல்டு (எ.) ஸ்பிட்டா (1813) 3 கேம்ப் 377 என்ற வழக்கில் பெறற்குரியவரின் கையிலுள்ள தடை செய்யப்பட்ட செக்கு, பாழான ஒரு துண்டுச்சீட்டுக்கு இணையாகும் என்று எல்லன்பரோபிரபு அவர்கள் கருத்துரைத்தார். சையத் முகம்மது யாகூப் (எ.) இம்பீரியல் பாங்கு ஆஃப் இந்தியா, ஏ. ஐ. ஆர். (1941) கல். 110 என்னும் வழக்கில் செக்கொன்றைப் பற்றிய தடை ஆணையைப் பெற்ற பின்னும், பிரதிவாதி பாங்கு அதைச் செலுத்திவிட்டு, அதன் நடப்புக்கணக்கு விதிகளில் கீழ்க்காணும் விதியின்கீழ்ப் பாதுகாப்புப் பெற விழைந்தது : '(1) செக்கை இழத்தல், அது களவாடப்படல், இன்ன பிறவற்றைப்பற்றி எழுதுபவர் இடும் கட்டளையைப் பாங்கு பதிவு செய்துகொள்ளும். இதைப் போன்ற சூழ்நிலைகளில்தான், ஒருக்கால் அச்செக்குகளைச் செலுத்துவதால் வாடிக்கைக்காரருக்கு நேரும் இழப்பைப்பற்றி தான் (அப்பாங்கு

உத்தரவாதம் கொடுக்க இயலாது.' இந்த விதியைத் தாம் அறிவ தாக வாதி ஒப்புக்கொண்டார். எனினும், பிரபு வில்லியம்ஸ் என்னும் நீதிபதி அவர்கள் இந்த விதி பொருத்தமற்றது என்று கூறி, பிரதிவாதியின் தற்காப்பு மறுப்பை ஒதுக்கித் தள்ளிவிட் டார். இந்த வழக்கில் செக்கு இழக்கப்படவோ, களவாடப் படவோ இல்லை. 'இன்னபிற' என்ற சொற்களை அதே மாதிரியான (ejusdem generis) என்னும் பொருளில் எடுத்துக்கொள்ள வேண் டும். இந்த விதி பாங்கரிடம் செக்கு சமர்ப்பிக்கப்படும் முன் நிகழும் நிகழ்ச்சிகளுக்கே பொருந்த வல்லது. இதுதான் அதை வகுத்தவர்களின் நோக்கமாகவும் இருந்திருத்தல் வேண்டும். சமர்ப்பிக்கப்பட்ட பிறகு பாங்கரின் புறக்கணிப்பால் நிகழும் தவறுகளுக்கு இந்த விதி பொருந்தவே பொருந்தாது. செக்கை மதித்துப் பணஞ்செலுத்தும் நோக்கத்துடன் அதை ரத்து செய்த பின்னும் தீர்வக விதிகள் அனுமதிக்கும் கால எல்லை இன்னும் முடிவடையாதிருந்தால், செலுத்தாமலேயே அதை பாங்கு திருப்பியனுப்பி விடலாம். இவ்வாறு திருப்பியனுப்புமுன் 'தவறாக ரத்து செய்யப்பட்டது' என்னும் குறியை இட்டு அனுப்ப பாங்கர் உரியவராவார். ஆனால் ரத்து செய்ததைப் பற்றிச் சமர்ப்பிக்கும் பாங்குக்கோ அல்லது அதன் எழுதுபவருக்கோ அது முன்பே அறிவித்திருந்தால், அச்செக்கைச் செலுத்தாமல் திருப்பியனுப்பு வதற்கு பாங்கருக்கு உரிமையில்லை.

அமெரிக்க ஐக்கிய நாட்டில், செலுத்தாதே என்று அறுதி யிட்ட தடை ஆணையைப் பெற்றபின், அச்செக்கை எழுதியவரின் பதிலாள் என்னும் முறையில் பாங்கு அவருடைய கட்டளையை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளது; இதற்கு மாறாக அதைச் செலுத்தினால், பாங்கு அதைத் தன் பொறுப்பிலேயே செலுத்து கிறது என்று கொள்ளப்படும் என கட்டா (எ.) வின்சர் பாங்கு, 251 என். ஒய். 152, 167 என். இ. 203 என்னும் வழக்கில் தீர்ப் பளிக்கப்பட்டது. இருப்பினும், ஆங்கில வழக்க நீதி சுமத்தும் இந்தப் பொறுப்பை பாங்கர் குறைத்துக்கொள்ள முடியாதா, செலுத்தாதே என்று தடை செய்யப்பட்ட செக்கைக் கவன மின்மையால் அல்லது கவனக்குறைவால் செலுத்திவிட்டாலும் அதற்குத் தான் பொறுப்பாளியல்ல என்னும் விதியைத் தன் விதி களில் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ளக் கூடாதா என்னும் வினாக் களைப் பற்றிக் கருத்து வேறுபாடு நிலவுவதாகத் தோன்றுகிறது. செலுத்தாதே என்னும் தடையாணையை விலக்குமாறு வாடிக் கைக்காரரைத் தூண்டும்பொருட்டு, முப்பது நாள்களில் விடுவிக் காத ஆணைமீது சில பாங்குகள் கட்டணம் விதிக்கின்றன. இதன் விளைவாகப் பெரும்பான்மையான ஆணைகள் அந்தக் காலவரை

யறைக்குள் விடுவிக்கப்படுகின்றன. வரைவு ஒன்றை வாங்கி, பெறற்குரியவருக்கு அதை அனுப்பி, பெறற்குரியவர் அதைப் பெற்றபின், அவருக்கு அதன் தொகையைச் செலுத்துவதைத் தடுத்து நிறுத்துவதற்கு வாங்கியவருக்கு உரிமையில்லை. அவருடைய கட்டளையை நிறைவேற்ற எழுதப்பெற்ற-பாங்கு கட்டுப்பட்டதல்ல (மாலிக் பர்காட் அலி (எ.) இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா, ஏ. ஐ, ஆர். *1945*, லாகூர் *213 : 1945*).

### தடை செய்யப்பட்ட செக்குகளைப் பற்றி, பாங்கர் மேற்கொள்ளத்தக்க முன்னெச்சரிக்கைகள்

குறிப்பிட்ட செக்கைச் செலுத்தாதே என்று வாடிக்கைக்காரர் விடுத்த தடை ஆணையைப் பெறும் பாங்கு, உடனே அவருடைய கணக்கின்மேல் சிவப்பு மையால் செக்குத் தடை அறிவிப்பைப் (stop cheque notice) பற்றி எழுதிக்கொள்ள வேண்டும். பொதுவாக, இவ்வாறு எழுதப்பெற்ற துண்டுச் சீட்டை வாடிக்கைக்காரரின் கணக்கின்மேல் ஒட்டுதல் வழக்கம்; குண்டூசியால் குத்திப் பிணைத்தால், அந்தச் சீட்டு நீக்கப்பட இடமிருக்கிறது. சில பாங்குகள் 'தடை' என்ற சொல்லை அவருடைய கணக்கு தோன்றும் பேரேட்டுப் பக்கம் ஒவ்வொன்றிலும் பெரிய எழுத்தில் பென்சிலால் எழுதுவது வழக்கம். செக்கு செலுத்தலைப் பதிவு செய்யும் பேரேட்டு எழுத்தர், அதை இடைவிடாது நினைவிற்கொள்ளத் துணை செய்யும்பொருட்டே இந்த எச்சரிக்கை மேற்கொள்ளப்படுகிறது. செலுத்தல் தடைப் பதிவேட்டில் (stop payment register) செக்குத் தடை ஆணைகளை பாங்குகள் முறையாகத் தொகுத்து எழுதி வைத்துக் கொள்ளுகின்றன. இதனால் தேவையானபோது உடனடியாகப் புரட்டிப்பார்க்க (reference) மிகவும் எளிதாகிறது. செக்குத் தடை ஆணையை ரத்து செய்வதற்கு உரிய வாடிக்கைக்காரரோ அல்லது அவர் அங்கீகரித்த பதிலாளோ தக்க கோரிக்கையை முறையாக எழுதி, கையொப்பமிட்டு அனுப்ப வேண்டும். செக்குப் புத்தகத்தை இழந்ததைப்பற்றி வாடிக்கைக்காரர் அறிவிக்கும்பொழுது, இழந்த செக்குத்தாள்கள் தேதியிடப்படாதவையாதலின், அவை முன் தேதியிட்டுச் சமர்ப்பிக்கப்படலாம் என்பதைக் கருத்திலிறுத்தி, பாங்கர் மிகவும் விழிப்பாகச் செயலாற்ற வேண்டும்.

### தடை செய்யப்பட்ட செக்கைச் செலுத்துவதனால் பாங்கருக்கு நேரும் இழப்பு

செலுத்தாதே என்று எழுதுபவர் தடை ஆணை இட்ட செக்கை பாங்கர் செலுத்தினால், அவர் வாடிக்கைக்காரரின் கணக்கில் இட்ட பற்றுப்பதிவை ரத்து செய்யுமாறு கட்டாயப்படுத்த நேர

லாம். தடை செய்யப்பட்ட செக்கைச் செலுத்தியதன் விளைவாக, எழுதுபவர் வெளியிட்ட மற்றொரு செக்கை அவமதித்து மறுக்க நேர்ந்தால், இரண்டாவது செக்கை முறையின்றி அவமதித்த குற்றத்திற்காக, இழப்பீடு பெறவும் எழுதுபவர் உரியவராவார். செக்கைக் கொடுத்துச் சரக்கைப் பெற்ற வாடிக்கைக்காரர், அவை அளவில் குறைவாகவோ அல்லது தரத்தில் தாழ்வாகவோ இருக்கின்றன என்னும் காரணத்திற்காக, செலுத்தாதே என்று தடை விதிக்கிறார் என்று கொள்வோம். பாங்கர் அதைக் கவனமின்றிச் செலுத்தினால், அதைப்பற்றிய பதிவை எழுதுபவரின் கணக்கிலிருந்து ரத்து செய்யுமாறு வேண்டப்படுவார். அப்பொழுது அச்சரக்கு இன்னும் எழுதுபவரின் வசமே இருந்தால், அவற்றை அடைய பாங்கருக்கு நியாயமான உரிமையுண்டு.

**தடை செய்யப்பட்ட செக்குகளில் என்ன குறிக்க வேண்டும்?** தடை செய்யப்பட்ட செக்குகளில் எவ்வாறு, என்ன குறிக்க வேண்டும் என்பதைக் கருதப் புகும்பொழுது, ‘செலுத்துதல் தடை செய்யப்பட்டது’ (payment stopped) போன்ற சொற்களைத் தவிர்த்தல் நன்று. எழுதுபவர் திவாலாகி விட்டார், அல்லது எழுதப்பெற்றவர் கடன் செலுத்துதலை நிறுத்திவிட்டார் (திவாலானதை ஒப்புக்கொள்ளும் முகத்தான்) என்று பொருள் கொள்ள அவை இடங்கொடுப்பதால், ‘செலுத்த வேண்டாம் என்று ஆணையிடப்பட்டிருக்கிறது’ அல்லது ‘எழுதுபவர் செலுத்துவதைத் தடுத்துவிட்டார்’ போன்ற விடையைக் குறித்தலே முறையாகும்.

**(2) வாடிக்கைக்காரரின் மரணத்தைப் பற்றிய அறிவிப்பைப் பெறுதல்**

வாடிக்கைக்காரர் இறந்தவுடன், அவருடைய கணக்கு-இருப்பின் உரிமை, சட்டரீதியான அவருடைய சொத்துரிமையாளருக்குச் செல்கிறது. வாடிக்கைக்காரரின் மரணத்தைப்பற்றி அறியாத பாங்கர், அவருடைய செக்கை மதித்துப் பணஞ்செலுத்தலாம்; வாடிக்கைக்காரருடைய மரணத்திற்குப் பிறகுதான் அச்செக்கு செலுத்தப்பட்டது என்பது உண்மையாயினும், பாங்கர் அத்தொகையை அவர் கணக்கில் பற்றிடலாம்.

**(3) வாடிக்கைக்காரர் திவாலாதல்**

வாடிக்கைக்காரருக்கு எதிராகத் திவால் மனு (bankruptcy petition) சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது (வழக்கு மன்றத்தில்) என்று அறியாதவரை அல்லது அவருக்கு எதிராக (வழக்கு மன்றம்) சொத்துப் பாதுகாப்பு ஆணையைப் (receiving order) பிறப்பிக்கும் வரை, இங்கிலாந்து நாட்டிலேயுள்ள பாங்குகள் அந்த வாடிக்கைக்காரரின் செக்குகளை அச்சமின்றி மதிக்கலாம்; அவருடைய

பத்திரங்களைப் பட்டுவாடா செய்யலாம். இந்தியாவிலும் நிலைமை இதை ஒத்திருப்பதைப் போன்றே புலப்படுகிறது. இதைப் போன்ற அறிவிப்பை எழுத்து மூலமாகக் கொடுக்க வேண்டிய தேவையில்லையாதலால், கேட்ட செவிவழிச்செய்தியை நம்புவதா இல்லையா என்னும் இக்கட்டான நிலைமைகளுக்குச் சில பொழுது பாங்கர் உள்ளாகின்றனர். கடனாளியின் முறிவு மனுவின் அடிப் படையிலோ அல்லது கடனீவோர் மனுவின் அடிப்படையிலோ முறிவுத்தீர்ப்பு அளிக்கப்படும் வரை, கடனாளியின் சொத்து தொடர்ந்து அவர் வசமே இருக்கும். முறிவுத் தீர்ப்பளிக்கப்பட்ட வுடன், மாநிலத் தலைநகரில், சொத்துப் பொறுப்பு அளிக்கப் பெறும் அதிகாரியின் (Official Assignee) கட்டுப்பாட்டுக்கு முறிந்த வரின் சொத்து உட்படும்; இதற்கு மாறாகத் தலைநகரல்லாத புறப்பகுதியில், சொத்துப் பொறுப்பைப் பெறும் அதிகாரிக்கு (Official Receiver) அதன் உரிமை வந்தடையும் (1909ஆம் ஆண்டு மாநிலத் தலைநகர முறிவுச் சட்டத்தின் 17ஆம் பிரிவு; 1920ஆம் ஆண்டின் மாநில முறிவுச் சட்டத்தின் 28 (2)ஆம் பிரிவு). அப்பொழுது சொத்தைத் தமது விருப்பம்போல் கையாளும் உரிமையைக் கடனாளி இழக்கிறார்; பாங்கரும் அவருடைய (முறிந்த வாடிக்கைக்காரரின்) செக்குகளை மதிக்க மறுக்க வேண்டும். இங்கிலாந்திலே திவாலான கடனாளி திவாலானவர் (bankrupt) என்றும், இந்தியாவில் அவர் இறுதிவரை முறிந்தவர் (insolvent) என்றும் அழைக்கப் பெறுகிறார்.

முறிவுச் செயல் (நடத்தை): தீர்ப்புக் கடனாளியின் கீழ்க் காணும் பல்வேறு செயல்கள் அல்லது தவறுகளின் அடிப்படையில் முறிவுத் தீர்ப்பளிக்குமாறு வேண்டி அவருக்கெதிராக வழக்கு மன்றத்தில் மனுவைச் சமர்ப்பிக்கலாம் (1909ஆம் ஆண்டின் மாநிலத் தலைநகர முறிவுச் சட்டத்தின் 9ஆம் பிரிவையும், 1920ஆம் ஆண்டு மாநில முறிவுச் சட்டத்தின் 6ஆம் பிரிவையும் காண்க):

(1) தமக்குக் கடனீந்தவர்கள் அனைவரின் நலனை எண்ணி, அவர் தமது சொத்துகளனைத்தையும் அல்லது அவற்றில் போதுமான அளவையாவது, மூன்றாம் ஆள் ஒருவருக்கு இந்தியாவிலோ அல்லது பிற இடங்களிலோ உரிமை மாற்றம் செய்தால்;

(2) தமக்குக் கடனீந்தவர்களின் உரிமைகள் பறிபோகும் அல்லது சுணங்கும் வண்ணம் இந்தியாவிலோ அல்லது பிற இடங்களிலோ அவர் தமது சொத்துகளனைத்தையும் அல்லது அவற்றில் ஒரு பகுதியையேனும் திட்டமிட்டுப் பிறருக்கு அவற்றின் உரிமையை மாற்றினால்;

(3) இந்தியாவிலோ அல்லது பிற இடங்களிலோ, அவர் தமது சொத்துகள் அனைத்தையும் அல்லது அவற்றில் ஒரு பகுதியையேனும் உரிமை மாற்றம் செய்து, முறிவெய்தியவர் என்று அவர் தீர்ப்பளிக்கப்படுங்கால், இந்திய முறிவுச் சட்டத்தின் கீழோ அல்லது அப்பொழுது வழக்கிலிருக்கும் வேறு எந்தச் சட்டத்தின்கீழோ, அது (உரிமை மாற்றம்) கள்ளச்சலுகையாகும் என்று பயனற்றுச் செல்லாமல் போகும் தன்மையை உடையதானால் ;

(4) தமக்குக் கடனீந்தவர்களின் உரிமையைப் பறிக்கும் அல்லது சுணக்கும் செயல் நோக்கத்துடன், அவர்

(அ) இந்தியாவை விட்டு ஓடினால் அல்லது இந்தியாவுக்கு வெளியில் ஒதுக்கமாகத் தங்கியிருந்தால் ;

(ஆ) இல்லத்தை அல்லது தொழில்கூடத்தை விட்டு அகன்றிருந்தால் அல்லது அவற்றில் தொடர்ச்சியாக இல்லாதிருந்தால் ;

(இ) கடனீந்தவர்கள் தம்முடன் தொடர்புகொள்ள முடியாதவாறு பதுங்கி (மறைந்து) வாழ்ந்தால்;

(5) பணஞ்செலுத்துமாறு நீதிமன்றம் இட்ட ஆணையை நிறைவேற்றும் வண்ணம் அவருடைய சொத்து ஏதாவது விற்கப்பட்டிருந்தால் (அல்லது குறைந்தது இருபத்தோர் நாள்களாவது பிணைக்கப்பட்டிருந்தால்) ;

(6) தம்மை முறிவெய்தியவரென்று தீர்ப்பளிக்குமாறு நீதிமன்றத்திற்கு அவரே மனு சமர்ப்பித்திருந்தால் ;

(7) கடன் செலுத்துதலைத் தாம் நிறுத்திவிட்டதாகவோ அல்லது நிறுத்த இருப்பதாகவோ, தமக்குக் கடனீந்தவர்களில் எவருக்காவது, அவர் அறிக்கை தந்திருந்தால் ;

(8) பணஞ்செலுத்துமாறு நீதிமன்றம் இட்ட ஆணையை நிறைவேற்றும்வண்ணம் அவர் சிறை செய்யப்பட்டால் ஆகியவை.

முகவர் செய்யும் இத்தகைய செயல், தக்க அங்கீகாரமின்றி அவர் அதைச் செய்திருப்பினும், முதல்வரின் செயலாகவே கருதப்படலாம்.

**(4) வாடிக்கைக்காரர் பித்தரானுர் என்னும் அறிவிப்பைப் பெறல்:**

வாடிக்கைக்காரர் ஐயப்பாட்டுக்கு இடமின்றிப் பித்தரானுல் அல்லது சம மனநிலையற்றவரானுல், அவருடைய செக்குகளை பாங்கர் மதித்துப் பணஞ்செலுத்தக் கூடாது ; இருப்பினும், அவர் பகுத்தறிவுடன் செயல்பட்டபொழுது வெளியிட்ட செக்கைச் செலுத்துதல் செல்லத்தக்கதே. நியாயமாகச் சொல்லப் புகுந்தால், வாடிக்கைக்காரர் தமது காரியங்களை நிருவகிக்கத்தக்க மனநிலையற்றவர் என்று சான்றளிக்கப்படும்வரை, அவருடைய செக்குகளை மதிக்க, பாங்கருக்கு உரிமையிருக்கிறது. தமது வாடிக்கைக்காரர் கிறுக்கர் காப்பகத்தில் (lunatic asylum) சேர்க்கப்பட்டால், அவர் சம மனநிலையற்றவராகிவிட்டார் என்று பாங்கர் எடுத்துக்கொள்ளல் நியாயமானதே என்று பெருவாரியாக நம்பப்படுகிறது. பொது வழக்கு யாதெனில், அவர் தனியார் மருத்துவச் சாலையில் (nursing home) சேர்க்கப்பட்டு, அவ்வாறு அவரைச் சேர்த்ததற்குப் பித்து என்பதைத் தவிர, பிற காரணங்கள் ஏதேனும் கூறப்படும். ஐயப்பாடான இதுபோன்ற சமயங்களில், அந்த வாடிக்கைக்காரரின் குடும்பத்தினரையோ அல்லது அவருடைய வழக்குரைஞரையோ கண்டு உண்மை நிலையை அறிய வேண்டும். அப்பொழுது வாடிக்கைக்காரருடைய செக்கை மதிக்காது திருப்பியனுப்புமாறும், அவ்வாறு செய்வதனுல் பாங்கருக்கு எழும் நட்டத்தை ஈடு செய்யும் வாக்குறுதியையும் அவர்கள் தரலாம். முதல்வர் ஒருவர் பித்தராகி, ஒப்பந்தம் செய்யத் தகுதியற்றவரானுல், அவருடைய பதிலாளுக்கு (முகவருக்கு) அவரளித்த அங்கீகாரமும் அத்துடன் முற்றுப் பெறும். இருப்பினும், முதல்வர் பித்தர் என்பதை அறியாது, அவருடைய முகவருடன் ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஒருவருக்கு, அவர் (முதல்வர்) பொறுப்பாளியாகிருர். கூட்டு அமைப்பு ஒன்றின் கூட்டாளி ஒருவர் பித்தராவதால், அந்த அமைப்பு கலையாது ; ஆனுல் அதைக் காரணமாகக் காட்டி, அதன் கலைப்பை வேண்டலாம்.

**பித்தரான அறிவிப்பைப் பெற்றவுடன் பாங்கர் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள்**

(அ) ‘ வாடிக்கைக்காரர் பித்தரானுர் ’ என்று குறிக்காமல், ‘ எழுதுபவரைப் பார்க்கவும் ’ என்று குறித்து, செக்குகளைத் திருப்பியனுப்புதல் சிறந்தது.

(ஆ) வாடிக்கைக்காரர் பித்தரானதை அறிவிக்கும் ஆணையைப் பெற்றவுடன், அதை மிகவும் கவனமாகக் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

(இ) அந்த ஆணையில் அடங்கியுள்ள கட்டளைக்கேற்ப, வாடிக்கைக்காரரின் கணக்கைக் கையாள வேண்டும்.

(ஈ) வாடிக்கைக்காரர் தெளிவான மனநிலையையுடையவர் என்று நீதிமன்றம் மறுபடியும் சான்றளித்தாலன்றி, அவருடைய கணக்கை இயக்க அவரை அனுமதிக்கக் கூடாது.

**(5) பாங்கரின் வசம் உள்ள வாடிக்கைக்காரரின் பணத்தை இணைக்கும் அல்லது அதைக் கையாளுதலை நிர்ணயிக்கும் நீதிமன்றப்பற்றும் உத்தரவு (Garnishee Order) அல்லது மற்ற சட்டரீதியான ஆணை**

இதுபோன்ற ஆணைகளைப் பெற்றவுடன், சம்பந்தப்பட்ட வாடிக்கைக்காரர் தமது கணக்கின்மீது எழுதிய செக்குகளை பாங்கர் மதிக்கக் கூடாது. வாடிக்கைக்காரரின் செக்குகளை மதிக்க வேண்டிய பாங்கருடைய கடமையை நீதிமன்றப்பற்றும் உத்தரவு முழுமையாகவோ அன்றிப் பகுதியாகவோ தடை செய் கிறது. எந்த நீதிமன்றத் தீர்ப்பின் அடிப்படையில் இந்த உத்தரவு இடப்படுகிறதோ அத்தீர்ப்பை நிறைவேற்றத் தேவையான தொகை எவ்வளவு என்று பாங்கர் அறிவிக்கப்பட்டால், அத் தொகை நீங்கலாக, (வாடிக்கைக்காரரின்) செக்குகளை எந்த அளவுக்கு மதித்துப் பணஞ்செலுத்த முடியுமோ அந்த அளவுக்கு மதிக்கலாம். இது போன்ற சூழ்நிலையில் தேவையான தொகையை அனுமத்துக் கணக்கில் (suspense account) ஒதுக்கி வைத்துவிட்டு, மீதியுள்ள இருப்பின்மீது செக்குகளை எழுத வாடிக்கைக்காரருக்கு இணக்கமளிக்கலாம். ஹொர்ஸ்கார்ன் (எ.) இவான்ஸ் (1938), 2 கே.பி. 801 என்ற வழக்கில் கணவனுக்கு எதிராக வழங்கப்பட்ட தீர்ப்பை நிறைவேற்றும் வண்ணம் கணவன், மனைவி இருவர் பெயரிலும் துவக்கப்பட்ட கூட்டுக் கணக்கை நீதிமன்றப் பற்றும் உத்தரவு இணைக்க முடியாது (பற்ற முடியாது) என்று தீர்ப்பளிக்கப்பட்டது. நீதிமன்றத்தின் உத்தரவு சரியானதா இல்லையா என்பதைப்பற்றி எதிர்த்துக் கேட்க பாங்கருக்கு உரிமையில்லை; மேலும் ஒன்றுக்கொன்று முரணான நியாயங்களை விசாரித்துத் தீர்ப்பளிக்குமாறு பற்றும் உத்தரவைப் பெற்றவர் (garnishee) என்ற முறையில் பாங்கர் கட்டாயப்படுத்தப்பட மாட்டார். ப்ளங்கெட் (எ.) பர்க்லே(ய்)ஸ் பாங்கு லிமிடெட் (1936), 2 கே.பி. 107 என்ற வழக்கில் வாதி யாகிய வழக்குரைஞர், பிரதிவாதி பாங்கில் இரு கணக்குகளைத் துவக்கினார். ஒன்று நிறுவனத்தின் பெயரிலும், மற்றொன்று (1933ஆம் ஆண்டு வழக்குரைஞர் சட்டத்திற்கிணங்க) 'கட்சிக் காரர் கணக்கு' என்னும் சொற்கள் சேர்க்கப்பட்ட அதே (நிறுவ னத்தின்) பெயரிலும் துவக்கப்பட்டன. மூன்றாம் ஆள் ஒருவ

ருக்குச் சாதகமாக, கட்சிக்காரர் கணக்கின்மீது வாதி செக் கொன்றை எழுதி வெளியிட்டார். அச்செக்கைச் செலுத்துமுன், வாதிக்கு எதிராக வழங்கப்பட்ட தீர்ப்பின் அடிப்படையில் எழுந்த பற்றும் உத்தரவு ஒன்றை, பாங்கர் பெற்ருர். இரண்டு கணக்குகளையும் தழுவுமாறு பற்றும் உத்தரவின் சொல்லமைப்பு இருந்தது. அதன் விளைவாக வாதியின் செக்கை, பிரதிவாதி பாங்கு அவமதித்தது. செக்கை அவமதித்த பாங்கின் செயல் நியாயமானது என்றும், வாதி பாராட்டிய உரிமை ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று என்றும் அவ்வழக்கில் தீர்ப்பு வழங்கப் பட்டது.

(6) வாடிக்கைக்காரரின் கணக்கிலுள்ள வரவு இருப்பின் உரிமை அளிப்பு அறிவிப்பைப் (notice of assignment) பெற்றவுடன், பாங்கர் அவருடைய செக்குகளைச் செலுத்த மறுக்க வேண்டும்.

(7) பொறுப்பாண்மைக் (டிரஸ்ட்) கணக்குகளைப் பொறுத்த வரை, பொறுப்பாண்மைக்குக் கேடாக, வாடிக்கைக்காரர் அந்த நிதியைப் பயன்படுத்த முயல்வதை பாங்கர் அறிய நேர்ந்தால், அத்தகைய செக்குகளைச் செலுத்த மறுப்பதற்கு அதுவே போது மான காரணமாக அமையும்.

(8) சமர்ப்பிப்பவரின் உரிமையில் ஏதேனும் குறைபாடுகள் இருப்பதை பாங்கர் அறிவாராயின், அச்செக்கைச் செலுத்த, அவர் மறுக்கலாம்.

## அறிவிப்பு (Notice) என்பதன் சட்டரீதியான பொருள்

### 'அறிவிப்பு' என்பதற்கு விளக்கம்

இங்கும், பிற இடங்களிலும் இந்நூலில் தோன்றும் 'அறிவிப்பு' (notice) என்னும் சொல்லின் சட்ட ரீதியான சிறப்புப் பொருளைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளல் நன்று. ஒரு நிகழ்ச்சியை மெய்யாகவே ஒருவர் அறிந்திருந்தால், அவர் அதைப் பற்றிய அறிவிப்பைப் பெற்றவராவர். இதற்கு வெளிப்படை அல்லது மெய்யான அறிவிப்பு என்று பெயர். மேலும், அவர் செய்திருக்க வேண்டிய விசாரணையை [அல்லது சோதித்துப் பார்த்தலைத் (search) ] தெரிந்தே செய்யாததால், அறிந்திருக்கக் கூடிய நிகழ்ச்சியை மெய்யாகவே அறியாதிருந்தாலும் அதைப் பற்றிய அறிவிப்பைப் பெற்றவராகவே அவர் சட்டப்படி கருதப் படுவார். இது 'எடுகோள்' அறிவிப்பு (constructive notice) எனப் படும். ஒரு நிகழ்ச்சியைப் பற்றிய சேதியைத் தவிர்க்கும்

எண்ணத்துடன், வேண்டுமென்றே, செய்ய வேண்டிய விசாரணையைச் செய்யாது வாளாவிருந்தார்...அதைப்பற்றிய உண்மை என்ன என்ற ஐயப்பாடிருந்தும், அதை அறியக்கூடாது என்ற மோசடியான எண்ணங்கொண்டிருந்தார் என்று ஒருவர் குற்றம் சாட்டப்பட்டு, அதற்காகக் காட்டப்பட்ட ஆதாரங்கள் நீதிமன்றத்திற்கு மனநிறைவை அளிக்கக்கூடியவையாக இருந்தால், அதைப்பற்றிய அறிவிப்பைப் பெற்றவராகவே அவர் கருதப்படுவார். இதுபோன்ற சூழ்நிலைகளில் எடுகோள் அறிவிப்பு, நியாயத்தின் பெயரால் தோன்றுகிறது. உண்மையை அறிய மறுத்ததால் அல்ல ; மோசடி நோக்குடன் வேண்டுமென்றே கண்ணை மூடிக் கொண்டதால் அல்ல ; எச்சரிக்கையின்மையின் காரணமாக ஒரு நிகழ்ச்சியை ஒருவர் அறியாமல் இருந்தால், எடுகோள் அறிவிப்பு என்னும் கோட்பாடு அவருக்குப் பொருந்தாது[ஜோன்ஸ் (எ.) ஸ்மித் (1841) ஹோர் 43]. தமது பதிலாள் தம் சார்பில் செயல்படும்போது முக்கியமான நிகழ்ச்சி ஒன்றைப் பற்றி அறிய நேர்ந்தால், அதைப்பற்றிய அறிவிப்பைப் பெற்றவராக முதல்வர் கருதப்படுவார்.

### சட்டப் பகர்வுகள்

அறிவிப்பு என்றால் என்ன என்பதை அறிவிக்கும் சட்டப் பகர்வுகளும் சில உள்ளன. 1932ஆம் ஆண்டு இந்தியக் கூட்டு வியாபாரச் சட்டத்தின் 72ஆம் பிரிவு, கூட்டு நிறுவனம் ஒன்று கலைக்கப்படும்பொழுதோ அல்லது கூட்டு நிறுவனத்திலிருந்து கூட்டாளி ஒருவர் விலகும்பொழுதோ எந்தப் பாணியில் அறிவிப்பைக் கொடுக்க வேண்டும் என்று பகருகிறது—அதாவது அரசாங்கச் செய்தி ஏட்டில் அதை வெளியிட வேண்டும், அந்த நிறுவனத்தின் தொழிலகம் அல்லது தலைமைத் தொழிலகம் எந்த மாவட்டில் இருக்கிறதோ அங்குப் புழக்கத்திலிருக்கும் மொழியில் வெளிவரும் செய்தித்தாளிலும் அந்தச் செய்தியை (அறிக்கையை) வெளியிட வேண்டும். இவ்வாறு செய்தபின், அந்த அரசாங்கச் செய்தி ஏட்டையோ, செய்தித்தாளையோ படிக்கவில்லை; எனவே, நிறுவனத்தின் கலைப்பைப் பற்றியோ அல்லது கூட்டாளியின் விலகலைப்பற்றியோ தாம் அறிவிப்பைப் பெறவில்லை என்று ஒருவரும் கூற முடியாது ; கூறினாலும், நீதிமன்றம் ஒப்புக் கொள்ளாது. இறுதியாக, அசையாச் சொத்தைச் சார்ந்த பதிவு செய்ய வேண்டிய பேரம் ஒன்றை முறையாகப் பதிவு செய்தால், அச்சொத்தை அடுத்து மாற்றிப் பெறுபவர்கள் அனைவருக்கும், அதுவே தக்க அறிவிப்பாக 1882ஆம் ஆண்டின் சொத்துரிமை மாற்றுகைச் சட்டத்தின்கீழ் அமைகிறது. தாம் அந்தப் பதிவேட்டைப் பார்க்கவில்லை ; எனவே, தமக்கு அந்த பேரத்தைப்

பற்றித் தெரியாது என்று அடுத்து மாற்றிப் பெறுபவர் கூற முடியாது.

## அவமதித்த செக்குகளில் பாங்கர் குறிக்க வேண்டிய காரணங்கள்

செக்கொன்றை மதிக்கக் கூடாது என்று பாங்கர் தீர்மானித்தால், அதற்கான காரணம் என்ன என்று குறிக்கப்பட்ட துண்டுச் சீட்டை அத்துடன் இணைத்து, செக்கைத் திருப்பிக் கொடுத்து விடுதல் வழக்கமாகும். இப்பொறுப்பை, பாங்கர்மீது சட்டம் சுமத்துவதில்லை என்பதை அறிய வேண்டும் (கில்பர்ட் அவர்களின் விரிவுரைகள்—1935ஆம் ஆண்டு வெளிவந்த பாங்கர் நிலையத்தின் ஏடு, பக். 167). செலுத்த மறுத்த பொருளில் அதற்கான காரணம் குறிக்கப்பெற்றிருந்தாலன்றி, பாங்கரின் தீர்வகங்கள் அதைத் திரும்ப ஏற்றுக்கொள்வதில்லை; இதைப்பற்றிய விதிகளை அவை பெரும்பாலும் கொண்டிருக்கின்றன. பாங்கரிடம் நேரடியாகச் சமர்ப்பிக்கப்படும் செக்குகளை அவமதிக்க நேரும்பொழுது, அதற்கான காரணத்தை எழுதித் தர அவர் சட்டப்படி கடமைப்பட்டவர் அல்லவெனினும், பொருத்தமான விடைக்கெதிரேயுள்ள எண்ணைக் குறியிட்ட அச்சுத்தாளை, மறுத்த செக்குடன் இணைத்துக் கொடுத்தல் பாங்கரிடையே நிலவும் வழக்கமாகும் (பின்னிணைப்பு ஆ, படிவ எண் 19ஐக் காண்க). இது போன்ற செக்குகளில் குறிக்கப்படும் விடைகள் முழுமையாக இருக்க வேண்டும் என்று லண்டன் மாநகர் பாங்கர் தீர்வகம் வலியுறுத்துகிறது. தாம் அளிக்கும் முறையற்ற விடையால் தமது வாடிக்கைக்காரரின் நாணயத்திற்கு ஊறு நேராவண்ணம் தக்க பாதுகாப்பு உணர்வோடு பாங்கர் செயல்பட வேண்டும்; மேலும், சமர்ப்பிப்பவருக்குத் தப்பு வழி காட்டுவதாகவும் அது அமையக் கூடாது. கீழ்க்காணும் சுருக்கங்களையே பெரும்பான்மையாகப் பாங்கர் பயன்படுத்துகின்றனர் :

(i) எ.பா. (R.D.)=‘எழுதியவரைப் பார்க்கவும்’ (refer to drawer). வைத்திருப்பவர் சமர்ப்பிக்கும் செக்கை மதிக்கப் போதுமான தொகை, எழுதுபவரின் கணக்கில் இல்லை; எனவே, அதன் பணத்தை வசூலிக்க, எழுதியவரைப் பார்க்கவும் என்ற பொருளையே, இது அவருக்குத் தெரிவிக்கிறது. ஸ்டெர்லிங் (எ.) பர்க்லே(ய்)ஸ் பாங்கு லிமிடெட் [1930ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்களில் வெளியிடப்பட்ட கணக்கர் ஏட்டின் (accountant's journal) 367ஆம் பக்கம் காண்க.] என்னும் வழக்கில், எ. பா. என்னும் எழுத்துக்கள், செக்கை அவமதிப்பதற்கு ஒப்பாகும், வாடிக்கைக்காரரின் நாணயத்தைக் கெடுக்க

வல்ல அவதூறுகும் என்ற தீர்ப்பு முதன்முதலாக வழங்கப் பட்டது. இத்தீர்ப்புக்கு முன், 'எழுதியவரைப் பார்க்க வும்' என்னும் சொற்களுக்கு இது போன்ற பழிப்புப் (defamatory) பொருள் உண்டு என்று எவரும் கருதிய தில்லை. எனவே, பாங்கர் இச்சொற்களைக் குறித்தால், அவை அவதூறுகும் என்னும் அடிப்படையில், எழுதுபவர் நட்டஈடு பெறுவதற்கு இந்தத் தீர்ப்பு வழிகோலுகிறது. அயர்லாந்து உச்ச நீதிமன்றம் விசாரித்த [பைக் (எ.) ஹிபர்மியன் பாங்கு (1950) அயர். ஆர். 195] என்னும் வழக்கில், மேற்கூறிய தீர்ப்பைப் பற்றிக் கீழ்க்காணும் கருத்துரையை வழங்கியது: 'எழுதியவரைப் பார்க்கவும்' என்னும் சொற்களின் விளைவு இந்த ஒரு வழக்கில்தான் முறையாகவும் முழுமையாகவும் அலசி ஆராயப்பட்டது; இதுபோன்ற சொற்கள் அவதூறுகக் கொள்ளத்தக்கவை என்னும் கருத்து இங்கிலாந்திலும், இந்நாட்டிலும் (அயர் லாந்திலும்) இன்னும் கொஞ்ச காலத்தில் ஏற்றுக்கொள் ளப்படலாம். போதுமான தொகையில்லை என்னும் காரணமன்றிப் பிற காரணங்களுக்காகச் செக்கைத் திருப்பியனுப்பும்போது, 'எழுதியவரைப் பார்க்கவும்', 'போதுமான நிதியில்லை' போன்ற சொற்களைத் தவிர்த்தல் சாலச் சிறந்தது. எனவே, 'எழுதியவரைப் பார்க்கவும்' என்ற சொற்களை மிகவும் விழிப்போடு பயன்படுத்துதல் விரும்பத் தக்கது. சமர்ப்பிக்கப்படும் செக்கு தவறுகக் கையாடப்பட்டிருக்கிறது என்னும் ஐயப்பாட்டுக்கு நியாயமாக இடமிருந்து, எழுதியவருக்கு அதைப் பார்க்க வாய்ப்பு அளித்தலால், 'அந்த ஐயப்பாடு நீங்கும்' என்னும் சூழ்நிலையில் 'எழுதியவரைப் பார்க்கவும்' என்கிற சொற்களைப் பயன்படுத்தலாம் என்று ஷா பிரபு அவர்கள், லண்டன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கு லிமிடெட் (எ.) மேக்மில்லனும் ஆர்தரும் (1918), ஏ. சி. 777 என்னும் வழக்கில் கூறிய மேற்கோளுரை நினைவிற் கொள்ளத்தக்கது.

(ii) இ. போ. (N.S.) = 'இருப்பது போதாது' (not sufficient); ப. இ. (N.E.) = பணம் இல்லை (no effects); நி. இ. (N.F.) = நிதி இல்லை (no funds) ஆகியவையும் இதே பொருளில் பயன்படுத்தப்படும் மற்றச் சுருக்கங்களாகும். இவற்றைக்காட்டிலும் எ. பா. என்னும் சுருக்கம் சற்றுத் தெளிவற்றதாகையால், பெரும்பான்மையாக அதுவே பயன்படுத்தப்படுகிறது.

(iii) பு. மு வ. (E.I.) = 'புறக்குறிப்பு முறை வழுவியது' (endorsement irregular) : செக்கிலுள்ள புறக்குறிப்பு சற்று முறை வழுவி இருந்தால், இந்தக் குறிப்புடன் அது திருப்பிக் கொடுக்கப்படும். (உ-ம்.) செக்கின் முகப்பிலுள்ள பெறற்குரியவரின் பெயருக்கும், புறக்குறிப்பிலுள்ள அவரது பெயருக்கும் சிறிது வேறுபாடு இருத்தல்.

(iv) வ. வ. வி. (E. N. C.) = 'வரவேண்டியவை வசூலாகவில்லை' (effects not cleared) : செக்கை எழுதுபவர் செக்குகளையோ உண்டியல்களையோ தமது கணக்கில் இட்டிருக்கிறார் ; அவை வசூலிக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றன; அச்செக்கைச் செலுத்தப் போதுமான வசூலை இன்னும் பெறவில்லை என்று இது சுட்டுகிறது.

(v) எ. மா. (D.D.) = 'எழுதியவர் மாண்டார்' (drawer deceased) : வாடிக்கைக்காரரின் இறப்பைப்பற்றி பாங்கர் அறிந்தவுடன், அவர் எழுதிய செக்குகளைச் செலுத்தக் கூடாது.

(vi) எ. & எ. வே. (W. & F. D.) = 'எண்ணும் எழுத்தும் வேறுபடுகிறது' (words and figures differ) : எண்ணாலும் எழுத்தாலும் எழுதப்பெற்ற தொகை வேறுபடும்போது, இந்த விடையைக் குறித்து, பாங்கர் செக்கைத் திருப்பித் தருவர்.

(vii) பொ-நீ.தே. (D. R.) = 'பொறுப்பு நீக்கம் தேவை' (discharge required.)

## இடங்குறி உண்டியல்களைச் (Domiciled Bills) செலுத்துபவர் என்ற தகுதியில் பாங்கரின் நிலை

### உண்டியல்களை மதிக்கும் கடமையைச் சட்டம் சுமத்தவில்லை

வாடிக்கைக்காரரின் செக்குகளை மதிக்கத்தக்க நிதி இருக்கும் பொழுது, பாங்கருக்கு அவற்றை மதிக்க வேண்டிய கடமை இருக்கிறது என்பதை முன்பு கண்டோம். அவருடைய பாங்கு செலுத்தும் என்ற குறிப்புடன் வாடிக்கைக்காரர் ஏற்றுக்கொண்ட உண்டியல்களை பாங்கர் மதிக்கக் கடமைப்பட்டவரல்லர். எனவே, இப் பணியைச் செய்யுமாறு வாடிக்கைக்காரர் பாங்கருக்கு அங்கீகாரமும் அதிகாரமும் வழங்க வேண்டும். அதை வெளிப்படையான உடன்பாட்டின்மூலமாக வழங்கலாம்; அல்லது தொக்கி நிற்கும்

உடன்பாட்டினின்றும் அது எழலாம். தமது வாடிக்கைக்காரர் ஏற்ற உண்டியல்களை இதுகாறும் மதித்து வந்த பாங்கு, திடீரென அவருக்குத் தக்க அறிவிப்பின்றி இந்தச் சலுகையை நிறுத்த முடியாது. ஏனெனில், தொடர்ந்து அவ்வாறே செய்து வருவேன் என்ற பாங்கரின் குறிப்பான ஒப்புதலை, ஒரு செயலின் நிலையான போக்கு சுட்டிக் காட்டுகிறது; உறுதிப்படுத்துகிறது.

### இடங்குறி உண்டியல்களை மதிக்கும்பொழுது பாங்கர் நினைவிற்கொள்ள வேண்டிய செய்திகள்

செக்கைச் செலுத்தும்போது கடைப்பிடிக்கத் தக்கக் கருத்துகளில் பலவற்றை இடங்குறி உண்டியல்களை பாங்கர் செலுத்தும்போது நினைவிற்கொள்ள வேண்டும். உதாரணமாக, உண்டியல் முறையாக எழுதப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதா, தேவையான முத்திரை ஒட்டப்பெற்றுள்ளதா, செலுத்துவதற்கு அது உரியதாகிவிட்டதா, அம்ச திருத்தங்கள் எவையேனும் இருப்பின், அவை உறுதி செய்யப்பட்டுள்ளனவா என்று பாங்கர் கண்டறிய வேண்டும். செக்குகளைப் போலவே இங்கும் வாடிக்கைக்காரரின் நிதியைப் பிறருக்குத் தர, அவரது முறையான அங்கீகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். வாடிக்கைக்காரர் உண்டியல்களை வாய்மையாக ஏற்றுக்கொள்ளுவதன்மூலமே அவரது அங்கீகாரத்தைப் பெற முடியும் என்பதை பாங்கர் உணர வேண்டும். எழுதுபவரின் கையொப்பம் வாய்மையானதா என்று செக்குகளைப் பொறுத்தவரை பாங்கர் கண்டறிதலைப்போல், உண்டியல்களைப் பொறுத்தவரை ஏற்பவரின் கையொப்பம் வாய்மையானதா, கள்ளக் கையொப்பமா என்று உய்த்தறிய வேண்டும். இரண்டிலுமே வாடிக்கைக்காரரின் கையொப்பம் கள்ளத்தனமாக இடப்பட்டிருப்பின், அதன் வாய்மையை மறுக்க வாடிக்கைக்காரர் வாயற்றிருந்தாலன்றி, அவருடைய கணக்கில் செலுத்திய தொகையைப் பற்று வைக்க முடியாது. வாடிக்கைக்காரர் தம்மீது எழுதப்பெற்ற உண்டியல் ஒன்றை ஏற்று, பாங்கரால் செலுத்தப்படும் என்று இடங்குறித்துக் கொடுத்து, பாங்கர் அதைச் செலுத்திய பின், அதில் தோன்றிய எழுதுபவரின் கையொப்பம் கள்ளக் கையொப்பமாகும் என்ற உண்மை வெளிப்படுகிறது எனக் கொள்வோம். இதன் விளைவாக ஏற்படும் இழப்பை ஈடு செய்யுமாறு வாடிக்கைக்காரர் பாங்கரைக் கேட்க முடியாது. இது போன்ற முறிகளில் தோன்றும் எழுதுபவரின் கையொப்பங்கள் வாய்மையானவையா என்று கண்டறிதல் பாங்கரின் கடமையல்ல; மேலும், அவர்களோடு பாங்கருக்குத் தொடர்பு இல்லாதிருக்குமாகையால் அவர்களின் கையொப்பங்களைச் சரிபார்த்தல் எங்ஙனம் இயலும்? உண்டியல் ஒன்றின் எழுதுபவரோடு பாங்கருக்குத் தொடர்பு இருந்த

போதிலும், அவர் கையெழுத்து வாய்மையானதுதானு என்று கண்டறிதல் ஏற்பவரின் பொறுப்பேயன்றி, பாங்கரின் பொறுப் பன்று. இப்பணியை ஏற்பதால் கள்ளப் புறக்குறிப்பைக்கொண்ட உண்டியல்களைச் சற்று விழிப்பின்றிச் செலுத்த நேரும் ஆபத்தை யும் பாங்கர் ஏற்கிருர். பாங்கரைச் செலுத்துமாறு உண்டியலில் இடங்குறிக்கும் வாடிக்கைக்காரர், உரியவருக்கே அதன் தொகை யைச் செலுத்த வேண்டும் என்று பாங்கருக்குக் கூறுகிருர் (பணிக் கிருர்) என்பது வெண்கூற்று. கள்ளப் புறக்குறிப்பின் மூலமாக உண்டியலே அடைந்த ஒருவருக்கு, பாங்கர் அதன் தொகையைச் செலுத்திஞல், உரிமையாளருக்குச் செலுத்தியதாக அதைக் கொள்ளமுடியாதாகையால், வாடிக்கைக்காரரின் கணக்கில் அத் தொகையைப் பற்றுவைக்க பாங்கர் உரியவராகார். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு, செக்குகளைப் பொறுத்தவரை செலுத்தும்-பாங்கருக்கு அளிக்கும் பாதுகாப்பை, உண்டியல்களைப் பொறுத்தவரை அவர் பெற முடியாது. எனவே, கள்ளப் புறக்குறிப்புகளிஞல் தமக்கு நேரும் இழப்பை ஈடு செய்யும் உறுதிமொழியைத் தருமாறு வாடிக்கைக்காரரிடம் பாங்கர் வலியுறுத்துகிருர். அப்பொழுதுதான் அதிக ஆபத்தின்றி, வாடிக் கைக்காரர் ஏற்கும் உண்டியல்களைச் செலுத்தும் பணியை பாங்கர் மேற்கொள்ளலாம்.

# 8. வசூலிக்கும்-பாங்கரும் வாடிக்கைக்காரர் கணக்கும்

வாடிக்கைக்காரரின் செக்குகளையும், தம்மைச் செலுத்துமாறு அவர் இடங்குறித்து ஏற்ற உண்டியல்களையும் செலுத்துபவர் என்ற கண்ணோட்டத்தோடு பாங்கரின் நிலையை இதுவரை ஆராய்ந் தோம்; வாடிக்கைக்காரரின் உண்டியல்களையும் செக்குகளையும் அவர் சார்பாக வசூலிப்பவர் என்ற தகுதியில், பாங்கரின் நிலைமை யை இங்கு ஆராய்வோம். இந்த ஒரு பணியை மட்டுமே பாங்கர் செய்கிறார் என்பதில்லை. ஒவ்வொரு பாங்கரும் வசூலிக்கும்-பாங்க ராகவும், செலுத்தும்-பாங்கராகவும் செயலாற்றுகின்றனர்.

**செக்குகளை வசூலித்தல்**

பிற பாங்குகளின்மீது எழுதப் பெற்ற செக்குகளை, வாடிக்கைக் காரருக்காக வசூலிக்க வேண்டிய கடமையை பாங்கர்மேல் சட்டம் சுமத்துவதில்லை. இருப்பினும், மூன்றாம் அத்தியாயத்தில் நாம் முன்பே கண்டவாறு, தற்பொழுதுள்ள பாங்குகள் அனைத்தும் வாடிக்கைக்காரர்களின் சார்பில் செக்குகளையும் உண்டியல்களையும் வசூலித்துக் கொடுக்கும் முக்கியமான பணியை மேற்கொள்கின் றன. ஏனெனில், வாடிக்கைக்காரர்களுக்கு இது இன்றியமையாத, தவிர்க்கவொண்ணாத ஒரு வசதியை அளிக்கிறது; குறிப்பாகச் சிறிய செக்குகளைப் பொறுத்தவரை இது முற்றிலும் இன்றியமை யாததே. இப்பணியின் பெரும்பங்கு பாங்கரின் தீர்வகங்கள் மூல மாகவே செய்யப்படினும், வசூலிக்கும்-பாங்கர் என்னும் அவரு டைய சட்டநிலைமையை அது பாதிப்பதில்லை. எனவே, இப்பணி யை பாங்கர் மிகவும் விழிப்பாகச் செய்ய வேண்டும்; இல்லாவிட் டால், பல தொல்லைகளுக்கு அவர் உள்ளாக நேரும்.

இப்பணியில் அவர் கடைப்பிடிக்க வேண்டிய எச்சரிக்கைகளை ஆராயுமுன், விலைக்கு வாங்கி வைத்திருப்பவர், வாடிக்கைக்காரரின் வசூலிக்கும் முகவர் என்ற அவரது இரு வேறு நிலைமைகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டை ஆழ்ந்தறிதல் பயன்தரத் தக்கது.

**விலைக்கு வாங்கி வைத்திருப்பவர் (Holder for Value) என்ற முறையில் பாங்கரின் நிலைமை**

விலைக்கு வாங்கும் மற்ற ஆள்களின் நிலைமையும், விலைக்கு வாங்கி வைத்திருக்கும் பாங்கரின் நிலைமையும் கீழுச் செக்குகளைப் பொறுத்தவரை ஒன்றே என்பதை அறிய வேண்டும். வாடிக்கைக்காரருக்கு உதவும் எண்ணத்துடன், மற்றொரு பாங்கின்மீது எழுதப்பட்ட செக்கின் தொகையை, வசூலிக்கும் முன்னர் பாங்கரொருவர் செலுத்தினால், விலைக்கு வாங்கி வைத்திருப்பவருடைய நிலைமையை அவர் அடைவார். இது போலவே வாடிக்கைக்காரர் அவரது கணக்கில் இடும் செக்குக்கு எதிராக, அதை வசூலிக்கும் முன்பே, செக்கு எழுதிப் பணம் பெற, பாங்கர் அவருக்கு வெளிப்படையாகவோ அல்லது குறிப்பாகவோ இணக்கமளித்தால், விலைக்கு வாங்கி வைத்திருப்பவராக அப்பாங்கர் கருதப்படுவார். எ.எல். அண்டர்வுட் லிமிடெட் (எ.) பர்க்லே(ய்)ஸ் பாங்கு (1924), 1 கே.பி 775 என்னும் வழக்கில் அட்கின் பிரபு அவர்கள் கூறியதாவது : 'வாடிக்கைக்காரரின் கணக்கில் இடும் செக்குகளை வசூலிக்கும் முன்பே, அவற்றின் எதிராக எழுதப்படும் செக்குகளைச் செலுத்துவதாக பாங்கர் வாடிக்கைக்காரரிடம் ஒப்புக்கொண்ட ஒப்பந்தம் இருந்தால்தான், விலைக்கு என்ற கூற்று ஏற்றுக் கொள்ளத் தக்கதாகும்.' லாயிட்ஸ் பாங்கு (எ.) ஹோம்லி (ஃபைனான்ஷியல் டைம்ஸ், 1933, ஜூலை 5ஆந் தேதி) என்ற வழக்கில் 250 பவுண்டுக்கு எழுதப்பெற்ற செக்கொன்றுடன் வாடிக்கைக்காரரின் பெயரில் பாங்கு கணக்கைத் துவக்கியதுமட்டுமின்றி, அதற்கு எதிராகச் செக்குகளை எழுதவும் அவருக்கு இணக்கமளித்தது. செக்கை எழுதியவர் அதைச் செலுத்துதலைத் தடை செய்துவிட்டார். அந்த பாங்கு, முறைப்படி பெற்றவர் என்ற தகுதியில், அச்செக்குக்கு எதிராக அது கொடுத்த தொகையை மீட்கும் பொருட்டு எழுதுபவர்மீது வழக்குத் தொடுத்தது. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 32ஆம் பிரிவின் அடிப்படையில் அந்த பாங்கு தக்கக் கவனமின்றிச் செயலாற்றியது என்று, எழுதுபவர் மறுப்பெழுப்பினார்; நீதிபதி அவர்கள் பொருந்தாத கூற்று என்று கூறி, அதைத் தள்ளிவிட்டார். தாம் ஈந்த கடனுக்காக (அதை அடைக்கும் அல்லது குறைக்கும் வகையில்) செக்கொன்றை பாங்கு பெற்றாலும், அல்லது அதிகப்

பற்றுள்ள கணக்கை உடைய வாடிக்கைக்காரரிடமிருந்து அதைப் பெற்றாலும், விலைக்கு வாங்கி வைத்திருப்பவரின் நிலைமையையே அது அடையும் [தி லண்டன் & கன்டிரி பாங்கிங் கம். (எ.) க்ரூம், எல்.ஆர். 8, க்யூ.பி.டி. 288; நேஷனல் பாங்கு (எ.) சில்கி (1891), 1 க்யூ.பி. 435].

**விலைக்கு வாங்கி வைத்திருப்பவர் என்ற தகுதியில் அதன் உரிமைகள்**

திறந்த செக்கு ஒன்றில் கள்ளக்குறிப்பு இருக்கும்பொழுது, உண்மை உரிமையாளருக்கு வசூலிக்கும்-பாங்கர் பொறுப்பாவார். ஆயினும், கள்ளப் புறக்குறிப்பை அடுத்து அதைப் புறங்குறித்தவர்களிடமிருந்து இழந்த தொகையை மீட்க அவருக்கு உரிமையிருக்கிறது. ஆகவே, கடைசிக்கு முந்திய புறக்குறிப்பு கள்ளத்தனமாக இடப்பட்ட செக்கை வசூலித்ததன் காரணமாக உண்மை உரிமையாளருக்கு அதன் தொகையை பாங்கர் திருப்பிக் கொடுக்க நேரும் பொழுது, இறுதியாகப் புறங்குறித்தவரிடமிருந்து அந்தத் தொகையை மீட்க அவர் உரியவராகிறார். அதில் இறுதியாகப் புறங்குறித்தவர் யாருக்காக அந்தச் செக்கை பாங்கர் வசூலித்தாரோ அந்த வாடிக்கைக்காரர்தான் என்பது இங்கு நினைவிற் கொள்ளத் தக்கது. அந்த வாடிக்கைக்காரரிடமிருந்து அத்தொகையை மீட்க முடியவில்லையென்றால், அந்த இழப்பை பாங்கரே ஏற்றுக்கொள்ள நேரும். கள்ளப்புறக்குறிப்பைப் பற்றிய பிரச்சினை ஒருபுறம் இருக்க, வாடிக்கைக்காரருக்குச் செக்கின்மீது எவ்வுரிமையும் இல்லையென்றாலும் அல்லது அவருடைய உரிமை குறைபாடுள்ளது எனினும், பாங்கர் அதை முறைப்படி பெற்றவராவார்; எனவே, செக்கில் அதற்கு முன்பு சம்பந்தப்பட்ட தரப்பினருக்கு எதிராகத் தற்சார்புள்ள செம்மையான உரிமையை பாங்கர் பெறுகிறார் என்பது சர் ஜான் பேஜட் அவர்களுடைய கருத்து (பாங்கியலின் நடைமுறைகள், நூலாசிரியர் சர் ஜான் பேஜட், மூன்றாம் பதிப்பு, பக்.289). வாடிக்கைக்காரர் அவரது கணக்கில் இடும் கீறிய செக்குகளுக்கு எதிராக, பாங்கர் அவருக்கு ரொக்கம் செலுத்தியிருந்தாலும் அல்லது அவற்றின் தொகைகளை அவருடைய கணக்கில் வரவு வைத்திருந்தாலும், பாங்கர் அவற்றை விலைக்கு வாங்கி வைத்திருப்பவராவார்; எனவே, அவற்றின்மீது மேற்கூறிய உரிமைகளை அவர் பாராட்டத் தடையேதுமில்லை. அமெரிக்க ஐக்கிய நாட்டில் வசூலிக்கும்-பாங்கருடைய சட்ட ரீதியான நிலைமை மனநிறைவை அளிக்கக்கூடியதாக இல்லை. மார்கோவி(ட்)ச் (எ.) அமெரிக்கன் எக்ஸ்சேஞ்ச் இர்விங் டிரஸ்டு கம். (நியூயார்க் மாநகரிலுள்ள நகராட்சி நீதிமன்றம் 229, நியூயார்க் துணை வெளியீடு 110; பாங்கருடைய மாத இதழ், அக்டோபர்

1928) என்னும் வழக்கில் பெறற்குரியவரின் புறக்குறிப்பு கள்ளத் தனமாக இடப்பட்ட செக்கை வசூலிக்கும்-பாங்கர், பெறற்குரிய வருக்கு அதன் தொகையைச் செலுத்தப் பொறுப்பாவார் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

### முகவர் என்னும் தகுதியில் அவருடைய நிலைமை

வாடிக்கைக்காரரின் சார்பில் செக்கை வசூலிக்கும்-பாங்கர், அவருடைய முகவராக மட்டுமே செயலாற்றுவதால், விலைக்கு வாங்கி வைத்திருப்பவருக்கு அளிக்கப்படும் உரிமைகளை, அவர் ஓச்ச முடியாது (அல்லது வற்புறுத்திப் பெற முடியாது). வாடிக் கைக்காரருக்கு அதன்பாலுள்ள உரிமையினும் செம்மையான உரிமையை அவர் பெற இயலாது; வாடிக்கைக்காரருக்கு அதன்பால் உரிமையே இல்லையென்றால், அவருடைய வசூ லிக்கும் முகவரான பாங்குக்கும் அதன்மீது எவ்வித உரிமையும் இல்லாது போகும். ஆகவே, மற்றொருவருக்கு உரிய செக்கை, தமது வாடிக்கைக்காரருக்காக வசூலிக்கும்-பாங்கர், சட்ட முரணான கையாளுகை (conversion) செய்த குற்றத்திற்காகவும், உண்மை உரிமையாளரின் சார்பாகப் 'பணத்தைப் பெற்று, வைத் திருப்பதாகவும்' (money had and received) கருதப்பட்டு, அவருக்கு அதைத் திருப்பிக் கொடுக்கப் பொறுப்பாக்கப்படுகிறார். இருப் பினும், நன்னம்பிக்கையுடனும், எவ்விதப் புறக்கணிப்புமின்றித் தாம் செயலாற்றியதாகவும், தம்மை அடையுமுன்பே அது கீறிய செக்காக இருந்தது என்றும் பாங்கர் மெய்ப்பித்தால், அந்தப் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்படுவார்.

### சட்டம் பாதுகாப்பு அளிக்குமுன்பு, வசூலிக்கும்-பாங்கரின் நிலைமை

வசூலிக்கும்-பாங்கருக்குச் சட்டரீதியான பாதுகாப்பு அளிக் கப்படுமுன், அவர் நிலைமை விரும்பத்தக்கதாக இல்லை. ஏனெனில், பாங்கரைத் தவிர மற்றொருவரும் எழுதப்பெற்ற பாங்கிடமிருந்து கீறிய செக்குகளின் தொகையை நேரடியாகப் பெற முடியாதாகை யால், தமது வாடிக்கைக்காரர்களுக்காக, அவர் அவற்றை வசூலிக்க நேருகிறது. இவ்வாறு வாடிக்கைக்காரர்களின் வேண்டு கோளுக்கிணங்கி அதுபோன்ற செக்கை வசூலிக்கும்பொழுது, உண்மை உரிமையாளருக்குப் பொறுப்பாகும் ஆபத்தை ஏற்க நேரிடுகிறது. 1876ஆம் ஆண்டு கீறிய செக்குச் சட்டத்தின் 12ஆம் பிரிவைப்பற்றி அவருடைய கருத்தை வழங்கும்போது, நீதிபதி லிண்ட்லே அவர்கள் கீழ்க்காணுமாறு கூறினார்: 'வசூலிக்கும்-பாங்கின் நிலைமையை எடுத்துக்கொள்வோம். தமது வாடிக்கைக் காரர்களிடமிருந்து கீறிய செக்குகளை அது பெறுகிறது; அவற்றை அது வசூலிக்க வேண்டும் அல்லது வசூலிக்காமல் விட்டுவிட

வேண்டும்; நடைமுறையிலே அது அவற்றை வசூலிக்கத்தான் செய்கிறது. அவற்றை அது வசூலித்த பின், அந்த பாங்குக்கு அவற்றை அனுப்பிய வாடிக்கைக்காரரின் உரிமை குறைபாடுள்ள தாக இருக்குமானல், என்ன விளைவு நேருகிறது? தமது வாடிக் கைக்காரருக்காக பாங்கு பணத்தை வசூலிப்பதனல் மட்டுமே அந்தப் பணத்திற்கு அதைப் பொறுப்பாக்குவது அதற்கு இழைக் கப்படும் அநீதியென்றே எனக்குத் தோன்றுகிறது. முன்பு வழங்கிய சட்டத்தின்படி, பாங்கர் பொறுப்பாக மாட்டார் என்று நான் சொல்லவில்லை; அது அநீதியாகுமென்றே நான் எண்ணுகிறேன். எவ்வளவு முன்னறிவுடன் செயலாற்றினுலும் தம்மைக் காத்துக் கொள்ள முடியாத சில ஆபத்துகளிலிருந்து பாங்கரைச் சட்ட மன்றம் விடுவிக்க வேண்டும் என்பது எல்லாச் சூழ்நிலைகளிலும் நியாயமானதாகவே எனக்குத் தோன்றுகிறது. 12ஆம் பிரிவை நாம் கூர்ந்து நோக்குங்கால், இதையே அது குறிக்கிறது என்பது தெளிவு'. (பாஷ்யம், ஆடிகா ஆகிய இருவரும் எழுதிய செலாவணி முறிச்சட்டம் என்னும் நூல், 8ஆம் பதிப்பு, பக். 509.) தம்மீது எழுதப்பெற்ற செக்கிலுள்ள புறக்குறிப்புக்கள் வாய்மையான வையா அல்லவா என்று செலுத்தும்-பாங்கர் அறிய முடியாதது போல, வசூலிப்பதற்காக அவரிடம் தரப்படும் செக்கிலுள்ள புறக் குறிப்புக்கள் வாய்மையானவையா என்று கண்டறிதல் வசூலிக் கும்-பாங்கருக்கும் இயலாத ஒரு காரியமாகும்.

### சட்டம் அளிக்கும் பாதுகாப்பு

1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46 விக்ட்., சி. 61) 82ஆம் பிரிவிற்கு இசைந்த 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவு, இந்தியாவில் செயலாற்றும் வசூலிக்கும்-பாங்கருக்குப் பாதுகாப்பை அளிக்கிறது. அப்பிரிவு கூறுவதாவது :

> நன்னம்பிக்கையுடனும், புறக்கணிப்பின்றியும் பொதுக் கீறலோ அல்லது தனது பெயரில் சிறப்புக் கீறலோ இடப்பட் டுள்ள செக்கின் பணத்தை வாடிக்கைக்காரருக்காகப் பெற் றுக்கொள்ளும் பாங்கு, வாடிக்கைக்காரருக்கு அச்செக்கின் பாலுள்ள உரிமை குறைபாடுள்ளது என்று மெய்ப்பிக்கப்படும் பொழுதும், அந்தப் பணத்தைப் பெற்ற காரணத்தினுல் மட்டுமே, அச்செக்கின் உண்மை உரிமையாளருக்குப் பொறுப் பாகாது.

### கீறிய செக்குகளுக்கு மட்டுமே

முதலாவதாக, கீறிய செக்குகளுக்காக மட்டுமே வசூலிக்கும்-பாங்கருக்குச் சட்டம் பாதுகாப்பை அளிக்கிறது என்பதை நாம்

அறிய வேண்டும். எழுதுபவரின் கையொப்பம் கள்ளத்தனமாக இடப்பட்டிருப்பின், அது செக்காகாது. திறந்த செக்குகளை (கீறாச் செக்குகள்) வசூலிக்கும்-பாங்கர் பாதுகாப்புக்கு உரியவராகார்; ஏனெனில், அதுபோன்ற செக்குகளை வைத்திருப்பவர் பாங்கரின் வழியாகவே வசூலிக்க வேண்டும் என்கிற தேவையில்லை. மேலும், பாங்கரை அடையுமுன்பே கீறலைக் கொண்டுள்ள செக்குகளுக்கு மட்டுமே பாதுகாப்பு அளிக்கப்படுகிறது என்பதையும் நாம் கண்ணுற வேண்டும். வசூலிக்கும்-பாங்கரை அடைந்தபின், செக்கு கீறலிடப்பட்டால், 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவின்படிக் கீறிய செக்கு என்று அதைக் கருத முடியாதாகையால், அப்பிரிவு நல்கும் பாதுகாப்புக்கு, அந்த பாங்கர் உரியவராகார். தாம் பெறும் செக்குகளைப் பிறர் களவாடி, பணம் பெறுவண்ணம் தடுக்குமுகத்தான், அவற்றில் கைப்பொறிப்பால் கீறலிடல், பாங்கர் பொதுவாக மேற்கொள்ளும் ஓர் எச்சரிக்கையாகும். மற்றொரு பாங்கு அவற்றை வசூலித்தால், அவை கீறிய செக்குகளாகவே பாவிக்கப்படும்; ஆனால், கீறலிட்ட பாங்கரே அவற்றை வசூலித்தால், அவை கீறாச் செக்குகளாகவே கருதப்படும்; அப்பாங்கரும் பாதுகாப்புக்கு உரியவராகார். கீறலிடப்பட்ட இலாபஈவு ஆணைச்சீட்டுகளை வசூலிக்கும்-பாங்கருக்கு, அவற்றின் உண்மை உரிமையாளருக்கு எதிராக, உண்டியல் சட்டத்தின் 95ஆம் பிரிவு, இங்கிலாந்து நாட்டில், பாதுகாப்பை நல்குகிறது. இந்தியாவிலும் இலாபஈவு ஆணைச்சீட்டுகளை உறுதியாகக் கீறலிடலாம் என்பதற்கு நடைமுறையில் தக்க ஆதாரங்கள் உள. இருப்பினும், வசூலிக்கும்-பாங்கருக்குக் கீறிய செக்குகளின்மீது அளிக்கப்படும் பாதுகாப்பு, கீறலிடப்பட்ட இந்தப் பத்திரங்களின்மீதும் கிட்டுமா என்பது, இப்பத்திரங்கள், செக்கின் இலக்கணம் உணர்த்துகின்ற தேவைகளை நிறைவேற்றுகின்றனவா என்கிற வினாவின் விடையைச் சார்ந்தேயுள்ளது. இங்கிலாந்து நாட்டில் 1932ஆம் ஆண்டு உண்டியல் சட்டம், செக்குகளுக்கு அளிக்கும் இப்பாதுகாப்பை, பாங்கு வரைவுகளுக்கும், 'செலாவணித் தன்மையற்றது' என்று கீறப்பட்ட செக்குகளுக்கும் பரப்பியது. வரைவை எழுதுபவரும், எழுதப் பெற்றவரும் ஒரே பாங்கின் அலுவலகங்களாயினும், அது பாதுகாப்புக்கு உரியதாயிற்று.

மதுரரி சி. சன்யாசிலிங்கம் (எ.) தி எக்ஸ்சேஞ்ச் பாங்கு ஆஃப் இந்தியா அண்ட் ஆப்பிரிக்கா லிமிடெட் (1946)—இந்திய பாங்கர் நிலையத்தின் இதழ், நூற்பிரிவு XVII, பக். 31 என்னும் வழக்கில் தக்க அறிமுகமோ, போதிய விசாரணையோயின்றி நடப்புக் கணக்கைத் துவக்க ஒருவருக்கு, பிரதிவாதி பாங்கு இணக்க

மளித்தது ; அவருக்காக வரைவு ஒன்றை அது வசூலித்தது ; அந்த வரைவு ஒருவருக்குச் சாதகமாக எழுதப்பட்டு, மற்ெருருவருக்குச் சாதகமாகப் புறங்குறிக்கப்பட்டிருந்தது ; புறக்குறிப்பாளியின் பெயரும், கணக்கை வைத்திருப்பவரின் (வாடிக்கைக்காரர்) பெயரும் சரிவரப் பொருந்தவில்லை ; எனவே, அந்த பாங்கு புறக் கணிப்புக்கு இடமளித்த குற்றத்திற்கு ஆளானது என்று பம்பாய் உயர்நீதிமன்ற நீதிபதி கோயஜி அவர்கள் தீர்ப்பளித்தார். இந்த வழக்கின் நிகழ்ச்சிகளாவன : சாந்திலால் லால்சந்த் ஷா அல்லது அவருடைய ஆணைக்கேற்ப என்று எழுதப்பட்ட வரைவை, இந்த வழக்கின் வாதி, விஜயநகரத்தில் அன்றிருந்த இம்பீரியல் பாங்கு ஆஃப் இந்தியாவிடமிருந்து வாங்கினர். பம்பாயில் அன்றிருந்த இம்பீரியல் பாங்கு ஆஃப் இந்தியாவில் செலுத்தப்படுமாறு அது எழுதப்பட்டிருந்தது, பொது அஞ்சலில் பெறற்குரியவருக்கு அதை அவர் அனுப்பினர். இடப்பெயர்வின்போது அது தொலைந்து விட்டது. நாகின்தாஸ் பிரேம்சந்த் ஷா என்னும் தமது வாடிக்கைக்காரருக்காக, பிரதிவாதி பாங்கு அதை வசூலித்தது. நாகின்தாஸ் பிரேம்ஜி ஷா என்பவர் தக்க அறிமுகமின்றி, பிரதி வாதி பாங்கில் கணக்கைத் துவக்கினர் என்பதும், திருப்தியற்ற முறையில் ஐயப்பாட்டை எழுப்பும் பாணியில் அவர் அதை இயக்கி வந்தார் என்பதும் இங்கு நினைவிற்கொள்ள வேண்டிய செய்தி களாகும். அந்த வரைவு நாகின்தாஸ் பிரேம்சந்த் ஷா என்பவ ருக்குச் சாதகமாகப் புறங்குறிக்கப்பட்டிருப்பினும், நாகின்தாஸ் பிரேம்ஜி ஷா (கணக்கு வைத்திருப்பவர்) என்பவரின் சார்பில் அதைப் பிரதிவாதி பாங்கு வசூலித்தது. இந்த நிகழ்ச்சிகளனைத்தின் திரண்ட விளைவாக, புறக்கணிப்புக்கு இடமளித்த குற்றத்திற்கு அந்த பாங்கு ஆளானது என்று நீதிபதி அவர்கள் தீர்ப்பளித்தார்.

செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவின்கீழ், இது போன்ற வரைவுகளுக்குப் பாதுகாப்பு கிட்டுமா என்று தாம் ஐயுறுவதாகவே நீதிபதி அவர்கள் கூறினர். அவருடைய கூற்றுக்கு, கேபிடல் அண்ட் கவுண்டீஸ் பாங்கு (எ.) கார்டன் (1903) ஏ. சி. 240 என்ற வழக்கில் பிரபுக்கள் மன்றம் வழங்கிய தீர்ப்பே அடிப் படையாக அமைந்தது. உண்டியலுக்கு 1882ஆம் ஆண்டு உண் டியல் சட்டம் இயம்பும் இலக்கணத்தினின்றும் 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 5ஆம் பிரிவு வகுக்கும் இலக்கணம் மாறுபட்டுள்ளது; உண்டியலின் எழுதுபவரும், எழுதப்பெற்ற வரும் வெவ்வேறு ஆள்களாக இருக்க வேண்டும் என்று ஆங்கி லேயச் சட்டம் இயம்புகிறது ; ஆனல் இந்தியச் சட்டம் அவ்வாறு வேண்டுவதில்லை. எனவே, இது போன்ற பாங்கு வரைவுகள் செக்குகளாகவே இந்தியாவில் மதிக்கப்பட்டு வந்தன. இருப்பினும்,

செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவை இந்திய அரசாங்கம் திருத்தியமைத்தது. பாங்கொன்றின் ஒரு கிளையகம் அதே பாங்கின் மற்ருெரு கிளையகத்தின்மேல் எழுதும் பாங்கு வரைவுகளைக் கீறும் வழக்கத்தை இது சீர்செய்தது மட்டுமின்றி, அவற்றைத் தூய்மையான நம்பிக்கையுடன் வசூலிக்கும்-பாங்குக்கும் பாதுகாப்பை நல்கியது.

**வாடிக்கைக்காரர்களின் சார்பில் வசூலித்தல்**

இரண்டாவதாக, வாடிக்கைக்காரரின் முகவர் என்னும் தகுதியில் வசூலிக்கும் செக்குகளின்மீது மட்டுமே பாங்கர் பாதுகாப்பைப் பெற இயலும்; தமக்குச் சொந்தமான செக்குகளையோ அல்லது அவற்றை விலைக்கு வாங்கி வைத்திருப்பவர் என்னும் தகுதியிலோ அவர் வசூலித்தால், பாதுகாப்புக்கு உரியவராகார். முகவர் என்னும் தகுதியில் செக்கை வசூலித்தல், விலைக்கு வாங்கி அதை வைத்திருத்தல் ஆகிய இரண்டு நிலைகளுக்குமிடையே உள்ள வேறுபாட்டை, பாங்கர் அதற்குப் பணங்கொடுத்துவிட்டாரா, அதை வசூலிக்குமுன்பே அதன் தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கில் வரவு வைத்து விட்டாரா ஆகிய வினுக்களின் விடையைக் கொண்டு முன்பு தீர்மானித்தனர். இதுபோன்ற செக்குகளின் வசூல் பணத்தைப் பெறுமுன்னரே, அவற்றின் தொகைகளை அவர்களுடைய வாடிக்கைக்காரர்களின் கணக்குகளில் இங்கிலாந்திலுள்ள பாங்குகள் வரவு வைத்து வந்தன. இந்த வழக்கத்திஞல் விளையும் கேடுகளை, கேபிடல் அண்ட் கவுண்டீஸ் பாங்கு லிமிடெட் (எ.) கார்டன் (1903) ஏ. சி. 240 என்ற வழக்கின் தீர்ப்பு சுட்டிக் காட்டியது. மேலும் இத்தீர்ப்பு, உண்மை உரிமையாளருக்கு பாங்கின் பொறுப்பு என்ன என்று தீர்மானித்ததுமட்டுமின்றி, கீழ்க்காணும் கூற்றுகளையும் வகுத்தது [பேஜட் அவர்களின் பாங்கியலின் சட்ட அமைப்பு என்னும் நூல், 3-ஆம் பதிப்பு, பக்கங்கள் 321-322ஐக் காண்க. மேலும், மாவ்ஜி ஷாம்ஜி (எ.) தி நேஷனல் பாங்கு ஆஃப் இந்தியா, 25, பம்பாய் 499 (514) என்னும் வழக்கின் தீர்ப்பையும் காண்க].

(1) வாடிக்கைக்காரரின் கணக்கில் இட்ட செக்கை ரொக்கத்தைப்போல வரவு வைத்தல், அதற்கு விலை கொடுத்து உரிமை மாற்றிப் பெறுபவருக்கு இணையாக, அந்த பாங்கரை ஆக்கிவிடும்.

(2) அச்செக்குக்கு எதிராக, கணக்கிலிருந்து உடனே பணத்தை எடுக்கும் உரிமையை வாடிக்கைக்காரருக்கு அது கொடுக்கும்.

(3) அச்செக்கு அவமதிக்கப்படுங்காலத்து, வாடிக்கைக் காரரின் கணக்கில் அதன் தொகையைப் பற்று வைக்க பாங்கருக்கு அது உரிமையளிக்கிறது அல்லது உண்மை உரிமையாளருக்கு பாங்கரைப் பொறுப்பாக்குகிறது.

### 1906ஆம் ஆண்டு உண்டியல் திருத்தச் சட்டம்

இங்கிலாந்திலுள்ள பாங்கருக்கு இத்தீர்ப்பு கெடுதியை விளைவிக்கக்கூடியதாக இருந்ததாகையால், 1906ஆம் ஆண்டு உண்டியல் (கீறிய செக்குகள்) சட்டம் (6 எட்வா. 7, சி. 17) இயற்றப்பட இது வழி கோலியது. இச்சட்டத்தின் சாரமான பகுதியைத் தாங்கியிருந்த 1ஆம் பிரிவு கூறுவதாவது :

> வாடிக்கைக்காரரின் கணக்கில் இடும் கீறிய செக்கின் தொகையை வசூலிக்கும் முன்பே, அவருடைய கணக்கில் அத்தொகையை பாங்கர் வரவு வைத்திருப்பினும், வாடிக் கைக்காரருக்காக அந்தத் தொகையைப் பெறுபவராகவே 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் 82ஆம் பிரிவுப்படி அந்த பாங்கர் கருதப்படுவார்.

### 1922ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்(திருத்தச்)சட்டம்

கார்டன் வழக்கால் இங்கிலாந்தில் வசூலிக்கும்-பாங்கரின் நிலைமை வலுவிழந்ததையும், 1906ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம், அதற்கு வலுவூட்டிச் சீரமைத்ததையும் மேலே கண்டோம். மேற்கூறிய தீர்ப்பின் விளைவை இந்தியாவிலிருந்த பாங்கர் முற்றிலும் உணரத் தவறினர் போலும். 1919ஆம் ஆண்டுதான் இந்நூலாசிரியர் 'இந்திய பாங்கியலின் தேவைகள்' என்ற தமது சொற்பொழிவில், இத்தீர்ப்பின் விளைவுகளை பாங்க ருக்கு இடித்துக் கூறினர் [இந்திய பாங்கியலின் தேவைகள் (The banking needs of India) நூலாசிரியர் எம். எல். டேனன் அவர்கள் (1919) பக். 11] ; ஆனல் அது அவர்களை எழுச்சியுறச் செய்யவில்லை. எனவே 1922ஆம் ஆண்டுவரை அவர்கள் நிலைமை திருப்தியற்றதாகவே இருந்தது. 1922ஆம் ஆண்டு அவர், இந்திய வணிகர் சங்கத்தின் மூலமாக, அன்றைய இந்திய அரசாங்கத்தின் சட்டத்துறையை அணுகி, நிலைமையை எடுத்துக் கூறினர். அத்துறை வாணிபச் சங்கங்கள், பிற பொது அமைப்புகள் ஆகிய வற்றின் கருத்தைப் பெற்று, 1906ஆம் ஆண்டு உண்டியல் (கீறிய செக்குச்) சட்டத்தின் பாணியில் திருத்தச் சட்டம் ஒன்றை இயற் றிற்று. இத்திருத்தம் 1922ஆம் ஆண்டின் 18ஆம் சட்டமாக உருவெடுத்து, 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவின் விளக்கமாகப் பின்வருமாறு அமைந்தது :

வாடிக்கைக்காரரின் கணக்கில் இடும் கீறிய செக்கின் தொகையை வசூலிக்கும் முன்பே, அவருடைய கணக்கில் அத் தொகையை பாங்கர் வரவு வைத்திருப்பினும், வாடிக்கைக் காரருக்காக அந்தத் தொகையைப் பெறுபவராகவே இப்பிரிவுப்படி, அந்த பாங்கர் கருதப்படுவார்.

முகமை அதிகாரத்திற்கு முரண்பட்ட செயல் எதையேனும் பாங்கர் செய்வாராயின், வாடிக்கைக்காரரின் வசூலிக்கும் முகவராக அவரைக் கருதவியலாது. விலை கொடுத்து செக்கின் உரிமையை மாற்றிப் பெறுபவர்போல பாங்கர் அதை வாங்கிக் கொண்டு அதன் பணத்தைப் பெற்ருல், தமக்காகவே அத்தொகை யைப் பெறுகிருரே தவிர, வாடிக்கைக்காரருக்காக அதைப் பெற்றுக்கொள்கிருர் என்று கருத இயலாது. உதாரணமாக, பாங்கர் அதற்கு நேரடியாகப் பணந்தந்து பெற்று, பிறகு அதை வசூலித்தால், அதை வசூலித்த காரணத்தை முன்னிட்டு, சட்ட ரீதியான பாதுகாப்பை அவர். பெற இயலாது. வாடிக்கைக்காரர் கணக்கில் இடும் செக்கின் தொகையை அவருடைய கணக்கில் வரவு வைத்து, தாம் அதை வசூலிக்கும் முன்பே அந்தத் தொகையைத் திருப்பி எடுக்க வாடிக்கைக்காரருக்கு இணக்க மளிக்கும் பாங்கர், பாதுகாப்புக்கு உரியவரா என்பது மிக்க ஐயப்பாடுள்ள ஒரு செய்தியாகவே இருக்கிறது. தொழில் நடப் புக்கு ஏற்ப, தமது பெயரைச் செக்கின் குறுக்கே முத்திரை இடுவ தால் மட்டுமே, விலைக்கு வாங்கி வைத்திருப்பவரைப் போல பாங்கர் அதைப் பாவித்தார் என்று கூற முடியாது.

**வாடிக்கைக்காரரின் சார்பாக அதை வசூலிக்க வேண்டும்**

தமது வாடிக்கைக்காரரின் சார்பாக, பாங்கு செக்குகளை வசூலிக்க வேண்டும். வாடிக்கைக்காரரல்லாத மற்றவருக்காகக் கீறிய செக்கொன்றை வசூலிக்கும்-பாங்கு, 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவு அளிக்கும் பாதுகாப் புக்கு உரியதல்ல. இந்நூலின் மூன்ரும் அத்தியாயத்தில் எவர் வாடிக்கைக்காரர் ஆவார் என்பதை விரிவாக ஆராய்ந்திருக்கிருே மாகையால், அதையே இங்குத் திரும்பக் கூறுதல் தேவையற்றது. யாருக்காக பாங்கர் செக்கை வசூலிக்கிருரோ அவர் முறையான வாடிக்கைக்காரராய் இருந்தாலன்றி, ‘பல வகைப்பட்ட வாடிக் கைக்காரர்கள்’ போன்ற தலைப்பில் அந்த பேரத்தைப் பதிவு செய்தல் போன்ற சமய தந்திரங்களினுல் யாதொரு பயனையும் பாங்கர் பெற முடியாது.

**நன்னம்பிக்கையுடனும், புறக்கணிப்பு இன்றியும் செக்கின் தொகையைப் பெற வேண்டும்**

இறுதியாக, நன்னம்பிக்கையுடனும், புறக்கணிப்பு இன்றியும் செக்கை வசூலித்தால் மட்டுமே, வசூலிக்கும்-பாங்கர் பாதுகாப்பைப் பெற முடியும். 'நன்னம்பிக்கையுடனும் புறக்கணிப்பு இன்றியும்' என்னும் சொற்கள் பணம் பெறும் செயலை மட்டும் குறிப்பதானால், சர் ஜான் பேஜட் அவர்கள் பாணியில் சொல்வோமானால், அவை 'சிறுமை, சிறுமையினும் சிறுமை, வெறும் சூழ்ச்சியாகும்'. பணம் பெறும் வரையிலுமுள்ள எல்லாப் பீடிகையான செயல்களையும் அச்சொற்கள் குறிக்கும். நன்னம்பிக்கை என்பதைப் பற்றிய விளக்கம் தேவையற்றது. ஏனெனில், பாங்கர் அனைவரும் நன்னம்பிக்கையுடன் செயலாற்றுவர் என்று எடுத்துக் கொள்கிறோம். எனவே, புறக்கணிப்பின்றி என்பதை மட்டும் இங்கு விரிவாக ஆராய்வோம்.

## புறக்கணிப்பின் அடிப்படை

**மனநிறைவையளிக்கத்தக்க சான்றுரையின்றி நடப்புக் கணக்கைத் துவக்கல்**

*1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவுப்படி எது புறக்கணிப்பாகும் என்பதைப்பற்றி ஆழ்ந்த கருத்து வேறுபாடு இருப்பதை நாம் உணர வேண்டும். வசூலிக்கும்-பாங்கருக்கும், உண்மையான உரிமையாளருக்குமிடையே ஒப்பந்த உறவு எதுவும் இல்லை; எனவே, வசூலிக்கும்-பாங்கர் உண்மை உரிமையாளருக்கு எந்த விதத்திலும் எள்ளளவேனும் கடமைப்பட்டவரல்ல; ஆகவே, இப்பிரிவு கூறும் புறக்கணிப்பு செயற்கையானது, புனைந்துரையானதுமாகும். அவருடைய வாடிக்கைக்காரருக்கு மட்டுமே அவர் கடமைப்பட்டவர். லாயிட்ஸ் பாங்கு (எ.) இ. பி. சேவ்ரி & கம். (1933) ஏ. சி. 201 என்னும் வழக்கில் இதைப்பற்றி மிக்கப் பொருத்தமாகப் பிரபு ரைட் அவர்கள் கருத்துரைத்துள்ளார்: 'சட்ட முரணான கையாளுகை செய்ததற்காகத் தொடுக்கும் வழக்கில் உண்மை உரிமையாளர், தமக்கு அப்பொருளின்பாலுள்ள உரிமையையும், பிரதிவாதி அதை எடுத்துக்கொண்ட செயலையும் மட்டும் மெய்ப்பித்தால் போதும்; புறக்கணிப்பு இன்மை, உள் நோக்கமின்மை, அறியாமை போன்று பிரதிவாதி கூறும் தற்காப்பு மறுப்புக்கள் அனைத்தும் முக்கியமற்றவையாகும். எனவே, உண்டியல் சட்டத்தின் 82ஆம் பிரிவு வசூலிக்கும்-பாங்கர்மீது புதிய பொறுப்பையோ கடமையையோ சுமத்தவில்லை; மாறாக,*

காத்துக்கொள்ளவே அல்லது மறுக்கவே முடியாத சட்டமுரணுன கையாளுகை என்னும் குற்றத்தின் பொறுப்பிலிருந்து பாங்கரை விடுவிக்கும் சலுகையாகும் அது.' இது, வசூலிக்கும்-பாங்கருக்குச் சட்டமியற்றுவோர் அளிக்கும் சிறப்புரிமையும் விலக்குமேயன்றி, வேறல்ல ; இச்சலுகை உண்மை உரிமையாளருக்கு மிக்கக் கெடுதியை விளைவிப்பதாக இருப்பதால், நிபந்தனையின்றி அதை அளிக்காமல், நிபந்தனைக்குட்படுத்தி அதைத் தந்தனர் ; வசூலிக்கும்-பாங்கர் இச்சலுகைக்குப் பாத்திரமாகத் தக்க கவனம் செலுத்த வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. இதன் பயனாக உண்மை உரிமையாளரது நலனும் சிறிது காக்கப்படுகிறது.

### பரந்த பொருளில் இது வழங்குகிறது

வசூலிக்கும்-பாங்கருக்கு அளிக்கப்படும் சட்டரீதியான பாதுகாப்பில் அடங்கியுள்ள புறக்கணிப்பு என்னும் கோட்பாடு பரந்த பொருள்படும்; வெவ்வேறு விதமாகப் பொருள்படத் தக்கது. எனவே, இதுவரை நீதிமன்றங்கள் ஆராயாத (கண்டிராத) சூழ்நிலைகளில் பாங்கரின் நடத்தை புறக்கணிப்புக்கு இடமளித்ததாகுமா ஆகாதா என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது. லாயிட்ஸ் பாங்கு (எ.) சார்டர்டு பாங்கு ஆஃப் இந்தியா, ஆஸ்திரேலியா அண்ட் சைனு லிமிடெட் (1929) 1 கே. பி. 40 என்னும் வழக்கில் கூறப்பட்டதாவது : 'விழிப்பாகச் செயல்பட வேண்டும் என்னும் கடமையை வசூலிக்கும்-பாங்கர்மீது ஆங்கில வழக்கு நீதி விதிக்கவில்லை; இக்கடமையை இச்சட்டமே படைக்கிறது.' 'புறக்கணிப்பு' என்பது பற்றி நீதிமன்ற விளக்கவுரைகள் மிகவும் பரவலான பொதுவான பாணியில் கூறிச் செல்வதால், நடைமுறை விதிகளாக அவற்றைக் கருதவும் பயன்படுத்தவும் இயலாது. எடுத்துக்காட்டாக, டபிள்யூ. வால் பாங்கு & கம்.. லிமிடெட் (எ.) வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு லிமிடெட் என்னும் வழக்கில் புறக்கணிப்பு என்னும் சொல்லுக்குப் பின்வரும் இலக்கணம் வகுக்கப்பட்டது : 'குறிப்பிட்ட வழக்கின் சூழ்நிலைகளனைத்தையும் நினைவிற்கொண்டு, நியாயமான மனிதன் ஒருவன், செய்யக்கூடுமான செயல்களைச் செய்யாதிருத்தலும் அல்லது அவன் செய்ய எண்ணுதவைகளைச் செய்தலும் புறக்கணிப்பாகும்.' மற்ருெரு வழக்கில் இச்சொல் பின்வருமாறு விளக்கப்பட்டது : 'குறிப்பிட்ட செக்கைக் கணக்கில் இடும் செயலோடு, முந்திய, தற்பொழுது நிலவும் சூழ்நிலைகளை இணைத்துப் பார்க்கும்போது, அச்செயல் நடைமுறைப் போக்குக்கு மிக்க மாறுபட்டிருக்கிறதா, அந்த மாறுபாடு பாங்கரை ஐயுறச் செய்து, அதைப்பற்றி ஆராயுமாறு தூண்ட வல்லதா என்பதே புறக்கணிப்பை உணர்த்த வல்ல சோதனையாகும்.'

## சட்டமுரணை கையாளுகை (Conversion)

### வரையறுப்பு

ஒரு பொருளை அதன் உரிமையாளர் வைத்திருந்து அனுபவிக்கும் உரிமைக்கு முரண்பாடான முறையில் அதை எடுத்துக் கொள்ளல், பயன்படுத்துதல், பிறருக்கு விற்றல் அல்லது அதை அழித்தல் போன்ற சட்ட எதிரான செயல், சட்டமுரணை கையாளுகை எனப்படும். உள்நோக்கம் எதுவாயினும், தெரிந்து செய்யினும் அன்றித் தெரியாமல் செய்யினும் மேற்கூறிய செயல் சட்டமுரணை கையாளுகையாகும். ஏதும் அறியாத குற்றமற்ற ஒருவர்கூட (விற்பனைக்காக அமர்த்தப்படும் முகவர் போல), சட்டமுரணை கையாளுகை செய்த குற்றத்திற்கு ஆளாகலாம் (ஹால்லின்ஸ் (எ) ஃபௌலர், எல். ஆர். 7, ஹெச். எல். பக். 795).

### சட்டமுரணை கையாளுகை தொட்டறியக்கூடிய சொத்துக்களுக்குப் பொருந்தும்; கடனுக்குப் பொருந்தாது

தொட்டறியக்கூடிய இயங்கும் சொத்துக்களைப் பொறுத்தவரை மட்டுமே, சட்டமுரணை கையாளுகை செய்த குற்றம் சாட்டி இழப்பீடு பெறும் பரிகாரம், அவற்றின் உரிமையாளர்களுக்கு உண்டு. கடனைப்பொறுத்தவரை, கடனீவோருக்கு இந்தப் பரிகாரம் கிட்டுவதில்லை. அதாவது, கடனைச் சட்டமுரணை கையாளுகை செய்ய முடியாது. மேற்கோளாக, A என்பவர் B என்பவருக்குக் கடன் (திருப்பிக்) கொடுக்க வேண்டும் எனக் கொள்வோம். C என்பவர் மோசடி செய்து, அதை A இடமிருந்து பெற்றுக்கொண்டால், A என்பவர் Bக்கு அதை மறுபடியும் செலுத்தியாக வேண்டும். சட்டமுரணை கையாளுகை செய்த குற்றத்திற்காக B என்பவர் C மேல் வழக்குத் தொடுக்கவும், நட்ட ஈடு பெறவும் முடியாது.

### செலாவணி முறிகளைச் சட்டமுரணை கையாளுகை செய்தல்

சட்டமுரணை கையாளுகை என்னும் சித்தாந்தம் செலாவணி முறிகளுக்குப் பொருந்துமா என்று ஆராயும்பொழுது பல சிக்கல்கள் எழுகின்றன. செலாவணி முறி என்பது கடன் ஒன்றின் ஆதாரச் சீட்டேயன்றி, வேறன்று. அது இரண்டு பகுதிகளைக் கொண்டது. முதலாவது, மிக மதிப்பு வாய்ந்த பகுதி, அது காட்டும் கடன் ஆகும்; ஆனால் இதைச் சட்டமுரணை கையாளுகை செய்ய இயலாது. அதன் இரண்டாவது பகுதி, அது எழுதப்பட்டுள்ள சீட்டாகும்; இதைச் சட்டமுரணை கையாளுகை செய்யலாம்; ஆனால் இது பயனற்றது என்பது வெளிப்படை. செலாவணி முறியொன்று தம்மிடமிருந்து தவறாகப் பறிக்கப்படும்

போது அச்சீட்டை மட்டுமே சட்டமுரணான கையாளுகை செய்தார் என்று குற்றம் சாட்டி, அக்குற்றவாளியிடமிருந்து இழப்பீடு பெறும் பரிகாரத்தை அதன் உண்மை உரிமையாளருக்கு ஆங்கிலேயச் சட்டம் கொடுத்திருப்பது மிகவும் புதுமையே. அந்தச் சீட்டு மதிப்பற்றதாகையால், அவர் பெறும் இழப்பீடும் பெயரளவானதாக மிகச் சிறிய தொகையாகவே இருக்கும். இருப்பினும், அந்த முறியின் முகமதிப்பையே இழப்பீடாகக் கொடுக்க வேண்டும் என்னும் விதி மறுப்புக்கு இடமின்றி இப்பொழுது நிலைபெற்றுவிட்டது.

செலாவணி முறியொன்றின்பால் முழு உரிமையும் இல்லாது அதை வைத்திருக்கும் உரிமை மட்டுமேயுள்ள ஒருவர், அதைக் கையாளுவதில் புறக்கணிப்புக்கு இடமளித்த பாங்கின்மீது வழக்குத் தொடுக்கலாம் என்ற தீர்ப்பை இங்கிலாந்தில், ப்யூட் (கோமகன்) (எ.) பெர்க்லே(ய்)ஸ் பாங்கு லிமிடெட் (1954, 3 டபிள்யூ. எல். ஆர். 741) என்னும் வழக்கில் மாட்சிமை தங்கிய இராணியார் நீதிமன்றம் அளித்தது. இத்தீர்ப்பு, இச்சட்டத் துறைக்கு அரியதொரு கருத்தை வழங்கியது என்பது இங்குக் கூறற்பாலது.

## இழப்பீட்டை எந்த அடிப்படையில் மதிப்பிடுவது ?

கருத்தியல் கண்ணோட்டத்தோடு ஆராயுங்கால், இதைப் பற்றிய நிலைமை தெளிவற்றதாகவும், மனநிறைவையளிக்காததாகவும் தெரியலாம். ஆனால், நீதியை நிலைநாட்ட வேண்டிய பொறுப்பும் சட்டத்திற்கு உண்டு என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. பாவின் ஜூனியர் அண்ட் சன்ஸ் (எ.) லண்டன் அண்ட் சவுத் வெஸ்டர்ன் பாங்கு (1900) க்யூ.பி. 270 என்னும் வழக்கில் பின்வரும் கருத்து இயம்பப்பட்டது : ‘சட்டத்திற்கு முரணான கையாளுகை செய்யப்பட்ட அந்தப் பத்திரம், அதுவாகவே எந்த நடவடிக்கைக்கும் இடமளிப்பதில்லை; கொடுக்கப்பட்ட கடனுக்கு, அது வெறும் ஆதாரமேயன்றி, வேறன்று; எனவே, சட்டமுரணான கையாளுகை செய்த குற்றத்திற்காக எடுக்கப்படும் நடவடிக்கை என்று அதைப் பாவித்தால், குறைந்த நட்டஈடு மட்டுமே பெற முடியும் என்று வாதிக்கப்பட்டது. ஆனால், அந்த முறியின் ஆணைக்கேற்பச் செலுத்தப்படும், பெறப்படும் பணமே நாம் கருத்தில் கொள்ளவேண்டிய தலையாய செய்தியாகும். வாதிக்குச் சொந்தமான அந்த முறியைச் சட்டமுரணான கையாளுகை செய்து அதன் தொகையைப் பெற்றவர், முறியின் மதிப்பிற்கு அந்தப் பணமே முடிவான சான்றாகும் என்பதை மறுக்க முடியாது.’

மார்ரிசன் (எ.) லண்டன் கன்டிரி அண்ட் வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு (1914), 3 கே.பி. 356 என்னும் வழக்கில் இதே கருத்து சற்று வேறு பாணியில் கூறப்பட்டது. இத்தீர்ப்பின் அடிப்படையாக அமைந்த தத்துவம் அவ்வழக்கில் கூறியதை அப்படியே எடுத்து ஆளுவோமாயின், பின் வருமாறு : 'அந்தச் செக்குகளை வாதி வைத்திருந்தபோது, அவர் அவற்றை எந்த நிமிடமும் அழித்திருக்கக்கூடுமாயினும், அவை, அவற்றின் தொகைகளை பாங்கரிடமிருந்து திரும்ப எடுக்க உதவும் உள்ளார்ந்த சக்தி வாய்ந்தவை; அவரை அடையாது, பிறரை அவை அடைந்திருந்தால், அவற்றின் தொகைகளை அவர் இழக்க நேரும். செக்கொன்றைச் சமர்ப்பித்து அதன் பணத்தைப்பெற்ற ஒருவர், அதற்குப் பெயரளவான குறைந்த மதிப்பேயுள்ளது என்று கூற வாயற்றுப் போகிறார்.' இறுதியாக, எ. எல். அண்டர்வுட் லிமிடெட் (எ.) பாங்கு ஆஃப் லிவர்பூல் (1924), 1 கே.பி. 775 என்னும் வழக்கில் பிரபு நீதிபதி ஸ்கரட்டன் அவர்கள் கூறியதாவது : ' வசூலிக்கும்-பாங்கர்கள் செக்கை வசூலித்தவுடன், அதன் வாழ்வு (இயக்கம்) முடிகிறது; வசூலித்த பணத்தை அவர்கள், அவர்களுடைய வாடிக்கைக்காரர்களிடமிருந்து கடனாகப் பெற்றதற்கு ஒப்பாகும். இந்தச் செயல்கள், அவர்கள் செக்குகளைச் சட்டமுரணான கையாளுகை செய்ததற்குச் சமமாகும்.'

**சட்டமுரணான கையாளுகை என்று, எப்பொழுது நடவடிக்கை எடுக்கலாம் ?**

செலாவணி முறியொன்றின் உண்மை உரிமையாளரது உரிமைகள் எந்தச் சூழ்நிலைகளில் பறிக்கப்பட்டுப் பயனற்றுப் போகும் என்பதை முன்பே கண்டோம். செலாவணி முறியொன்றில் கள்ளக்கையெழுத்து இல்லாதிருந்து, அது முறைப்படி பெற்றவரை அடைந்தாலும் அல்லது கள்ளக்கையெழுத்து அதில் இருந்து அது ஒரு செக்காகவும் இருந்து, அதன் தொகையை பாங்கர் முறைப்படி செலுத்தியிருந்தாலும், அதன் உண்மை உரிமையாளரின் உரிமைகள் பறி போகின்றன. இவற்றைத் தவிர, பிற சூழ்நிலைகளனைத்திலும் சட்டமுரணான கையாளுகை செய்த குற்றத்திற்காக வழக்குத் தொடுக்கலாம்.

**பாங்கரும் சட்டமுரணான கையாளுகையும்**

சட்டரீதியான பாதுகாப்பே இல்லாதிருந்தால், கள்ளப் புறக்குறிப்புள்ள செக்கைச் செலுத்தினாலும் அல்லது கள்ளப் புறக்குறிப்புள்ள செக்கு, வெண்கடன்பத்திரம் அல்லது உண்டியலை வசூலித்தாலும், சட்டமுரணான கையாளுகை செய்த குற்றத்திற்கு பாங்கர், ஆளாவார். நாட்டின் பொருளாதார வாழ்வுக்கு பாங்குத்

தொழிலின் இன்றியமையாமையையும், சட்டமுரணான உரிமை மாற்றம் என்னும் சித்தாந்தம், அளவற்ற ஆபத்துகளுக்கும் பொறுப்புக்களுக்கும் பாங்கரை இலக்காக்குவதையும் கருத்திற் கொண்டுதான், நிபந்தனையிணைந்த சலுகையை அல்லது விலக்கை, மற்றவர்களுக்குத் தராமல், பாங்கருக்கு மட்டும், சட்டம் அளித் திருக்கிறது. 'செலாவணித் தன்மையற்றது' என்று குறிக்கப்பட்ட செக்கையோ அல்லது உண்டியலையோ விலைக்கு வாங்கி வைத்தி ருக்கும் பாங்கர், சட்டரீதியான அல்லது மற்றெந்த பாதுகாப் புக்கும் உரியவராகாராதலின், சட்டமுரணான கையாளுகை என் னும் குற்றத்திற்கு இலக்காவார். பேகர் (எ.) பர்க்லே(ய்)ஸ் பாங்கு லிமிடெட் (சி.சி. நூற்பிரிவு 25, பக். 293) என்ற வழக்கில் மூன்றும் ஆள் ஒருவர், செக்கொன்றைக் கணக்கில் இட்டார். அவர், கூட்டு நிறுவனத்தின் கூட்டாளி ஒருவரிடமிருந்து அதைப் பெற்றார். அந்தக் கூட்டாளி, அந்த நிறுவனத்திலிருந்து அதைக் கைப்பற்றினர். அந்தப் பாங்கின் நிருவாகர் அச்செக்கை வரவு வைக்குமுன்பு போதுமான விசாரணை செய்திருக்க வேண்டும்; எனவே, முறைப்படி பெற்றவராக அதைக் கருத முடியாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

### பணத்தை வாங்கி வைத்திருந்ததாகக் குற்றச்சாட்டு

சட்டமுரணான கையாளுகை செய்ததற்காகத் தொடுக்கப் படும் வழக்கில் 'வாதியின் நலனுக்காகப் பணத்தை வாங்கி வைத் திருந்தார்' என்னும் குற்றச்சாட்டையும் மாற்றாகச் சேர்த்துக் கொள்வது வழக்கம். தீங்குற்றவர் சமூகக்குற்றத்தை வற்புறுத் தாது. கற்பனை ஒப்பந்தத்தின் அடிப்படையில் வழக்குத் தொடுக்க லாம் என்னும் ஆங்கிலச் சட்டத்திலுள்ள கோட்பாட்டினின்றும் எழும் பரிகாரம் இது. A என்னும் உண்மை உரிமையாளரின் கள்ளப் புறக்குறிப்பைக்கொண்ட உண்டியலின் எழுதப்பெற்ற வரிடமிருந்து, B என்பவர் பணம் பெற்றால், A என்பவர் B என்ப வரிடம், 'நான்தான் அந்த உண்டியலின் உரிமையாளன்; என்னுடைய வசூலிக்கும் முகவராக நீங்கள் என்னுடைய உண்டி யலின் தொகையைப் பெற்றுக்கொண்டீர்கள். எனவே, என்னு டைய முகவர் என்னும் தகுதியில் அந்த உண்டியலின் வசூலுக்கு எனக்குக் கணக்கு ஒப்பிக்க வேண்டும்' என்று கூற உரிமையுண்டு. அதாவது, சம்பந்தப்பட்ட தரப்பாரிடையே கற்பனையான முகமை ஒப்பந்தம் நிலவுவதாக எடுத்துக்கொள்ளப்படுகிறது: தமது சார்பாகத் தமது முகவர் பெற்றுக்கொண்ட பணத்தை மீட்க, முதல்வர் ஒருவர் எவ்வாறு வழக்குத் தொடுப்பாரோ, அவ்வாறே இங்கும் நடவடிக்கை எடுக்கலாம்,

**எவ்வளவு கவனம் செலுத்த வேண்டும் ?**

நியாயமான வணிகர் தம்முடைய சொந்த நலனைப்பேண எவ்வளவு கவனமாகவும் எச்சரிக்கையுடனும் செயலாற்றுவாரோ, அவ்வளவு கவனமாகவும் எச்சரிக்கையுடனும் செக்கொன்றின் உண்மை உரிமையாளரது நலனைக் காக்கும்பொருட்டு, வசூலிக்கும்-பாங்கர் செயலாற்ற வேண்டும். லேட்ப்ரோக் & கம். (எ.) டாட் (1914), 30, டி.எல்.ஆர். 433 என்னும் வழக்கின் தீர்ப்பை நோக்கினால், இக்கடமையின் ஆழம் புலப்படும். வசூலிக்கும்-பாங்கர் தமது வாடிக்கைக்காரர் ஒருவருக்காக வசூலித்த செக்கின்பால், பின்னவருக்குக் குறைபாடுடைய உரிமையே உள்ளது என்பது வெளிப்பட்டபோது, அந்த பாங்கர் அவருடைய நடப்புக் கணக்கைத் துவக்கும்பொழுது சான்றுரையோ அல்லது அறிமுகக் கடிதமோ பெறத் தவறினர் என்ற குற்றம் வசூலிக்கும்-பாங்கரின் சட்டரீதியான பாதுகாப்பை அவர் இழக்கும் அளவுக்கு, புறக் கணிப்பான செயலாகும் என்பதே அவ்வழக்கின் தீர்ப்பு. இக்கூற்று, கமிஷனர்ஸ் ஆஃப் டேக்சேஷன் (எ.) இங்கிலீஷ், ஸ்காட்டிஷ் அண்ட் ஆஸ்திரேலியன் பாங்கு லிமிடெட் (1920) ஏ.சி. 683 என்ற வழக்கில் மறுக்கப்பட்டது. (சட்டப்) பிரிவிலுள்ள 'புறக் கணிப்பின்றிச் செலுத்தலைப் பெற்றிருந்தால்' என்னும் சொற்களை இந்த வழக்கின் நீதிபதிகள் சுட்டிக் காட்டி, 'வசூலித்ததில் புறக் கணிப்பு இருந்ததா என்னும் பிரச்சினையை ஆராயும்போது, எந்தச் சூழ்நிலைகளில் கணக்கு துவக்கப்பட்டது என்பதைச் சற்று நோக்க வேண்டிய தேவையிருந்தாலும், இங்கு விடை காண வேண்டிய கேள்வி, செக்கை வசூலித்ததில் புறக்கணிப்பு இருந்ததா என்பதே அன்றி, கணக்கைத் துவக்கியதில் புறக்கணிப்பு இருந்ததா என்பதல்ல' என்று கூறினர். கார்டியன்ஸ் ஆஃப் எஸ். ஜான்ஸ் ஹேம்(ப்)ஸ்டெட் (எ.) பர்க்லே(ய்)ஸ் லிமிடெட் (1923), 39 தி.எல்.ஆர். 229 என்னும் வழக்கில் பாங்கு அறிந்திராத ஒருவர், தமது கணக்கைத் துவக்கும்பொழுது, அயலார் ஒருவரின் பெயரைச் சான்றுளியாகத் தந்தார். சான்றுளியை விசாரித்து பாங்கு கடிதம் எழுதியதற்கு, மனநிறைவான மறுமொழியைப் பெற்றது. அந்தச் சான்றுரையைச் சரிபார்க்க வேறெந்த நடவடிக்கையையும் பாங்கு எடுக்கவில்லை. இதையும் அது செய்த குற்றங்களில் ஒன்றாகக்கொண்டு, பாங்கு புறக்கணித்தது என்று நீதி மன்றம் தீர்ப்பு வழங்கியது.

**புறக்கணிப்புக்கு இன்னும் சில மேற்கோள்கள்**

உண்மை உரிமையாளருக்கு வசூலிக்கும்-பாங்கர் செய்ய வேண்டிய கடமை பல தோற்றங்களையும், கோணங்களையும்

கொண்டது. இவற்றில் சிலவற்றை முன்பே ஆராய்ந்தோம். நீதி மன்றங்கள் நிலை நாட்டிய இன்னும் சிலவற்றை நாம் காணுவோம். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவு நல்கும் பாதுகாப்பை, புறக்கணித்ததற்காக இழக்காதிருக்கும் பொருட்டு வசூலிக்கும்-பாங்கர் மேற்கொள்ளத்தக்க முன்னெச் சரிக்கைகள் யாவை என்பவற்றை அறிய, இவை துணை செய்யும்.

### புறக்குறிப்புகளைச் சரி பார்த்தல்

ஆணைச் செக்குகளிலுள்ள புறக்குறிப்புகள் முறையாக உள்ளனவா என்று சரி பார்த்தல் வசூலிக்கும்-பாங்கரின் கடமை யாகும். முறை வழுவிய புறக்குறிப்பு ஏதேனும் இருந்தால், புறக் கணித்த குற்றத்திற்கு அவர் ஆளாகலாம். பாபின்ஸ் ஜூனியர் அண்ட் சிம்ஸ் (எ.) லண்டன் அண்ட் சௌத் வெஸ்டர்ன் பாங்கு லிமிடெட் (1910) 1, க்யூ.பி. 270 என்னும் வழக்கில் பெறற்குரிய வரின் பெயரோடு, செக்கிலுள்ள புறக்குறிப்பு சரிவரப் பொருந் தாதிருந்ததை வசூலிக்கும்-பாங்கர் கண்டுபிடிக்காததால், அவர் புறக்கணித்தார் என்று மேல்வழக்கு நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

### முகமைப் (சார்புப்) புறக்குறிப்பு

செக்கில் ‘முகமைப் (சார்புப்) புறக்குறிப்பு’ இருந்தால், வசூலிக்கும்-பாங்கர் தீர விசாரித்து, அந்தப் புறக்குறிப்பு தக்க அங்கீகாரத்தோடுதான் இடப்பட்டதா என்று கண்டறிய வேண்டும். அவ்வாறு ஆராயாமல் வசூலிப்பது கடமையைப் புறக் கணிப்பதாகும் [பிஸ்ஸெல் & கம். (எ.) ஃபாக்ஸ் பிரதர்ஸ் & கம். (1885), 53, எல்.தி.என்.எஸ். 663). இதற்குப் பிந்தைய தீர்ப்பு ஒன்று பாங்கருக்குச் சற்றுச் சாதகமாகவே இருப்பதாகத் தோன்று கிறது: க்ரம்ப்ளின் (எ.) தி லண்டன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கு (1913) 30, டைம்ஸ் எல்.ஆர். பக். 99 என்னும் வழக்கில் முகமைப் (சார்புப்) புறக்குறிப்பு அதைப்பற்றி விசாரிக்குமாறு பாங்கரை எச்சரிப்பதில்லை; விசாரிக்கத் தவறியது என்பது பாங்கு புறக் கணித்தது என்னும் குற்றத்தை வலியுறுத்தும் முழு ஆதாரமு மாகாது என்று மறைந்த பிரபு ஸ்டெ(ர்)ன்டேல் அவர்கள் (அப்பொழுது திரு. நீதிபதி பிக்ஃபோர்டு) தீர்ப்பளித்தார். அது போலவே முகமைப் (சார்புப்) புறக்குறிப்பிடும் அதிகாரம், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டிருப்பின், அவை நிறைவேற்றப்பட்டு விட்டனவா என்று கண்டறிதலும் வசூலிக்கும்-பாங்கரின் கடமை யாகாது. ‘முகமைக் (சார்புக்) கையொப்பமிடுபவரின் நிலைமை வெளிப்படையாகவும் முழுவதும் சார்பு நிலைமையே என்பதைச் சார்புக் கையொப்பம் அப்பட்டமாகக் காட்டுகிறது’; எனவே, 131ஆம் பிரிவின் நோக்கம் ஈடேற வேண்டுமாயின், ‘சார்பாக’

என்னும் எச்சரிக்கையைப் புறக்கணித்தலாகாது என அரசரின் அறிவுரைஞர் பெர்னர்டு கேம்பியன் அவர்கள் கருத்துரைத்தார் (பாங்கர் நிலையத்தின் மாதவிதழ், மே, 1925, பக். 225).

**முறிகள் வெளிப்படையாகக் காட்டும் எச்சரிக்கையை அவமதித்தல்**

பாங்கர் வாடிக்கைக்காரரின் நிலையைப்பற்றி மெய்யாகவே சற்று அறிந்திருத்தல் கூடும். இது ஒருபுறமிருக்க, வாடிக்கைக் காரர் பொறுப்பாண்மை அதிகாரத்திற்கு முரணுகச் செயல் படுகிறார் அல்லது பிறருடைய பணத்தைக் கையாளுகிறார் என்று பாங்கரிடம் வசூலிப்பதற்காகக் கொடுக்கப்படும் முறிகள் வெளிப் படையாக வெளியிடும் எச்சரிக்கையை அவர் அவமதித்தல் புறக் கணிப்பாகும். பெருவாரியான வழக்குகளில் இவ்வகைப் புறக் கணிப்பைப் பற்றித்தான் நீதிமன்றங்கள் ஆய்ந்தன, இங்கு வலியுறுத்தப்படும் கோட்பாடு பரந்த ஈடுபாடுடையது; வசூலிக்கும்-பாங்கருக்கு மட்டுமே பொருந்துவதல்ல. ரெக்கிட் (எ.) பார்னெட், பெம்புரோக் அண்ட் ஸ்லேடர் லிமிடெட் (1929) ஏ.சி. 176 என்ற வழக்கில் பிரபுக்கள் மன்றம் வழங்கிய தீர்ப்பு, இக்கோட்பாட்டை மிகவும் தெளிவாக உணர்த்துகிறது. பிரபு டெர்ரிங்டன் என்னும் வழக்குரைஞருக்குத் தம் வியாபாரத்தை நடத்துமாறு இந்த வழக்கின் வாதி பதிலாண்மை அதிகாரம் கொடுத்து, அதற்குத் துணையாகத் தம் பெயரில் 'வரையறை யின்றி' செக்குகளை எழுதும் அங்கீகாரத்தையும் தந்தார்; தம் முதல்வரின் பெயரில் செக்கொன்றை எழுதிக் கொடுத்து, பிரதிவாதிகளிடமிருந்து தமது சொந்த உபயோகத்திற்கு, பிரபு டெர்ரிங்டன் என்பவர் காரொான்னற விலைக்கு வாங்கினர். அந்தச் செக்கை சட்டமுரணுன கையாளுகை செய்தார்கள் அல்லது அதற்கு மாருக '(தமது) பணத்தை வாங்கி வைத்திருந்தார்கள்' என்ற குற்றத்தின் அடிப்படையில் இழப்பீடு கோரி, பிரதிவாதி களின்மீது, வாதி வழக்குத் தொடுத்தார். (1) அவருடைய சொந்தக் கடன்களை அடைக்க, வாதியின் பணத்தைப் பயன்படுத் தும் அங்கீகாரத்தை, அந்த முகமை அதிகாரம் பிரபு டெர்ரிங்டன் அவர்களுக்கு அளிக்கவில்லை; (2) பிரபு டெர்ரிங்டன் அவர்களின் சொந்தக் காரியங்களுக்கு வாதியின் பணம் ஈடுபடுத்தப்படுகிறது என்ற அறிவிப்பைச் செக்கு வெளிப்படையாகக் காட்டிய போதிலும் பிரதிவாதிகள் அதைப்பற்றி அக்கறையின்றிச் செய லாற்றியதால், அச்செக்கின் வசூல் தொகையை வைத்திருக்க உரியவரல்லர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

கீழ்க்காணும் ஐந்து மேற்கோள்களையும் நீதிமன்றங்கள் ஆய்ந்த வழக்குகளினின்றும் தேர்ந்து தந்துள்ளோம். அவையனைத்

திலும் செக்குகள் வெளிப்படையாகக் காட்டிய எச்சரிக்கையை பாங்குகள் புறக்கணித்திருப்பது இழைந்தோடுவதைக் காணலாம்:

**(அ) மிட்லேண்டு பாங்கு லிமிடெட் (எ.) ரெக்கிட் (1933), ஏ.சி. 1:** முன்பு கூறிய பிரபு டெர்ரிங்டன் என்னும் அதே வழக்குரைஞர் செய்த மோசடியின் விளைவாக எழுந்த வழக்காகும் இது. தமக்கு அளிக்கப்பட்ட பதிலாண்மை அதிகாரத்தைத் தொடர்ந்து, ரெக்கிட் என்பவரின் (முதல்வர்) கணக்கின்மீது செக்குகளை எழுதி, அவற்றை மிட்லேண்டு பாங்கிலுள்ள தம்முடைய சொந்தக் கணக்கில் இட்டார். மிட்லேண்டு பாங்கு அவற்றை வசூலித்து அவருடைய கணக்கில் வரவு வைத்தது. பிரபு டெர்ரிங்டன் என்பவர், வாதியின் பணத்தைத் தம் சொந்தக் காரியங்களுக்கு ஈடுபடுத்துகிறார் என்ற அறிவிப்பை அச்செக்குகள் வெளிப்படையாகத் தாங்கியிருந்தன. அதைக் கவனியாதிருந்ததால், பாங்கு புறக்கணிப்பு என்னும் குற்றத்திற்கு ஆளாகியது என்று தீர்ப்பு வழங்கி, எழுதுபவருடைய கையொப்பத்தின் வடிவமே, பாங்கருக்கு அந்த எச்சரிக்கையைத் தெரிவிக்கிறது என்ற கூற்றையும் நீதிபதி அவர்கள் அறிவுறுத்தினர்.

**(ஆ) லாயிட்ஸ் பாங்கு (எ.) சார்டர்டு பாங்கு ஆஃப் இந்தியா லிமிடெட் (1929), 1 கே. பி. 40** எல். என்னும் வழக்கில், அன்றிருந்த இம்பீரியல் பாங்கில், பம்பாயிலிருந்த லாயிட்ஸ் பாங்கு கணக்கு வைத்திருந்தது. அக்கணக்கின்மீது செக்குகளை எழுதும் அதிகாரத்தைத் தமது தலைமைக் கணக்கரான எல் என்பவருக்கு அது அளித்தது. இந்த அதிகாரத்தைத் தொடர்ந்து, எல் என்பவர் அக்கணக்கின்மீது பெரும் தொகைகளுக்குச் சில செக்குகளைத் தமது சொந்தக் கணக்கை வைத்திருந்த சார்டர்டு பாங்குக்குச் செலுத்துமாறு எழுதினர். அவற்றை வசூலித்து, தமது சொந்தக் கணக்கில் வரவு வைக்க வேண்டும் என்ற தெளிவான உத்தரவுடன், எல் என்பவர் சார்டர்டு பாங்கிடம் அச்செக்குகளைத் தந்தார். மேலே விளக்கப்பட்ட அதே கோட்பாட்டின் அடிப்படையில், சார்டர்டு பாங்கு புறக்கணிப்பு என்னும் குற்றத்திற்கு ஆளானது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. எழுதுபவருடைய கையொப்பத்தின் வடிவம் தக்க எச்சரிக்கையை பாங்குக்கு அறிவித்தது என்று இங்கும் மொழியப்பட்டது.

**(இ) அண்டர்வுட் லிமிடெட் (எ.) பாங்கு ஆஃப் லிவர்பூல் (1924), 1 கே.பி. 775** என்ற வழக்கில் 'ஓர் ஆள்' (one-man) கம்பெனி ஒன்றின் ஒரே ஒருவரான இயக்குநர், மூன்றும் ஆள்கள் அக்கம்பெனிக்குச் சாதகமாக எழுதியனுப்பிய செக்குகளைக் கம்பெனியின் பெயரால் புறங்குறித்து, பிரதிவாதி பாங்கிலுள்ள தம்முடைய

சொந்தக் கணக்கில் அவற்றை இட்டார். பிரதிவாதியாகிய பாங்கு அவற்றை அவர் சார்பாக வசூலித்து, அவருடைய கணக்கில் வரவு வைத்தது. கம்பெனியின் பணத்தை அந்த இயக்குநர் கையாளுகிருர் என்பதை அச்செக்கிலுள்ள பெறற்குரியவரின் பெயரும், சார்புப் புறக்குறிப்பும் தெளிவாகக் காட்டுகின்றன என்று தெளிந்து, பாங்கு (கம்பெனியின் இழப்பை ஈடு செய்ய) பொறுப்பாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

(ஈ) பெவான் (எ.) நேஷனல் பாங்கு லிமிடெட் (1906), 23 டைம்ஸ் எல். ஆர். 65 என்னும் வழக்கில் கூட்டு நிறுவனம் ஒன்றிற்குச் செலுத்துமாறு எழுதப்பட்ட செக்கில், அந்த நிறுவனத்தின் சார்பாக அதனுடைய கூட்டாளி ஒருவர் புறங்குறித்து, பிரதிவாதி பாங்கிலுள்ள தம்முடைய கணக்கில் இட்டார். இதற்கு முன்பு கூறப்பட்டுள்ள அண்டர்வுட் வழக்கோடு, இவ்வழக்கு முற்றிலும் இசைந்திருப்பதைக் காணலாம். அதுபோலவே, இங்கும் பெறற்குரியவரின் பெயரும், புறக்குறிப்பின் தன்மையும் (வடிவமும்) பாங்கருக்கு எச்சரிக்கை விடுக்கின்றன.

(உ) வோர்ஷிப்ஃபுல் கம்பெனி ஆஃப் கார்ப்பென்டர்ஸ் ஆஃப் தி ஸிடி ஆஃப் லண்டன் (எ.) பிரிட்டிஷ் மியூசுவல் பாங்கிங் கம். லிமிடெட் (1938), 1 கே. பி. 511 என்னும் வழக்கின் வாதிகள் உடல் நலம் பேணும் இல்லம் ஒன்றின் நிருவாகிகள். அவர்கள் பிரதிவாதி பாங்கில் கணக்கு வைத்திருந்தனர். அவர்கள் வேலைக்கு அமர்த்திக் கொண்ட செயலருக்கும் பிரதிவாதி பாங்கின் அதே கிளையகத்தில் அவரது சொந்தக் கணக்கு இருந்தது. வாதிகளுக்குச் சரக்கு விற்றவர்களுக்குச் சாதகமாக, வாதிகளின் தக்க அங்கீகாரம் பெற்ற அதிகாரிகள் கையொப்பமிட்டு எழுதிய செக்குகளில் சிலவற்றை, அந்தச் செயலர் கைப்பற்றினர். பெறற்குரியவர்களின் புறக்குறிப்புகளை அவர் அவற்றில் கள்ளத்தனமாக இட்டு, பிரதிவாதி பாங்கிலுள்ள தம்முடைய கணக்கில் அவற்றை வசூலிப்பதற்காகச் செலுத்தினர். வாதியின் பணியாளராக அச்செயலர் இருப்பதை அந்த பாங்கு அறியும். மூன்றும் ஆள்கள் அவற்றின் பயனைப் பெற வேண்டும் என்று அச்செக்குகள் வெளிப்படையாகக் காட்டின; மேலும், செயலரின் சொந்த நலனுக்காக, வாதிகள் அவற்றை எழுதித் தந்தனர் என்று கருதுவதற்கும் இடமேதுமில்லை. எனவே, பாங்கு வாதிகளுக்குப் பொறுப்பாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

'வேறொருவரின் பணியாள் அல்லது முகவர் என்று பாங்கர் அறிந்த வாடிக்கைக்காரர் ஒருவர், அவருக்குப் பணியளித்தவருக்கு அல்லது அவருடைய முதல்வருக்குச் சாதகமாக மூன்றும் ஆள்

தந்த செக்கினைத் தமது கணக்கில் வசூலிப்பதற்காக இடுதல் போன்ற நிகழ்ச்சிகளில் வாடிக்கைக்காரர் அதைக் கள்ளத்தன மாகக் கைப்பற்றி இருத்தல் கூடும் என்னும் எச்சரிக்கையை செக்கு வெளிப்படையாகக் காட்டுகிறது. அந்தப் பணியாளர் அல்லது முகவர் அவருடைய முதலாளி அல்லது முதல்வர் சார்பாக அதில் புறங்குறித்திருந்தால், அச்செக்கு தாங்கியுள்ள எச்சரிக்கை மிகத் தெளிவாகத் தெரியும். இது போலவே பணியளித்தவர் எழுதிய செக்குகளைப் பணியாள் ஒருவர் களவாடி, தம்முடைய கணக்கில் அவற்றை இட்டால் அல்லது அவற்றின் தொகை தமது கணக்கின் வரவுக்கு வந்தடையும்படி செய்தால், வாடிக்கைக் காரரின் நிலைமையைப் பற்றி பாங்கு சேகரித்து வைத்துள்ள செய்திகள் ஒருபுறமிருக்க, அப்பணியாள் (அல்லது முகவர்) அவற் றைத் தவறான வழிகளில் கைப்பற்றி இருக்கலாம்; அவ்வாறு செய்ய வாய்ப்பும் இடமும் இருக்கிறது என்று சுட்டிக் காட்டுமாறு அந்தச் செக்குகளே அமைந்துள்ளன. இந்த இரண்டு வகையான சூழ்நிலைகளும் (புறக்குறிப்புகள் முறை வழுவியனவாக இருத்தல் அதுபோன்ற இன்ன பிற சூழ்நிலைகளைத் தவிர), பாங்கர் தற்காப்பு உணர்வோடு செயலாற்ற வேண்டும் என்று எச்சரிக்கின்றன. பாங்கர் இதைப் புறக்கணித்தால் சட்டமுரணான கையாளுகை செய்த குற்றத்திற்கு இலக்காவார்' என்று புறக்கணிப்பைப் பற்றிய சட்டரீதியான நிலைமையை, இ. பி. சேவரி & கம். (எ.) லாயிட்ஸ் பாங்கு (1933) ஏ.சி. 201, பக். 229-230 என்ற வழக்கில் பிரபு ரைட் அவர்கள் மிகவும் மெச்சத் தகுந்த பாணியில் சுருங்கக் கூறியுள்ளார்.

இவை கருத்தியலுக்கியைந்த துணிபுகளேயாயினும், உச்ச முறைமன்றம் இவற்றினின்றும் மிக்க முரண்பட்ட கருத்தை வெளி யிட்டது. தமது வாடிக்கைக்காரர் ஒருவர் பணியாளராக இருக் கிறார் என்று பாங்கு அறிந்தால், அவருக்குப் பணி அளித்தவர் மூன்றும் தரப்பினருக்குச் சாதகமாக எழுதும் செக்குகளை, அவருக் காக (பணியாளருக்காக) வசூலிக்காமல் தம்மைக் காத்துக்கொள் ளும்பொருட்டும், புறக்கணிப்பு என்னும் பழிக்கு அஞ்சி அதற்கு ஆளாகாமல் இருக்கும்பொருட்டும், அவருக்குப் பணி அளித்தவர் யார் என்று கண்டறிதல் பாங்கின் கடமையாகும் என்று அந்த வழக்கில் பிரபுக்கள் மன்றம் தீர்ப்பளித்தது. அவ்வழக்கின் இக் கூற்றைப் பற்றிப் பிரபு ரைட் அவர்கள் கூறுவதாவது : 'பாங்கு ஒன்றின் புதிய வாடிக்கைக்காரர், அவருக்குப் பணியளித்தவரின் செக்குகளைக் கையாள வேண்டிய பொறுப்பும், அவற்றைக் கள வாடக்கூடிய வாய்ப்பும் வாய்ந்த பணியை ஆற்றி வருபவர் என்று அது அறிந்தும், அவருக்குப் பணியளித்தவரின் பெயரைக் கேட்

காது வாளாவிருந்தால், அந்த பாங்கு போதுமான எச்சரிக்கைகளை எடுக்கத் தவறியதாகக் கருதப்படும்; ஆனால், உற்பத்திக்கூடத்தில் தொழில்துறைப் பணியாளராக இருப்பவரைப் போல, இவ்வாறான வாய்ப்புகளற்ற பணியாளரைப் பொறுத்தவரை இது (இவ்வெச்சரிக்கை) தேவையற்றதாக இருக்கலாம்.'

## மூன்றும் தரப்பார் செக்குகள் (Third Party Cheques)

மோட்டார் டிரேடர்ஸ் காரண்டி கார்ப்பரேஷன் லிமிடெட் (எ.) மிட்லேண்டு பாங்கு லிமிடெட் (1937), 4, ஆல்.இ.ஆர். 90 என்னும் வழக்கே இத்தறுவாயில் நாம் இறுதியாக காண வேண்டிய வழக்காகும். வாடிக்கைக்காரர் அவற்றின் பெறற்குரியவராக இல்லாது, புறக்குறிப்பாளியாக மட்டுமே உள்ள செக்குகள் மூன்றும் தரப்பார் செக்குகள் எனப்படும். இந்தச் செக்குகளை வசூலிக்கும்போது, அவற்றின் உண்மை உரிமையாளரின் நலனைக் காக்கும்பொருட்டு, பாங்கர் மிக்க எச்சரிக்கையோடு செயலாற்ற வேண்டும் என்னும் கோட்பாட்டை இந்த வழக்கில் அளித்த தீர்ப்பில் நீதிபதி அவர்கள் வலியுறுத்தினார். இவ்வழக்கின் நிகழ்ச்சிகளாவன : டர்னர் என்பவர் பிரிஸ்டல் நகரில் மோட்டார் வியாபாரியாகத் தொழில் நடத்தினார். அவர், பிரதிவாதி பாங்கின் பிரிஸ்டல் கிளையகத்தில் கணக்கு வைத்திருந்தார். இவ்வழக்கின் வாதிகள், வாடகைக் கொள்முதல் முறையில் மோட்டார் கார் வாங்குவோருக்கு நிதியளிக்கும் ஒரு நிறுவனமாகும். இவ்வழக்கில் வரும் டபிள்யூ & கம்பெனி, பிரிஸ்டல் நகரில் பணிபுரிந்த புகழ் பெற்ற மோட்டார் விற்பனை நிறுவனமாகும். டர்னர் என்பவர் வாதிகளிடம், தாம் டபிள்யூ & கம். என்றும், விற்பனையாளரிடமிருந்து மோட்டார் கார் ஒன்றை 189 பவுண்டு, 5 ஷில்லிங்குக்கு வாங்க எண்ணியிருப்பதாகவும், காரை விற்பனையாளரிடமிருந்து வாங்கியவுடன் அவர்களிடம் (வாதிகளிடம்) வாடகைக்கொள் முதல் ஒப்பந்தம் செய்துகொள்வதாகவும் உரைத்து, அதன் விலையாகிய 189 பவுண்டு 5 ஷில்லிங்குக்கு டபிள்யூ & கம்பெனிக்குச் சாதகமாகக் கீறிய செக்கொன்றைத் தருமாறு மோசடி நோக்குடன் தூண்டினார். அவரை நம்பி, வாதிகளும் அவ்வாறே செக்கை எழுதித் தந்தனர். (டர்னர் என்பவர்) அவர் அதில் டபிள்யூ & கம்., என்பதன் புறக்குறிப்பைக் கள்ளத்தனமாக இட்டு, தம்முடைய சொந்த புறக்குறிப்பையும் அதற்கு அடுத்து இட்டு, பிரதிவாதி பாங்கிலுள்ள தமது கணக்கில் அச்செக்கைச் செலுத்தினார். பாங்கின் பணக்கணக்கர் அவரை அதைப்பற்றி விசாரித்தபோது, அவரது விளக்கம் மனநிறைவானதாக இருந்ததால், அவரும் அதைப் பெற்றுக்கொண்டார். பின்னர் வழக்கு தொடுக்கப்பட்டபோது, விளக்கத்தை ஏற்றுக்கொண்ட பணக்கணக்கரது செயல்

புறக்கணிப்போ நியாயமற்றதோ அல்ல என்று நீதிமன்றமும் கருதியது. இருப்பினும், இரண்டு காரணங்களின் அடிப்படையில் பாங்கு புறக்கணித்ததாக நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது: (அ) இந்த வழக்கின் செக்கு மூன்றும் தரப்பார் செக்காகையால், அந்த பாங்கின் நிருவாக விதிகளின்படி கிளையக நிருவாகிதான் அதை ஆராய்ந்து தீர்மானிக்க வல்லவரேயன்றி, அதன் பணக் கணக்கரல்ல. இத்த வழக்கில் பணக்கணக்கர், கிளையக நிருவாகி யிடம் அந்தச் செக்கைப் பற்றிச் சொல்லவே இல்லை. (ஆ) டர்னர் என்பவரின் கடந்த கால நடவடிக்கைகளைப்பற்றி, பணக்கணக்கர் விசாரிக்கத் தவறினர்; விசாரித்திருந்தால் பிரதிவாதி பாங்கின் மேல் டர்னர் எழுதிய பல செக்குகளை அவருடைய கணக்கில் நிதி யின்மையால் அப்பாங்கு அவமதித்த அவலநிலை வெளிப்பட் டிருக்கும்; டர்னர் என்பவர் செல்வத்திண்மையுள்ளவரோ அல்லது வாணிக ஒழுக்கத்தை வழுவாது ஒழுகுபவரோ அல்லர் என்பதைப் பணக்கணக்கர் உணர்ந்திருப்பார்.

### செலுத்தும்-பாங்கர், வசூலிக்கும்-பாங்கர் ஆகியோரின் நிலைமைகளுக் கிடையேயுள்ள வேறுபாடு

செலுத்தும்-பாங்கரின் நிலைமையை வசூலிக்கும்-பாங்கரின் நிலைமையிலிருந்து மிக்க விழிப்போடு வேறுபடுத்திக் காணல் வேண்டும். ஏனெனில், சட்டரீதியான பொறுப்பு என்னும் கண்ணோட்டத்தோடு ஆராயுங்கால், இருவரின் நிலைமையும் மாறு பட்டிருப்பதை அறிகிறோம். இந்த வேறுபாட்டின் விளைவாக, செலுத்தும்-பாங்கரின் நிலைமை (வசூலிக்கும்-பாங்கரின் நிலைமை யைக்காட்டிலும்) மிக்க பாதுகாப்பானது என்பதையும், ரெக்கிட் (எ.) பார்னெட் (1929) ஏ. சி. 176 என்னும் வழக்கில் வகுக்கப் பட்ட கோட்பாடு அவருக்குப் பொருந்தாது என்பதையும் அறி கிறோம். ஏன் வேறுபடுத்திக் காண வேண்டும் என்ற வினவுக்கு இரு முக்கியமான காரணங்கள் உள. முதலாவதாக, செக் கொன்று முறையாக எழுதப்பெற்று அதன் மற்ற அமிசங்கள் அனைத்தும் ஒழுங்காக இருக்குமாயின், வாடிக்கைக்காரர் மோசடி செய்கிறார் என்று பாங்கருக்கு வெளிப்படையான அறிவிப்பு இருந்தாலன்றி, அவர் அதை மதிக்கக் கட்டுப்பட்டவர் [கிரே (எ.) ஜான்சன், எல். ஆர். எச். எல். 1]. இரண்டாவதாக, புறக் கணிப்பு என்ற பேச்சுக்கே அவரைப் பொறுத்த வரையில் இட மில்லை. ஏனெனில், வோர்ஷிப்ஃபுல் கப்பெனி ஆஃப் கார்ப் பென்டர்ஸ் (எ.) பிரிட்டிஷ் மியூசுவல் பாங்கிங் கம்பெனி லிமிடெட் (1938), 1 கே. பி. 511 என்னும் வழக்கில் மேல்வழக்கு நீதிமன்ற நீதிபதிகளில் பெரும்பான்மையினர் தீர்ப்பளித்தபடி, இங்கிலாந்

தில் பாங்கொன்று புறக்கணிப்புடன் செக்கொன்றைச் செலுத்தி யிருந்தாலும், அது பாதுகாப்புக்குரியது. மேலெழுந்தவாரியாக நோக்கின், அண்டர்வுட் வழக்கு அல்லது பெவான் வழக்கு [முன்பு கண்ட எடுத்துக்காட்டுகள் (இ, ஈ) ஆகிய இரண்டு] ஆகியவற்றி லிருந்து அணுவளவேனும் வேறுபாடற்றவையாகத் தோன்றும் இரு வழக்குகள் இங்கிலாந்தில் நடைபெற்றன, பாங்கு ஆஃப் நியூ சௌத் வேல்ஸ் (எ.) க(வு)ல்பர்ன் வேலி பட்டர் கம். (1902) ஏ. சி. 543 என்பது அவற்றில் முதலாவதாகும். இவ்வழக்கின் வாதிகளாகிய 'ஓர்-ஆள்' கம்பெனி பிரதிவாதி பாங்கில் கணக்கு வைத்திருந்தது. அந்தக் கம்பெனியின் ஒரே ஒருவரான இயக்கு நரும் (அந்த 'ஓர்-ஆள்' அவர்தான்) அந்த பாங்கில் தமது சொந்தக் கணக்கைத் துவக்கியிருந்தார். கம்பெனியின் கணக்கின் மீது செக்குகளை எழுத அவருக்கு முறையான அங்கீகாரம் தரப் பட்டிருந்தது. அதற்கேற்ப, இரண்டு செக்குகளை அக்கணக்கின் மீது எழுதி, அவற்றின் வசூல் தொகையைப் பிரதிவாதி பாங்கி லுள்ள தமது சொந்தக் கணக்கில் செலுத்தினார். செலுத்தும்-பாங்கு என்னும் தகுதியில் அதன்மீது வழக்கு தொடுக்கப்பட்டது. ஆனால் மேற்கூறிய காரணங்களின் அடிப்படையில், அது பொறுப் பாகாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. பேக்ஹவுஸ் (எ.) சார்டன், எல். ஆர். 8 ச். டி 444 என்பதே இரண்டாவது வழக் காகும். இவ்வழக்கில் மூன்று கூட்டாளிகளைக்கொண்ட கூட்டு நிறுவனம் ஒன்று பிரதிவாதி பாங்கில் கணக்கு வைத்திருந்தது. அக்கணக்கின்மீது செக்குகளை எழுத ஒவ்வொரு கூட்டாளியும் அங்கீகரிக்கப்பட்டிருந்தனர். அவர்களில் ஒருவர் அந்த பாங்கில் தமது சொந்தக் கணக்கையும் வைத்திருந்தார். அவர் கூட்டு நிறுவனக் கணக்கின்மீது செக்கொன்றை எழுதி, அதன் தொகை யைத் தமது சொந்தக் கணக்கின் வரவுக்குச் செலுத்தினார். இருப் பினும், (அச்செக்கைச் செலுத்திய) அந்த பாங்கு பொறுப்பாகாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

**தொகை திருத்தப்பட்ட செக்குகளின்மீது வசூலிக்கும்-பாங்கருக்குப் பாதுகாப்பு இல்லை**

1882ஆம் ஆண்டு (இங்கிலாந்தில் இயற்றப்பட்ட) உண்டியல் சட்டத்தின் அடிப்படையில் செலாவணி முறிகள் பற்றிய தங்கள் சட்டத்தை உருவாக்கிய நாடுகளிலுள்ள பாங்கர்கள் அக்கறையும் உற்சாகமும் செலுத்தத்தக்கப் பிரச்சினையொன்றைச் சிலோன் நாட்டின் உச்ச நீதிமன்றம் அண்மையில் தீர்க்க வேண்டிய தாயிற்று. சுருங்கக் கூறின், இந்த வழக்கின் நிகழ்ச்சிகளாவன : திரு. குலதிலகு என்பவர் மெர்கண்டைல் பாங்கு ஆஃப் இந்தியா வில் கணக்கு வைத்திருந்தார். அவரது எழுத்தர் இரண்டு செக்கு

களை எழுதி அவருடைய கையொப்பத்தைப் பெற்ருர். இரண்டும் செலாவணித் தன்மையற்றது என்று கீறலிடப்பட்டிருந்தன. எழுத்தாலும் எண்ணுலும் தொகைகள் எழுதப்பட்டிருந்தன. ஆனல், அவற்றைத் திருத்த இயலும் வண்ணும் அவருடைய எழுத்தர் இடம் விட்டிருந்தார். திரு. குலதிலகு அவற்றில் கையொப்பம் இட்டபிறகு, அவருடைய எழுத்தர் அவற்றின் தொகைகளைக் கள்ளத்தனமாகத் திருத்தி, பாங்கு ஆஃப் சிலோனில் சற்று முன்பு துவக்கிய தமது சொந்தக்கணக்கில் அவற்றை இட்டார். மெர்கண்டைல் பாங்கு அவற்றைச் செலுத்திவிட்டது. இந்த மோசடி தெரிய வந்தபோது, தமது கணக்கில் பற்றிடப் பட்ட அந்த இரண்டு செக்குகளின் தொகையையும் மீட்கும் பொருட்டு, மெர்கண்டைல் பாங்குக்கு எதிராகத் திரு. குலதிலகு வழக்குத் தொடுத்தார். செக்கை எழுதுவதில் வாடிக்கைக்காரர் தக்க கவனம் செலுத்தக் கடமைப்பட்டுள்ளார். இக்கடமை யினின்றும் வாதி தவறியதால், அவருடைய வழக்கை நீதிமன்றம் தள்ளிவிட்டது. லண்டன் ஜாயிண்ட் ஸ்டாக் பாங்கு (எ.) மாக்மில்லனும் ஆர்தரும் என்னும் வழக்கில் பிரபுக்கள் மன்றம் இயம்பிய கோட்பாடுகளைக் கருத்தில் கொண்டு, இத்தீர்ப்பு வழங்கப்பட்டது. இதைப் பற்றி அதிக விளக்கம் தேவையில்லை.

மெர்கண்டைல் பாங்கின்மீது வழக்குத் தொடுத்தபோதே, வசூலிக்கும்-பாங்காகிய பாங்கு ஆஃப் சிலோன்மீதும் திரு. குலதிலகு வழக்குத் தொடுத்தார். உண்டியல் சட்டத்தின் 82ஆம் பிரிவு அளிக்கும் சட்டரீதியான பாதுகாப்பை அடிப்படையாகக் கொண்டு, பாங்கு அதன்மேல் சாட்டப்பட்ட குற்றத்திற்குத் தற் காப்பு மறுப்பை எழுப்பியது. நன்னம்பிக்கையுடனும் புறக்கணிப் பின்றியும் கீறிய செக்கின் தொகையைத் தமது வாடிக்கைக்காரர் ஒருவருக்காக, பாங்கு வசூலித்திருந்தால், வாடிக்கைக்காரருக்கு அதன்பால் உரிமை இல்லையென்ருலும் அல்லது அவரது உரிமை குறைபாடானது எனினும், இப்பிரிவு, அந்த பாங்கருக்குப் பாது காப்பை நல்குகிறது. இப்பாதுகாப்பும் 1882ஆம் ஆண்டு உண்டி யல் சட்டத்தின் 82ஆம் பிரிவு (1957ஆம் ஆண்டு செக்குச் சட்டத் தால் இப்பிரிவு நீக்கப்பட்டு, மாறுபட்ட வடிவத்தில் திரும்பவும் இயற்றப்படுமுன்) அளித்த பாதுகாப்பும் ஒன்றே. சிலோனின் உச்ச நீதிமன்றம் பாங்கின் தற்காப்பு மறுப்பை ஏற்காது, வாதி வேண்டும் பரிகாரங்களுக்கு அவர் உரியவராவார் என்று தீர்ப் பளித்தது. வசூலிக்கும்-பாங்கு புறக்கணிப்பின்றியே செயலாற்றி யது என்று நீதிமன்றம் ஒப்புக்கொண்டது. இருப்பினும், அதன் தொகை கள்ளத்தனமாக உயர்த்தப்பட்டுள்ள செக்கொன்று இப்பிரிவின் பொருள்படி 'செக்கே' அல்ல என்று கீழ்வழக்கு மன்ற

நீதிபதி அவர்கள் விளம்பிய கூற்றை, உச்சநீதிமன்றம் ஆதரித்தது. இப்பிரிவு வாடிக்கைக்காரருக்கு அதன்பால் உரிமையே இல்லாத அல்லது அவரது உரிமை குறைபாடானது என்னும் நிலையிலுள்ள செக்கைப் பற்றியது. இச்சொற்களைச் சற்று ஊன்றிப் பார்த்தால், செக்கு நல்லதாகவும், செல்லத் தக்கதாகவும் இருக்க வேண்டும் என்று அவை எடுத்துக்கொள்ளுதல் புலப்படும். எனவே, செக்கு நல்லதா, செல்ல வல்லதா என்பதல்ல ; வாடிக்கைக்காரருக்கு அதன்பால் உரிமை இருக்கிறதா அல்லது அவரது உரிமை செம்மையானதா, சொள்ளையானதா (குறைபாடுடையதா) என்பதே இச்சொற்கள் எழுப்பும் கேள்வியாகும். கள்ளக் கையொப்பம், கள்ளத் திருத்தம் போன்ற மாசுகள் படியாத செக்குகளுக்கே இப்பிரிவு பொருந்தும் என்று தீர்ப்பில் விளக்கப்பட்டது.

எனவே, செக்கொன்றை எழுதுபவர் சற்றுக் கவனக்குறைவாக அதை எழுதி, அதன் தொகை கள்ளத்தனமாக உயர்த்தப் பட்டால், அவர், அவருடைய பாங்கிடமிருந்து எந்த பரிகாரத்தையும் பெற உரியவரல்லர் ; எனினும், வசூலிக்கும்-பாங்கிடமிருந்து சட்டமுரணான கையாளுகை செய்த குற்றத்திற்காக, இழப்பீடு பெறும் மறுக்க முடியாத உரிமையை அவர் பெற்றிருக்கிறார். இந்த நிலைமை புதுமையே !

**செலுத்தும்-பாங்கராகவும், வசூலிக்கும்-பாங்கராகவும் செயலாற்றும் பாங்கின் நிலைமை**

ஒரே பாங்கு, செலுத்தும்-பாங்காகவும், வசூலிக்கும்-பாங்காகவும் செயலாற்றினால், அதன் நிலைமை என்ன என்னும் கேள்வி எழுவது பொருத்தமானதே. செலுத்தும்-பாங்கு என்னும் தகுதியில் புறக்கணிப்பு என்னும் கூறு முக்கியமற்றதாகும். ஆனால், வசூலிக்கும்-பாங்கு என்னும் தகுதியில் அதுவே வழக்கைத் தீர்மானிக்கும் உரைகல்லாக அமையும். வோர்ஷிப்ஃபுல் கம்பெனி ஆஃப் கார்ப்பெண்டர்ஸ் (எ.) பிரிட்டிஷ் மியூசுவல் பாங்கிங் கம். லிமிடெட் (1938), 1 கே. பி. 511 என்னும் வழக்கில் இக்கேள்வி எழுந்தபோது, செலுத்தும்-பாங்கு என்னும் முறையில் அந்த பாங்கு பொறுப்பு நீக்கம் பெறுகிறது; ஆனால் புறக்கணித்த குற்றம் மெய்ப்பிக்கப்பட்டுவிட்டதால், வசூலிக்கும்-பாங்கு என்னும் தகுதியில் அது, (உண்மை உரிமையாளருக்கு இழைக்கப்பட்ட இழப்பை ஈடு செய்யப்) பொறுப்பாகிறது என்று தீர்ப்பளிக்கப் பட்டது. இந்தப் பெரும்பான்மையினர் தீர்ப்பின் (majority view) அடிப்படைக் காரணங்கள் பின் வருமாறு: நன்னம்பிக்கையுடன், (பாங்குத்) தொழில் நடப்புக்கும் ஏற்பச் செக்கொன்றைச் செலுத்தும்-பாங்கருக்கு, 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின்

(45 & 46 விக்ட்., சி. 61) 60ஆம் பிரிவு, பாதுகாப்பை அளிக்கிறது. அதே சட்டத்தின் 90ஆம் பிரிவு நன்னம்பிக்கை என்பதற்குக் கீழ் வருமாறு இலக்கணம் வகுக்கிறது :

> நேர்மையான முறையில் ஒரு செயல் செய்யப்பட்டிருப்பின், அது புறக்கணிப்போடு செய்யப்பட்டிருப்பினும், அன்றியும் இச்சட்டத்தின்படி அது நன்னம்பிக்கையுடன் செய்யப்பட்டதாகவே கருதப்படும்.

'தொழில் நடப்புக்கு ஏற்ப' (ordinary course of business) என்னும் சொற்றொடருக்கு இச்சட்டம் இலக்கணம் வகுக்கவில்லை. எனவே, அதை எவ்வாறு பொருள்கொள்வது என்ற சிக்கல் இவ்வழக்கில் ஏற்பட்டது. செக்கைச் செலுத்தும் பணியில் புறக் கணிப்புடன் பாங்கு செயலாற்றியிருந்தால், தொழில் நடப்புக்கு ஏற்பவே, தான் செயலாற்றியதாகச் சொல்ல அந்த பாங்குக்குத் தகுதியில்லை என்று பிரபு நீதிபதி கிரீன் அவர்கள் கருத்தளித் தார். ஆனால், பாங்கரிடையே வேரூன்றி நிலவும் நடைமுறை அல்லது மரபுக்கு முரணான வகையில் செக்கின் செலுத்தல் அமைந் திருக்கக்கூடாது என்பதே 'தொழில் நடப்புக்கு ஏற்ப' என்னும் சொற்றொடரின் பொருளாகும் எனப் பிரபு நீதிபதி மேக்கினன், பிரபு நீதிபதி ஸ்லெஸ்ஸர் ஆகிய இருவரும் கருதினர். உதாரண மாக, கீறிய செக்கின் தொகையைப் பணம் தருமுகப்பின் வழியாகச் சமர்ப்பிப்பவருக்கு நேரடியாகச் செலுத்தினாலும், முறை வழுவிய புறக்குறிப்புக்களைக்கொண்டுள்ள செக்கைச் செலுத்தினாலும், பாங்கு அலுவல் நேரம் தவிரப் பிற நேரங்களில் அதைச் செலுத்தி னாலும் அல்லது கள்ளவிழி விழிப்பவனிடம் பெருந்தொகையை நேரடியாகச் செலுத்தினாலும் (வேக்லியானோ (எ.) பாங்கு ஆஃப் இங்கிலாந்து என்னும் வழக்கில் மொழியப்பட்ட மேற்கோளு ரையை அடிப்படையாகக் கொண்டது.), அந்தச் செலுத்தலைத் தொழில் நடைமுறைக்கேற்றது என்று கருத இயலாது. இது போன்ற சூழ்நிலைகள் தவிர, பிற தறுவாய்களில் தொழில் நடப் புக்கு ஏற்பச் செக்கைச் செலுத்துதலும் புறக்கணிப்பும் ஒன்றுக் கொன்று முரணில்லாதவையாகும். ஆனால், இந்தியாவில் நிலவும் நிலைமை மிக்க வேறுபட்டது. 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 85ஆம் பிரிவு செக்கை, முறைப்படிச் செலுத்தும் பாங்கருக்குப் பாதுகாப்பை நல்குகிறது; அதே சட்டத்தின் 10ஆம் பிரிவு முறைப்படிச் செலுத்துதலின் இலக்கணத்தை வகுக்கும் பொழுது புறக்கணிப்பின்றிச் செலுத்துதலை அதன் முக்கிய அமிச மாக்குகிறது. எனவே, ஆங்கில வழக்கின் தீர்ப்பு இந்தியாவிற்குப் பொருந்தாது. 1882ஆம் ஆண்டு உண்டியல் சட்டத்தின் (45 & 46

விக்ட், சி. 61). 60ஆம் பிரிவு, 1853ஆம் ஆண்டு ஆங்கிலேய முத்திரைச் சட்டத்தின் (16 & 17 விக்ட், சி. 59) 19ஆம் பிரிவு, செக்குகளைப் பொறுத்தவரை பொருந்தாததாகச் செய்துவிட்டது என்று இவ்வழக்கில் மேலும் கூறப்பட்டது. பாங்கர்மீது எழுதப் பெற்ற வரைவு, உண்டியல், இன்னபிற ஆணைகளைப் பற்றி இப்பிரிவு கூறுவதாவது: வரைவு அல்லது ஆணை ஒன்று செலுத் தலுக்காகத் தம்மிடம் சமர்ப்பிக்கப்படும்பொழுது, யாருக்குச் செலுத்துமாறு அது எழுதப்பட்டதோ அவர் அதில் புறங்குறித் திருப்பதாக அது காட்டினால், கொணர்பவரிடம் அதன் தொகையை பாங்கு செலுத்துவதற்கு அதுவே தக்க அங்கீகாரம் ஆகும்; அப்புறக்குறிப்பு, பெறற்குரியவராலோ, அடுத்துப் புறங் குறிப்பவராலோ, அல்லது அவர்களது அங்கீகாரத்துடனோதான் இடப்பட்டது என்று மெய்ப்பிக்க பாங்கர் கடமைப்பட்டவரல்லர்; நன்னம்பிக்கையுடனோ அல்லது தொழில் நடப்புக்கு ஏற்பவோ தான் செலுத்த வேண்டும் என்று இப்பிரிவு பகராததைக் கருத்தி லிருத்துதல் நலம். எனவே, தொடுக்கப்படும் வழக்கு முத்திரைச் சட்டத்தின் 19ஆம் பிரிவுக்கு உட்படுமானால், தொழில் நடப்புக்கு ஏற்பச் செலுத்துதல் என்ற பேச்சுக்கே இடமில்லை. உண்டியல் சட்டத்தின் 60ஆம் பிரிவு, (முத்திரைச் சட்டத்தின்) 19ஆம் பிரிவு செக்குகளைப் பொறுத்தவரை பொருந்தாததாக ஆக்குகிறது; பாங்கர் பாதுகாப்புக்கு உரியவரா அல்லவா என்பதை உண்டியல் சட்டத்தின் 60ஆம் பிரிவுதான் வகுத்தாள்கிறது (regulates) என்று மேல்வழக்கு நீதிமன்றம் தீர்ப்பளித்ததால், இக்கேள்வி எழுந்தது.

**வாடிக்கைக்காரரது கணக்கின் நிலைமை**

வசூலிப்பதற்காகச் செக்கை இடும் வாடிக்கைக்காரரது கணக்கின் நிலையைப்பற்றி, வசூலிக்கும்-பாங்கர் எண்ணிப் பார்க்க வேண்டுமா என்பது இன்னும் ஐயம் புதைந்த வினாவாகவே உள்ளது. கமிஷனர் ஆஃப் டேக்சேஷன் (எ.) இங்கிலீஷ், ஸ்காட்டிஷ் அண்ட் ஆஸ்திரேலியன் பாங்கு லிமிடெட் (1920) ஏ.சி. 683 (690) என்னும் வழக்கில், இருபது பவுண்டு தொகை யுடன் ஒருவர் கணக்கைத் துவக்கினார். கொணர்பவரிடம் செலுத்துமாறு £ 786-19-3க்கு எழுதப் பெற்ற செக்கை, அவர் மறுநாள் தமது கணக்கின் வரவுக்கு இட்டார். பாங்கின் மனத்தில் ஐயப்பாட்டை எழுப்பவோ, விசாரிக்க வேண்டிய கடமையை பாங்கின்மீது சுமத்தவோ வல்ல சூழ்நிலையொன்றும் அந்த வழக்கில் இல்லையென்று மன்னரவை தீர்ப்பளித்தது. இருப்பினும், கார் டியன்ஸ் ஆஃப் செயிண்ட் ஜான்ஸ் ஹேம்ஸ்டெட் (எ.) பார்க் லே(ய்)ஸ் பாங்கு லிமிடெட் 39, தி.எல்.ஆர். 229 என்னும் மற்றொரு வழக்கில், பாங்கு புறக்கணித்தது என்று நீதிமன்றம்

தீர்ப்பு வழங்க அடிகோலிய நிகழ்ச்சிகளில் இதுபோன்ற நிகழ்ச்சியும் ஒன்றாகும். இரண்டாவது வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பையே சர். ஜான் பேஜட் அவர்கள் ஆதரிப்பதாகத் தெரிகிறது. வசூலிக்கும்-பாங்கர் அறிந்தவரை, வாடிக்கைக்காரரின் வாழ்க்கை நிலைக்கு ஒவ்வாத பேரங்கள் அவருடைய கணக்கைப் பொறுத்த வரை ஏற்பட்டால், அவர் அக்கறையின்றி வாளாவிருக்கக்கூடாது. லாயிட்ஸ் பாங்கு லிமிடெட் (எ.) சார்டர்டு பாங்கு ஆஃப் இந்தியா, ஆஸ்திரேலியா அண்ட் சீனு லிமிடெட் (1929), 1 கே.பி. 40 என்னும் வழக்கில், வாதி பாங்கின் எழுத்தர் ஒருவர், பிரதி வாதி பாங்கில் தம் சொந்தக் கணக்கை வைத்திருந்தார். வாதி பாங்குக்குச் சாதகமாக எழுதப்பெற்ற பாங்கு வரைவுகளை அவர் தம்முடைய கணக்கின் வரவில் இட்டு, பங்கு தரகர்களுக்குச் செலுத்துமாறு தம் கணக்கின்மீது செக்குகள் கொடுத்தார். அவ்வளவு பெரும் தொகைகளை—அவருடைய சம்பளத்திற்கும், அவருடைய கணக்குப் பெரும்பாலும் இருக்கும் மெலிந்த (வற்றிய) நிலைமைக்கும் ஒவ்வாத பெருந்தொகைகளை—அவர் பெறும் வளமான ஊற்று எது, எங்கிருந்து திடீரென அது முளைத்தது போன்ற விசாரணையை, பிரதிவாதி பாங்கு செய்யாததால், அது புறக்கணித்தது என்று நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது. எனவே, வாடிக்கைக்காரர்கள் தங்களுடைய கணக்குகளில் இடும் செக்குகளைக் குறித்த காலத்திற்கொருமுறை பாங்கின் அனுபவமிக்க பணியாளர்கள் நுணுகித் தேரல் (scrutinise) சாலச் சிறந்தது.

**'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று கீறிய செக்குகள்**

'பெறற்குரியவரின் கணக்குக்கு' அல்லது 'XY என்பவர்களின் கணக்குக்கு' என்று செக்கொன்று கீறலிடப்பட்டிருந்தால், பெறற்குரியவர் அல்லது அதில் பெயரெழுதப்பட்டுள்ளவரின் கணக்குக்கு மட்டுமே அதை வசூலிக்க வேண்டும் என்று வசூலிக்கும்-பாங்கருக்கு இடும் அறிவிப்பாக அது அமைகிறது என்பதை முன்பே கண்டோம். அதை அவர் மற்றோர் ஆளின் சார்பாக வசூலித்தால், சட்டரீதியான பாதுகாப்புக்கு அவர் உரியவராகார். கீறலிலிருந்து தள்ளி, 'பெறற்குரியவரின் கணக்குக்கு' என்று எழுதப்பட்டுள்ள சொற்களின் விளைவைப்பற்றி ஐயப்பாடு இருந்துகொண்டேதான் இருக்கிறது. எனவே, கீறலுக்கு மிக அருகாமையில் இச்சொற்களை எழுதுதல் சாலச் சிறந்தது. செக்கொன்றில் இச்சொற்கள் துணையிடப்பட்டிருந்தால், வசூலிக்கும்-பாங்கர் அவற்றைக் கவனித்து, அவற்றின் எச்சரிக்கைக்கேற்பச் செயலாற்ற வேண்டும்; அல்லாவிட்டால், செலாவணி முறிச்சட்டத்தின் 131ஆம் பிரிவின்கீழ்ப் பாதுகாப்பைப்பெற விழையும்போது, புறக்கணிப்பு என்னும் குற்றத்திற்கு இலக்காக நேரும். மாறாக, 'பெறற்குரியவரின்

*கணக்குக்கு' என்று பதிக்கப்பட்ட துளைகள் தெளிவாகத் தெரியாமல் இருந்து, நியாயமாக, எதிர்பார்க்கக்கூடிய அளவுக்குமேல் அவர் அச்செக்கைத் துருவி ஆராய்ந்திருந்தாலன்றி அவற்றைக் கண்டு பிடிக்க முடியாது என்னும் நிலைமை இருந்தால், பாங்கர் அவற்றைக் கண்டு பிடிக்கத் தவறியதால் சட்டரீதியான பாது காப்பைப் புறக்கணித்தார் என்னும் அடிப்படையில் அவருக்கு மறுக்கக் கூடாது.*

## வசூலிக்கும்-பாங்கரும் அவருடைய வாடிக்கைக்காரரும்

**செக்குகளை வசூலித்தலில் தக்க கவனமும் ஈடுபாடும் செலுத்த வேண்டும்.**

இதுவரை செக்கின் உண்மை உரிமையாளரைப் பொறுத்த வரை, வசூலிக்கும்-பாங்கரின் நிலைமையை ஆராய்ந்தோம். இப் பொழுது வாடிக்கைக்காரருக்கு (வசூலிக்கும்-பாங்கர்) அவர் செய்ய வேண்டிய கடமைகளை நோக்குவோம். தமது வாடிக்கைக்காரரின் முகவர் என்னும் முறையில், தம்மிடம் தரப்பட்ட செக்குகளை வசூலிப்பதில் தக்க கவனமும் ஈடுபாடும் காட்ட வசூலிக்கும்-பாங்கர் கடமைப்பட்டுள்ளார். அவர் தமது கடமையிலிருந்து வழுவினுலோ அல்லது செயலாற்றும்போது தக்க சாதனங்களைப் (அல்லது வழிகளைப்) பயன்படுத்தாது புறக்கணித்தாலோ அதன் நேரடியான விளைவாகத் தமது வாடிக்கைக்காரருக்கு இழப்பு ஏற் பட்டால், அதை அவர் ஈடு செய்ய நேரிடும். மேற்கோளாக, வசூலிப்பதற்காகச் செக்குகளைப் பெற்ற பாங்கர், நியாயமான காலவரையறைக்குள் அவற்றைச் சமர்ப்பிக்கத் தவறினுல், அதற்குள் அந்தச் செக்குகள் எழுதப்பெற்ற பாங்கர் திவாலானுல், வாடிக்கைக்காரருக்கு அதனுல் விளையும் இழப்பை ஈடு செய்யும் பொறுப்புக்கு வசூலிக்கும்-பாங்கர் ஆளாவார். சமர்ப்பிப்பதற்கு நியாயமான காலவரையறை என்பது, வசூலிக்கும்-பாங்கர் செக்கைப் பெற்றதற்கு அடுத்த அலுவல் நாள் ஆகும். ஃபார்மன் (எ.) பாங்கு ஆஃப் இங்கிலாந்து (1902), 18 தி. எல். ஆர். 339 என்னும் வழக்கு, பாங்கர் தக்க ஈடுபாட்டைக் காட்டாமலிருந்த தற்கு நல்ல எடுத்துக்காட்டாக அமைகிறது. அந்த வழக்கில் இங்கிலாந்து பாங்கின் வாடிக்கைக்காரர் ஒருவர், நார்விச் நகரத்தி லுள்ள பாங்கொன்றின்மீது 500 பவுண்டுக்கு எழுதப்பட்ட செக்கொன்றைத் தமது கணக்கில் இட்டார். அச்செக்கு நார்விச் நகரத்தில் மாற்ருக லண்டன் மாநகரத்தில் செலுத்தத் தக்கதாக இருந்தது. பாங்கரிடையே நிலவிய நடைமுறைக்கேற்ப அது போன்ற செக்குகள் நகரத்தீர்வில் (town clearing) சேர்க்கப்பட

வேண்டும். அதற்கு மாருக, வசூலிக்கும்-பாங்கு அதை நாட்டுப் புறத்தீர்வில் (country clearing) சேர்த்தது. அதற்கு அடுத்த நாள் வாடிக்கைக்காரர் எழுதிய செக்கை அந்த பாங்கு (இட்ட செக்கை வசூலிக்காத காரணத்தால்) அவமதிக்க வேண்டிய தாயிற்று. அந்த பாங்கு வாடிக்கைக்காரருக்கு நட்டஈடு செலுத்தப் பொறுப்பாகும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

அவமதிப்பறிவிப்பு (Notice of Dishonour)

வசூலிக்கும்-பாங்கர் செக்கைச் சமர்ப்பிக்கும்பொழுது, அது அவமதிக்கப்பட்டால், தக்க கவனத்துடனும் தாமதிக்காமலும், வாடிக்கைக்காரருக்கு அதைப்பற்றி அறிவிக்க வேண்டும். அப் பொழுதுதான் அச்செக்கின்பால் பொறுப்பேற்றுள்ள ஆள்களிட மிருந்து, அதன் தொகையை வாடிக்கைக்காரர் மீட்க முடியும். வசூலிக்கும்-பாங்கர், செலுத்தும்-பாங்கர் ஆகிய இரு பாங்கரும் ஒரே நகரில் (இடத்தில்) செயலாற்றினுல், வசூலிப்பதற்காகப் பெறும் செக்குகளே, அன்றே அல்லது அடுத்த அலுவல் நாளிலோ பாங்கர்கள் பெரும்பாலும் சமர்ப்பிக்கின்றனர். செக்கைப் பெறும் நாளன்றே அதைச் சமர்ப்பிக்க இயலாவிட்டால், 'மிகவும் தாமதமாகி விட்டது ; இன்றைய தீர்வில் சேர்ப்பதற்கு இயலாது' (too late for today's clearing) என்று வசூலிக்கும்-பாங்கர் செலுத் துச்சீட்டின் சரி நேர்படியில் கைப்பொறிப்பால் முத்திரையிடுவது வழக்கம். இரண்டு பாங்குகளும் வெவ்வேறு நகரில் அமைந் திருந்தால், செலுத்தும்-பாங்கு பணியாற்றும் நகரிலுள்ள தமது பதிலாளுக்கு, வசூலிக்கும்-பாங்கு அந்தச் செக்கை என்று பெறு கிறதோ அன்றே அல்லது அதற்கு அடுத்த அலுவல் நாளே அனுப்ப வேண்டும். அவமதிப்பறிவிப்பு அனுப்பவதற்கும் இதே விதிகள் பொருந்தும். புறக்குறிப்பை உறுதி செய்ய வேண்டும் என்றே அல்லது பிற காரணங்களே முன்னிட்டோ, சில பொழுது, எழுதப் பெற்ற பாங்கு, வசூலிக்கும்-பாங்குக்கு அது சமர்ப்பித்த செக்கு களேத் திருப்பி அனுப்பலாம் ; அவ்வாறு திருப்பியனுப்பியதற் கான காரணங்களே வசூலிக்கும்-பாங்கே சரி செய்து, கவனித்து அவற்றை மீண்டும் சமர்ப்பிக்க எண்ணியிருந்தாலும் வாடிக்கைக் காரருக்கு அவற்றைக் கவனிக்க வேண்டிய தொல்லேகளேக் கொடுக் காமலிருக்க அது அவ்வாறு முடிவு செய்திருப்பினும் அவருக்கு அதைப்பற்றித் தக்க அறிவிப்பைத் தருதல் அதனுடைய கடமை யாகும், அவ்வாறு செய்யத் தவறினுல், வேறு ஏதோ காரணத் திற்காக அச்செக்கு இரண்டாம் முறையும் திருப்பியனுப்பப் படுவதன்மூலம் அந்த பாங்கு இழப்பை ஏற்க நேரிடலாம். தொலே பேசி போன்ற நேரடித் தொடர்பு வசதிகளின் உதவியால் இந்த அறிவிப்பைத் தெரிவிக்கலாம். இருப்பினும், அதை எழுதி அனுப்பு

வதே கடைப்பிடிக்கக் தக்க முறையாகும். தந்தி மூலமாக அறிவித்தல் நல்லதுதான் ; ஆனால், கடிதம் எழுதி அச்செய்தியை உறுதி செய்ய வேண்டிய தேவை இருக்கிறது. சமர்ப்பிக்கும் பொழுது செக்கொன்று அவமதிக்கப்பட்டு, சமர்ப்பித்த பாங்கு அதைத் தமது வாடிக்கைக்காரருக்குத் திருப்பியனுப்புமுன், அச் செக்கு திரும்பவும் கேட்கப்பட்டு, செலுத்தப்படலாம். ஆயினும், அதைப்பற்றி பாங்கர் வாடிக்கைக்காரருக்கு அறிவிக்க வேண்டும் ; ஏனெனில், அச்செக்கை எழுதியவரின் நிதி நிலைமை தமது வாடிக் கைக்காரர் மதிப்பிட்டதைப்போல் அவ்வளவு திடமாக இல்லா திருக்கலாம் ; அதை அறியும் வாய்ப்பை அந்த அறிவிப்பு கொடுக்கிறது.

**செலுத்தும்-பாங்கும் வசூலிக்கும்-பாங்கும் ஒன்றேயானால், நிலைமை என்ன ?**

வசூலிப்பதற்காக பாங்கொன்றிடம் தரப்படும் செக்கு அதே பாங்கின் அதே கிளையகத்தின்மீது எழுதப் பெற்றிருந்தால், அடுத்த அலுவல் நாள் இறுதி வரை அதைப்பற்றி ஒன்றும் செய்யாதிருக்கும் உரிமை சட்டப்படி அதற்குண்டு. பொதுவாக என்று தரப்படுகிறதோ, அன்று அலுவல் நேரம் முடியுமுன்பே அச்செக்குகள் மதிக்கப்படும் அல்லது திருப்பியனுப்பப்படும். செக்கைத் தமது கணக்கில் இடும்போது வாடிக்கைக்காரர் கேட்டு (மதிக்கப்படுமா, இல்லையா என்று) பாங்கு அவருக்கு உடன் பாடான விடையைத் தெளிவாக அறிவித்திருந்தால், செலுத்தப் பட்டதாகவே, அவர் அச்செக்கைப் பாவிக்கலாம்.

## வாடிக்கைக்காரர்களின் உண்டியல்களை வசூலித்தல்

**உண்டியல்களை வசூலிக்கும் கடமையைச் சட்டம் விதிக்கவில்லை**

வாடிக்கைக்காரர்களுக்காக உண்டியல்களை வசூலிக்கும் கடமை சட்டப்படி பாங்கருக்கில்லையெனினும், தற்பொழுது பணி யாற்றும் எந்த ஒரு வாணிக பாங்கும் இப்பணியை ஏற்க மறுக் காது. உண்டியல்களை வசூலிப்பதற்கு பாங்குகள் கட்டணம் விதிப்பதால், இப்பணியை மேற்கொள்ளுவதன்மூலம் தங்கள் இலாபத்தைப் பெருக்கிக்கொள்வதுடன், தங்களுடைய வாடிக் கைக்காரர்களுக்குத் தாங்கள் அளிக்கும் வசதியையும் விரிவுபடுத்த வழியேற்படுகிறது. மேலும், இவ்வசதியை அளிப்பதன்மூலம் புதிய வாடிக்கைக்காரர்களைச் சேர்க்கவும், தங்களிடம் துவக்கப் படும் கணக்குகளின் எண்ணிக்கையைப் பெருக்கவும் இது சிறந்த தூண்டுவிசையாக அமைகிறது. உண்டியல் ஒன்றை ஏற்பவர்,

தாம் ஏற்ற உண்டியல்களில் பெரும்பகுதி குறிப்பிட்ட ஒரு பாங்கிடம் வசூலிப்பதற்காக இடப்படுகின்றது என்பதை அறிய நேர்ந்தால், அந்த பாங்கில் கணக்கைத் துவக்குவதைப் பெரும் வசதியாக அவர் கருதக் கூடும். எவ்வாறெனில், தாம் ஏற்றுக்கொண்ட உண்டியல்களைச் செலுத்த அந்த பாங்கின்மீது செக்குகளை எழுதிக் கொடுத்தாலே போதுமானது. இன்னும் எளிதான முறையில் மாற்றுப் பதிவுகளின்மூலமாக அவர் கணக்கிலிருந்து உண்டியல்களின் பெறற்குரியவர்கள் அல்லது புறக்குறிப்பாளிகளின் கணக்குகளுக்குத் தேவையான தொகையை மாற்றலாம்.

## முன்னெச்சரிக்கைகள்

### சட்டரீதியான பாதுகாப்பு கிடையாது

*1881*ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் *131*ஆம் பிரிவு அளிக்கும் சட்டரீதியான பாதுகாப்பு உண்டியல்களுக்குப் பொருந்தாதாகையால், அவற்றை வசூலிக்கும்பொழுது யாருக்காக பாங்கர் அவற்றை வசூலிக்கிறாரோ அவருடைய உரிமை செம்மையானதா என்பதைக் கண்டறிய வேண்டிய தேவை இருக்கிறது. வாடிக்கைக்காரருக்காக பாங்கர் வசூலித்த ஓர் உண்டியலில் கள்ளப்புறக்குறிப்பு ஒன்று இருந்ததன் விளைவாக, வாடிக்கைக்காரருக்கு அதன்மீதுள்ள உரிமை குறைபாடுடையதாக ஆக்கப்பட்டால், அதன் உண்மை உரிமையாளர் வசூலிக்கும்-பாங்கரிடமிருந்து அதன் தொகையைப் பெறுவதற்கு உரியவராகிறார். தமக்கு உண்டான இழப்பை ஈடு செய்துகொள்வதற்கு அந்த பாங்கு தமது வாடிக்கைக்காரரிடமிருந்து அதை மீட்க முயலும்.

### ஏற்புக்காகச் சமர்ப்பித்தல்

உண்டியல் ஒன்று, இன்னும் ஏற்றுக்கொள்ளப்படாது இருந்தால், அதை வசூலிக்க ஒப்புக்கொள்ளும் பாங்கு, ஏற்பைப் பெறும் பொருட்டு அதைச் சமர்ப்பிக்க வேண்டும். ஏற்புக்காகச் சமர்ப்பிக்க வேண்டிய முறைகளைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு, *1881*ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் *61*ஆம் பிரிவு கூறுகிறது :

> காணும் தேதியிலிருந்து குறிப்பிட்ட ஒரு காலப்பகுதி கழியும்போது செலுத்தத்தக்க உண்டியலை, அதை எழுதிய நியாயமான காலத்திற்குள், அலுவல் நாளன்று, அலுவல் நேரத்தில், ஏற்புக்காகச் சமர்ப்பிக்க வேண்டும்; சமர்ப்பிக்க வேண்டிய இடமும், காலமும் அதில் குறிக்கப்பெறாது இருந்தால், யார்மீது அது எழுதப் பெற்றுள்ளதோ அவரிடம்—

நியாயமான அளவு தேடிப் பார்க்கும்போது ஆள் காணப் பெற்ருல்—ஏற்குமாறு கேட்கும் உரிமை உடையவர் அதைச் சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறு சமர்ப்பிக்கத் தவறினுல், அவருக்கு, அந்த உண்டியலில் சம்பந்தப்பட்ட ஒரு தரப் பினரும் பொறுப்பாக மாட்டார்.

நியாயமான அளவு தேடிப் பார்த்தும் அதன் எழுதப் பெற்றவர் காணப் பெறவில்லையென்ருல், அந்த உண்டியல் அவமதிக்கப்படுகிறது.

குறிப்பிட்ட இடத்தில் அதன் எழுதப் பெற்றவர் இருப் பார் என்று அந்த உண்டியல் குறிக்கப்பெற்றிருந்தால், அந்த இடத்தில் அதைச் சமர்ப்பிக்க வேண்டும்; சமர்ப்பிப்பதற்கு உரிய நாளில் நியாயமாகத் தேடியும் அவர் அங்குக் காணப் படவில்லையென்ருல், அது அவமதிக்கப்படுகிறது.

ஒப்பந்தமோ, வழக்கோ அதை அங்கீகரித்தால், பதிவு அஞ்சலினுல் அஞ்சலகம் வழியாகச் சமர்ப்பித்தலே போது மானது.

தமது வாடிக்கைக்காரரின் இசைவின்றி, நிபந்தனைக்குள்பட்ட ஏற்பைப் பெறுவதற்கு பாங்கர் உடன்படக் கூடாது. அது போலவே எழுதப்பெற்றவரின் செக்கைப் பெற்றுக்கொண்டு, உண்டியலை அவரிடம் கொடுத்து விடுதலும் பெருந்தவருகும். எவ்வாறெனில், இந்தச் செயல் அந்த உண்டியலை எழுதியவரையும், புறங்குறித்தவர்களையும் அதன் பொறுப்பிலிருந்து விடுவித்து விடும்.

**ஏற்புக்காகச் சமர்ப்பிப்பதற்கு எப்பொழுது விலக்களிக்கப்படுகிறது ? (Excused)**

கீழ் வரும் தறுவாய்களில் ஏற்புக்காகச் சமர்ப்பிப்பதற்கு விலக்கு அளிக்கப்படுகிறது :

(அ) அந்த உண்டியல் கேட்கும்பொழுது செலுத்தத் தக்கதாக இருந்தால் :

(ஆ) அதன் எழுதப்பெற்றவர், கற்பனை ஆளாக, மாண் டவராக, பித்தராக அல்லது நொடித்தவராகவோ அல்லது ஒப்பந்தம் செய்யத் தகுதியற்றவராகவோ இருந்தால் ;

(இ) நியாயமான கவனமும் ஈடுபாடும் செலுத்தியும், பாங்கர் அதைச் சமர்ப்பிக்க இயலாது போனுல் ;

(ஈ) சமர்ப்பித்த முறை தவருக இருப்பினும், வேருெரு காரணத்திற்காக அதன் எழுதப் பெற்றவர் அதை ஏற்க மறுத்திருந்தால் ஆகியவை.

**ஏற்புக்காக விரைவில் சமர்ப்பிப்பது நன்மை பயக்கும்**

விலைக்கு வாங்கி வைத்திருப்பவர் என்னும் தகுதியிலோ அல்லது வாடிக்கைக்காரரின் பதிலாள் என்ற தகுதியிலோ இன்னும் ஏற்காத (unaccepted) உண்டியல்களை பாங்கு வைத் திருக்க நேர்ந்தால், எவ்வளவு விரைவில் அவற்றை ஏற்புக்காகச் சமர்ப்பிக்கக் கூடுமோ அவ்வளவு விரைவில் அதைச் செய்தல் விரும்பத் தக்கது. இதனல் விளையும் நற்பயன்கள் பல. முதலாவ தாக, எழுதப்பெற்றவர் அந்த உண்டியலை ஏற்றுக்கொள்வதனல் அதன்மீது பொறுப்பேற்கிருர். எனவே, பாங்கர் வைத்துள்ள அந்த உண்டியல் கூடுதல் பாதுகாப்பைப் பெறுகிறது. இரண்டாவ தாக, வாடிக்கைக்காரரின் நலனைக் கருத்திற்கொண்டு, எது மிக்க நலம் பயக்குமோ அவ்வாறு செயலாற்றும் பொறுப்பு பாங்கருக் குண்டு. மூன்ருவதாக, காணும் தேதியிலிருந்து குறிப்பிட்ட காலம் கழியும்போது செலுத்தத் தக்கதாக அந்த உண்டியல் இருந்தால், ஏற்புக்காகச் சமர்ப்பிக்கும் அந்தச் செயல்தான், அதனுடைய முதிர்வு தேதியை நிர்ணயிக்கும். ஆகவே, எவ்வளவு விரைவில் அது சமர்ப்பிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்படுகிறதோ, அவ்வளவு முன்னதாக அது முதிர்வு பெறும். எனவே, தக்க கவனம் செலுத்தி, ஏற்புக்காக உண்டியலைச் சமர்ப்பிப்பதில் சுணக்கம் ஏற்படாதவாறு எச்சரிக்கையாக இருத்தல் பாங்கருடைய கடமை யாகும். பாங்கர் இக்கடமையில் தவறி, அதன் விளைவாக வாடிக் கைக்காரர் இழப்பை ஏற்க நேர்ந்தால், அவருக்கு ஈடு செய்ய பாங்கர் பொறுப்பாவார். உண்டியலைப் பெற்ற எத்துணை நாள் களுக்குள் ஏற்புக்காக அதைச் சமர்ப்பிக்க வேண்டும் என்னும் வினு எழுகிறது. எந்த இடத்தில் அதைச் சமர்ப்பிக்க வேண்டுமோ அந்த இடம் பாங்கர் காணச் செல்லக்கூடிய தொலைவாகவே இருந்தால், பெற்ற அந்நாளிலோ அல்லது அடுத்த அலுவல் நாளன்ருே உண்டியலை ஏற்புக்காகச் சமர்ப்பிக்க வேண்டும். பிற சூழ்நிலைகளில் உண்டியலில் குறிப்பிட்டுள்ளதற்கேற்ப, எந்த இடத்தில் அதன் எழுதப்பெற்றவர் வியாபாரம் நடத்துகிருரோ, அந்த இடத்திலுள்ள தமது பதிலாளுக்கு பாங்கர் அதை அனுப்பி வைக்கிருர். அந்த இடத்தில் பாங்கருக்குப் பதிலாள் இல்லை யென்ருல், எழுதப்பெற்றவருக்குப் பதிவு அஞ்சல் மூலமாக அதை அனுப்பலாம். உண்டியலை, ஏற்புக்காகச் சமர்ப்பிப்பதற்கு நியாய மான காலவரம்பு என்ன என்பதை ஆய்ந்து முடிவு செய்யும் போது, 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 105ஆம்

பிரிவு வேண்டுவதற்கொப்ப, உண்டியலின் தன்மை, அதைப் பற்றிய நடைமுறை மரபுகள் ஆகியவற்றைக் கருத்திற்கொள்வதுடன், நியாயமான காலத்தைக் கணக்கிடும்போது பொது விடுமுறைகளை ஒதுக்கிவிட வேண்டும். வழக்கிற்கு மிகவும் மாறுபட்ட தவிர்க்க முடியாத சூழ்நிலைகளில் நியாயமான காலவரம்பிற்குள் உண்டியலைச் சமர்ப்பிக்க இயலாதபோது, உரிய வாடிக்கைக்காரரிடம் அதைப்பற்றி பாங்கர் அறிவிக்க வேண்டும். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 75A என்னும் பிரிவு ஏற்புக்காகச் சமர்ப்பிப்பதில் ஏற்படும் சுணக்கத்திற்குச் சில சூழ்நிலைகளில் விலக்களிக்கிறது. அச்சூழ்நிலைகளாவன: வைத்திருப்பவரின் சக்திக்கும் மீறிய சூழ்நிலைகள் எதிர்பாராமல் தோன்றி, அவர் அதைச் சமர்ப்பிப்பதில் தவிர்க்க முடியாத சுணக்கத்தை விளைவித்திருக்க வேண்டும்; மேலும், அவர் கடமையைச் செய்யத் தவறியதாலோ, நெறி தவறி நடந்ததாலோ அல்லது அவர் புறக்கணித்ததன் காரணமாகவோ சுணக்கம் ஏற்பட்டிருக்கக் கூடாது. ஆகவே, எதிர்பாராமல் நோய்வாய்ப்படுதல், எதிர்பாரா இடர் இது போன்ற நியாயமான பிற காரணங்கள் இவற்றினால் விளைக்கப்பட்ட சுணக்கத்திற்கு விலக்களிக்கப்படும். இருப்பினும், அந்தக் காரணங்கள் நீங்கியவுடன், தக்கக் கவனத்தோடு அதைச் சமர்ப்பிக்க வேண்டும்.

**உண்டியலின் முகப்பில்தான் ஏற்பை எழுத வேண்டும் என்னும் தேவையில்லை**

பொதுவாக ஏற்பை உண்டியலின் முகப்பில்தான் எழுதுகிறோம். எனினும், அங்குதான் அதை எழுதுதல் வேண்டும் என்ற தேவை இல்லை [யங்க் (எ.) க்லோவர் (1875), 3, ஜுர். என். எஸ். 637]. புறக்குறிப்பைப் போலவே ஏற்பிலும், மரியாதை பட்டங்களையும், இன்ன பிறவற்றையும் அதன் முன்னோ பின்னோ சேர்க்கக் கூடாது. காணும் தேதிக்குப் பிறகு செலுத்தத்தக்க உண்டியல்களில் ஏற்புக்காகச் சமர்ப்பிக்கும் தேதியையும் ஏற்புடன் இணைத்து எழுத வேண்டும். முறையாக ஏற்று, அதைத் திருப்பிக்கொடுத்த பிறகுதான், உண்டியலை ஏற்றவர் பொறுப்பு தொடங்குகிறது. உண்டியலின்மீது ஏற்பு குறிக்கப்பட்டிருப்பது மிக இன்றியமையாதது. அது அதன் முகப்பிலோ அல்லது புறப்பகுதியிலோ தோன்றலாம்; இல்லையெனில், அது பயனற்ற, செல்லாத ஓர் உண்டியலாகும் [ஆர்தேஷெர் சொராப்ஷா மூஸ் (எ.) குஷால் தாஸ் கோகுல்தாஸ், 32 பம்பாய், எல்.ஆர் 247]. வெளிநாட்டு உண்டியலைக் கடிதம் மூலமாகக்கூட ஏற்றுக்கொள்ளலாம் [பில்லிங் (எ.) டிவோ(க்)ஸ் (1931), 3 எம் & கிர். 565]. உண்டியல் எழுதப் பெற்றவர் அளவுக்கு மீறிய காலம் அதைக் கொடாமல் வைத்திருந்

தால், அதுவே ஏற்புக்கு ஈடாகலாம் [ஹார்வி (எ.) மார்டின் (1808), 1 கேம்ப். 425]. மரபுக்கேற்ப வாய்மொழியால் நாட்டு உண்டியலை ஏற்கலாம் [பன்னுலால் (எ.) ஹர்கோவிந்த் 51 ஐ.சி. 250]. உண்டியல் ஒன்று ஏற்காமல் அவமதிக்கப்பட்டால், வாடிக்கைக்காரருக்கு அதைத் திருப்பியனுப்புவது பாங்கருடைய கடமையாகும். வெளிநாட்டு உண்டியல்கள் ஏற்காமல் அவமதிக்கப்பட்டால், அவமதிப்புக் குறிப்பையோ (noting) அல்லது அவமதிப்புச் சான்றையோ (protest) பாங்கர் பெறுதல் வேண்டும் [பின்னிணைப்பு 'ஆ', தாள் எண் 24 (அ) பின் காண்க].

**செலுத்தச் சமர்ப்பித்தல்**

(ஏற்றவர்) செலுத்துவதற்காக உண்டியலைச் சமர்ப்பிப்பதைப் பற்றி பாங்கரின் கடமையை இங்குக் காணுவோம். 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 64ஆம் பிரிவு, செலுத்தலுக்குச் சமர்ப்பித்தலைப்பற்றிக் கீழ்க் காணுமாறு இயம்புகிறது :

> வெண்கடன் பத்திரங்கள், உண்டியல்கள், செக்குகள் ஆகியவற்றை முறையே அவற்றின் எழுதுபவர், ஏற்பவர் அல்லது எழுதப்பெற்றவரிடம், செலுத்தலுக்காக அவற்றை வைத்திருப்பவரோ அல்லது அவரது சார்பாகவோ சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறு செய்யத் தவறினல், அவருக்கு (வைத்திருப்பவருக்கு), அதில் சம்பந்தப்பட்ட எந்தத் தரப்பாரும் பொறுப்பாக மாட்டார்.
>
> ஒப்பந்தமோ அல்லது நடப்போ அவ்வாறு அங்கீகரித்தால் பதிவு அஞ்சல் செய்து அஞ்சலகம் வழியாகச் சமர்ப்பித்தலே போதுமானது.
>
> விலக்கு : வெண்கடன் பத்திரம் ஒன்று கேட்கும் பொழுது செலுத்தத்தக்கதாக இருந்து, குறிப்பிட்ட இடத்தில் செலுத்தப்படும் என்று அதில் குறிக்கப் பெறவில்லையாயின், அதன் எழுதுபவர்மீது நடவடிக்கை எடுப்பதற்கு அதைச் சமர்ப்பிக்க வேண்டும் என்கிற தேவையில்லை.

**எழுதுபவர்மீதோ, ஏற்பவர்மீதோ நடவடிக்கை எடுக்கச் சமர்ப்பித்தல் தேவையில்லை**

செலுத்துவதற்காகச் சமர்ப்பிக்காமலேயே வெண்கடன் பத்திரத்தை எழுதியவர்மீதும், உண்டியலை ஏற்றவர்மீதும்

நடவடிக்கை எடுக்கலாம். ஏனெனில், அவர்கள்தான் அவற்றின் தலையாய கடனாளிகள். அவர்கள்மீது வழக்குத் தொடுத்தவுடன், அவற்றின் தொகைகளை அவர்கள் நீதிமன்றத்தில் செலுத்திவிட்டால், வழக்குச் செலவுகளை (costs of the suit) அவர்களிடமிருந்து பெற இயலாது. ஆனால், உண்டியலை எழுதியவர்களையும், புறங் குறித்தவர்களையும் பொறுத்தவரை, செலுத்துவதற்காக அவற்றைச் சமர்ப்பித்தல் மிக்க அவசியம்; அப்பொழுதுதான், அந்த உண்டியல்கள் அவமதிக்கப்படுங்காலத்து அவற்றின் தொகைகளைச் செலுத்த அவர்கள் பொறுப்பாவார்கள்,

**எங்கே, எப்பொழுது சமர்ப்பிக்க வேண்டும் ?**

முறி ஒன்றை வைத்திருப்பவரோ அல்லது அவர் அங்கீகரித்த முகவரோ எழுதப் பெற்றவரின் தொழிலகத்தில் அலுவல் நாளில், அலுவல் நேரத்தில் செலுத்துவதற்காக அந்த முறியைச் சமர்ப்பிக்க வேண்டும். எழுதப் பெற்றவருடைய தொழிலகத்தின் முகவரி தெரியாமலிருந்தால், அவருடைய இல்லத்தில் அதைச் சமர்ப்பிக்க வேண்டும். தமது பாங்கர் செலுத்துவார் என்று ஏற்கும்பொழுது ஏற்பவர் அதில் இடங்குறித்திருந்தால், அந்த பாங்கரிடம் அதைச் செலுத்துவதற்காகச் சமர்ப்பிக்க வேண்டும். கூட்டுவணிக அமைப்பில்லாத இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆள்களின்மீது எழுதப்பெற்ற உண்டியல்களை, அவர்கள் அனைவரிடமும் செலுத்துவதற்காகச் சமர்ப்பிக்க வேண்டும். எழுதப் பெற்றவர் இறந்துபட்டிருந்து, அவருடைய சட்டரீதியான சொத்துரிமையாளர் காணப்பெற்றால், அவரிடம் அதைச் சமர்ப்பிக்க வேண்டும்.

**உண்டியல்களைச் செலுத்த வேண்டிய தேதிகளை எவ்வாறு நிர்ணயிப்பது ?**

அது காட்டும் அல்லது அதைக் காணும் தேதியிலிருந்து குறிப்பிட்ட காலப்பகுதி கழியும்போது செலுத்தத்தக்க உண்டியலையோ அல்லது வெண்கடன் பத்திரத்தையோ, அது முதிர்வடையும் போது செலுத்துவதற்காகச் சமர்ப்பிக்க வேண்டும் என்று 1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 66ஆம் பிரிவு கூறுகிறது. அதே சட்டத்தின் 21 முதல் 25 வரையுள்ள பிரிவுகள் முறியொன்றைச் செலுத்துதற்குரிய தேதியைக் கணக்கிடுவது பற்றிய விதிகளைக் கொண்டுள்ளன. வெண்கடன் பத்திரம் அல்லது உண்டியல் ஒன்றில் தோன்றும் ‘காணும்பொழுது’ (at sight), ‘சமர்ப்பிக்கும்பொழுது’ (on presentation) ஆகிய சொற்றொடர்கள்

கேட்கும்பொழுது என்னும் பொருள்படும் என்று 21ஆம் பிரிவு கூறுகிறது. 'காணும் பிறகு' (after sight) என்னும் சொற்றொடர் வெண்கடன் பத்திரம் ஒன்றில் தோன்றினால், காணும் வண்ணம் சமர்ப்பித்த பிறகு என்று பொருள்படும்; அதே சொற்றொடர் உண்டியல் ஒன்றில் தோன்றினால் ஏற்றுக்கொண்ட பிறகு என்று பொருள்படும். என்று உண்டியல் அல்லது வெண்கடன் பத்திரம் ஒன்றின் தொகை செலுத்துவதற்கு உரித்தாகுகிறதோ, அன்று அது முதிர்வடைகிறது என்றும், கேட்கும்பொழுது, காணும் பொழுது அல்லது சமர்ப்பிக்கும்பொழுது செலுத்தப்படும் என்று குறிக்கப்பெறாத உண்டியல் அல்லது வெண்கடன் பத்திரம் ஒவ்வொன்றும் எந்தத் தேதியில் அது செலுத்தப்படும் என்று குறிக்கப் பெற்று இருக்கிறதோ அதற்கு மூன்றாம் நாள் முதிர்வடையும் என்றும் 22ஆம் பிரிவு பகர்கிறது. எனவே, கேட்கும்பொழுது, காணும்பொழுது அல்லது சமர்ப்பிக்கும்பொழுது செலுத்தத்தக்க வையாக இல்லாத உண்டியல்களுக்கும் வெண்கடன் பத்திரங் களுக்கும் மூன்று கருணை நாள்கள் அவகாசம் கொடுக்கப்படு கின்றன. அதில் கண்ட அல்லது அதைக் காணும் தேதியிலிருந்து குறிப்பிட்ட மாதங்கள் கழியும்போது செலுத்தத்தக்க உண்டியல் அல்லது வெண்கடன் பத்திரம் ஒன்றின் முதிர்வுத் தேதியைக் கணக் கிடும்போது, அதில் கண்ட அல்லது ஏற்புக்கு அதைச் சமர்ப்பித்த தேதிக்கு இசைந்த செலுத்த வேண்டிய மாதத்திய தேதியன்று அதன் காலப் பகுதி கழிகிறது என்று கொள்ளப்படும். செலுத்த வேண்டிய மாதத்தில் அதற்கிசைந்த தேதி இல்லையென்றால், அந்த மாதத்தின் இறுதி நாளன்று அந்தக் காலப்பகுதி முடிவடை கிறது என்று கொள்ளப்படும் (23ஆம் பிரிவு). இரண்டு மேற்கோள் களினால் இந்த விதியைத் தெளிவாக்கலாம். ஒரு மாதத்திற்குப் பிறகு செலுத்தத்தக்க வெண்கடன் பத்திரம் ஒன்று, 1941ஆம் ஆண்டு ஜனவரி 31 என்று தேதியிடப்பட்டிருக்கிறது; பிப்பிரவரி மாதத்தில் (செலுத்த வேண்டிய மாதம்) இதற்கிசைந்த தேதியில்லை யாதலால், அதன் இறுதி நாள் (28ஆம் தேதி) அந்தப் பத்திரத்தின் காலப்பகுதி முடிவடைகிறது; அதனுடன் மூன்று கருணை நாள் களைச் சேர்த்தால், அந்தப் பத்திரத்தின் முதிர்வு தேதியாகிய 1941, மார்ச்சு 3ஆம் தேதியைப் பெறுகிறோம். அதைக் காணும் தேதியிலி ருந்து மூன்று மாதங்கள் கழியும்போது செலுத்துமாறு உண்டியல் ஒன்று எழுதப்படுகிறது; 1940ஆம் ஆண்டு ஆகஸ்டு 31ஆந்தேதி அது ஏற்கப்படுகிறது; 1940ஆம் ஆண்டு டிசம்பர் 3ஆந்தேதியே அது முதிர்வடைகிறது; அதுவே அதைச் செலுத்துதற்குரிய நாளாகும் (நவம்பர் 30ஆந்தேதியுடன் மூன்று கருணை நாள்களைச் சேர்த்தால் கிடைக்கும் தேதியாகும்). குறிப்பிட்ட மாதங்களுக்குப் பிறகு செலுத்தத்தக்க உண்டியல்களைப்பற்றி 23ஆம் பிரிவு கூறுகிறது.

குறிப்பிட்ட நாள்களுக்குப் பிறகு செலுத்துமாறு எழுதப்படும் உண்டியல்களைப் பற்றி 24ஆம் பிரிவு பகர்கிறது. அதன்படி, முதிர்வுத் தேதியைக் கணக்கிடும்போது, முதல் நாளைத் தள்ளிவிட வேண்டும். உதாரணமாக, 1941ஆம் ஆண்டு ஜனவரி 24 என்று தேதியிடப்பட்ட வெண்கடன் பத்திரம் ஒன்று, இருபத்தொரு நாள்களுக்குப் பிறகு செலுத்தத்தக்கதாக எழுதப்பட்டுள்ளது. அது, 1941ஆம் ஆண்டு, பிப்பிரவரி 17ஆந்தேதி செலுத்துதற் குரியது. அதைக் காணும் தேதியிலிருந்து முப்பது நாள்களுக்குப் பிறகு செலுத்துமாறு உண்டியல் ஒன்று எழுதப்படுகிறது; 1941ஆம் ஆண்டு ஜனவரி 31ஆந்தேதியன்று அது ஏற்கப்படு கிறது. 1941ஆம் ஆண்டு மார்ச்சு 5ஆந்தேதி அது செலுத்துதற் குரியதாகிறது. உண்டியல் அல்லது வெண்கடன் பத்திரம் ஒன்றின் செலுத்துதற்குரிய நாள் பொது விடுமுறை நாளாக இருக்க நேர்ந்தால், அதற்கு முந்தைய அலுவல் நாளன்று அது செலுத்து தற்குரியதாகக் கொள்ளப்படும் என்று 25ஆம் பிரிவு இயம்புகிறது. இங்கிலாந்து நாட்டில் நிலவும் விதி, இந்த விதியினின்றும் சிறிது மாறுபடுகிறது. அங்கு, முறி ஒன்றின் செலுத்துதற்குரிய நாள் பொதுவிடுமுறை நாளாக (ஞாயிற்றுக்கிழமை, புத்தாண்டு நாள், புனித வெள்ளிக்கிழமை, கிறித்து பிறந்த நாள்) இருந்தால், அதற்கு முந்தைய அலுவல் நாளன்று அது செலுத்துதற்குரியதாகிறது; ஆனால் செலுத்துதற்குரிய நாள் பாங்கு விடுமுறை நாளாக இருந் தால், அதற்கு அடுத்த நாளே அதைச் செலுத்துதற்குரிய நாளாகும். இந்தியாவில் பாங்கு விடுமுறை நாள்கள், பொது விடுமுறை நாள்கள் என்ற பாகுபாடு செய்யப்படுவதில்லை.

## அவமதிப்புக் குறிப்பும் அவமதிப்புச் சான்றும்

உள்நாட்டு உண்டியல்களைப் பொறுத்தவரை, வாடிக்கைக் காரர் அவ்வாறு செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தா லன்றி, அவை அவமதிக்கப்படுங்காலத்து பாங்கர் அவமதிப்புச் சான்றைப் பெற வேண்டும் என்னும் தேவையில்லை. ஆனால், வெளிநாட்டு உண்டியல் ஒன்று அவமதிக்கப்படும்பொழுது, வாடிக் கைக்காரர் வேண்டாம் என்று கட்டளை இட்டிருந்தாலன்றி, அவமதிப்புச் சான்றை பாங்கர் பெற வேண்டும்.

## அவமதிப்பறிவிப்பு (Notice of Dishonour)

செலுத்த மறுப்பதன்மூலம் உண்டியல் ஒன்று அவமதிக்கப் படும்பொழுது, வாடிக்கைக்காரரின் பதிலாளாகச் செயல்படும் பாங்கர், அதை வாடிக்கைக்காரரிடம் திருப்பியனுப்ப வேண்டும்.

வாடிக்கைக்காரரிடமிருந்து பாங்கர் அதைக் கழிவுநீக்கி வாங்கி யிருந்து, அந்தக் கழிவு நீங்கிய தொகையை வாடிக்கைக்காரரின் கணக்கிலிருந்து எடுக்க அவரை அனுமதித்திருந்தால், அவரிட மிருந்து முழுத் தொகையையும் மீட்க முடியும் என்று பாங்கர் உறுதியாக நம்ப முடியாதபொழுது, அந்த உண்டியலுக்குப் பொறுப்பான பிற தரப்பாருக்கும் அவமதிப்பு அறிவிப்பை பாங்கர் அனுப்ப வேண்டும். அவ்வாறன்றி, வாடிக்கைக்காரர் செல்வத் திண்மை உடையவராக இருப்பின், அந்த உண்டியலை, பாங்கர் அவருக்குத் திருப்பி அனுப்பி, அதன் தொகை, வட்டி, பிற கட்ட ணங்கள் ஆகியவற்றைச் செலுத்துமாறு கேட்க வேண்டும். அவமதிப்பு அறிவிப்பை எழுதி அனுப்ப வேண்டும் என்கிற தேவை யில்லை; ஆனால், வாய்மொழி அறிவிப்பு நம்பத் தக்கதல்ல. ஏனெனில், அதைப் பெறுபவர், தாம் அதைப் பெறவேயில்லை என்று மறுக்க இடமிருக்கிறது. அப்பொழுது அதை உறுதி செய்யும்பொருட்டு, பிற ஆதாரங்களைத் தேடி அலைய வேண்டிய நிலை பாங்கருக்கு ஏற்படும். உண்டியலைத் திருப்பி அனுப்புதலே அவமதிப்பறிவிப்பாக அமைகிறதெனினும், தனியான அவமதிப் பறிவிப்பை அத்துடன் அனுப்புதல் சாலச் சிறந்தது (ஏற்க மறுத்த செய்தி, செலுத்த மறுத்த செய்தி, அவமதிப்பறிவிப்பு ஆகிய வற்றின் மாதிரிகளுக்குப் பின்னிணைப்பு 'ஆ', 24 (அ), 24 (ஆ), 24 (இ) ஆகிய படிவங்களைப் பின்னால் காண்க). தாம் அனுப்பும் அவமதிப்பறிவிப்பு சரியான முகவரியுடன் அஞ்சலில் சேர்க்கப் படுகிறதா என்று பாங்கர் கண்டறிய வேண்டும்.

## ஊடாடு புத்தகம்

### அதன் பொருளடக்கம்

பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமிடையே நடக்கும் பேரங்களுக்கும் ஊடாடு புத்தகத்திற்கும் உள்ள தொடர்பை இங்கு ஆராய்வது பொருத்தமே. வாடிக்கைக்காரரின் நலனுக் காக, அவருடைய கணக்கை இப்புத்தகத்தில் பாங்கர் பதிவுசெய்து வைக்கிறார். பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமிடையே அவ்வப் பொழுது இது சென்று வருவதால், ஊடாடு புத்தகம் என்று இது அழைக்கப்படுகிறது. பாங்கருடைய பேரேட்டில் தோன்றும் வாடிக்கைக்காரருடைய கணக்கின் படியாக இது அமைந்து, பின் வருமாறு தலைப்பைத் தாங்கியுள்ளது :

கல்கத்தாவிலுள்ள டல்ஹௌசி சதுக்கத்திலமைந்துள்ள

தி A.B. பாங்கு லிமிடெட்-இல்

கணக்கு வைத்துள்ள

க.ப. பாசு அவர்கள்

| தேதி 1961 | விவரம் | பற்று | வரவு | ப அல்லது வ | இருப்பு |
|---|---|---|---|---|---|
| | | ரூ. பை. | ரூ. பை. | | ரூ. பை. |
| ஏப்பிரல் 10 | இருப்பு மு/ப ... | | 8,000 00 | வ | 8,000 00 |
| 11 | திரு. புலாகிதாஸ் செக்கு எண். ஊ 990705 | 195 88 | | | |
| | இந்தோ பிரிண்டிங் கம். செக்கு எண். ஊ 990706 | 200 00 | | வ | 7,604 12 |
| 12 | கல்யாண்ஜி ஹரிராம் செக்கு எண். ஊ 990707 | 1,808 00 | | வ | 5,796 12 |
| | ரொக்கம் ... | | 2,000 00 | | |
| | செக்குகள் (மாற்றுகை) | | 3,400 00 | | |
| | செக்குகள் (தீர்வு வசூல்) | | 5,985 50 | வ | 17,181 62 |
| 13 | எச். வால்ஜி & கம். செக்கு எண். ஊ 990708 | 345 00 | | | |
| | ஜே. தேவ்ஜி | 229 12 | | வ | 16,607 50 |
| | | 2,778 00 | 19,385 50 | | |

**கணக்கு விவரம்**

மேற்கத்திய நாடுகளிலுள்ள சில பாங்குகள், தங்களுடைய வாடிக்கைக்காரர்களுக்கு நாள்தோறும் அல்லது குறிப்பிட்ட நாள்களுக்கு ஒருமுறையாவது அவர்களின் கணக்கு விவரங்களை அனுப்பும் வழக்கத்தை அண்மையில் துவக்கியிருக்கின்றனர். விடுதாள் பெயரேட்டு முறை (loose-leaf ledger), கணக்குப் பொறிகள் ஆகியவை இந்த முன்னேற்றத்திற்குப் பெருமளவு வழி கோலின. கணக்கு விவரங்களை எழுத வேண்டிய வேலையைத் தவிர்க்க, வெளிநாட்டுக் கணக்குகளைப் பொறுத்தவரை, சில பாங்குகள் புகைப்பட முறையைக் (photography) கையாளுகின்றன. தமது பணியாளர்களில் புகைப்படம் எடுப்பதில் வல்லவர்களைக்கொண்டு பெயரேட்டுப் பக்கங்களை அப்படியே

புகைப்படம் எடுக்க வைத்து, அப்படங்களைத் தமது வாடிக்கைக் காரர்களுக்கு அனுப்புகின்றனர்.

**நம்பத்தகுந்த பதிவேடாக ஊடாடு புத்தகம் அமையும்**

சர். ஜான் பேஜட் அவர்கள் பாங்கியலின் சட்ட அமைப்பு (4ஆம் பதிப்பு, பக். 294) என்னும் தமது நூலில் ஊடாடு புத்தகத்தைப் பற்றிக் கூறும்போது 'பாங்கருக்கும் வாடிக்கைக் காரருக்குமிடையே நடக்கும் பேரங்களின் எதிர்க்க முடியாத முடிவான பதிவேடாக அமைவதே அதன் சிறப்பாகும்; அவ்வாறே அதை ஒப்புக்கொள்ளவும் வேண்டும்' என்று கருத்துரைக்கிறார்; தமது கூற்றுக்கு ஆதரவாக, தேவநீஸ் (எ.) நோபில் (1816), 1, மெரியவேல் 530, 535 என்னும் வழக்கை ஆதாரமாகக் காட்டு கிறார். அவ்வழக்கில் ஊடாடு புத்தகத்தின் தன்மை, விளைவு ஆகியவற்றை ஆராயுமாறு நியாய நீதிமன்றம் (Court of Chancery) ஆணையிட்டது. இந்த ஆய்வின் விளைவாக எழுந்த அறிக்கை கூறுவதாவது: வாடிக்கைக்காரரிடம் ஊடாடு புத்தகத்தைத் தரும்போது 'அவர் அதை ஆராய்ந்து பார்த்து அதில் பிழை அல்லது விடுப்பு ஏதேனும் இருந்தால் அதை நீக்குமாறு பாங் கரிடம் திருப்பிக்கொணர்கிறார் அல்லது அனுப்புகிறார்; அவ்வாறு செய்யாமல் மௌனம் சாதித்து வாளாவிருந்தால், அதிலுள்ள பதிவுகள் அனைத்தும் சரியானவை என்று அவர் ஒப்புக்கொள்ளு வதாகக் கருதப்படுகிறது'. இவ்வழக்கிலளிக்கப்பட்ட தீர்ப்பு அந்த அறிக்கையைப் பெருமளவு சார்ந்திருந்தது. இப்பொருள் பற்றிய பல தீர்ப்புகளை நோக்குமிடத்து, இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உள்ள சட்ட நிலைமை மேற்கூறிய கூற்றிலிருந்து மிக்க வேறுபட்டு நிற்கிறது.

வாடிக்கைக்காரரோ அல்லது அவரது எழுத்தரோ பாங்கி லிருந்து ஊடாடு புத்தகத்தை எடுத்துச் சென்று, மறுப்புரை எதுவுமின்றி அதைத் திருப்பித் தருவதனால், அந்த பாங்குக்கும் அவருக்குமிடையேயுள்ள கணக்கு முடிவானதாகும் (settled) ; அது அவர்கள் இருவரையும் கட்டுப்படுத்தும் என்ற கூற்றுக்கு இங்கிலாந்தில் எந்த ஓர் அதிகாரச் சான்றுமில்லையென்று திரு. ப்ரே என்னும் நீதிபதி அவர்கள் கெப்டிகல்லா ரப்பர் எஸ்டேட்ஸ் கம். (எ.) நேஷனல் பாங்கு ஆஃப் இந்தியா (1909), 2 கே. பி. 1010 என்னும் வழக்கில் மறுத்தார். மேலும், அவர் கூறிய தாவது: 'ஊடாடு புத்தகத்தை பாங்கிலிருந்து எடுத்துச்சென்று, பிறகு திருப்பித் தருதல், முடிவான கணக்கு என்று அதை ஒப்புக் கொள்வதற்கு இணையாகும் என்று கூறுவது எவ்வளவு பொருத்த மற்றது என்பது—அதிகாரச் சான்று ஒருபுறம் இருக்கட்டும்—

இவ்வழக்கின் நிகழ்ச்சிகளைப் பார்த்தாலே தெளிவாகும்.' [சர். ஜான் பேஜட் அவர்கள் எழுதிய பாங்கியலின் சட்ட அமைப்பு என்னும் நூல் (4ஆம் பதிப்பு) பக். 303]. தமது ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளுக்கு எதிராகத் தொழில் நிறுவனம் ஒன்று புட்குறி (tick) இட்டு, அதைத் திருப்பிக் கொடுத்தால், அதிலுள்ள பதிவுகளை அது ஆராய்ந்து, சரி என்று ஒப்புக் கொண்டதற்கு முதல் தோற்றச் சான்ருகப் பாவிக்கப்படும்.

**வாடிக்கைக்காரர் தமது ஊடாடு புத்தகத்தை ஆய்ந்து பார்க்க வேண்டிய கடமை அமெரிக்காவில் ஒப்புக்கொள்ளப்படுகிறது**

அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள நீதிமன்றத் தீர்ப்புகள், இந்தப் பிரச்சினையை, பாங்கருக்குச் சாதகமாக முடிவு செய்திருக்கின்றன. 'அன்று முடிய உள்ள கணக்கை எழுதும்பொருட்டுத் தமது பாங்கருக்கு ஊடாடு புத்தகத்தை அனுப்பி, செலுத்திய செக்குகளை ஆதாரச்சீட்டுகளாக அந்தப் புத்தகத்துடன் பெறுகின்ற வைப்பாளி ஒருவர், ஊடாடு புத்தகத்தையும் ஆதாரச்சீட்டு களையும் ஆய்ந்து சரி பார்த்து, அவற்றில் பிழைகள் எவையேனு மிருந்தால், நியாயமற்ற சுணக்கமின்றி அவற்றை பாங்கருக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டவர் என்றும், புறக்கணிப்பைப்பற்றிக் கூறும்பொழுது, 'தொழிலின் நடைமுறை மரபுகள், மதி, பாங்கர் பால் நேர்மையான எண்ணம் ஆகியவை செய்க செய்க என்று வலியுறுத்தும் காரியங்களை—அவற்றைச் செய்திருந்தால் இப் பொழுது நேர்ந்த கேடு நேராமல் அகற்றப்பட்டிருக்கும் என்னும் சூழ்நிலையில்—செய்யாது அசட்டை செய்தல் புறக்கணிப்பாகும்' என்று மார்கன் (எ.) யுனைடெட் ஸ்டேட்ஸ் மார்(ட்)கேஜ் அண்ட் டிரஸ்ட் கம். (1913), 208 நியூயார்க் ரிப். 218 என்ற வழக்கில் தலைமை தாங்கிய நீதிபதி அவர்கள், அதன் தீர்ப்பை அறிவிக்கும் போது கூறினர்.

**ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளின் விளைவு**

முதலாவதாக, வாடிக்கைக்காரரின் வரவுக்கும், இரண்டாவ தாக பாங்கரின் வரவுக்கும் ஊடாடு புத்தகத்தில் பிழையாகச் செய்த பதிவுகளின் விளைவுகளைத் தனித்தனியே ஆராய்தல், நிலைமையைத் தெளிவாகப் புரிந்துகொள்ளத் துணை செய்யும்.

**(1) வாடிக்கைக்காரருக்குச் சாதகமான பதிவுகள்**

ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளை பாங்கரோ அல்லது அவருடைய முகவரோ எழுதியவையாகையால், அவருக்கு எதிரான சான்ருக (அவர் மறுக்க இயலாத சான்ருக) அவை அமைகின்றன; அவ்வாறே அவற்றைப் பயன்படுத்தலும் கூடும்.

[அக்ரோகெரி (அட்லான்டிக்) மைன்ஸ் லிமிடெட் (எ.) எகனுமிக் பாங்கு (1904), 2 கே. பி. 465 (471) என்ற வழக்கில், [மாவ்ஜி (எ.) தி நேஷனல் பாங்கு ஆஃப் இந்தியா (1901),25 பம்பாய் 499 (515) என்னும் வழக்கையும் காண்க.] 'ஊடாடு புத்தகம் வாடிக்கைக்காரருக்கு உரியது, பாங்கு அதில் எழுதிய பதிவுகளை நம்பி, செயல்பட அவருக்கு உரிமையுண்டு' என்னும் கூற்று அறிவிக்கப்பட்டது. இருப்பினும், குறிப்பிட்ட ஒரு பதிவு பிழையாக எழுதப்பட்டது என்று பாங்கர் சுட்டிக்காட்டி, அதைத் திருத்த விழையலாம். ஆனால், ஊடாடு புத்தகத்தின் செம்மையில் நம்பிக்கை வைத்து, அதன் அடிப்படையில் செயலாற்றிய வாடிக்கைக்காரரை அந்தப் பிழை பாதிக்காதபோது மட்டுமே, அதைத் திருத்தலாம். உதாரணமாக, வசூலிக்காத செக்கு ஒன்றை ரொக்கம் என்று ஊடாடு புத்தகத்தில் பதிவு செய்திருந்தால், அதன் உண்மை இயல்பை விளக்கி, அந்தப் பிழையை பாங்கர் அகற்ற முடியும். ஆனால், வாடிக்கைக்காரருக்கு மெய்யாக உரியதைக்காட்டிலும், மிகுதியான வரவு-இருப்பை ஊடாடு புத்தகம் தவறாகக் காட்டியிருந்து, வாடிக்கைக்காரர் அதன் செம்மையை (accuracy) நம்பிச் செக்கொன்றை எழுதினால், அதை அவமதிக்க, பாங்கருக்கு உரிமையில்லை; அவர் அவமதித்தால், வாடிக்கைக்காரரின் செக்கைத் தவறாக அவமதித்த குற்றத்திற்காக இழப்பீடு செலுத்தப் பொறுப்பாவார் [ஹாலந்து (எ.) மான்செஸ்டர் அண்(ட்) லிவர்பூல் டிஸ்டிரிக்ட் பாங்கிங் கம். லிமிடெட் (1909) 25 தி. எல். ஆர். 386]. இந்த உண்மைப்பாட்டைத் (question of fact) தீர்மானிக்கும் கட்டத்தில், இரண்டு கூற்றுகளைக் கருத்தில் கொள்ள வேண்டும்: (அ) அந்தப் பிழையே இல்லாமலிருந்தால், வாடிக்கைக்காரர் செய்திருக்காத ஒன்றை, அந்தப் பிழையான பதிவு செய்யுமாறு தூண்டி, அதைச் செய்வதற்கு வழிகோலியிருக்க வேண்டும். (ஆ) அவர் செய்த அச்செயல் அவருக்குப் பாதகமாக இருக்க வேண்டும்.

இதுபோன்ற பிழைகளை பாங்கர் தற்செயலாகக் கண்டு பிடித்தால், தமது வாடிக்கைக்காரருக்கு உடனே அவற்றை அறிவிக்க வேண்டும்; அது முடிவாகும் வரை, பிழையான கணக்கிருப்பின் மேல் வாடிக்கைக்காரர் எழுதும் செக்குகளை அவர் மதிக்கக் கூடாது.

### தமக்குத் தெரிவிக்காத, பாங்கரின் எழுத்தர் செய்த கற்பனையான பதிவில் வாடிக்கைக்காரர் நம்பிக்கை வைக்கக் கூடாது

அதைப்பற்றிய அறிவிப்பைப் பெறாதவரை அல்லது அதை நம்பித் தமது நிலைமையை மாற்றிக்கொள்ளாத வரை, பாங்கரின்

எழுத்தர் ஒருவர் செய்த கற்பனையான பதிவில், வாடிக்கைக்காரர் நம்பிக்கை வைத்துச் செயலாற்றக் கூடாது என்று பிரிட்டிஷ் அண்(ட்) நார்த் ஐரோப்பியன் பாங்கு (எ.) ஜ்சால்ஸ்டீன் (1927), 2 கே. பி. 92 என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

(2) பாங்கருக்குச் சாதகமான பதிவுகள்

ஊடாடு புத்தகத்தில் பாங்கருக்குச் சாதகமாகத் தோன்றும் பதிவுகளின் விளைவுகளை நோக்குங்கால், அவை எந்த அளவுக்கு வாடிக்கைக்காரரைக் கட்டுப்படுத்தும் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாத நிலையில் உள்ளோம். ஆயினும், நீதிமன்றங்களின் சில தீர்ப்பிலிருந்து கீழ்க்கண்ட பொதுவான கூற்றுகளை உய்த்துணர முடிகிறது:

வாடிக்கைக்காரரின் பொறுப்பு

ஊடாடு புத்தகத்தில் தோன்றும் பதிவுகளை முடிவான கணக்காகும் என்று ஒப்புக்கொள்ளுவதற்கு ஏற்ற முறையில் வாடிக்கைக்காரர் செயலாற்றுவதுடன் அவற்றைப்பற்றிய புறக்கணிப்பு என்னும் குற்றத்திற்கும் ஆளாகியிருந்து, இவற்றின் விளைவாக பாங்கரின் நிலை பாதிக்கப்படுமானால், அப்பதிவுகளின் செம்மையை மறுக்க வாடிக்கைக்காரருக்கு உரிமையில்லாது போனாலும் போகலாம். வாடிக்கைக்காரர் செய்யும் எந்தச் செயல்கள் அல்லது அவர் செய்யாது விட்ட எந்த விடுப்புகள், முடிவான கணக்காகச் செல்லுப்புத்தகத்திலுள்ள பதிவுகளை அவர் ஒப்புக்கொள்ளுவதற்கு இணையாக்கும் என்பதைப் பற்றியும், அவரது எச்செயல் அல்லது எந்த விடுப்பு அதைப் புறக்கணித்தார் என்ற குற்றத்திற்கு அவரை உள்ளாக்கும் என்பதைப் பற்றியும் ஐயப்பாடு இன்னும் நிலவுகிறது. ஆயினும், மதித்த செக்குகளுடன் சேர்த்தோ அல்லது அவைகளின்றியோ, தமது கணக்கின் இருப்பைக் காட்டும் ஊடாடு புத்தகத்தை வாடிக்கைக்காரர் பெற்று, எந்த ஒரு மறுப்புரையும் இன்றி, பிறகு அதைத் திருப்பித் தருவதை வைத்துக்கொண்டு, புறக்கணித்தார் என்னும் குற்றத்திற்கு அவரை ஆளாக்க முடியாது; அதிலுள்ள பிழையை பிறகு மறுக்கும் அவரது உரிமையையும் பறிக்க முடியாது என்பதை ஆணித்தரமாகக் கூறலாம். அதாவது, ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளை ஆய்ந்து பார்க்க வேண்டிய கடமை வாடிக்கைக்காரருக்கு இல்லை; அவ்வப்பொழுது மறுப்புரை எதுவுமின்றி வாடிக்கைக்காரர் ஊடாடு புத்தகத்தைத் திருப்பித் தந்தார் என்பதன் அடிப்படையில் அதிலுள்ள பதிவுகளனைத்தும் சரியானவையே என்று அவர் ஏற்றுக்கொண்டார் என்று எடுத்துக்கொள்ள

பாங்கருக்கு உரிமையில்லை (சேட்டர்டன் (எ.) லண்டன் அண்(ட்) கவுண்டி பாங்கு, டைம்ஸ் (லண்டன்), 1891ஆம் ஆண்டு ஜனவரி 21).

இவ்வாறு பல தீர்ப்புகள் பாங்கருக்கு ஆதரவளிக்காத முறையில் வழங்கப்பட்டன. எனினும், வேக்லியானோ பிரதர்ஸ் (எ.) பாங்கு ஆஃப் இங்கிலாந்து (1891), 23 க்யூ. பி. டி. 243 என்னும் வழக்கில் மேல்வழக்கு மன்றத்தின் பெரும்பான்மையான நீதிபதிகளின் தீர்ப்பில் தோன்றும் கீழ்க்காணும் பகுதி கருத்திற் கொள்ளத் தக்கது :

'இங்குக் கவனிக்க வேண்டிய மற்றொரு செய்தியுள்ளது. அவ்வப்பொழுது, (இந்த வழக்கின்) வாதி தமது பாங்கிடமிருந்து ஊடாடு புத்தகத்தைப் பெற்றார் ; அத்துடன் தமது கணக்கி லிருந்து கொடுக்கப்பட்ட செலுத்துகளைப் பற்றிய பற்றுப் பதிவு களின் சான்றாக, பாங்கர் செலுத்திய உண்டியல்களையும் ஆதாரச் சீட்டுகளாகப் பெற்றார். ஊடாடு புத்தகங்களைத் திருப்பித் தரும் போது மறுப்பேதும் எழுப்பியதில்லை ; அதுமட்டுமின்றி, ஆதாரச் சீட்டுக்களை அவரே நிறுத்தி வைத்துக்கொள்வது வழக்கம். இவற்றின் அடிப்படையில் அவருக்கும் பாங்குக்கும் இருந்த கணக்கை முடிவான கணக்காக அவர் ஒப்புக்கொண்டார் என்றும், ஆதாரச்சீட்டுக்களை ஆராய்ந்து பார்க்காமல் அவற்றை அவர் புறக்கணித்தது முடிவான கணக்கு அல்ல என்று மறுக்க இயலாத வாறு அவரைத் தடுக்கிறது என்றும் பிரதிவாதியின் தரப்பில் தற்காப்பு மறுப்பு எழுப்பப்பட்டது. எனினும், ஊடாடு புத்த கத்தைப் பற்றிய இது போன்ற நடவடிக்கையால் (செயல்), முடிவான கணக்காக அவர் அதை ஒப்புக்கொண்டார் என்ற கூற்றை வலியுறுத்தவல்ல குறிப்பான ஒப்பந்தம் பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமிடையே இருப்பதற்கான சான்று எதுவு மில்லை ; மேலும், பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமுள்ள இயல் பான நடைமுறை உறவைக் கருத்திற்கொண்டு நோக்கின், பாங்க ருக்குச் செய்ய வேண்டிய கடமையை, வாதி புறக்கணித்த தாகவோ அல்லது தமக்குத்தாமே செய்துகொள்ள வேண்டிய வற்றை அவர் புறக்கணித்தார் என்றோ கூற இங்கு இடமில்லை.'

பாலகிருட்டிண பிரமானிக் (எ.) பொவானிபூர் பாங்கிங் கார்ப்பரேஷன் லிமிடெட் (1932), 59 கல். 662 என்னும் வழக்கில் வாடிக்கைக்காரர் ஒருவர் ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளை அறிவார்ந்த முறையில் ஆராய்ந்து அவற்றைச் சிலபொழுது மறுப்பதும், இன்னும் சில பொழுது அவற்றைப்பற்றிய விளக்கங் கேட்பதும் வழக்கம். மாத வீதத்தில் கூட்டுவட்டி கணக்கிடப்பட்டு

அவர் கணக்கில் பற்று வைக்கப்பட்டிருந்தது. அதை மறுத்து அவர் வழக்குத் தொடுத்தபொழுது, ஊடாடு புத்தகத்திலுள்ள பதிவுகளைப் பற்றிப் பிறகு குற்றங்கூற அவருக்கு உரிமையில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது. மேலும், இது போன்று தொடர்ச்சியாக இடையருது வாளா ஏற்றல் (acquiescence), இந்த வழக்கில் செய்யப்பட்டதுபோல், கூட்டுவட்டியை விதிப்பதற்கு பாங்கருக்கும் வாடிக்கைக்காரருக்குமிடையே தக்க உடன்படிக்கை இருக்கிறது என்று எடுத்துக்கொள்ள இடமளிக்கிறது.

**சட்டரீதியான அங்கீகாரம் பெறுவதற்கு வாய்ப்பு இருக்கிறது**

நிலவும் மரபு ஒன்றை பாங்கர் வெற்றிகரமாக மெய்ப்பித்தால், நீதிமன்றங்கள் அதற்கு அங்கீகாரம் அளிக்கும் என்னும் கருத்து மேற்கூறியவற்றிலிருந்து தெளிவாகிறது. வேக்லியானே பிரதர்ஸ் (எ.) பாங்கு ஆஃப் இங்கிலாந்து (1891), 23 க்யூ. பி. டி. 243 என்னும் வழக்கு பிரபுக்கள் மன்றத்தின் ஆய்வுக்கு வந்தபோது ஹால்ஸ்பரி பிரபு அவர்கள் பாங்கருக்குச் சாதகமாகப் பின்வருமாறு கூறினார்: 'அந்தக் கள்ளப்பத்திரங்கள் செலுத்தப்பட்டன; வாடிக்கைக்காரரின் கணக்கில் முறைப்படி பற்றும் வைக்கப்பட்டன; அவருடைய ஊடாடு புத்தகத்தில் முறையாகப் பதியவும் பட்டன; மேலும், ஒவ்வொரு முறையும் அந்த உண்டியல்களைச் செலுத்திவிட்டு அவற்றை அவருக்குத் திருப்பியனுப்பியதன் மூலம் அவருடைய கவனத்திற்கும் கொண்டுவரப்பட்டது—இது தான் பாங்கு அறிந்தது; அவ்வாறுதான் அது எண்ணவும் கூடும்.' 'தம்முடைய ஊடாடு புத்தகத்தில் உள்ளவை என்ன என்று அறிய வாடிக்கைக்காரர் கடமைப்பட்டவரன்றோ?' என்று மேலும் அவர் வினவினார்.

வாடிக்கைக்காரரின் வரவுக்காகப் பெறுகின்ற தொகையை அவருடைய கணக்கில் வரவு வைக்காதிருக்கவும், அவருடைய ஊடாடு புத்தகத்தில் எழுதாதிருக்கவும், பாங்கருக்கு எந்தச் சூழ்நிலையிலும் உரிமையில்லை. வாடிக்கைக்காரர் அதற்குக் குறிப்பான ஒப்புமை (acquiescence) தெரிவித்தார் என்றுகூட பாங்கர் அதை மறுக்க முடியாது.

இப்பொழுது நிலவும் சட்டம் பாதுகாப்பான சூழ்நிலையை பாங்கருக்கு அளிக்கவில்லையாதலால், மிக்க விழிப்பாகவும் தற்காப்புணர்வோடும் பாங்கர் செயலாற்ற வேண்டும் என்று அறிவுறுத்தல் மிகையாகாது. இதைக் கருத்திற்கொண்டு, ஊடாடு புத்தகம் முறையாக எழுதிக் கையொப்பமிடப்பட்டு, வாடிக்கைக்காரருக்கு அடிக்கடி அனுப்பப்படுகிறதா என்று பாங்கர் கண்டறிய

வேண்டும். வாடிக்கைக்காரருக்கு அதை ஆராய்ந்து சரிபார்ப்பதற்கான வாய்ப்பை அளிக்காமல், தம்மிடமே நீண்ட நாள்கள், ஊடாடு புத்தகங்கள் படிந்து கிடக்க, பாங்கர் எந்தச் சூழ்நிலையிலும் இடமளிக்காமல் இருக்க வேண்டும். வாடிக்கைக்காரருக்கு ஊடாடு புத்தகத்தை அனுப்பும்போது, அதை எழுதிய, அதன் செம்மைக்குப் பொறுப்பாளியான எழுத்தர், அவருடைய தொடக்க எழுத்துக்களையும் தேதியையும் பெயரேட்டில் குறிப்பதற்கான முறையை வகுத்து, அதை வழுவாது அனைவரும் கடைப்பிடிக்கிறார்களா என்று கண்டறிய வேண்டும். இழந்த ஊடாடு புத்தகத்திற்கு மறுபடி (duplicate copy) கொடுக்கும்பொழுது 'மறுபடி' என்னும் வார்த்தையை அதில் தெளிவாகக் குறிக்க வேண்டும். இயந்திரக் கணக்குப் பதிவியலின் விளைவாக, வாடிக்கைக்காரருக்கு அடிக்கடி அனுப்பப்படும் கணக்கு விவரங்களை அவர் திருப்பியனுப்ப வேண்டியதில்லையாதலின், பாங்கரின் நிலைமை சற்று நலிவுற்றுவிட்டது என்று பொதுவாக நம்பப்படுகிறது. சில பாங்குகள், கணக்கு விவரத்துடன் துண்டுச்சீட்டு ஒன்றை இணைத்து அனுப்பி, அந்த விவரத்தில் காட்டியுள்ள அவர் கணக்கிருப்பு சரியானது என்று அந்தச் சீட்டில் எழுதித் திருப்பியனுப்புமாறு வாடிக்கைக்காரரைக் கேட்கின்றன. வாடிக்கைக்காரர் விரும்பினால், அவ்வாறு எழுதித் திருப்பியனுப்பலாம்; விரும்பாதவரைக் கட்டாயப்படுத்த பாங்குக்கு உரிமையில்லை.

## கணக்கை முடித்தல்

### தீர்மானிக்கும் காரணிகள்

கீழ் வரும் சூழ்நிலைகளில் தமது வாடிக்கைக்காரரின் கணக்கை முடிக்க வேண்டிய தேவை பாங்கருக்கேற்படும் அல்லது அவரது கணக்கின் இயக்கத்தை நிறுத்தி வைக்கும் பாங்கரது செயலை அவை நியாயமாக்கும் :

(1) கணக்கை முடிக்க எண்ணுவதாக, வாடிக்கைக்காரர் பாங்கருக்குக் கொடுக்கும் அறிவிப்பு.

(2) வாடிக்கைக்காரரின் மரணம்.

(3) வாடிக்கைக்காரர் பித்தராக ஆதல்.

(4) வாடிக்கைக்காரர் திவாலாதல்.

(5) நீதிமன்றத்தின் ஆணை, உ-ம். பற்றும் உத்தரவு (கார்னிஷி உத்தரவு).

(6) வாடிக்கைக்காரர் தமது வரவு-இருப்பின் உரிமையை மற்றவருக்கு அளித்ததாக பாங்கர் பெறும் அறிவிப்பு.

### (1) கணக்கை முடிக்கும் உரிமை

குறிப்பிட்ட பாங்கரிடமுள்ள கணக்கை முடித்து அவருடைய தொடர்பை அறுத்துக்கொள்ள வாடிக்கைக்காரருக்கு உரிமை இருப்பது போல, குறிப்பிட்ட ஒருவரைத் தொடர்ந்து தமது வாடிக்கைக்காரராக வைத்துக்கொள்ளத் தமக்கு விருப்பமா, இல்லையா என்று கூற பாங்கருக்கும் உரிமையுண்டு. பல காரணங்களை முன்னிட்டு வாடிக்கைக்காரர் கணக்கை முடிக்கலாம். (1) வட்டிவீதம், பாங்குக் கட்டணங்கள் போன்ற கட்டுப்பாடுகள் (ஒப்பந்த அமிசங்கள்), வாடிக்கைக்காரர் ஒப்புக்கொள்ள முடியாதவையாக இருக்கலாம்; (2) வேறு சில பாங்குகள் தமக்கு அளிக்கும் வசதியை அல்லது சலுகைகளை இந்த பாங்கில் பெற இயலாமல் இருக்கலாம்; (3) அந்த பாங்கின் திண்மையிலுள்ள தமது நம்பிக்கை குன்றியிருக்கலாம். அது போலவே குறிப்பிட்ட ஒருவருக்குத் தொடர்ந்து பாங்கராகச் செயலாற்ற பாங்கொன்று இணங்காமலிருப்பதற்கும் பல காரணங்கள் இருக்கலாம். (அ) அவர் விரும்பத்தக்க வாடிக்கைக்காரர் அல்லர் என்று பாங்கு நினைக்கலாம். உ-ம். உண்டியல்கள், செக்குகள் இவைகளில் கள்ளக் கையொப்பமோ, பிறக் கள்ளத் திருத்தங்களையோ செய்த குற்றவாளிகளைத் தங்கள் வாடிக்கைக்காரர்களாக வைத்திருக்க பாங்குகள் இணங்குவதில்லை. (ஆ) அவர் எழுதும் செக்குகளை மதித்துச் செலுத்தப் போதுமான நிதியை வைக்காமல் செக்குகளை எழுதிக்கொண்டேயிருக்கும் ஆள்களையும் பாங்குகள் விரும்புவதில்லை; (இ) அவர் கணக்கு இலாபமான கணக்கல்ல என்ற காரணமும் அவரது கணக்கை முடிக்கச் சிலபொழுது பாங்கரைத் தூண்டலாம். வாடிக்கைக்காரர்களின் கணக்கைப் பாகுபடுத்த நியூயார்க்கிலுள்ள கூட்டமைப்பு ரிசர்வ் பாங்கு கையாளும் சுருக்கமான முறையை அறிய, பின்னுலுள்ள பின்னிணைப்பு ஈஐக் காண்க.

### பாங்கர் தக்க அறிவிப்பைக் கொடுக்க வேண்டும்

வாடிக்கைக்காரர் கணக்கை முடிக்கும் தமது எண்ணத்தைப் பற்றித் தமது பாங்கருக்குத் தனி அறிவிப்பு ஒன்றையும் கொடுக்கக் கட்டுப்பட்டவரல்லவெனினும், தமது வாடிக்கைக்காரருக்குத் தக்க அறிவிப்பைத் தராமல், பாங்கு அவரது கணக்கை முடிக்க இயலாது. இதுபோன்ற அறிவிப்பைப் பெறுமுன்னர் வாடிக்கைக்காரர் எழுதிய செக்குகளை—அவை எல்லா அமிசங்களையும் முறையாகப் பெற்றிருப்பின்—மதிக்க பாங்கர் கடமைப்பட்டவர். தக்க

அறிவிப்பு எது என்னும் வினா ஒவ்வொரு வழக்கிலும் நிலவும் சூழ்ச்சிகளைப் பொறுத்தது. பொதுவாகத் தொழிலின் தன்மை, இன்ன பிறச் சூழ்நிலைகள் கருத்திற்கொள்ளப்படும் [ப்ராஸ்பெரிடி லிமிடெட் (எ.) லாயிட்ஸ் பாங்கு லிமிடெட் (1923), 39, தி. எல். ஆர். 372]. இந்த வழக்கின் நிகழ்ச்சிகளாவன ;

இந்த வழக்கின் வாதியான கம்பெனி தோற்றுவிக்கப்பட்டவுடன், அதன் இயக்குநர்கள், விக்டோரியா தெருவில் அமைந்துள்ள பிரதிவாதி பாங்கின் கிளையக நிருவாகியை அணுகி, தமது கம்பெனி துவக்கவிருந்த 'ஒருவர் பன்மையினராகிப் பெருக்கும்' காப்புறுதித் திட்டத்தைப் (snowball scheme of insurance) பற்றிய எல்லா விவரங்களையும் விளக்கி, தமது கம்பெனியின் பெயரில் பாங்குக் கணக்கு ஒன்றைத் துவக்குமாறு வேண்டினர். அத்திட்டத்தின் விவரங்கள் கீழ் வருமாறு :

> £ 1-15 s. தொகையைச் செலுத்தி, அந்தத் திட்டத்தில் சேரும் வரியாளர் (subscriber), ஓர் ஆண்டுக்குச் செல்லத் தக்கப் பத்து விண்ணப்பத்தாள்களைக்கொண்ட புத்தகம் ஒன்றைப் பெறுவார். இந்த முதல் வரியாளர் சேர்க்கும் ஒவ்வொரு புது வரியாளரும் விண்ணப்பத்தாள் ஒன்றை நிரப்பிக் கொடுத்து, அதேபோல அந்தத் திட்டத்தில் சேர வேண்டும். இவ்வாறு சேர்த்தலின் பயனாக, 'மரபினர்' (descendants) என்று அழைக்கப்படும் வரியாளர் 'தொகுதியை' (அல்லது குடும்பத்தை) முதல் வரியாளர் தோற்றுவிப்பார். முதல் வரியாளர் அதிகபட்சமாக ஒரு கோடி மரபினரைச் சேர்க்கலாம். (கொள்கையளவில்தான் இது இயலும் என்பது கண்கூடு.) ஒவ்வொரு மரபினரைச் சேர்க்கும்போதும் 2 s. (ஷில்லிங்கு) கழிவு முதல் வரியாளரின் கணக்கில் வரவு வைக்கப்படும், அந்தத் தொகுதியில் உள்ள ஒவ்வோர் உறுப்பினரும் இதேபோன்று அவரவர் தொகுதியைத் தோற்று விக்கலாம். ஒரு வரியாளரின் கணக்கில் கழிவாக வரவில் சேரும் தொகை £ 8 ஆகும்பொழுது, வாதி கம்பெனியுடன் கூடியுள்ள காப்புறுதி கம்பெனிக்கு அத்தொகை செலுத்தப் படும். அந்தக் காப்புறுதிக் கம்பெனி, பத்து ஆண்டுகள் கழித்து அந்த வரியாளருக்கு £ 10 செலுத்தும் காப்புறுதியின் பேரில் ஒரே வட்டமாக (single premium) அத்தொகையைப் பெற்றுக்கொள்ளும். இதே போல் சேரும் அடுத்த £8 தொகை இரண்டாவது £ 10 காப்புறுதிக்குச் செலுத்தப்படும் ; இதே போல் ஒவ்வொரு முறையும் செய்யப்படும். ஒவ்வொரு வரி யாளரும் துவக்கத்தில் செலுத்திய 35 s. தொகையில்,

காப்புறுதி வட்டத்தின் செலுத்தலாக 16 s. அவர் கணக்கில் வரவு வைக்கப்படும்; 2 s. கழிவைச் செலுத்துவதற்கு 14 s. ஈடுபடுத்தப்படும். வாதி கம்பெனியின் செலவு, இலாபம் ஆகியவற்றுக்காக மீதியுள்ள 5 s. அதற்குச் செலுத்தப்படும்.

பிரதிவாதி பாங்கின் சார்பாகக் கணக்கைத் துவக்கவும், வாதி கம்பெனியின் வரியாளர்களின் விண்ணப்பங்களைப் பெறவும், அவர்களிடமிருந்து பெற்ற தொகையை வாதி கம்பெனியின் விதிகளுக்கேற்பப் பாகுபடுத்தி ஒதுக்கவும் (allocate), அந்த நிருவாகி ஒப்புக்கொண்டார். மார்ச்சு மாதம் 14ஆந்தேதியிலிருந்து பிரதிவாதிகள் வாதி கம்பெனியின் பாங்கராகச் செயலாற்ற மாட்டார்கள் என்னும் அறிவிப்பை, பிரதிவாதிகளின் தலைமை நிருவாகி வாதிகளுக்கு 1923ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 14ஆந்தேதி அனுப்பினர். நீதிமன்றத்தில் வழக்கு தொடுக்கப்பட்டபொழுது, வாதியின் கணக்கில் £ 7,000 வரவு-இருப்பாக இருந்தது. அத்திட்டத்தின் ஒவ்வொரு நுட்பத்தையும் பிரதிவாதி பாங்கின் நிருவாகி நன்கு அறிந்திருந்தார் ; வாதி கம்பெனி துவக்க இருந்த தொழில், அதை நடத்தும் பாணி, அதைப்பற்றிய பத்திரங்கள் ஆகியவை யனைத்தையும் நன்கு அறிந்துதான் அவர் கணக்கைத் துவக்க ஒப்புக்கொண்டார்; பாங்கு கணக்கைத் துவக்கிய பிறகுதான் அத்திட்டமே செயலாக்கப்பட்டது என்பவற்றைப்பற்றி, அவ்வழக்கில் தீர்ப்பை வழங்கிய நீதிபதி மக்கார்டி அவர்கள் சிறிதுகூட ஐயுறவில்லை. மேலும், பிரதிவாதிகள் கணக்கை முடிக்க எண்ணிய பொழுது அக்கம்பெனியின் பல விண்ணப்பத்தாள்கள், விளம்பர இதழ்கள், விதியேடுகள் ஆகியவையனைத்தும் உலகின் பல பகுதிகளிலும் பரவலாகப் புழக்கத்திலிருந்தன. அத்திட்டத்தின்கீழ் ஒவ்வொரு வரியாளரும் செலுத்த வேண்டிய 35 s. தொகையை லாயிட்ஸ் பாங்கிடம் செலுத்த வேண்டும் என்னும் அந்தக் கம்பெனியின் விதியைப் பிரதிவாதி பாங்கு நன்குஅறியும். லாயிட்ஸ் பாங்கு அத்திட்டத்தை அறிந்திருந்ததுமட்டுமின்றி, அங்கீகரித்தது என்பதையும், அந்தக் கம்பெனியின் வரவு-இருப்பு எந்த அளவுக்கு அத்திட்டத்துடன் பின்னிப்பிணைந்து கிடக்கிறது என்பதை அந்த பாங்கு அறியும் என்பதையும் கருத்திலிருத்தி ஆராயுங்கால், வாதிகளின் கணக்கை முடிப்பதைப்பற்றிய அந்த பாங்கின் அறிவிப்பு, ஒப்பந்த மறுதளிப்புக்கு (repudiation of the contract) இணையாகிறது. எனவே, அந்த வழக்கில் நிலவும் சூழ்நிலைகளில் கணக்கு முடிக்கப்படும் என்னும் பிரதிவாதிகளின் ஒரு மாத அறிவிப்புப் போதுமானதன்று என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

**விரும்பத்தகாத, பிடிவாதமான வாடிக்கைக்காரர்**

வாடிக்கைக்காரருக்குத் தாம் கொடுத்த நியாயமான அறிவிப்பு காலாவதியான பின்னும், அவர் அவரது கணக்கை முடிக்கத் தவறினால், பாங்கர் கணக்கை முடித்து, அவர் வரவிலுள்ள தொகையை அவருக்கு அனுப்புவதோடு, பயன்படுத்தாத செக்குத்தாள்களைத் திருப்பியனுப்புமாறும் அவரைக் கேட்கலாம். இருப்பினும், பூசல்களைத் தவிர்க்கும் நோக்கத்தோடு, அந்த வாடிக்கைக்காரரின் கணக்குக்கு இனி செலுத்தப்படும் வரவுகளை ஏற்க மறுத்து, அவருக்குத் தாம் அளித்த செக்குத்தாள்கள் தீரும் வரை காத்திருப்பதே சாலச் சிறந்த முறையாகும். வைப்பாளியைப் பற்றிக் குறிப்பிடாமல் அனைவருடைய கணக்கையும் முடிக்கும் பொதுப்படையான உரிமையைப் பாங்குக்கு அளிக்கும் விதி செல்லத்தக்க விதியன்று. ஏனெனில், பாங்குத் தொழிலின் இயல்பான நடைமுறைக் கொள்கைக்கு அது புறம்பானதாகும்; ஒரு கடமை சட்டரீதியான கடமையாக இல்லாதவரை, அதைப் பற்றிச் சம்பந்தப்பட்ட தரப்பினர் அவர்கள் விருப்பம்போல எந்த முறையிலும் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம்; இது நெறியற்றதன்று, பொது நலக்கைக்கோலுக்கும் புறம்பானதன்று எனச் சேம்பியன் ஆட்டோமோபில் லிமிடெட் (எ.) மதராஸ் & திருவாங்கூர் நேஷனல் பாங்கு லிமிடெட் (எ. ஐ. ஆர். 1938 சென்னை 77) என்னும் வழக்கில் தலைமை நீதிபதி லீச், நீதிபதி வரதாச்சாரியார் ஆகிய இருவரும் தீர்ப்பு வழங்கினர். 'வாடிக்கைக்காரருக்குத் தக்க அறிவிப்புக் கொடுக்காமல் அவர் கணக்கை பாங்கர் முடிப்பதும், அதன்மீது எழுதப்பட்ட செக்குகளை அவமதிப்பதும் நியாயமாகாது. புழக்கத்திலிருக்கும் செலுத்தாத செக்குகளையும் உண்டியல்களையும் கருத்திற்கொண்டு தமது நாணயத்திற்கு ஊறு நேராவண்ணம் எந்தெந்த ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து முடிக்க வாடிக்கைக்காரருக்குப் போதுமான அவகாசம் கொடுக்க வல்லதாக அறிவிப்பு அமைய வேண்டும்.' (ஹார்ட் அவர்களின் பாங்கியலின் சட்ட அமைப்பு, 3ஆம் பதிப்பு.)

**(2) வாடிக்கைக்காரரின் இறப்பு**

வாடிக்கைக்காரர் ஒருவரின் இறப்பு, அவர் கொடுத்த அங்கீகாரத்தை முடிவடையச் செய்வதுடன், செலுத்தப்படாமல் இன்னும் புழக்கத்திலேயே இருக்கும் அவரது செக்குகளைச் செலுத்தக்கூடாது என்னும் தடையாணையாகவும் அதுவாகவே அமைகிறது. இருப்பினும், மரண அறிவிப்புதான் செக்குகளைச் செலுத்தும் அதிகாரத்தை பாங்கரிடமிருந்து மெய்யாகவே நீக்குகிறது.

(3) வாடிக்கைக்காரர் பித்தராதல்

வாடிக்கைக்காரர் ஒருவர் பித்தரானுல், அவருடைய பதிலாளாகச் செயலாற்ற பாங்கருக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் அதுவாகவே ரத்தாகிறது [யங்க் (எ.) டாயின்பீ (1910) 1 கே.பி. 215). எனினும், முகவர் என்னும் அவருடைய நிலைமையைக் கட்டுப்படுத்தும் அதே ஒழுக்க விதிகள், கட்டளை பெறுபவர் என்ற அவருடைய நிலைமையையும் கட்டுப்படுத்தும் என்கிற தேவையில்லை எனச் சிலர் சமாதானம் கூறுகின்றனர். ஆகவே, வாடிக்கைக்காரரின் செக்குகளை மதிக்கவல்ல பாங்கரது அதிகாரத்தைப் பித்தரான அறிவிப்பு மட்டுமே ரத்து செய்ய வல்லது என்று கருதப்படுகிறது. வாடிக்கைக்காரர் பித்தரானுர் என்பதை வலியுறுத்த நியாயமான அளவு முடிவான சான்றுகள் இருந்தாலன்றி, பகுத்தறியும் சம மனநிலையுடையவராகவே அவரை பாங்கர் பாவிக்கின்றனர்.

(4) திவாலாதல் அல்லது கலைக்கப்படுதல்

தனி நபர் வாடிக்கைக்காரர்கள் திவாலடைதலும், கம்பெனி அல்லது கூட்டமைப்பாகிய வாடிக்கைக்காரர்கள் கலைக்கப்படுதலும், அவர்களுடைய (அல்லது அவற்றினுடைய) செக்குகளைச் செலுத்துதல், உண்டியல்களை ஏற்றல் அல்லது மதித்தல் அல்லது இந்த வாடிக்கைக்காரரின் சார்பாக வேறு எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளல் ஆகியவற்றுக்காக பாங்கருக்குத் தரப்பட்ட அங்கீகாரத்தை முடிவடையச் செய்கின்றன. முறிவெய்திய வாடிக்கைக்காரரின் கணக்கிலுள்ள வரவு-இருப்பை, சொத்துப் பொறுப்பு அளிக்கப்பெறும் அதிகாரி, சொத்துப் பொறுப்பைப் பெறும் அதிகாரி, கலைப்பாளர் ஆகியவர்களில் தக்க ஒருவரின் கணக்குக்கு மாற்ற பாங்கர் கடமைப்பட்டவர். முறிவு மனுவின் அடித்தளமாக அமைகிற முறிவு நடவடிக்கைகளைப்பற்றி முன்பே கண்டோம். வாடிக்கைக்காரரின் முறிவுச் செயல் அல்லது அவருக்கெதிராகச் சமர்ப்பிக்கப்பட்ட முறிவு மனுவைப்பற்றி பாங்கர் அறிய நேர்ந்தால், அவருடைய சொத்து சம்பந்தமாக எந்தச் செயலையும் செய்யக் கூடாது; அவருடைய செக்குகளையும் மதிக்க முடியாது. ஏனெனில், 'பின்னோக்கிப் பற்றும்' (relation back) கொள்கைப்படி சொத்துப் பொறுப்பு அளிக்கப் பெறும் அதிகாரிக்கு முறிவெய்தியவருடைய சொத்தின்பாலுள்ள உரிமை, முறிவுத்தீர்ப்பு வழங்கப்பட்ட தேதியிலிருந்தல்ல; முதல் முறிவுச் செயல் செய்யப்பட்ட தேதியிலிருந்து துவங்குகிறது.

### (5) பற்றும் (கார்னிஷி) உத்தரவு

சிவில் நீதிமன்றத்தின் (civil court) தீர்ப்பை நிறைவேற்றும் முகத்தான் அந்த மன்றம் இடும் பற்றும் உத்தரவு போன்ற தடை உத்தரவைப் பெறும் பாங்கர், அதற்குப் பிறகு அந்த வாடிக்கைக் காரரின் செக்குகளை மதிக்க இயலாதவாறு தடுக்கப்படுகிறார். வாடிக்கைக்காரரின் வரவு-இருப்பு முழுவதும் பற்றப்பட்டதா அல்லது அதில் ஒரு பகுதிதான் பற்றப்படுகிறதா என்பது அந்த உத்தரவின் சொல்லமைப்பைப் பொறுத்திருக்கிறது. அந்தத் தடை உத்தரவு தொகை ஒன்றைக் குறிப்பிடாமல் இருந்தால், வரவு-இருப்பு முழுவதையும் அது பற்றுவதாகும். இதற்கு மாறாக, குறிப்பிட்ட தொகை ஒன்றைச் செலுத்த வேண்டாம் என்று அது பாங்கருக்குத் தடை விதித்திருந்தால், அத்தொகையை மட்டுமே தக்க வாடிக்கைக்காரரின் கணக்கிலிருந்து ஒதுக்கி வைத்து விட்டு, மிகுதியாயுள்ள இருப்பை, அந்த வாடிக்கைக்காரரின் செக்குகளை மதித்துப் பணஞ்செலுத்தப் பயன்படுத்தலாம்.

### (6) கணக்கின் (வரவு) இருப்புக்குப் பிறருக்கு உரிமையளித்தல்

வாடிக்கைக்காரர் தமது வரவு-இருப்பின் உரிமையை மூன்றாம் தரப்பார் ஒருவருக்கு அளித்திருந்து, அந்த மூன்றாம் ஆள் பாங்கருக்கு உரிமையளிப்பு அறிவிப்பைக் கொடுத்தால், பிறகு அத்தொகையை அதன் உரிமை அளிக்கப் பெற்றவருக்கே பாங்கர் செலுத்த வேண்டும். உரிமை அளித்தவருக்கு அந்த இருப்பின் மீது உரிமை அளித்த பிறகு எவ்வித உரிமையும் இல்லை. இருப்பினும், உரிமையளிப்பு அறிவிப்பைப் பெறாதவரை, அந்த வாடிக்கைக்காரரின் செக்குகளை அவர் மதித்துக்கொண்டே இருக்கலாம். ஏனெனில், பாங்கரைப் பொறுத்தமட்டில் (உரிமையளிப்பு) அறிவிப்பைப் பெறாதவரை, உரிமை அளிக்கப்பெற்றவரின் உரிமை முழுமைத்துவம் அடைவதில்லை.

## வாடிக்கைக்காரர் இறக்கும்பொழுது, அவருடைய வரவு-இருப்புக்கு யார் உரியவர்?

வாடிக்கைக்காரரின் மரணத்தைப் பற்றிய அறிவிப்பைப் பெற்றவுடன் பாங்கர் அவரது கணக்கை முடித்து விடுவார் என்று முன்பே கண்டிருக்கிறோம். வாடிக்கைக்காரருடைய, முறையாக அமர்த்தப்பட்ட சொத்துரிமைப் பதிலாளே, அந்த வரவிருப்பைப் பெறத்தக்கவர். பாங்கரிடமிருந்து அதைப் பெற, பிற எவரும் உரியவரல்லர். ஆயினும், உரிமை பாராட்டுபவர், அந்த வரவு-

இருப்புப் பொறுப்பாண்மைப் பணத்தைச் (trust money) சேர்ந்தது என்றும், தாம் அதற்கு உரியவர் என்றும் மெய்ப்பித்தாரானல், பாங்கர் அவரிடம் அத்தொகையைச் செலுத்தக் கடமைப் பட்டவர். அது போலவே, உரிமை பாராட்டுபவர் தாம் முதல்வர் என்றும், அக்கணக்கைப் பொறுத்தவரை அந்த வாடிக்கைக்காரர் தமது முகவராகவே செயலாற்றினர் என்றும் மெய்ப்பித்தால், அவர் அத்தொகைக்கு உரியவராவார். இந்த நிலைமையைத் தெளிவாக்கச் சில வழக்குகளைக் கீழே தந்துள்ளோம் :

டி லேலா பிரபு அவர்களின் பண்ணை நிருவாகியாக (farm bailiff) இந்த வழக்கின் வாதி செயலாற்றினர். அந்தத் தகுதியில் அவர் பணி முடிவடைந்த பின்னே, அல்லது அவரது நியமனம் மாற்றியமைக்கப்பட்ட பின்னே, அவருக்குப் பணியளித்தவரின் சார்பாக நிருவாகி என்னும் தகுதியில் அவர் விற்ற கோதுமைக் காக, £ 180க்கு எழுதப்பட்ட செக்கொன்றைப் பெற்றார். 128 பவுண்டு இருப்பைத் தமக்காக நிறுத்தி வைக்குமாறு டி லேலா பிரபு பாங்கருக்குக் கடிதம் எழுதினர். அத்தொகையை வாதி பெறலாம் என்றும், டி லேலா பிரபுக்கு அதன்பால் உரிமையில்லையென்றும் தீர்ப்பளிக்கப்பட்டது [டேஸ்ஸெல் (எ.) கூப்பர் (1850), 9 சி. பி. 509].

சொசைட்டி கலோனியல் அன்வெர்சாஸ் (எ.) லண்டன் அண்(ட்) பிரேஸிலியன் பாங்கு (1911), 2 கே.பி. 1024 (1030) என்னும் வழக்கில் பிரேஜில் நாட்டில் வாதிகளுக்கு உரிமையான சுரங்கங்கள் இருந்தன. அங்குச் சுரங்கப் பணியைத் தொடர்ந்து நடத்த முகவர் ஒருவரை அமர்த்தியிருந்தனர். மேலும், அங்குள்ள லண்டன் அண்(ட்) பிரேஸிலியன் பாங்கில் தம் கணக் கைத் துவக்கி, அக்கணக்குக்கு அவ்வப்பொழுது பணம் அனுப்பிக் கொண்டிருந்தனர். அக்கணக்கிலிருந்து பணத்தை எடுத்துச் சுரங்க வேலைகளுக்கு ஈடுபடுத்துவதற்கு அவர்களுடைய முகவருக்கு அதிகாரம் அளித்திருந்தனர். பிறகு வாதிகள் அந்த முகமை அமைப்பைக் கலைத்துவிட்டு, வேறொரு முகமை அமைப்பை நிறுவி, இரண்டாவது அமைப்புக்குத் தங்கள் வரவு-இருப்பைச் செலுத்துமாறு பாங்கை வேண்டினர். அவ்வாறு செய்ய அந்த பாங்கு மறுக்கவே, வாதிகள் அதன்மீது வழக்குத் தொடுத்தனர். அந்த வழக்கின் ஒப்பந்தம் பாங்குக்கும் வாதிகளுக்குந்தானே யன்றி, அதற்கும் முகவருக்குமல்ல என்று கூறி, வாதிகளுக்குச் சாதகமாக நீதிமன்றம் தீர்ப்பை வழங்கியது. வாடிக்கைக்காரர் ஒருவரின் கணக்கில் வைக்கப்பட்டுள்ள பணம் தமது நலனுக்காகத் தான் பொறுப்பாண்மை நிலையில் (in trust) வைக்கப்பட்டுள்ளது

என்று வற்புறுத்தும் மூன்றும் ஆள் ஒருவரின் கோரிக்கையை ஒப்புக்கொள்ள பாங்கு மறுத்தது நியாயமானதே. இந்தச் சூழ் நிலையில் அந்த மூன்றும் ஆள் செய்ய வேண்டியது யாதெனில், அந்த வாடிக்கைக்காரரின்மீது வழக்குத் தொடுத்து, தமது உரிமை களைப் பற்றிய நீதிமன்றத் தீர்ப்பை அவர் பெறுதலேயாகும். இவ்வாறு தக்க நீதிமன்றத்தின் ஆணையைப் பெருமல், பாராட்டப் படும் உரிமைகளைப் புறக்கணிக்க பாங்கருக்கு அதிகாரமுண்டு [டேஸ்ஸெல் (எ.) கூப்பர் (1850), 9 சி.பி. 509].

**உயிர் நிருபனச் சான்றிதழ் (Probate) அல்லது காப்பாண்மைப் பத்தி ரத்தைக் (Letter of Administration) காட்டுமாறு பாங்கர் கேட்க வேண்டும்**

உயிர் நிருபனச் சான்றிதழ் அல்லது காப்பாண்மைப் பத்தி ரத்தைக் காண்பிக்குமாறு பாங்கர் கேட்க வேண்டும். மாண்ட தமது வாடிக்கைக்காரரின் கணக்கிருப்பை அப்பத்திரத்தில் குறிப் பிட்டுள்ள ஆளிடம் (நிறைவேற்பாளர் அல்லது காப்பாட்சி யாளர்) அச்சமேதுமின்றி பாங்கர் செலுத்தலாம். குறிப்பிட்டுள்ள பல நிறைவேற்பாளர்கள் அல்லது காப்பாட்சியாளர்களில் யாராவது ஒருவரிடம் மாண்ட வாடிக்கைக்காரரின் வரவு-இருப் பைச் செலுத்துவதன்மூலம் பாங்கரின் பொறுப்பு நீங்குகிறது.

**எதிரீடு (Set-off)**

தீர்க்க வேண்டிய தொகைக்கு எதிர்-உரிமை (cross-claim) இருக்கும்பொழுது மட்டுமே எதிரீடு செய்தல் வழக்கமாகும். இருதரப்பாரிடையே, ஒரே உரிமையின் அடிப்படையில் எழுந்த, ஒருவருக்கொருவர் கொடுக்க வேண்டிய கடன்கள் இருக்கும் பொழுது, ஒன்றுக்காக மற்றொன்றை எதிரீடு செய்யலாம். மற்றொருவரின் பதிலாள் என்னும் தகுதியில் ஒருவர் பெற வேண்டிய உரிமைக்காக, அவருடைய சொந்தத் தகுதியில் அவர் செலுத்த வேண்டிய பொறுப்பை எதிரீடு செய்ய இயலாது. எனவே, B என்பவரின் பொறுப்பாண்மையாளர் என்னும் தகுதியில் A என் பவர் பாங்கர் ஒருவருக்குச் செலுத்த வேண்டிய 300 ரூபாயுக்காக, A என்பவருடைய சொந்தக் கணக்கின் இருப்புத் தொகையான 500 ரூபாயை அந்த பாங்கர் எதிரீடு செய்ய இயலாது. இறந்து போன வாடிக்கைக்காரர் ஒருவருடைய சொத்தின்மேல் அவரு டைய பாங்கருக்குள்ள உரிமையை, அவர் உயிரோடு வாழ்ந்த பொழுது அந்த பாங்கர் அவருக்குக் கொடுக்க வேண்டிய கடனுக் காக எதிரீடு செய்தல் முறையற்றது; செல்லத் தக்கதும் அல்ல. அந்த பாங்கரிடமிருந்து அவருக்கு வர வேண்டிய தொகை, அந்த

பாங்கரின் ஒரு கிளையகத்திலுள்ள கணக்கிலிருந்து சேரவேண்டிய தாயிருக்கலாம்; அன்றி, அதன் பல கிளையகங்களிலுள்ள அவருடைய கணக்குகளிலிருந்து உரியதாயிருக்கலாம்; எவ்வாறாயினும், மேற்கூறிய கூற்று பாதிக்கப்படுவதில்லை.

ஏ. எஸ். ஆர். சித். வீரப்ப செட்டியார் (எ.) ஜே.வி. பிர்ரியும் பிறரும் (அதிகார ரீதியான கலைப்பாளர்கள் — திருவாங்கூர் நேஷனல் அண்ட் க்வி(ய்)லான் பாங்கு லிமிடெட், ஏ.ஐ.ஆர். 1946 சென்னை, 436) என்னும் வழக்கில் வாதி, அவருடைய அன்னை ஆகிய இருவருள் ஒருவரிடமாவது அல்லது அவர்களுள் யார் பிழைத்திருக்கிறாரோ அவரிடமாவது செலுத்த வேண்டிய நிபந்தனையுடன் தவணை வைப்பு (fixed deposit) ஒன்று பாங்கிடம் வைக்கப்பட்டிருந்தது. மேலும், வாதியின் சொந்தக் கணக்கின்மீது அந்த பாங்கு அதிகப் பற்று வழங்கியிருந்தது. அந்தத் தவணை வைப்பு வாதிக்கு முற்றிலும் உரியதே என்னும் அடிப்படையில் அதிகப்பற்றுக்கு எதிராக அதை அந்த பாங்கு எதிரீடு செய்யலாம் என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது.

ஜி. சாமுவெல் (எ.) சிரில், ஜான் ஸ்டேன்லி குட்வின் ஆகிய இருவர் (அதிகார ரீதியான கலைப்பாளர்கள்—திருவாங்கூர் நேஷனல் அண்டு க்வி(ய்)லான் பாங்கு லிமிடெட் ஏ.ஐ.ஆர்., 1941, சென்னை, 622) என்னும் மற்றொரு வழக்கில் வாதியின் மாமி, அந்த பாங்கில் தவணை வைப்பு இட்டிருந்தார். அந்த வைப்பின் பிணையமாக அப்பாங்கு வாதிக்குக் கடன் வழங்கியது. அந்த வைப்பு, அதன்மீது கூடும் வட்டி ஆகியவையனைத்தையோ அல்லது அவற்றின் ஒரு பகுதியையோ அந்தக் கடனுக்காக எப்பொழுது வேண்டுமாயினும் எதிரீடு செய்யும் உரிமையைக் கொண்டுள்ள அதிகாரப் பத்திரத்தை (letter of authority), அப்பாங்கு கடன் வழங்கியபொழுது வாதியின் மாமியிடமிருந்து பெற்றது. ஆயினும், அக்கடனுக்காக அந்த வைப்பை எதிரீடு செய்ய பாங்கு முயன்றபோது, இந்த வழக்கு தொடுக்கப்பட்டது. நீதிமன்றம், தமது தீர்ப்பில் பாங்கின் அவ்வுரிமையை அனுமதிக்க மறுத்தது: மூன்றாம் ஆள் ஒருவருடைய தவணை வைப்பின் பிணையமாக, பாங்கொன்று ஒருவருக்குக் கடன் வழங்கியிருந்து, அந்த பாங்கு கலைக்கப்பட நேர்ந்தால் தாம் செலுத்த வேண்டிய கடனுக்காக, அந்த வைப்பை எதிரீடு செய்யக் (அல்லது செய்யுமாறு வேண்ட) கடனாளிக்கு உரிமையில்லை. ஏனெனில், இவ்விரு பேரங்களும் எதிரெதிரானவையுமல்ல; ஒரே உரிமையின்பால் பிறந்தவையுமல்ல என்னும் கூற்றை இத்தீர்ப்பு நிலைப்படுத்திற்று.

## பிழையாகச் செலுத்திய பணத்தை மீட்டல்

### சட்டரீதியான நிலைமை திட்டவட்டமாக இல்லை

பிழையாகச் செலுத்திய பணத்தை மீட்க இயலுமா இயலாதா என்பதை ஈண்டு ஆராய்தல் பொருத்தமற்றதன்று. இதைப் பற்றிய சட்டம் நிலையானதாகவோ அல்லது தெளிவான தாகவோ இல்லை என்பதை நாம் தொடக்கத்தில் அறிதல் சிறந்தது. பிழையாக பாங்கர் பணஞ்செலுத்தியிருந்தால், அப்பிழையைத் திருத்திப் பணத்தை மீட்க விழைதல் இயல்பே. நீதிமன்றங்கள் பல்வேறு வழக்குகளில் வழங்கிய தீர்ப்புக்களின் அடிப்படையில் இச்செய்தியை ஆராயும்பொழுது எந்தச் சூழ்நிலை களில் மீட்கும் உரிமையை அவர் இழக்கிறார் என்பது தெளிவற்ற தொரு புதிராகவே இருக்கிறது. இருப்பினும், பிழையாகச் செலுத்திய பணத்தை மீட்க இயலுமா இயலாதா என்பதைத் தீர்மானிக்கவல்ல சில பொதுவான கோட்பாடுகளைக் கீழே தந்துள்ளோம்:

### (1) தீய எண்ணத்துடன் (Mala Fide) பெற்ற பணத்தைச் செலுத்தி யவர் மீட்கலாம்

பணத்தைப்பெறுபவர், தாம் அதற்கு உரியவரல்லர் என்பதை அறிந்திருந்தும் அதைப் பெற்றிருந்தால், செலுத்துபவர் அதை மீட்க மறுக்க முடியாத உரிமை பெற்றிருக்கிறார். அதற்கு மாறாக, செலுத்தப் பெறுபவருடைய கணக்கின் உண்மையான நிலையை அவருக்கு அறிவிக்க; செலுத்துபவர் கடமைப்பட்டிருந்தும், பிழை யாகச் செலுத்தியிருந்து, செலுத்தப்பெறுபவரின் நிலை மாறியிருந் தால், அவர் பணத்தைத் திரும்பப் பெற இயலாது. ஏனெனில், உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறு (mistake of fact-அதாவது அந்தக் கணக்கைப் பற்றிய தவறு) செய்யாதிருத்தல் அவருடைய கடமையாகும். ஸ்கைரிங் (எ.) கிரீன்வுட் (*1825*), *4* பீ.சி. *281* என்னும் வழக்கில் இராணுவ சம்பளப் பட்டுவாடா அதிகாரியான வாதி, இராணுவத்தில் மேஜர் நிலையிலுள்ள பிரதிவாதிக்கு உண்மை நிகழ்ச்சியைப்பற்றிய தவறொன்றின் விளைவாக, மிகுதியான பணத்தைச் செலுத்திவிட்டார். வாதி அவருடைய கடமையைச் சரிவரத்தான் செய்துள்ளார் என்று எண்ணிக்கொள்ளப் பிரதி வாதிக்கு உரிமையுண்டு; மேலும், மிகுதியாகச் செலுத்தப்பட்ட பணத்தை அவர் செலவழித்திருந்தால், அதை வாதிக்குத் திருப்பித் தர வேண்டிய பொறுப்பும் அவருக்கில்லை என்று தீர்ப் பளிக்கப்பட்டது. இதே போன்று ஹோல்ட் (எ.) மார்காம் (*1923*) *1* கே. பி. *504* என்னும் வழக்கில் போர் அலுவலக

நிருவாக விதிகளைப் பொருள்கொள்வதில் செய்த தவறு ஒன்றின் காரணமாக, விமானப்படை அதிகாரி ஒருவர் மிகுதியாகப் பணம் செலுத்தப்பட்டார். முதலாவதாக, அது சட்டத்தைப் பற்றிய தவறாகும் (mistake of law) ; உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறாக அது இருந்திருப்பினும், செலுத்திய பணத்தை மீட்க இயலாதவாறு வாதி முரண்தடை செய்யப்படுவார் என்று அவ்வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டது. ஸ்கைரிங் (எ.) கிரீன்வுட் என்னும் வழக்குப் போலவே எள்ளளவேனும் மாறுபாடின்றி, இந்த வழக்கிலும் பணஞ்செலுத்தியவர், செலுத்தப்பெற்ற வருக்குக் கடமைப்பட்டிருந்தார். டச்சு பாங்கு (எ.) பீ(யி)ர்ரோ & கம், (*1895*), *73* எல்.தி. *669* என்னும் வழக்கில் A என்பவர் உண்டியல் ஒன்றை வசூலிப்பதற்காகப் பிரதிவாதிகளிடம் கொடுத் தார். பிரதிவாதிகள் அதே காரியத்திற்காக அதை வாதிகளிடம் தந்தனர். அந்த உண்டியல் செலுத்தப்பட்டுவிட்டது என்று வாதிகள் பிரதிவாதிகளிடம் தெரிவித்து, அதன் தொகையைச் செலுத்துமுகத்தான் செக்கொன்றை அனுப்பினர். அதேபோல் அந்த உண்டியல் மதிக்கப்பட்ட செய்தியைப் பிரதிவாதிகளும் A என்பவருக்கு அறிவித்து, அவருடைய கணக்கில் அத்தொகையை வரவு வைத்தனர். ஆனால், அந்த உண்டியல் மெய்யாகவே செலுத் தப்படவில்லை. ஒப்பந்தப்படி தவறு செய்யக்கூடாது என்னும் கடமைக்கு வாதிகள் இலக்காவதால், அவர்களுக்குப் பணத்தைத் திரும்பச் செலுத்தப் பிரதிவாதிகள் பொறுப்பல்லர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

**(2) உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறாக இருக்க வேண்டும்**

தவறாகச் செலுத்திய பணத்தை பாங்கர் திரும்பப் பெற வேண்டுமாயின், உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவற்றின் விளை வாக, அது செலுத்தப்பட்டிருக்க வேண்டும்—சட்டத்தைப்பற்றிய தவற்றின் அடிப்படையிலல்ல. எடுத்துக்காட்டாக, கிஷோரி லால் என்பவருக்குச் செலுத்த வேண்டிய பணத்தை, ப்ராக் நாத் என்பவ ருக்குச் செலுத்துவது, உண்மை நிகழ்ச்சியைப் பற்றிச் செய்யும் தவறாகும்; எனவே, செலுத்தியவர் அதனை மீட்கலாம். அதற்கு மாறாகக் காலாவதிச் சட்டத்தை அறியாது, ஒருவர் (காலாவதி யான) கடனைச் செலுத்தினால், செலுத்திய பணத்தை அவர் திரும்பப் பெற இயலாது. ஹோால்ட் (எ.) மார்க்காம் (*1923*), *1* கே.பி. *504* என்னும் வழக்கில் இராணுவத்தின் பதிலாள்களான திருவாளர்கள் ஹோால்ட் & கம்., போர் அலுவலக ஆணைகளைப் பொருள் கொள்வதில் செய்த தவறொன்றின் விளைவாகப் பிரதி வாதிகள் கணக்கில் *744* பவுண்டை மிகுதியாகச் செலுத்தியது; அந்தச் செலுத்தல் உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறொன்றின்

விளைவாகச் செய்தது அல்ல என்று தீர்ப்பளிக்கப்பட்டது. உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறும், சட்டத்தைப் பற்றிய தவறும் ஒருங்கே இணைந்து இருக்கும்பொழுது, செலுத்திய பணத்தைத் திரும்பப்பெற இயலுமா என்னும் வினா எழுகிறது. அத்தருவாயில், தாம் பணஞ்செலுத்துவதற்கு உண்மை நிகழ்ச்சியைப்பற்றித் தாம் செய்த தவறுதான் காரணமாக இருந்தது என்று வாதி மெய்ப்பித்தாலன்றி, அவர் பணத்தைத் திரும்பப் பெற இயலாது என்று ஹோம் அண்ட் கலோனியல் இன்சூரன்சு கம். (எ.) லண்டன் கேரண்ட்டி & அக். கம். (*1923*), *34* கம். கேஸஸ், *163* என்னும் வழக்கில் நீதிபதி ரைட் அவர்கள் கூறியதை நினைவிற்கொள்ள வேண்டும். உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறு, உண்மை நிகழ்ச்சிச் சட்டம் ஆகிய கூறுகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்த கலப்பாகவே பெரும்பாலும் இருத்தல் வேண்டும் என்பதே தற்பொழுது நிலவும் முற்போக்கான கருத்தாகும்.

### (3) பணஞ்செலுத்துபவருக்கும் செலுத்தப் பெறுபவருக்குமிடையே தான் தவறு இருக்க வேண்டும்

பணஞ்செலுத்துபவருக்கும் செலுத்தப் பெறுபவருக்குமிடையே தவறு இருந்தால் மட்டுமே, செலுத்திய பணத்தை மீட்கும் உரிமை செலுத்துபவருக்கு உண்டு. எனவே, செக்கொன்றை எழுதிய வாடிக்கைக்காரருக்கும் அவருடைய பாங்கருக்குமிடையே தவறு இருந்து, அதை நல்லெண்ணத்துடன் வைத்திருப்பவரிடம் பாங்கு அதன் தொகையைச் செலுத்தியிருந்தால், அந்தத் தொகையை அது மீட்கவியலாது. எடுத்துக்காட்டாக, வாடிக்கைக்காரரின் கணக்கிலுள்ள வரவு-இருப்பைச் சரியாகப் பாராமல், அவருடைய செக்கை பாங்கொன்று செலுத்தியிருந்தால், அத்தவற்றை அது கண்டுபிடித்த பிறகு, செலுத்தப் பெற்றவரிடமிருந்து அத்தொகையை மீட்க முடியாது; தொகையைச் செலுத்தியவுடன் தனது தவற்றை பாங்கு கண்டுபிடித்தாலும், பெற்றவர் பாங்கு நிலையத்தைவிட்டு இன்னும் அகலவில்லையாயினும், செலுத்திய பணத்தை அது மீட்கவியலாது [சேம்பர்ஸ் (எ.) மில்லர் (*1862*), பி.சி.பி.என்.எஸ். *125*]. வெல் ப்ளன்டென் (எ.) சினட் (*1940*), *2* ஆல் ஈ. ஆர். *580* என்னும் வழக்கில் 'தரப்பாரிடையே தவறு' என்னும் சொற்றொடரை நீதிமன்றம் மிகவும் ஆழமாகப் பகுத்தாராய்ந்து, செலுத்துபவர் சட்டரீதியாகச் செலுத்தக் கடமைப்பட்டவராயின், அவருக்கும் செலுத்தப் பெற்றவருக்குமிடையேதான் தவறு உள்ளது என்று எடுத்துக் கொள்ளப்படும் என்ற முடிவை அறிவித்தது. அவ்வழக்கின் நிகழ்ச்சிகளாவன: வாதிகள், குறிப்பிட்ட சொத்து ஒன்றின் முதலாவது அடைமானம் பெற்றவர்களாகவும் (first mortgagees),

பிரதிவாதி அதன் இரண்டாவது அடைமானம் பெற்றவராகவும் அமைந்தனர். அடைமானம் வைத்தவர் பணஞ்செலுத்தத் தவறி விடவே, தங்களுடைய விற்கும் உரிமையை வாதிகள் நிறைவேற்றினர்; 6,595 பவுண்டுக்கு அதை விற்றனர்; அத்தொகையிலிருந்து £ 6,000ஐ முதலுக்காகவும், £ 294ஐ வட்டிக்காகவும் நிறுத்தி வைத்துக்கொள்ள அவர்கள் உரியவராயிருந்ததோடு, உபரித் தொகையாகிய £ 301ஐப் பிரதிவாதிகளிடம் ஒப்படைக்க வேண்டிய பொறுப்புக்கும் இலக்காகியிருந்தனர். ஆனால், அவர்கள் £ 301க்கு மாறாக வட்டியைத் தவறாகக் கணக்கிட்டதன் விளைவாக £ 413ஐப் பிரதிவாதிகளிடம் செலுத்தினர். பத்து நாள்களுக்குள் தாங்கள் செய்த தவற்றை உணர்ந்த வாதிகள், உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவற்றின் விளைவாகச் செலுத்தியதாக, எச்சத் தொகையாகிய 112 பவுண்டை மீட்க முயன்றனர்; பிறகு வழக்குத் தொடுத்தனர். அந்தத் தவறு, அடகு வைத்தவரிடமிருந்து வாதிகளுக்குரிய வட்டித் தொகையைப் பற்றியது என்றும், தங்களுக்கும் அத்தவற்றுக்கும் எவ்விதத் தொடர்புமில்லையென்றும், எனவே சம்பந்தப்பட்ட தரப்பாரிடையேயுள்ள தவறு அல்ல அது என்றும் பிரதிவாதிகள் அவ்வழக்கில் மறுத்தனர். இக்கோட்பாட்டை இயம்புவனபோல் தோன்றும் வழக்குகள், செலுத்தப் பெறுபவருக்குச் செலுத்துபவர் செலுத்தக் கடமைப்பட்டவரல்லர் என்ற அடிப்படையைக் கொண்டுள்ளவை என்பதை நீதிமன்றம் எடுத்துக்காட்டியது. உதாரணமாக, சேம்பர்ஸ் (எ.) மில்லர் என்ற வழக்கில் எந்தத் தவற்றையும் பாங்கர் செய்யாதிருந்தாலும், செலுத்துபவராகிய பாங்கரிடமிருந்து கேட்டுப் பெறுவதற்குச் செலுத்தப் பெற்றவருக்கு உரிமையில்லை; ஆயினும், பாங்கர் பணஞ் செலுத்தி, அதிலே தவறு நேர்ந்திருந்தால், அவர்களிடையே (சம்பந்தப்பட்ட தரப்பாரிடையே) நேர்ந்த தவறு என்று அதைக் கூற முடியாது; ஆனால், செலுத்த வேண்டிய கடமையின் அடிப்படையில் அத்தவறு எழுந்திருந்தால், அக்கடமையைப் பாதிக்கும் வண்ணம் அந்தத் தவறு அமைந்திருந்தால், சம்பந்தப்பட்ட தரப்பாரிடையே (inter partes) நேர்ந்த தவறாகும் அது என்று கருத்துரைக்கப்பட்டது. முரண்தடை (estoppel) என்பதை விளக்கும் பொழுது, பிரதிவாதியின் விவகாரங்களைப் பொறுத்தவரை தவறு செய்யக் கூடாது என்னும் கடமைக்கு வாதிகள் உட்பட்டவரல்லர் [ஸ்கைரிங் (எ.) கிரீன்வுட்]; மேலும், செலுத்திய பணத்தை மீட்கும் உரிமையைத் தடை செய்யும்வண்ணம் இவ்வழக்கில் வேறெந்தச் சூழ்நிலையும் இல்லை. எனவே, பணத்தை மீட்க வாதிகள் உரியவர் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது. தவறாகப் பணஞ்செலுத்தப் பெற்ற ஒருவர் தவறாக எண்ணுமாறு செலுத்தியவரின் நடத்தை அமைந்திருந்து, அந்த நம்பிக்கையில் தமது நிலைமை வலுவிழக்கும்

வண்ணம் அவர் செயலாற்றியிருந்தால் அவரைத் திருப்பித் தருமாறு, செலுத்துபவர் வற்புறுத்துவதற்குச் சட்டம் இடமளிப்ப தில்லை என்ற கூற்றுக்கு 1926ஆம் ஆண்டுக்கு முன் பலத்த ஆதரவு இருந்தது.

செலுத்துபவர் எவ்வளவு தூரம் (நியாயமற்ற அளவு) புறக் கணித்திருப்பினும், எந்தெந்தத் தவறுகளுக்கும் குறைகளுக்கும் அவர் ஆளாயிருப்பினும், செலுத்தப் பெற்றவரைப் பொறுத்த வரை எத்தவறும் செய்யக் கூடாது என்னும் கடமைக்கு அவர் உட்படாதவரை, உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறொன்றின் விளைவாக அவர் பணஞ்செலுத்தியிருந்தால், அதை மீட்க அவருக்கு உரிமையுண்டு என்று கெல்லி (எ.) சோலரி (1841), 9 எம். டபிள்யூ. 54 என்னும் வழக்கில் வகுக்கப்பட்ட கோட்பாட்டை, ஆர். ஈ. ஜோன்ஸ் லிமிடெட் (எ.) வேரிங் அண்ட் கில்லார்டு லிமிடெட் (1926) ஏ. சி. 670 என்னும் வழக்கில் பிரபுக்கள் மன்றம் ஆதரித்து நிலைப்படுத்தியதன்மூலம் அதுவரை நிலவிவந்த அந்தக் கருத்து மாறுபாட்டுக்கு ஒரு முடிவு கண்டது. தக்க கவனம் செலுத்த வேண்டும் என்னும் கடமைக்கு இலக்காகாதவரை, விழிப்பின்றிச் செயலாற்றுதலை மட்டுமே புறக்கணிப்பாகும் என்று சட்டம் கருது வதில்லை என்னும் கூற்றை நாம் முன்பே விளக்கக் கண்டோம்.

**விதிவிலக்குகள்**

(1) செலாவணி முறியொன்றின்மீது பணம் செலுத்தப் படும்பொழுதும்,

(2) தாமே முதல்வராக இல்லாது, வேறொரு முதல்வரின் முகவராக ஒருவர் பணத்தைப் பெற்றிருந்து, தவறாகச் செலுத்தப்பட்ட அதைப்பற்றிய அறிவிப்பைப் பெறு முன், அப்பணத்தை அவருடைய முதல்வரிடம் அவர் செலுத்தியிருந்தாலும் அல்லது அதை நம்பித் தம்மு டைய நிலைமை வெகுவாகப் பாதிக்கப்படும் அளவுக்கு அவர் செயலாற்றியிருந்தாலும் தவறாகச் செலுத்திய பணத்தை மீட்கச் சட்டம் அனுமதியளிப்பதில்லை.

**செலாவணி முறிகளின்மீது செலுத்தப்பட்ட பணத்தை மீட்க இயலுமா?**

உண்டியல் ஒன்றின் தவணை முடிந்து செலுத்துவதற்கு அது உரியதாகும் நாளில் அது மதிக்கப்படுமா அல்லது அவமதிக்கப் படுமா என்பதை அறிய, அதை வைத்திருப்பவருக்கு உரிமை யுண்டு; அவர் அதன் தொகையைப் பெற்று, அன்று முழுவதும் அதை வைத்திருக்க அனுமதிக்கப்பட்ட பிறகு, செலுத்தியவர்

அத்தொகையை அவரிடமிருந்து மீட்க இயலாது என்னும் கோட்பாட்டைக் காக்ஸ் (எ.) மாஸ்டர்மேன் (1829), 9 பி & சி 902 என்ற வழக்கின் தீர்ப்பு தெளிவுபடக் கூறிற்று. செலாவணி முறியொன்றின் தொகையை நல்லெண்ணத்துடன் அதை வைத் திருப்பவரிடம் செலுத்திய பிறகு, அவருக்குமுன் அதில் சம்பந்தப் பட்ட தரப்பாரிடம் அவருக்குள்ள உரிமைகள் பழுதடையும் அள வுக்கு அவ்வளவு கால இடைவெளி கழிந்த பிறகு, அவரிடமிருந்து அத்தொகையைத் திரும்பப்பெற இயலாது என்று நீதிபதி மாத்தியூ அவர்கள் லண்டன் அண்ட் ரிவர் பிளேட் பாங்கு (எ,) பாங்கு ஆஃப் லிவர்பூல் (1896), 1, க்யூ. பி. 7 என்னும் வழக்கில் இயம்பினர். உண்டியல் ஒன்று செலுத்துவதற்கு உரியதாகும்பொழுது அதன் முடிவு என்ன என்பதை ஆணித்தரமாக அறிய அதை வைத்திருப்ப வருக்கு உரிமையுண்டு என்பதே இத்தீர்ப்பின் அடிப்படைக் கோட்பாடாகும். அவருக்கு முன்பு அந்த உண்டியலில் புறங்குறித் தவர்களுக்கு எதிராகவுள்ள அவரது பரிகார உரிமை, அந்த உண்டியல் அவமதிக்கப்பட்டுத் தக்க அவமதிப்பு அறிவிப்பை அவர் அவர்களுக்குக் கொடுப்பதைச் சார்ந்துள்ளது (இந்தியச் செலாவணி முறிச்சட்டத்தின் 35ஆம் பிரிவு). அந்த உண்டியல் மெய்யாகவே மதிக்கப்பட்டால், புறங்குறித்தவரின் பொறுப்பு எழுவதேயில்லை ; அச்சூழ்நிலையில் பெற்ற பணத்தைத் திருப்பித் தருமாறு அதை வைத்திருப்பவர் கட்டாயப்படுத்தப்பட்டால், அவர் நிலைமை வெகுவாகப் பாதிக்கப்படும். அவருக்கு முன் அதில் சம்பந்தப்பட்ட தரப்பாரே இல்லாத சூழ்நிலையில், இக்கோட்பாடு பொருத்தமற்றதாகிறது. எனவே, இம்பீரியல் பாங்கு ஆஃப் கனடா (எ.) பாங்கு ஆஃப் ஹேமில்டன் (1903), ஏ. சி. 49 என்னும் வழக்கில் பிழையாகப் பணம் செலுத்தப்பெற்றவருக்கு அதைப் பற்றி அடுத்த நாள் அறிவிப்பைத் தந்தபோது, அவர் எவ்விதத் திலும் பாதிக்கப்படுவதில்லையாதலால், அவரிடமிருந்து பணத்தை மீட்கலாம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

ரகுநாத் ரித்கரன் (எ.) தி இம்பீரியல் பாங்கு ஆஃப் இந்தியா (1925), 27 பம்பாய் எல். ஆர். 1229, 1236 என்ற வழக்கின் வாதிகள் தங்கள்மீது எழுதப்பெறாத நாட்டு உண்டியல் ஒன்றைத் தவறாக ஏற்று உரிய காலத்தில் அதன் தொகையைப் பிரதிவாதி களிடம் செலுத்தினர். ஏறத்தாழ ஓர் ஆண்டு கழிந்து அத்தவற்றை அவர்கள் கண்டுபிடித்தபொழுது, பிரதிவாதியாகிய பாங்கிட மிருந்து பணத்தை மீட்க அவர்கள் விழைந்தனர். சிறுவழக்கு நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, தமது தீர்ப்பில் வாதி கொண் டாடிய உரிமையை மறுத்து, வழக்கைத் தள்ளிவிட்டார். பம்பாய் உயர்நீதிமன்றம் இத்தீர்ப்பை ஆதரித்ததுடன், பின் வரும்,

கூற்றைத் தெளிவாக்கியது: அந்த நாட்டு உண்டியல் தம்மீது தான் எழுதப்பெற்றுள்ளது; தாமே அதன் எழுதப்பெற்றவர்கள் என்ற நிலைமையை வாதிகள் ஏற்றுக்கொண்டதனுல், அவர் களுக்கும் பிரதிவாதியாகிய பாங்குக்குமிடையே புதிய உறவு ஒன்று அரும்புகிறது; உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவருென்றின் விளைவாகவே தாம் அந்த நிலைமையை ஏற்றனர் என்பதை நியாய மான காலவரம்பிற்குள் பாங்குக்கு அறிவிக்க வேண்டிய கடமையை இந்த உறவு அவர்கள்மீது விதிக்கிறது. அந்தத் தவற்றை உடனடியாகக் கண்டுபிடிக்காத வாதிகளின் அப்பட்ட மான கவனமின்மையும், அதைக் கண்டுபிடித்த பின்னர் நியாய மான காலவரம்பிற்குள் பிரதிவாதிகளிடம் அதை அவர்கள் அறிவிக்கத் தவறிய குற்றமும், பாங்கிடமிருந்து பணத்தை மீட்கும் உரிமையை அவர்களிடமிருந்து பறிக்கின்றன. வேரிங்ஸ் (எ.) ஜோன்ஸ் என்னும் வழக்கில் பிரபுக்கள் நீதிமன்றம் அறைந்த அதிகார ரீதியான கருத்துக்கு, இக்கூற்று முரணுனதாகத் தோன்று கிறது.

### மோசடிச் செலாவணி முறிகளுக்கும், செலாவணித் தன்மையற்ற பிற முறிகளுக்கும் இந்த விதிவிலக்கு பொருந்தாது

தவருகச் செலுத்திய பணத்தை மீட்பது பற்றிய பொது விதியின் இந்த விலக்கு, செலாவணித் தன்மையின் சிறப்பியல்பு களைப் பெற்றிராத முறிகளுக்கும், கள்ளத்தனமாக நுழைக்கப் பட்ட (அல்லது திருத்தப்பட்ட) அமிசங்களைத் தாங்கியுள்ள மோசடி முறிகளுக்கும் பொருந்தாது. எனவே, செக்கு அல்லது உண்டியல் ஒன்றில் அதை எழுதுபவர் அல்லது அதைப் புறங் குறித்தவருடைய கள்ளக் கையொப்பம் தோன்றினுல், அதைச் செலுத்துபவருக்கும், சமர்ப்பித்து அதன் தொகையைப் பெற்ற வருக்குமிடையேயுள்ள உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவருக அது எடுத்துக்கொள்ளப்படும். செக்கொன்றை எழுதுபவரின் கையொப்பம் கள்ளக் கையொப்பமாக இருந்து, அதில் புறக் குறிப்பே இல்லாதிருந்தால், செலாவணி முறியென்று அதைக் கருத இயலாது. இருப்பினும், தொடக்கத்தில் பொய்ப் பத்திரமாக இருந்த ஒன்றன்பால் (எழுதுபவரின் கையொப்பம், கள்ளக் கையொப்பமாகவுள்ள செக்கொன்றைப் போல), ஒருவர் கொஞ்சம் உரிமையைப் பெற்ருல், மறுக்க வாயற்றுப்போதல் என்னும் சித்தாந்தப்படி, செலாவணி முறியாக அது மாறலாம். உதாரணமாக, மேற்கூறிய செக்கை மூன்ரும் ஆள் ஒருவருக்கு அதன் பெறற்குரியவர் உரிமை மாற்றம் செய் தால், பின்னவரைப் பொறுத்தவரை அது செலாவணி முறியே யாகும் என்று முன்னவர் சாதிக்கலாம்; எனவே, இந்த முறியின்

மீது செலுத்திய பணத்தை மீட்க இயலாது. முறியொன்று பொய் முறியாக இருந்து, அதில் தோன்றும் தம்முடைய வாடிக்கைக் காரரின் கையொப்பத்தை நம்பி பாங்கர் அதன் தொகையைச் செலுத்தியிருந்தால், பாங்கர் அதன் தொகையை மீட்க இயலாது என்னும் விதிக்கு, இது ஒரு விலக்காக அமையுமா என்ற வினா எழு கிறது. இதுபோன்ற முறிகள் பெரும்பாலும் சில புறக்குறிப்பு களைத் தாங்கியிருக்கும் அல்லது அவற்றின் தொகைகள் எத்தர்களி டம் (fradulent parties) செலுத்தப்பட்டிருக்கும்; அந்த எத்தர்களை உளவறிந்து கண்டு பிடிப்பது அரிது; கண்டு பிடித்தாலும் அவர்களிடமிருந்து பாங்கர் பணத்தை மீட்டல் அதனினும் அரிது; எனவே, மெய்யாகவே பயனற்றதாக அந்த வினா முடியும். தமது வாடிக்கைக்காரரைப் பொறுத்தவரை, அவருடைய கையொப் பத்தை அறிந்திருத்தல் பாங்கரது கடமையாகும். ஆனால், செக் கொன்றை வைத்திருப்பவருக்கு அந்தக் கடமையைச் செய்ய, செலுத்தும்-பாங்கர் பொறுப்பாவதில்லை. ஆயினும், பாங்கர், அவர் செலுத்திய தொகையைப் பெற்றவர் ஆகிய இருவருள்ளும், அப்பட்டமான கவனமின்மையோடு பாங்கர் பணஞ்செலுத்தி யிருந்தால், செலுத்திய தொகையை மீட்குமாறு பாங்கரை அனு மதிப்பது நேர்மையற்றதாகும். எடுத்துக்காட்டாக, செக்கில் தோன்றும் கையொப்பத்திற்கும், அந்த வாடிக்கைக்காரர் பாங் கருக்கு அளித்த தமது மாதிரிக் கையொப்பத்திற்கும் வெளிப்படை யான மாறுபாடு இருந்தும், அவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்க அந்த பாங்கர் தவறியிருந்தால், அது நெறிமுறை வழுவிய ஒரு செயலாகும்; எனவே, நல்லெண்ணத்துடன் அதன் தொகை யைப் பெற்றவரிடமிருந்து, அதை மீட்க அவரை அனுமதிக்க இயலாது.

**இரண்டாம் விதிவிலக்கு**

தவறாகச் செலுத்திய பணத்தை மீட்பதைப் பற்றிய விதியின் இரண்டாவது விலக்கு ஓரளவு சிக்கலற்றது. தவறாகச் செலுத்திய பணத்தைத் தீய எண்ணமேதும் இல்லாத முகவர் ஒருவர் பெற்று, அந்தத் தவற்றைப் பற்றிய அறிவிப்பைப் பெறுமுன் தமது முதல் வரிடம் அத்தொகையைச் செலுத்தியிருந்தாலும் அல்லது வேறு எந்தச் செயலினாலோ அவர் தமது நிலைமையை வெகுவாகவும் மீட்க முடியாத அளவும் மாற்றியிருந்தாலும், அவரிடமிருந்து அதைத் திரும்பப்பெறச் செலுத்துபவர் அனுமதிக்கப்பட மாட்டார்.

**பணத்தைப் பெற்றது முதல்வர் என்னும் தகுதியிலா அல்லது முகவர் என்ற முறையிலா?**

இது போன்ற வழக்குகளில் முதலாவதாக ஆராய வேண்டிய வினா, பணத்தைப்பெற்றவர் முதல்வர் என்னும் தகுதியில் அதைப்

பெற்ருரா அல்லது முகவர் என்னும் நிலைமையில் அதைப் பெற்ருரா என்பதேயாகும். குறிப்பிட்ட வாடிக்கைக்காரர் ஒருவரின் வரவுக்காக பாங்கொன்றில் பணத்தைச் செலுத்திய தால், அந்த வாடிக்கைக்காரரின் செக்கை மதிக்க அந்த பாங்கு ஒப்புக்கொண்டது என்னும் நிகழ்ச்சியைத் தவருக அத்தொகை யைச் செலுத்தியவர் அதை பாங்கிடமிருந்து மீட்கும்பொருட்டு தொடுக்கும் வழக்கில், செல்லத்தக்க தற்காப்பு மறுப்பாக வற்புறுத்த முடியாது என்று அட்மிரால்டி கமிஷனர்ஸ் (எ.) நேஷனல் ப்ரொவின்ஷியல் யூனியன் பாங்கு, *38* தி. எல். ஆர். *492* என்னும் வழக்கில் கூறப்பட்டது. (க்)லீன்வோர்ட்ஸ் (எ.) டன்லப் ரப்பர் கம். (*1907*), *23* தி. எல். ஆர். *696* என்னும் வழக்கில் திரு. க்ராம்ரிஷ் என்பவருக்கு டன்லப் ரப்பர்க் கம்பெனி கொடுக்க வேண்டிய *3,000* பவுண்டை, அவர் தமக்கு உரிமை அளிப்பு செய்து விட்டார் என்று திரு. பிராண்டிட் என்பவர் டன்லப் ரப்பர் கம்பெனிக்கு அறிவித்தார். அந்தப் பணத்தைத் திரு. பிராண்டிட் அவர்களிடம் செலுத்துமாறு க்ராம்ரிஷ் என்பவரும் டன்லப் ரப்பர்க் கம்பெனிக்குக் கட்டளையிட்டார். பல பேரங்களில் தமக்கு நிதி தந்து உதவும் (க்)லீன்வோர்ட்ஸ் என்பவர்களிடம் தமக்கு அவ்வப்போது உரியதாகும் தொகை களைச் செலுத்துமாறு பொது ஆணை ஒன்றை, க்ராம்ரிஷ் என்பவர் அந்தக் கம்பெனிக்கு முன்பே தந்திருந்தார். அக்கம்பெனியின் அதிகாரி ஒருவர், க்ராம்ரிஷ் என்பவருடைய பொது ஆணைக் கிணங்க, £ *3,000*-க்கு எழுதிய செக்கை (க்)லீன்வோர்ட்ஸ் என்பவர்களிடம் தவருகச் செலுத்தி விட்டார். உரிமை அளிக்கப் பெற்ற கடனைப் பெறுவதற்காக, பிராண்டிட் என்பவர் அந்தக் கம்பெனியின்மீது வழக்கைத் தொடுத்து, தமக்குச் சாதகமாகத் தீர்ப்பையும் பெற்ருர். அதன் பிறகு, உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவற்றின் விளைவாக (க்)லீன்வோர்ட்ஸ் என்பவர்களுக்குச் செலுத்திய *3,000* பவுண்டை மீட்கும்பொருட்டு டன்லப் ரப்பர்க் கம்பெனி அவர்கள்மீது வழக்குத் தொடுத்தது. (க்)லீன்வோர்ட்ஸ் என்பவர்கள் அந்தப் பணத்தைப் பெற்றது முதல்வர் என்னும் தகுதியிலா அல்லது க்ராம்ரிஷ் என்பவருடைய முகவர்கள் என் னும் தகுதியிலா என்பது அந்த வழக்கில் முடிவு காண வேண்டிய மிகவும் முக்கியமான சங்கதிகளில் ஒன்ருக இருந்தது. அந்தப் பணத்தைப் பெறுவதில் (க்)லீன்வோர்ட்ஸ் என்பவர்கள் முதல்வ ராகவே செயலாற்றினர்; எனவே, அதைத் திரும்பச் செலுத்த அவர்கள் பொறுப்பாவார்கள் என்று நீதிமன்றம் தீர்ப்பு வழங் கியது. அப்பொருள் பற்றி அதற்கு முன்பு அளிக்கப்பட்ட தீர்ப்புக்களை ஆராய்ந்த அட்கின்சன் பிரபு அவர்கள் கூறிய பின் வரும் விளக்கம், நிலைமையை மிகவும் தெளிவாக்குகிறது:

'உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறொன்றின் விளைவாக ஒருவரிடம் செலுத்தப்பட்ட பணத்தை மீட்கும்வண்ணம் அவர் மீது தொடுக்கப்படும் வழக்கில் பிரதிவாதியாகிய அவரது உண்மை நிலை எதுவாயினும், பணத்தைச் செலுத்தியவரிடம் முதல்வர் என்னும் தகுதியில் அவர் செயலாற்றிப் பணத்தைப் பெற்றார் என்பது மெய்ப்பிக்கப்படுமாயின், அதைத் திருப்பித்தர அவர் பொறுப்பாவார். அதற்கு மாறாக, மற்றொருவரின் முகவர் என்னும் தகுதியில் அவர் செயலாற்றிப் பணத்தைப் பெற்றிருந்தால், அதைத் திருப்பித்தர அவர் பொறுப்பாளி ஆவாரா மாட்டாரா என்னும் பிரச்சினை கீழ்க்காணும் சூழ்நிலைகளைச் சார்ந்துள்ளது: அந்தத் தவறு கண்டு பிடிக்கப்படுமுன், பெற்ற பணத்தை அவருடைய முதல்வரிடம் அவர் செலுத்தியிருந்தாலும் அல்லது அதைச் செலுத்துவதற்கு ஈடான வகையில் முதல்வருடைய கணக்கை அவர் பைசல் செய்திருந்தாலும் அல்லது திருப்பித் தருமாறு அவரைக் கட்டாயப்படுத்துதல் நேர்மையற்றது என்று கூறத்தக்க அளவுக்கு வேறெந்தச் செயலினாலோ அவர் தம்முடைய நிலைமையை வெகுவாக மாற்றியிருந்தாலும், திருப்பித்தர அவர் பொறுப்பாக மாட்டார்.'

முகவர்கள் என்னும் தகுதியில் இந்த வழக்கின் பிரதிவாதிகள் பணத்தைப் பெற்றிருந்து, தம்முடைய நிலைமை வலுவிழக்குமாறு (பழுதாகுமாறு) ஏதாவது ஒரு செயலை அவர்கள் செய்திருந்தால் அவர்களுக்குப் பாதகமாகத் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்காது என்பது இந்த எடுத்துக்காட்டுப் பகுதியிலிருந்து (extract) தெளிவாகிறது.

### மூன்றாம் ஆள் ஒருவர் தவறாகச் செலுத்திய பணத்தின்மீது பற்றுரிமையோ அல்லது எதிரீட்டுரிமையோ கிடையாது

மூன்றாம் ஆள் ஒருவர் தவறாகச் செலுத்திய பணத்தின்மீது, செலுத்தப்பெற்ற பாங்கர், பற்றுரிமையையோ அல்லது எதிரீட்டுரிமையையோ பாராட்டவியலாது; தமது வாடிக்கைக்காரரின் முகவர் என்னும் தகுதியில் அவர் அதைச் செலுத்தியிருந்தாலும், பாங்கருக்கு இவ்வுரிமைகள் கிட்டமாட்டா. ஆயினும், வாடிக்கைக்காரரே அவ்வாறு செலுத்தியிருந்தால், இவ்வுரிமைகளை பாங்கர் பாராட்டலாம் என்பது நினைவிற்கொள்ளத்தக்கது. வாடிக்கைக்காரரின் பணம் அல்லது பிணயங்களின்மீது மட்டுமே பாங்கருக்குப் பற்றுரிமை உண்டு; உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறொன்றின் விளைவாக மூன்றாம் ஆள் ஒருவர் செலுத்தும் பணம் அவருடையதேயன்றி வாடிக்கைக்காரருக்கு உரியதன்று. எனவே, பாங்கருடைய பற்றுரிமை அதைச் சாராது.

இருவரில் எவருக்காவது அல்லது பிழைத்திருப்பவரிடமாவது திரும்பச் செலுத்தத்தக்கக் கூட்டுக் கணக்கைப் பொறுத்தவரை, A என்பவரிடமிருந்து வரவேண்டிய கடனைக் கூட்டுக் கடனுக்காக எதிரீடு செய்ய பாங்கருக்குரிமையில்லை; அதேபோன்று பாங்குக்குத் தாம் செலுத்த வேண்டிய தமது தனிப்பட்ட கடனோடு கூட்டுக் கடனை A என்பவர் எதிரீடு செய்ய இயலாது [நாத் பாங்கு லிமிடெட் (கலைக்கப்படுகிறது) (எ.) எஸ்.கே. சர்க்கார், சி.சி. நூற் பிரிவு *24*, பக். *306*).

தம்மிடமுள்ள அவருடைய பணத்தின் உரிமையைத் தமது வாடிக்கைக்காரர் பிறருக்கு முறையாக அளித்தப் பின், பாங்கர் எதிரீட்டுரிமையைப் பாராட்ட இயலாது. குறிப்பாக, உரிமை அளிப்பு அறிவிப்பைப் பெற்றபின்; எக்காரணத்தை முன்னிட்டும் இவ்வுரிமையை பாங்கர் பாராட்ட இயலாது (அதிகார ரீதியான கலைப்பாளர், அநுமான் பாங்கு லிமிடெட் (எ.) கே. பி. தி. நாடாரும் பிறரும், சி.சி. நூற்பிரிவு *26*, பக். *81*).

# 9. நிதிகளை ஈடுபடுத்தல்

## (Employment of Funds)

நிதிகளைத் திரட்டுவதற்கு பாங்கர் புரியும் பணிகளைப்பற்றி இதுவரை கண்டோம். திரட்டிய நிதிகளை அவர் தமது தொழிலில் ஈடுபடுத்தும்பொழுது, அவர் கடைப்பிடிக்க வேண்டிய சட்டக் கோட்பாடுகளையும், நடைமுறை நெறிகளையும் இங்கு நாம் காணு வோம். எந்தெந்த வகைகளில் பாங்கர் தமது நிதிகளை இலாபகர மாக ஈடுபடுத்துகிறார் என்பதை விரிவாக ஆராயுமுன்பு, பாங்குகள் எதற்காக ரொக்கக்காப்பிருப்பைப் (cash reserve) படைத்து, அதைப் பேணுகின்றன, அதன் அளவை நிர்ணயிக்கும் காரணிகள் யாவை என்பவற்றை ஆராய்தல் பொருத்தமுடைத்து.

### ரொக்கக்காப்பிருப்பு

முதல் உலகப் போருக்கு முன்பு, தவணை வைப்புக்களே இந்தியாவிலுள்ள பாங்கருடைய பொறுப்புக்களின் பெரும்பகுதி யாக விளங்கின என்பது முந்தைய அத்தியாயங்களிலிருந்து தெளி வாகும் ஓர் உண்மையாகும். பாங்குகள் இரண்டு முக்கியமான தேவைகளை நினைவிற்கொண்டு, போதிய ரொக்கத்தைத் தங்கள் வசம் வைத்திருக்க வேண்டும். முதலாவதாக, தவணை, நடப்பு, சேமிப்பு ஆகிய பல்திறப்பட்ட வைப்புக்களின் வைப்பாளிகளுடைய எடுப்புத் தேவைகளை (demands for withdrawal) நிறைவேற்றப் பெருமளவு ரொக்கம் தேவைப்படும். 1960ஆம் ஆண்டு இங்கி லாந்து, வேல்ஸ் ஆகிய நாடுகளிலிருந்த பாங்குகளின் மொத்த நிதியில் ஏறத்தாழ 91 விழுக்காடு நடப்பு, தவணை, சேமிப்பு ஆகிய வைப்புக்களாகும் என்பதை இத்தறுவாயில் நினைவுகூரல் பயன்தரத் தக்கது. இரண்டாவதாக, வேண்டும் வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் தந்து உதவவும், பாங்கருக்கு ரொக்கம் தேவைப்படும். எனவே, தமது அன்றாடத் தேவைகளைச் சமாளிக்கப் போதுமான

ரொக்கத்தைத் இவ்வொரு பாங்கும், தம்மிடமும் தமது பாங்கிடமும் (பொதுவாக அந்த நாட்டின் மைய பாங்கிடம்) வைத்திருத்தல் இன்றியமையாதது. இவ்வாறு வைத்திருக்கப்படும் ரொக்கத்திற்கு ரொக்கக்காப்பிருப்பு என்று பெயர்; இதுவே அதன் முன்னணிப் பாதுகாப்பாகத் (first line of defence) திகழ்ந்து, ஆபத்துக்காலத்தில் அதைக் காக்கிறது. இந்தியாவிலுள்ள சில தரப்பட்ட பாங்குகள் திரட்டிய வைப்புக்களில் அவை வைத்திருந்த ரொக்கம் எவ்வளவு விழுக்காடு என்பதைக் கீழ்வரும் அட்டவணை காட்டுகிறது :

**ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 31ஆம்தேதி இந்தியாவிலுள்ள பல வகைப்பட்ட பாங்குகளின் வைப்புக்களுக்கும் ரொக்கத்திற்கும் இருந்த வீதத்தைக் காட்டும் அட்டவணை**

| | 1<br>மொத்த ரொக்கம் இலட்ச ரூபாய்—அளவு | 2<br>வைப்பு இலட்ச ரூபாய்—அளவு | 3<br>விழுக்காடு |
|---|---|---|---|
| அட்டவணையிலிட்ட இந்திய பாங்குகள் | | | |
| 1946 | 158,90 | 882,88 | 18 |
| 1947 | 164,37 | 906,46 | 18 |
| 1948 | 159,01 | 875,20 | 18 |
| 1949 | 159,40 | 759,72 | 21 |
| 1950 | 119,33 | 754,07 | 16 |
| 1951 | 115,31 | 748,25 | 15 |
| 1952 | 108,87 | 715,37 | 15 |
| 1953 | 100,05 | 740,01 | 13 |
| 1954 | 123,48 | 817,22 | 10 |
| 1955 | 118,18 | 877,22 | 13 |
| 1956 | 118,32 | 960,83 | 12 |
| 1957 | 148,58 | 1,223,80 | 12 |
| 1958 | 166,32 | 1,458,19 | 11 |
| 1959 | 189,21 | 1,704,14 | 11 |
| 1960 | 197,53 | 1,714,44 | 12 |

ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 31ஆம்தேதி இந்தியாவிலுள்ள பல வகைப்பட்ட பாங்குகளின் வைப்புக்களுக்கும் ரொக்கத்திற்கும் இருந்த வீதத்தைக் காட்டும் அட்டவணை (தொடர்ச்சி)

| | 1<br>மொத்த ரொக்கம் இலட்ச ரூபாய்—அளவு | 2<br>வைப்பு இலட்ச ரூபாய்—அளவு | 3<br>விழுக்காடு |
|---|---|---|---|
| நாணய மாற்றுப் பாங்குகள் | | | |
| 1946 | 21,56 | 169,49 | 13 |
| 1947 | 27,19 | 163,67 | 17 |
| 1948 | 16,73 | 160,19 | 10 |
| 1949 | 18,87 | 161,38 | 12 |
| 1950 | 18,73 | 170,39 | 11 |
| 1951 | 24,25 | 168,04 | 14 |
| 1952 | 16,11 | 175,33 | 9 |
| 1953 | 14,41 | 164,70 | 8 |
| 1954 | 15,91 | 177,63 | 8 |
| 1955 | 17,66 | 193,57 | 9 |
| 1956 | 17,69 | 186,34 | 9 |
| 1957 | 20,17 | 204,14 | 10 |
| 1958 | 14,62 | 195,76 | 7 |
| 1959 | 18,05 | 226,21 | 8 |
| 1960 | 21,74 | 238,95 | 9 |

### ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 31ஆம்தேதி இந்தியாவிலுள்ள பல வகைப்பட்ட பாங்குகளின் வைப்புக்களுக்கும் ரொக்கத்திற்கும் இருந்த வீதத்தைக் காட்டும் அட்டவணை (தொடர்ச்சி)

| | 1<br>மொத்த ரொக்கம் இலட்ச ரூபாய்—அளவு | 2<br>வைப்பு இலட்ச ரூபாய்—அளவு | 3<br>விழுக்காடு |
|---|---|---|---|
| அட்டவணையிலிடா பாங்குகள் (செலுத்திய மூலதனம், காப்பிருப்புகள் சேர்ந்து 5 இலட்ச ரூபாய் அல்லது அதற்கு அதிகமாக உடைய பாங்குகள்) | | | |
| 1946 | 18,27 | 62,72 | 29 |
| 1947 | 10,50 | 49,07 | 21 |
| 1948 | 7,97 | 46,08 | 17 |
| 1949 | 7,62 | 45,99 | 17 |
| 1950 | 6,51 | 46,59 | 14 |
| 1951 | 6,00 | 44,26 | 14 |
| 1952 | 5,90 | 40,49 | 15 |
| 1953 | 6,12 | 41,16 | 14 |
| 1954 | 6,57 | 45,15 | 14 |
| 1955 | 6,42 | 48,44 | 13 |
| 1956 | 6,33 | 50,49 | 12 |
| 1957 | 4,41 | 29,28 | 15 |
| 1958 | 4,12 | 23,17 | 18 |
| 1959 | 4,93 | 27,00 | 18 |
| 1960 | 3,73 | 24,84 | 15 |

**காப்பிருப்புப் பிரச்சினே**

பாங்கரை வந்தடையும் பல சிக்கலான பிரச்சினேகளில் காப்பிருப்பைப் பற்றிய சிக்கலும் ஒன்று. இங்கிலாந்திலுள்ள பாங்கர்கள் தமது மொத்தப் பொறுப்புக்களில் 8 விழுக்காட்டை ரொக்கமாகத் தம்மிடமும், இங்கிலாந்து பாங்கிடமும் வைத்திருக்கின்றனர். வாணிக பாங்கு ஒன்று எவ்வளவுக்கெவ்வளவு தனது நிதியைப் பயன்படுத்துகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதன் வருவாய் பெருகும்; அதே நேரம் தனது வாடிக்கைக்காரர்களின் தேவைகளே நிறைவேற்றும் அதன் வலிமை அது வைத்திருக்கும் ரொக்கக்காப்பிருப்பின் அளவைப் பெருமளவு பொறுத்துள்ளது. பாங்கு வைத்திருக்கும் காப்பிருப்பு தனது வாடிக்கைக்காரர்களின் தேவைகளேச் சமாளிக்கும் அளவு போதுமானதாகவும், அதே நேரம் தேவையற்ற அளவு மிகையானதாக இல்லாமலும் இருக்க வேண்டும் ; ஏனெனில், இன்றியமையாத அமிசமாகக் காப்பிருப்பு விளங்கியபோதிலும், அது பாங்கிடம் தூங்கிக்கொண்டிருக்கும் பலனளிக்காத, வருவாய் ஈட்டாக வெட்டிப் பணமாகும். எனவே, ஒன்றுக்கொன்று முரணுன இவ்விரண்டு கருத்துக்களேயும் சீர்தூக்கிப் பார்த்து, தக்கபடி செயலாற்றுதலே பாங்கு ஒன்றின் வெற்றிக்கும் முன்னேற்றத்திற்கும் சிறந்த வழிகோலும். தேவையற்ற அளவு மிகையானதாகவும், அபாயமான அளவு குறைவானதாகவும் இல்லாது, சரியான காப்பிருப்பின் அளவு எது என்பதை அறுதியிட்டுக் கூறும் விதிகள் எவற்றையும் நாம் வகுக்க முடியாது. இருப்பினும், அனுபவமும் பகுத்தறிவும் காட்டும் நெறியைப் பின்பற்றி பாங்கர் செயலாற்றலாம். பாங்கொன்றுக்குத் தேவைப்படும் ரொக்கம் காலத்துக்குக் காலம் மாறுவதோடு, பல வகைப்பட்ட வாடிக்கைக்காரர்களின் தேவைகளும் மாறிக்கொண்டே செல்வதால், எவ்வளவு காப்பிருப்பை அது வைத்திருக்க வேண்டும் என்று திட்டவட்டமான விதிகளே வகுத்தல் அரிது. இருப்பினும், பாங்கு சமாளிக்க வேண்டிய சில தேவைகளே ஓரளவு எதிர்பார்க்கலாம்.

**முன்னறியக்கூடிய (Foreseeable) தேவைகள் (கேட்புகள்)**

தவணே வைப்பு, செலுத்த வேண்டிய உண்டியல்கள் ஆகியவற்றின் குறிப்பேடுகளேயும் (diaries), நிதிப்புத்தகத்தையும் பாங்கர் துருவி ஆராய்வதன்மூலம் அவற்றினின்றும் எழும் தேவைகளேச் சமாளிக்க அதிகபட்சம் (பெருமம்) எவ்வளவு தொகை வேண்டும் என்பதை எளிதில் மதிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட வாரத்திலோ அல்லது மாதத்திலோ முதிர்வடையும் தவணே வைப்புக்களில் எவ்வளவு விழுக்காட்டை வாடிக்கைக்காரர்கள் திரும்ப எடுப்பர்

என்பதை உறுதியாக மதிப்பிட இயலாத நிலையில் பாங்கர் இருப்பார் என்பது உண்மையே; ஆயினும், பொது மக்கள் நம்பிக்கையை அவர் இழப்பதற்குத் தக்க காரணம் எதுவும் இல்லாதபொழுது, அவற்றில் பெரும்பான்மையானவை மறு தவணைக்குப் புதுப்பிக்கப்படும் (renewed) என்பதை அவர் எதிர்பார்க்கலாம். இதைப்பற்றிய அவரது ரொக்கத் தேவைகளை மதிப்பிடும்பொழுது, அவரது அனுபவம் அவருக்குத் தக்க வழி காட்டியாக அமைகிறது. அதே மதிப்பு நிலையிலுள்ள (status) பிற பாங்குகளோ அல்லது அரசாங்கமோ தாங்கள் திரட்டும் குறுந் தவணைக் கடன்களின் வட்டிவீதத்தை உயர்த்தும்பொழுது, அந்த பாங்கும் தனது வட்டி வீதத்தை உயர்த்திலன்றி, அதனுடைய தவணை வைப்புக்கள் குன்ற இடமிருக்கிறது. எடுத்துக்காட்டாக, வருமானவரி விலக்குடன் (free of income-tax), 6 விழுக்காடு வட்டியைக்கொண்ட அஞ்சலக ரொக்கப் பத்திரங்களை வெளியிட்டதன் விளைவாகப் பெருமளவு பணத்தை முதல் உலகப்போர் நிகழ்ந்தபொழுது அரசாங்கம் திரட்டியது; அவற்றை அரசாங்கம் வெளியிடாதிருந்தால், அந்தப் பணத்தில் குறைந்தது ஒரு பகுதியாவது பாங்குகளை அடைந்திருக்கும். அது போலவே உயர் வட்டியைத் தாங்கிய அஞ்சலகத் தேசீயச் சேமிப்புப் பத்திரங்கள், கருவூல உண்டியல்கள் (treasury bills) ஆகியவற்றை வெளியிட்டு, வழக்கமாக பாங்குகளில் இடப்படும் பொதுமக்கள் சேமிப்பை ஓரளவு அரசாங்கம் கவர்ந்தது. மேலும், ஏறத்தாழத் தவறாமல் எழக்கூடிய தேவைகளும் சில உள்ளன. உதாரணமாக, வேலையாள்களை நியமித்துள்ள தமது வாடிக்கைக்காரர்களுக்கு ஒவ்வொரு சனிக்கிழமையும் கூலி செலுத்தக் கொஞ்சம் பணம் தேவைப்படும் என்பதை இங்கிலாந்து நாட்டிலுள்ள ஒவ்வொரு பாங்கரும் அறிவர். அது போலவே, மாதம் ஒருமுறை சம்பளம், கூலி ஆகியவற்றைச் செலுத்தும் தமது வாடிக்கைக்காரர்கள் ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் அவற்றைச் செலுத்த எவ்வளவு பணத்தைத் தம்மிடமிருந்து எடுக்க எண்ணுவர் என்பதை இந்தியாவிலுள்ள பாங்குகளும் ஓரளவு சரியாக மதிப்பிட இயலும். இன்னும் சில தேவைகள் குறித்த காலங்களில் (periodical) எழும் தன்மை வாய்ந்தவை; அவற்றையும் சமாளிக்க பாங்கர்கள் ஆயத்தமாகவே இருக்கின்றனர். ஆகஸ்டு மாதத்தில் வரும் பாங்கு விடுமுறை நாள்களுக்கு முன்னும், டிசம்பர் மாதத்தில் வரும் கிறித்து பிறந்த நாள் விடுமுறைக்கு முன்னும் பெருந்தொகைகளைச் செலுத்த வேண்டிய தேவைகள் ஏற்படும் என்பதை இங்கிலாந்திலுள்ள பாங்கர் அறிவர். பம்பாய் நகரத்திலுள்ள வணிக மக்களின் புத்தாண்டு நாளும், இந்துக்களின் முக்கிய விழாவுமான தீபாவளிக்கு முன்பு பெருந்தொகைகளை வாடிக்கைக்காரர்களுக்குச்

செலுத்த வேண்டிய தேவை இந்தியாவின் சில பகுதிகளிலுள்ள பாங்கருக்கு எழுகிறது. பெருங்கணக்குகளை வைத்திருக்கும் வாடிக்கைக்காரர்கள் ஓர் இலட்ச ரூபாயுக்கும் அதிகமான தொகைகளைத் தங்கள் பாங்குகளிலிருந்து திரும்பி எடுக்க விரும்பினால், அதைப்பற்றி முன்னதாகவே தங்கள் பாங்குகளுக்கு அறிவிக்க வேண்டும் என்னும் ஏற்பாடும் சிலபொழுது செய்யப்படுகிறது.

## ரொக்கக்காப்பிருப்பை நிர்ணயிக்கும் முக்கியமான காரணிகள்

ரொக்கக்காப்பிருப்பைப் பாதிக்கும் சில தேவைகளை (கேட்புகளை) மேலே கண்டோம். இன்னும் சில தேவைகளும், அதைப் பாதிக்கக்கூடிய நிலைமையில் உள்ளன. அவற்றின் முக்கியமான சூழ்நிலைகள் பின் வருமாறு :

### வாடிக்கைக்காரர்களின் பழக்க வழக்கங்களும், அந்த இடத்தின் வியாபார நிலைமையும்

பாங்கொன்று வைத்திருக்க வேண்டிய காப்பிருப்பு, தமது வாடிக்கைக்காரர்களின் பழக்க வழக்கங்களையும், அது பணியாற்றுகின்ற இடத்தின் வியாபார நிலைமையையும் சார்ந்துள்ளது. எனவே, பொறிவழித்தொழில் மையங்களிலும், வணிகப்பெரு மையங்களிலும் செயலாற்றும் பாங்குகள் பெருங்காப்பிருப்பை வைத்திருக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. ஏனெனில், பரிவர்த்தனைகளும் (exchanges), பேரங்களும் அங்கு எண்ணிறந்தவையாக இருப்பதுடன், மிகவும் விரைவாகவும் நடைபெறும் ; ஆனால், பரிவர்த்தனைகள் குறைவாகவும் மெதுவாகவும் நடைபெறும் விவசாயச் சமுதாயத்தில் (agricultural community) பணியாற்றும் பாங்கு அதற்கேற்றவாறு குறைவான காப்பிருப்பைக்கொண்டிருந்தாலே போதுமானது. இக்காரணத்தால்தான் பல்வகைப்பட்ட மாநகரங்களுக்கும் நகரங்களுக்கும் தக்கவாறு, பாங்குகளுடைய காப்பிருப்பின் அளவும் மாறுபடுகிறது. இருப்பினும், இந்தியாவைப் போன்ற விவசாய நாடொன்றில், முறுக்குப்பட்டத்தில் (busy season) விவசாயத்திற்காகவும், விளைச்சலைப் பல இடங்களுக்குக் கொண்டு செல்வதற்காகவும் வேண்டப்படும் கடன் வசதிகள் பேரளவானவையானகையால் பிற காலங்களைக்காட்டிலும் அப்பொழுது பெருங்காப்பிருப்பை வைத்திருக்க வேண்டிய தேவை பாங்குகளுக்கு எழுகிறது.

### செக்குச் செலாவணியைப் பயன்படுத்தும் பழக்கம்

செக்கைப் பயன்படுத்தும் பழக்கம் மக்களிடையே நன்கு பரவியிருந்தால், பணத்தின் புழக்கமும் தேவையும் குறைவாகவே இருக்கும்; பாங்குகள் குறைந்த காப்பிருப்புகளைக்கொண்டிருந்தாலே போதுமானது. ஏனெனில், செக்குகளைச் செலுத்த மிகுதியான பணம் தேவைப்படுவதில்லை; பாங்குகள் ஒன்றுக்கொன்றின் கணக்குகளில் செய்துகொள்ளும் மாற்றுப் பதிவுகள் மூலமாகத்தான் செக்குகள் பெரும்பாலும் செலுத்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, திரு. ஆர். என். தேசாய் என்பவருக்குச் சாதகமாகச் செக்கொன்றைத் திரு. ஜி. டபிள்யூ கட்ரக் என்பவர் எழுதிக் கொடுத்து, அவ்விருவரும் ஒரே பாங்கின் வாடிக்கைக்காரர்களாக இருந்தால், திரு. கட்ரக் என்பவரின் செக்கைச் செலுத்த ரொக்கம் தேவைப்படுவதில்லை. இரு வெவ்வேறு பாங்குகளின் வாடிக்கைக் காரர்களாக அவர்கள் இருப்பினும், பெரும்பாலும் ரொக்கம் தேவைப்படுவதில்லை. ஏனெனில், செலுத்தும்-பாங்கு, அதன் ஏடுகளிலுள்ள வசூலிக்கும்-பாங்கின் கணக்கில் வரவிடுவதன் மூலமோ அல்லது தீர்வகப்பைசல் முறை மூலமோ அச்செக்கு செலுத்தப்படும்.

### பாங்கரின் தீர்வகம்

பாங்கொன்று தொழில் நடாத்தும் இடத்தில் பாங்கரின் தீர்வகம் இயங்குகிறதா இல்லையா என்பதும் அதன் காப்பிருப்பைப் பாதிக்கவல்ல முக்கியமானதொரு காரணியாகும். பாங்கரின் தீர்வகம் ஒன்று இயங்கி வரும் நகரத்தில் பணி புரியும் பாங்கர், தம்மீது எழுதப் பெற்றுப் பிற பாங்கர்கள் வைத்திருக்கும் செக்குகளனைத்தையும் செலுத்தத் தேவையான பணத்தை வைத்திருக்க வேண்டும் (அல்லது அதற்குத் தக்க ஏற்பாட்டைச் செய்ய வேண்டும்) என்கிற அவசியம் இல்லை. ஏனெனில்; அவற்றில் பெரும்பாலானவை தீர்வகத்தின் மூலமாகத் தீர்க்கப்படும்; அப்பொழுது, தம்மீது எழுதப்பெற்ற செக்குகளின் மொத்தத் தொகை, பிற பாங்குகளின்மீது எழுதப்பெற்று, தாம் வைத்துள்ள செக்குகளின் மொத்தத் தொகையைக்காட்டிலும் மிகுதியாக இருக்கும் பொழுது மட்டுமே அந்த மிகுதித் தொகையைச் செலுத்த வேண்டிய தேவை ஏற்படும். எனவே, பம்பாய் நகரத்திலுள்ள பாங்கொன்று, ஒரு குறிப்பிட்ட நாளில், ஐந்து இலட்சம் ரூபாய்களுக்கு எழுதப்பெற்ற செக்குகளை மதிக்க வேண்டிய நிலையில் உள்ளது என்று கொள்வோம். அந்நகரிலுள்ள பிற பாங்குகளின் மீது எழுதப்பெற்று அதனிடம் வசூலுக்காகத் தரப்பட்டுள்ள செக்குகளின்மீது நான்கு இலட்ச ரூபாய்களை அது பெற வேண்டும்

என்றும் கொள்வோம். மிகுதித் தொகையாகிய ஓர் இலட்ச ரூபாயை மட்டுமே செலுத்த அது ஏற்பாடு செய்ய வேண்டும்; காரணம் அந்நகரில் தீர்வகம் இயங்குகிறது; தீர்வு வசதிகளை அது அளிக்கிறது. அங்குத் தீர்வகம் இல்லாதிருந்தால், ஐந்து இலட்ச ரூபாய்களைச் செலுத்த வேண்டிய கட்டாயம் அதற்கு நேர்ந் திருக்கும். ஏனெனில், அதன்மீது எழுதப்பெற்ற செக்குகளைச் செலுத்த வேண்டிய அதே நேரத்தில் பிற பாங்குகளின்மீது எழுதப்பெற்று அதனிடம் தரப்பட்டுள்ள செக்குகளை அது வசூலிக்க இயலாது போகலாம்.

### கணக்குகளின் தன்மை

நடப்புக் கணக்குகளில் பெரும்பான்மையானவை ஏற்ற இறக்கத் (fluctuating) தன்மையை உடையனவாக இருக்குமாயின், அதிகமான ரொக்கக்காப்பிருப்பை வைத்திருக்க வேண்டிய அவ சியம் பாங்கருக்கு ஏற்படும். குறிப்பாக, பங்குத்தரகர், பருத்தி வணிகர், தங்கம், வெள்ளி வணிகர் ஆகியவர்களின் கணக்குகள் அடிக்கடி ஏறி இறங்கும் தன்மையைப் பெற்றிருக்கும். எனவே, பங்குகள், பருத்தி தங்கம் வெள்ளி ஆகிய பொருள்களின் விலைவாசி களில் வரும் ஏற்ற இறக்கங்கள் (நொடிப்புகள்) நிகழும்பொழுது, இந்த வணிகர்களில் பெரும்பான்மையினர் ஏறத்தாழத் தங்கள் கணக்கு இருப்பு முழுவதையும் ஒரே நேரத்தில் பாங்கிலிருந்து திரும்ப எடுக்கக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. இதைச் சமாளிக்கப் பெருமளவு ரொக்கக்காப்பிருப்பின் தேவை இன்றியமையாதது. அதுபோலவே நகரங்களில் பணியாற்றும் பாங்குகள், அவற்றிலும் குறிப்பாகப் பிற பாங்குகளின் வைப்பு, காப்பிருப்பு ஆகியவற் றைப் பெற்றுள்ள பாங்குகள், சிறிய நாட்டுப்புற பாங்குகளைக் காட்டிலும் கூடுதலான காப்பிருப்பை வைத்திருத்தல் மிகவும் அவசியம்.

### வைப்புக்களின் சராசரி அளவு

எண்ணிறந்த சிறு கணக்குகளை வைத்துள்ள பாங்கைக்காட் டிலும், சிறு எண்ணிக்கையுள்ள பெருங்கணக்குகளை வைத்துள்ள பாங்கு அதிகமான ரொக்கக்காப்பிருப்பை வைத்திருக்க வேண்டும். வாடிக்கைக்காரர்களின் எண்ணிக்கை பெருகப் பெருக ஒரே நேரத்தில் திட்டமிட்டாற்போல் அவர்கள் தங்கள் வைப்புக்களைத் திரும்ப எடுத்தலுக்கான வாய்ப்பு குறைந்து கொண்டே செல்வது கண்கூடு. எடுத்துக்காட்டாக, பருத்தி வணிகர்கள், பஞ்சாலைகள் ஆகியவற்றின் கணக்குகளை—எண் ணிக்கை சிறிது, ஆனால் இருப்புத்தொகை பெரிதான கணக்குகளை— வைத்துள்ள பாங்கு, பருத்திப்பருவத்தில் வாடிக்கைக்காரர்களின்

பெருந்தேவைகளைச் சமாளிக்க வேண்டிய நிலை ஏற்படும். எனவே, அதன் காப்பிருப்பு பெரியதாக இருந்தாலன்றி, இந்த பெருந்தேவையைச் சமாளிப்பதரிது.

**கடன்களின் தன்மையும், கழிவு நீக்கி வாங்கிய உண்டியல்களின் மதிப்பும்**

பாங்கொன்று வைத்திருக்க வேண்டிய காப்பிருப்பு, உண்டியல் களில் எவ்வளவு பணத்தை அது முதலீடு செய்திருக்கிறது என் பதையும் சார்ந்திருக்கிறது. இங்கிலாந்திலுள்ள பாங்குகள் செய் வது போலத் தனது உபரிநிதியில் பெரும்பங்கை நல்ல உண்டியல் களைக் கழிவு நீக்கி வாங்குவதற்கு அது பயன்படுத்தியிருந்தால், கடன்களிலேயே பெருமளவு நிதியை முதலீடு செய்துள்ள மற்ெருரு பாங்கைக்காட்டிலும், குறைவான ரொக்கக்காப்பிருப்பைக் கொண்டே தேவைகளை அது சமாளிக்க இயலும்; காரணம், தேவைப்படும்பொழுது அந்த உண்டியல்களை மைய பாங்குக்கு மறுகழிவு நீக்கி விற்பதன் (rediscounting) மூலம் அவற்றை அது எளிதில் ரொக்கமாக மாற்ற முடியும்.

**உள்ளூரிலுள்ள பிற பாங்குகள் வைத்திருக்கும் காப்பிருப்பின் அளவு**

பாங்கொன்று வைத்திருக்க வேண்டிய ரொக்கக் காப்பிருப் பின் அளவு, உள்ளூரிலுள்ள பிற பாங்குகளின் காப்பிருப்பின் அளவையும் பொறுத்திருக்கிறது. சில பாங்குகள் அதிகக் காப் பிருப்பை வைத்திருந்து, மக்களிடையே அதிகச் செல்வாக்கைப் பெற்ருல், அந்த ஊரிலுள்ள பிற பாங்குகளும், மக்களிடையே அதே அளவு தன்மதிப்பைப் (prestige) பெறும்பொருட்டும், போட்டியிடுகிற பிற பாங்குகளைக்காட்டிலும் தாம் எந்த விதத் திலும் இளைத்தவையல்ல (செயல்வன்மை குன்றியவையல்ல) என் பதைப் பறைசாற்றும்பொருட்டும், தங்கள் காப்பிருப்பு வீதத்தை உயர்த்திக்கொள்ள வேண்டும். ஒரு நாடு அதனுடைய தரைப் படை அல்லது கடற்படையைப் பெருக்கும்பொழுது, அதே மதிப்பு நிலையிலுள்ள பிற நாடுகளும் அவ்வாறே செய்து தங்களிடையே யுள்ள தாரதம்மிய வலிமை (relative strength), வலிமைச் சமன்பாடு (balance of power) ஆகியவற்றைக் காக்க முயல் வதற்கு ஒப்ப இது இருக்கிறது.

**அமெரிக்க ஐக்கிய நாட்டில் சட்டம் நிர்ணயிக்கும் குறைந்தபட்சக் காப் பிருப்பு**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் பின்வரும் குறைந்தபட்சக் (குறைமக்) காப்பிருப்பு வீதங்களைச் சட்டம் நிர்ணயித்திருக்கிறது.

இவை 1953ஆம் ஆண்டு ஜூலை 1ஆம்தேதியிலிருந்து நாட்டுப்புற பாங்குகளுக்கும், அதே ஆண்டு ஜூலை 9ஆந்தேதியிலிருந்து பிற பாங்குகளுக்கும் பொருந்துமாறு அமுலுக்கு வந்தன.

(1) மத்திய ரிசர்வ் நகர பாங்கு : நடப்பு (கேட்பு) வைப்பில் (demand deposit) 22 விழுக்காடும், தவணை (கால) வைப்பில் (time deposit) 6 விழுக்காடும்.

(2) ரிசர்வ் நகர பாங்குகள் : நடப்பு (கேட்பு) வைப்பில் 19 விழுக்காடும், தவணை வைப்பில் 6 விழுக்காடும்.

(3) நாட்டுப்புற பாங்குகள் : நடப்பு (கேட்பு) வைப்பில் 13 விழுக்காடும், தவணை வைப்பில் 3 விழுக்காடும் ஆகும்.

## இந்தியாவில் நிலைமை

இந்திய ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் பின் இணைக்கப்பட்டுள்ள இரண்டாம் அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ள பாங்கு ஒவ்வொன்றும், ரிசர்வு பாங்கிலுள்ள அதனுடைய கணக்கில் சராசரி நாளிருப்பாக வைத்துள்ள தொகை, அதனுடைய கேட்புப் பொறுப்புக்களில் 5 விழுக்காடும், தவணைப்பொறுப்புக்களில் 2 விழுக்காடும் சேர்ந்த தொகைக்குக் குறைவாக [1] இருக்கக்கூடாது என்று அச்சட்டத்தின் 42(1)ஆம் பிரிவு கூறுகிறது. இக்கணக்கைப் போடும்பொழுது எடுத்துக்கொள்ள வேண்டிய பொறுப்புக்கள் இந்தியாவிலுள்ளவையாக இருப்பதுடன், அவற்றின் மதிப்பும் இதே பிரிவிலுள்ள அடுத்தத் துணைப் பிரிவின்கீழ் அது சமர்ப்பிக்க

1 மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு :

அட்டவணையிலிட்ட பாங்குகள் ரிசர்வு பாங்கிடம் வைக்க வேண்டிய ரொக்கக் காப்பிருப்பைப் பொறுத்தவரை, அவைகளின் கேட்புப் பொறுப்புக்களுக்கும் காலப் பொறுப்புக்களுக்கும் உள்ள வேறுபாடு 1962ஆம் ஆண்டுச் செப்டெம்பர் மாதத்திலிருந்து நீக்கப்பட்டது. அப்பொழுதிலிருந்து அவை தங்கள் மொத்தப் பொறுப்புக்களில் (கேட்புப்பொறுப்பும் காலப்பொறுப்பும் சேர்ந்த மொத்தத் தொகை) 3 விழுக்காட்டை ரிசர்வு பாங்கிலுள்ள தத்தம் கணக்கில் காப்பிருப்பாக வைக்க வேண்டும். பாங்குகளின் ரொக்கக்காப்பிருப்பை உயர்த்தவோ தாழ்த்தவோ தனக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரத்தையொட்டி, ரிசர்வு பாங்கு இந்தக் குறுமக்காப்பிருப்பை (minimum reserve) 15 விழுக்காடுவரை எல்லா பாங்குகளுக்கும் பொருந்துமாறோ அல்லது ஒரு சில அல்லது தனிப்பட்ட பாங்கொன்றுக்குப் பொருந்துமாறோ உயர்த்தலாம்.

வேண்டிய அறிக்கையில் காட்டப்படும் மதிப்பும் ஒன்றுகவே இருக்க வேண்டும். மேலும், இந்திய அரசாங்கச் செய்தி ஏட்டில் தக்க அறிக்கையை வெளியிட்டு, அதில் கூறியுள்ளவாறு இந்த விழுக்காட்டை அவ்வப்பொழுது உயர்த்தும் அதிகாரமும் ரிசர்வு பாங்குக்கு வழங்கப்பட்டுள்ளது. இருப்பினும், கேட்புப் பொறுப்புக்களில் 20 விழுக்காடு, தவணைப் பொறுப்புக்களில் 8 விழுக்காட்டுக்குமேல் உயர்த்தக் கூடாதவாறு அந்த அதிகாரத்திற்கு உச்சவரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது.

இந்திய அரசாங்கச் செய்தி ஏட்டில் 1960ஆம் ஆண்டு மார்ச்சு 11ஆம்தேதி தக்க அறிக்கையை வெளியிட்டு, கூடுதல் காப்பிருப்புத் தேவைகளைப் பற்றிய தனது அதிகாரத்தை முதன் முதலாக ரிசர்வு பாங்கு பயன்படுத்தியது. அதன்படி, அட்டவணையிலிட்ட பாங்குகளனைத்தும் ரிசர்வு பாங்கிடம் குறுமக்காப்பிருப்பை (minimum reserve) [அதாவது கேட்புப் (நடப்புப்) பொறுப்பில் 5 விழுக்காடும், காலப் (தவணைப்) பொறுப்பில் 2 விழுக்காடுமான தொகை] மட்டுமின்றிக் கூடுதல் காப்பிருப்பையும் (additional reserve) அத்தேதியிலிருந்து வைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. 1960ஆம் ஆண்டு மார்ச்சு 11ஆம் தேதிக்குப் பிறகு அவை திரட்டும் வேட்புப்பொறுப்புக்கள், காலப் பொறுப்புக்கள் ஆகியவை சேர்ந்த மொத்தத் தொகையில் 25 விழுக்காட்டைக் கூடுதல் காப்பிருப்பாக வைக்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டது. 1960ஆம் ஆண்டு மே மாதம் 6ஆம்தேதி மற்றோர் அறிக்கையை ரிசர்வு பாங்கு வெளியிட்டு, தன்னிடம் அட்டவணையிலிட்ட பாங்குகள் வைத்திருக்க வேண்டிய கூடுதல் காப்பிருப்பு வைப்பின் (additional reserve deposit) அளவை, அந்தத் தேதியிலிருந்து அவைகளின் வைப்புப் பொறுப்புக்கள் (deposit liabilities)-அதாவது வேட்புப்பொறுப்பு, காலப்பொறுப்பு ஆகிய இரண்டின் கூட்டு—எவ்வளவு உயருகிறதோ, அதில் 50% ஆக உயர்த்தியது. பாங்குகள் திரட்டும் புதிய வைப்புக்களில் சரி பாதியை அவை ரிசர்வ் பாங்கிடம் வைக்க நேருவதால், அவைகளுக்கு மிக்க இழப்பு வந்து சேரும் என்பதை ரிசர்வு பாங்கு உணராமலில்லை. எனவே, இந்த இழப்பை ஈடு செய்யும்பொருட்டு, அந்தந்தக் காலாண்டுப்பகுதியில் ஒவ்வொரு பாங்கும் தனது மொத்த வைப்புக்களின்மீது சராசரி எந்த வீதத்தில் வட்டி செலுத்துகிறதோ, அதற்குச் சமமான வீதத்தில் இக்கூடுதல் காப்பிருப்பு வைப்புக்களின்மீது வட்டி செலுத்த ரிசர்வு பாங்கு இசைந்தது. ஆயினும், இவ்வாறு செலுத்தவிருக்கும் வட்டியின் உச்ச வரம்பாக மைய பாங்கு வீதத்தை (bank rate) அது ஏற்றுக் கொண்டது. கூடுதல் காப்பிருப்பு வைப்புக்களின்மீது செலுத்தும்

வட்டி வீதத்தை 1960ஆம் ஆண்டு ஜூன் 29ம்தேதி ½%ஆக உயர்த்தியதுடன் 4½%ஐ அதற்கு உச்சவரம்பாகவும் விதித்தது. ஏறத்தாழ 1958ஆம் ஆண்டின் நடுவில் இங்கிலாந்து நாடு கடன் ஒடுக்குக் கைக்கோளைக் (credit squeeze policy) கைவிட்டபொழுது அங்குள்ள பாங்குகளின் ரொக்கத்தன்மை வாய்ந்த செல்வ வளங்களைக் (liquid resources) குறைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. எனவே, சிறப்பு வைப்புக்களைத் (special deposits) தன்னிடம் வைக்குமாறு அந்நாட்டிலுள்ள பாங்குகளைக் கேட்கும் அதிகாரத்தை இங்கிலாந்து பாங்கு வழங்கப்பெற்றது. பிரிட்டிஷ் பொருளாதாரத்தின் பணவீக்க நிலையைக் குறைக்கும் முகத்தான், லண்டன் தீர்வு பாங்குகளின் மொத்த வைப்புக்களில் ஒரு விழுக்காட்டைத் தன்னிடம் ஜூன் 15ஆந்தேதியன்றோ அதற்கு முன்போ வைக்குமாறு, கருவூல வேந்தரின் உடன்பாட்டுடன், இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு அவற்றை வேண்டியது; அதை விடுவிக்கும்வரை அப்பணத்தை அவை பயன்படுத்த முடியாது என்றும் கட்டுப்பாடு விதித்தது.

கடன் ஒழுக்க நடவடிக்கைகளை இணக்கமான பாணியில் இயக்குவது என்ற தனது நோக்கத்திற்கு ஏற்ப, வைப்புப் பொறுப்புக்களின் அதிகரிப்பை மேலும் அடைத்து வைப்பது (impounding) பற்றிய தன்னுடைய கட்டளையை 1960ஆம் ஆண்டு நவம்பர் 11ஆந்தேதியிலிருந்து ரிசர்வு பாங்கு விலக்கி வைத்ததுடன், அந்த ஆண்டு மார்ச்சு 11, நவம்பர் 11 ஆகிய தேதிகளுக்கிடையே ஏற்பட்ட அதிகரிப்பில் 25%ஆகக் கூடுதல் காப்பிருப்புத் தொகையின் அளவை மாற்றியமைத்து (refixed), ஏற்கெனவே எச்சமாக அடைத்து வைக்கப்பட்ட காப்பிருப்பின் பாதித் தொகையாகிய 13 கோடி ரூபாய்களை (ரிசர்வு பாங்கு) விடுவித்தது. இதையடுத்து, 1961ஆம் ஆண்டு ஜனவரி 13ஆந்தேதியிலிருந்து கூடுதல் காப்பிருப்புத் தேவையை முற்றிலும் இரத்துசெய்து, காப்பிருப்பின் இரண்டாவது பாதியாகிய அடுத்த 13 கோடி ரூபாய்களை ரிசர்வு பாங்கு விடுவித்தது.

அவ்வப்போது திருத்தியமைக்கப்பட்ட 1934ஆம் ஆண்டு இந்திய ரிசர்வு பாங்குச் சட்டத்தின் 42 (2)ஆம் பிரிவு கூறுவதாவது :

> அட்டவணையிலிட்ட பாங்கு ஒவ்வொன்றும், தமது பொறுப்பு வாய்ந்த இரண்டு அலுவலர்களின் கையொப்பத்தையும், பின்வரும் விவரங்களையும் தாங்கிய அறிக்கையை பாங்குக்கு (ரிசர்வு பாங்குக்கு) அனுப்ப வேண்டும் ;

(அ) அதனுடைய கேட்பு, தவணை ஆகிய பொறுப்புக்களின் தொகையும், இந்தியாவின் ஸ்டேட் பாங்கு, இது சம்பந்தமாக மத்திய அரசாங்கம் குறிப்பிடும் வேறெந்த பாங்கு ஆகியவை நீங்கலாக, இந்தியாவிலுள்ள பிற பாங்குகளிடமிருந்து அது கடனாக வாங்கிய தொகையும்,

(ஆ) இந்தியாவில் அது வைத்துள்ள சட்டச் செலாவணி நோட்டுக்கள், நாணயங்கள் ஆகியவற்றின் மொத்த மதிப்பு,

(இ) ரிசர்வு பாங்கில் அது வைத்துள்ள இருப்புத்தொகை,

(ஈ) இந்தியாவிலுள்ள பிற பாங்குகளில் நடப்புக் கணக்கிலும், கைமாற்று நாள்தவணைக் கடன்களாகவும் (money at call and short notice) அது வைத்துள்ள தொகை,

(உ) கருவூல உண்டியல்கள், கருவூல வைப்பு இரசீதுகள் உட்பட மத்திய, மாகாண அரசாங்கங்களின் ஈடுகளில் முதலீடு செய்த (ஏட்டு மதிப்பு) தொகை,

(ஊ) இந்தியாவில் கொடுத்த கடன்,

(எ) ஒவ்வொரு வெள்ளிக்கிழமையின் இறுதிவரை இந்தியாவில் வாங்கிய, கழிவு நீக்கி வாங்கிய உள்நாட்டு உண்டியல்களின் மொத்த மதிப்பு ஆகியவை இந்த அறிக்கை ஒவ்வொன்றையும் அது சாரும் தேதியிலிருந்து ஐந்து நாள்கள் கழியுமுன் அனுப்ப வேண்டும்.

**அட்டவணையிலிடாத கூட்டுப் பங்கு பாங்குகளின் ரொக்கக் காப்பிருப்பு**

1913ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனிச் சட்டத்தின் 227 எல் என்னும் பிரிவை விலக்கிய 1949ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 18ஆம் பிரிவு, 1934ஆம் ஆண்டு இந்திய ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் இரண்டாவது அட்டவணையிலிடாத பாங்குக் கம்பெனி ஒவ்வொன்றின்மீதும் ரொக்கக்காப்பிருப்பை வைத்திருக்க வேண்டிய கடமையைச் சுமத்துகிறது. அந்த பாங்குகள் ஒவ்வொன்றும் இந்தியாவிலுள்ள தமது தவணைப் (காலப்) பொறுப்புக்களில் 2 விழுக்காட்டையும், நடப்புப் (கேட்புப்) பொறுப்புக்களில் 5 விழுக்காட்டையும் குறைந்தபட்ச ரொக்கக் காப்பிருப்பாகத்[1] தம்மிடமோ அல்லது ரிசர்வ் பாங்கு, இந்திய

[1] மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு :

1962ஆம் ஆண்டுச் செப்டெம்பர் மாதத்திலிருந்து அட்டவணையிலிடாத பாங்குகள் வைத்திருக்க வேண்டிய குறும ரொக்கக்காப்பிருப்பை அவற்றின் வேட்புப்பொறுப்புக்களில் 5 விழுக்காடாகவும், காலப்பொறுப்புக்களில் 2 விழுக்காடாகவும் கணக்கிடாது, அவற்றின் மொத்தப் பொறுப்புக்களில் 3 விழுக்காடாகக் கணக்கிட வேண்டும்.

ஸ்டேட் பாங்கு அல்லது குறிப்பிட்ட பிற பாங்கு ஒன்றில் துவக்கப் பட்ட நடப்புக்கணக்கிலோ அல்லது அதில் ஒரு பகுதியைத் தம்மி டமும், மீதியை அக்கணக்கிலும் வைத்திருக்க வேண்டும். மேலும், ஒவ்வொரு மாதமும் 15ஆம் தேதிக்கு முன்பு இந்த பாங்குக் கம்பெனிகள் அறிக்கை ஒன்றை ரிசர்வு பாங்கிடம் சேர்ப்பிக்க வேண்டிய கடமையையும் இப்பிரிவு அவற்றின்மீது விதிக்கிறது. அறிக்கை அனுப்பும் மாதத்திற்கு முந்தைய மாதத்தின் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்றும் அவை வைத்திருந்த ரொக்கக் காப்பிருப்பு எவ்வளவு, அவற்றின் தவணைப்பொறுப்புக்கள் நடப்புப்பொறுப்புக்கள் ஆகியவை எவ்வளவு என்று அதில் அந்த பாங்குகள் காட்ட வேண்டும். இவையனைத்தையும் இரண்டாம் அத்தியாயத்தில் முன்பே விளக்கியுள்ளோம்.

ரொக்கத்தன்மை வீதம்

பாங்குக் கம்பெனி ஒவ்வொன்றும் இந்தியாவிலுள்ள தனது நடப்பு, தவணை ஆகிய மொத்தப் பொறுப்புக்களில் 20 விழுக் காட்டுக்கு எந்த நாள் இறுதியிலும் குறைவாக இல்லாத அவ்வளவு ரொக்கம், தங்கம், வில்லங்கமற்ற அங்கீகரிக்கப்பெற்ற ஈடுகள் (unencumbered approved securities) ஆகியவற்றை இந்தியாவில் வைத்திருக்க வேண்டும் என்றும், இந்த உடைமைகளை அவற்றின் நடப்பு அங்காடி விலைகளுக்கும் மீறாமல் மதிப்பிட வேண்டும் என்றும் 1949ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 24ஆம் பிரிவு வேண்டுகிறது.

## நிதிகளை இலாபகரமாகப் பயன்படுத்துதல்

இந்திய பாங்கர்கள் தங்கள் நிதிகளை இலாபகரமாகப் பயன் படுத்தும் வழிகளைக் கீழ்வருமாறு பாகுபடுத்தலாம் :

(1) விளிக்கடன்களும் (call loans), நாள் தவணைக் கடன்களும் கொடுத்தல்.

(2) அரசாங்க ஈடுகளிலும், பிற பங்குமாற்று நிலைய ஈடுகளிலும் முதலீடு செய்தல்.

(3) கடன் வகையறுக்கள் தருதல்.

(4) உண்டியல்களை விலைக்கு வாங்குதலும், கழிவுநீக்கி வாங்கு தலும் ஆகும்.

### விளிக் கடன்களும் நாள் தவணைக் கடன்களும்

விளிக்கடன்களும் நாள் தவணைக் கடன்களும், பணச்சந்தைக்கு (money-market), உண்டியல்தரகர்களுக்கு, கழிவகங்களுக்கு, ஓரளவு பங்குமாற்று நிலைய உறுப்பினர்களுக்குக் 'கணக்கிலிருந்து கணக்குக்கு (from account to account) பாங்குகள் கொடுக்கும் கடன்களையே பெரும்பாலும் குறிக்கின்றன. அறிவிப்பு இன்றித் திருப்பி எடுக்கப்படும் வைப்புக்களை ஒவ்வொரு பாங்கும் கொண்டு இருப்பதாலும், இவற்றினின்றும் எழும் தேவைகளைச் சமாளிக்கத் தன்னிடமுள்ள ரொக்கமும், மைய பாங்கில் தான் வைத்துள்ள ரொக்கமும் போதுமானதாக இல்லாமலிருக்கக் கூடுமாகையாலும், விளிக் கடன், நாள் தவணைக் கடன் என்று தான் அளித்த கடன்கள் தனது இரண்டாம் அணிப்பாதுகாப்பாக (second line of defence) அமைய வல்லன. பணச்சந்தைக்குக் கொடுக்கும் கடன் வட்டியை ஈட்ட வல்லது. ஆனால், பாங்கிடமே உள்ள பணமோ அல்லது மைய பாங்கில் அது வைத்துள்ள பணமோ வருவாயற்றது ; எனவே, முன்னணிப் பாதுகாப்பைவிட இது மிக்க நற்பயனை அளிக்க வல்லது. உலகின் தலைமையான பணச்சந்தைகளில் விளிக்கடன் வீதங்கள் (call money rates) மைய பாங்கின் கழிவு வீதத்தைக் காட்டிலும் வெகுவாகக் குறைவானவை. குறைந்தபட்சம் இருபத்து நான்குமணி நேரத்திற்குப் பயன்படுத்த வல்ல தமது உபரி நிதியின்மீது பாங்குகள் விதிக்கும் வட்டி வீதத்திற்கு விளிக் கடன் வீதம் என்று பெயர். திட்டமிட்டு அமைக்கப்பட்ட பணச் சந்தை இந்தியாவில் இல்லாத காரணத்தால், தளர்ச்சிப்பட்டத்தில் (slack season) குறிப்பாகக் கருவூல உண்டியல்கள் கிடைப்பதரிதாக இருந்த தறுவாய்களில், விளிக்கடன்கள் வாங்குவோரற்று நலிவுற்றிருந்தன. எனவே, இந்தியாவில் விளிக்கடனும் நாள் தவணைக் கடனும் அதிகமாக முக்கியத்துவமும் வளர்ச்சியும் பெறவில்லை. இருப்பினும், அண்மைக் காலத்தில், கடன் தேவைகள் ஒரு பக்கம் பெருகிக்கொண்டே போவதும், மறுபக்கம் மைய பாங்கு தனது கடன் கட்டுப்பாட்டு நடவடிக்கைகளை இறுக்கிக்கொண்டே போவதும் குறுங்காலப் பண அங்காடியில் நெருக்கடி நிலையை உண்டாக்கியுள்ளன. எனவே, 1960ஆம் ஆண்டு முழுவதும் பம்பாயிலுள்ள பெரிய பாங்குகளின் விளிக்கடன் வீதம் ஏறத்தாழ $3\frac{1}{2}$ விழுக்காடாகவும், 1961ஆம் ஆண்டின் முதலாவது காலாண்டுப்பகுதி முழுவதும் அது $5\frac{1}{4}$ விழுக்காடாகவும் உயர்ந்திருந்தது.

1960ஆம் ஆண்டு டிசம்பர் 14ஆம் தேதியன்று இங்கிலாந்திலிருந்த முக்கியமான பாங்குகளின் வைப்புக்களுக்கும் விளி, நாள் தவணைக் கடன்களுக்கும் இருந்த வீதங்கள் பின் வருமாறு ;

திபர்க்லே(ய்)ஸ் பாங்கு 11·6% திநேஷனல் ப்ரொவின்ஷியல் பாங்கு 5·7%
தி லாயிட்ஸ் பாங்கு 6·5% தி வெஸ்ட்மினிஸ்டர் பாங்கு 6·6%
தி மிட்லேண்டு பாங்கு 8·2% க்ளின் மில்ஸ் கம்பெனி 15%
ஆனால், இந்திய அட்டவணையிலிட்ட பாங்குகளின் இந்த வீதம் 1960ஆம் ஆண்டுச் சராசரியாக 1·6% ஆகும். இது மிகவும் குறைவான வீதம் என்பது வெளிப்படை.

## முதலீடுகள்

245, 246ஆம் பக்கங்களிலுள்ள அட்டவணைகள் காட்டுகிறபடி பாங்கர்கள் தங்கள் நிதிகளில் கணிசமான விழுக்காட்டைச் சிறப்பீடுகளிலும் (gilt-edged securities), பிற பங்குமாற்று நிலைய ஈடுகளிலும் முதலீடு செய்கின்றனர். கடன் தேவைகள், கடனளிப்பு வசதிகள், நிதிகளைப் பயன்படுத்த மாற்று உபாயங்கள், ஆதாயத்தின் நிலைமை (yield pattern) ஆகியவற்றிற்கேற்ப வைப்பு-முதலீட்டு வீதம் காலத்துக்குக் காலம் மாறுபட்டிருக்கிறது. 1960ஆம் ஆண்டு டிசம்பர் மாத இறுதியில் இந்திய அட்டவணையிலிட்ட பாங்குகளின் வைப்புக்களில் 41·2விழுக்காடு முதலீடாக அமைந்தது (1959ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில் இந்த வீதம் 52 விழுக்காடாகும்). மொத்த முதலீடாகிய 652·82 கோடி ரூபாய்களில் 468·1 கோடி ரூபாய்கள் மத்தியஅரசாங்க ஈடுகளிலும், 122.21 கோடி ரூபாய்கள் மாகாண அரசாங்க ஈடுகளிலும், 62.51 கோடி ரூபாய்கள் பிற ஈடுகளிலும் முதலீடு செய்யப்பட்டன.

அண்மைக் காலம் வரை பாங்குகளின் முதலீட்டு விகிதங்கள் உயர்ந்திருந்தமைக்கு முக்கியமான காரணம், அரசாங்கங்கள் திரட்டிய கடன்களில் அவை பெரும் பங்கு எடுத்ததேயாகும். அண்மை ஆண்டுகளில் பல நாடுகளில் அரசாங்கக் கடன்கள் வெகுவாகப் பெருகியுள்ளன என்று சுட்டிக் காட்டுதல் பொருத்தமுடைத்து. இப்போக்குக்குத் தொழில், வாணிகம் ஆகிய துறைகளில் பணத்தேவை சுருங்கியது ஓரளவு பொறுப்பாக இருப்பினும், முக்கியமான காரணம், பாதுகாப்புச் செலவின் பெருக்கம், பொருளாதார முன்னேற்றத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பு ஆகியவற்றின் விளைவாக அரசாங்கங்களின் பணத்தேவை பன்மடங்கு வளர்ந்ததும், பாங்குகள் பெருமளவு கடனையளித்துத் தமது அரசாங்கங்களை ஆதரிக்க வேண்டிய நிலைமையுமேயாகும். கடந்த இரண்டாண்டுகளில் தொழில் துறையின் கடன் தேவைகள் வெகுவாக அதிகரித்திருப்பதாலும், அரசாங்க ஈடுகளின் விலைகள் குறைந்திருப்பதாலும் இந்தப்போக்கு மாறியிருக்கிறது.

## இந்தியாவிலுள்ள பெரிய ஐந்து பாங்குகளுடைய முதலீட்டின் விழுக்காடு

| ஆண்டு | தி அலகாபாத்து பாங்கு | | | தி பாங்கு ஆஃப் பரோடா | | | தி பாங்கு ஆஃப் இந்தியா | | | தி பஞ்சாப் நேஷனல் பாங்கு | | | தி சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % |
| | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | |
| 1935 | 9,95,49 | 4,61,94 | 46.4 | 5,82,55 | 3,25,99 | 56.0 | 16,16,51 | 7,97,59 | 49.3 | 5,47,88 | 3,43,10 | 62.6 | 27,97,02 | 13,60,03 | 48.6 |
| 1936 | 10,66,69 | 3,42,95 | 32.2 | 7,00,10 | 3,59,64 | 51.4 | 17,02,95 | 7,61,48 | 44.7 | 6,09,89 | 1,88,48 | 30.9 | 31,93,00 | 14,59,02 | 45.7 |
| 1937 | 10,97,50 | 4,21,15 | 38.4 | 6,84,04 | 3,12,13 | 45.6 | 17,13,71 | 6,93,09 | 40.4 | 6,96,47 | 2,01,98 | 29.0 | 30,68,38 | 13,20,72 | 43.0 |
| 1938 | 11,16,17 | 4,67,66 | 41.0 | 7,17,45 | 3,34,70 | 46.7 | 17,25,22 | 8,23,58 | 47.7 | 6,82,98 | 1,86,09 | 27.2 | 31,03,01 | 15,56,65 | 50.2 |
| 1939 | 11,89,79 | 3,36,56 | 28.3 | 6,99,14 | 3,04,23 | 43.5 | 18,59,51 | 7,05,90 | 38.0 | 7,15,05 | 1,60,65 | 23.9 | 29,86,82 | 13,08,21 | 43.8 |
| 1940 | 12,37,85 | 4,87,58 | 39.4 | 7,48,49 | 3,46,13 | 46.2 | 22,27,61 | 10,73,35 | 48.2 | 8,02,97 | 3,38,90 | 42.2 | 32,49,88 | 13,37,15 | 41.1 |
| 1941 | 12,97,64 | 5,83,84 | 45.0 | 9,60,01 | 4,04,39 | 42.1 | 25,86,03 | 11,61,74 | 44.9 | 9,80,30 | 4,98,16 | 50.8 | 41,31,90 | 20,94,66 | 50.7 |
| 1942 | 16,84,43 | 8,72,13 | 51.8 | 13,26,72 | 7,68,73 | 57.9 | 36,82,34 | 20,33,74 | 55.2 | 15,46,33 | 9,51,56 | 61.5 | 59,65,34 | 36,58,67 | 61.3 |
| 1943 | 20,87,60 | 10,68,15 | 51.2 | 20,73,95 | 12,12,44 | 58.5 | 55,13,88 | 31,40,22 | 57.0 | 26,43,16 | 13,64,79 | 51.6 | 81,63,71 | 45,17,34 | 55.3 |
| 1944 | 22,93,88 | 10,43,01 | 45.5 | 26,47,94 | 16,39,08 | 61.9 | 60,82,72 | 41,84,90 | 68.8 | 37,75,81 | 22,47,20 | 59.5 | 94,48,67 | 57,10,11 | 64.0 |
| 1945 | 28,74,90 | 11,93,69 | 41.5 | 29,67,95 | 15,38,30 | 51.8 | 59,01,54 | 33,10,35 | 56.1 | 51,52,46 | 33,75,11 | 65.5 | 1,05,23,41 | 64,73,97 | 61.5 |
| 1946 | 26,33,98 | 10,28,77 | 39.1 | 32,69,23 | 14,14,58 | 43.3 | 64,40,37 | 31,57,66 | 49.0 | 62,02,30 | 35,18,19 | 56.7 | 1,13,52,22 | 54,50,90 | 48.0 |

இந்தியாவிலுள்ள பெரிய ஐந்து பாங்குகளுடைய முதலீட்டின் விழுக்காடு (தொடர்ச்சி)

| ஆண்டு | தி அலகாபாத்து பாங்கு | | | தி பாங்கு ஆஃப் பரோடா | | | தி பாங்கு ஆஃப் இந்தியா | | | தி பஞ்சாப் நேஷனல் பாங்கு | | | தி சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % | வைப்பு | முதலீடு | % |
| | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | |
| 1947 | 29,38,02 | 13,04,14 | 44.4 | 32,80,79 | 15,99,67 | 48.8 | 68,63,36 | 32,53,68 | 47.4 | 59,64,00 | 31,47,22 | 52.8 | 1,23,15,37 | 60,69,48 | 49.3 |
| 1948 | 28,16,99 | 11,80,44 | 41.9 | 35,22,39 | 16,53,90 | 47.0 | 66,29,09 | 35,49,72 | 53.5 | 55,02,83 | 18,97,09 | 34.5 | 1,32,24,45 | 67,43,55 | 51.0 |
| 1949 | 28,49,61 | 13,86,36 | 48.7 | 30,83,61 | 13,85,84 | 44.9 | 59,37,98 | 27,55,85 | 46.4 | 42,94,58 | 23,04,73 | 53.7 | 1,21,73,38 | 63,86,35 | 52.5 |
| 1950 | 27,08,77 | 10,52,64 | 38.9 | 31,84,01 | 14,04,12 | 44.1 | 59,50,44 | 19,43,17 | 32.7 | 44,19,93 | 21,57,84 | 48.8 | 1,26,80,74 | 68,93,71 | 54.4 |
| 1951 | 28,11,21 | 9,04,09 | 32.2 | 31,32,15 | 11,12,82 | 35.5 | 55,62,78 | 15,65,48 | 28.1 | 51,94,34 | 26,65,04 | 51.3 | 1,23,86,05 | 64,40,41 | 52.0 |
| 1952 | 26,44,13 | 11,25,87 | 42.6 | 29,17,12 | 11,03,10 | 37.8 | 53,76,63 | 19,71,13 | 36.7 | 58,94,02 | 29,24,91 | 49.6 | 1,22,11,97 | 62,43,48 | 51.1 |
| 1954 | 33,01,59 | 12,07,21 | 36.5 | 34,85,38 | 11,83,72 | 33.9 | 60,38,16 | 19,86,78 | 32.9 | 75,63,84 | 35,37,50 | 46.7 | 1,23,97,06 | 57,33,53 | 46.2 |
| 1955 | 35,90,96 | 12,58,53 | 35.0 | 40,51,62 | 12,29,79 | 30.3 | 67,55,37 | 20,50,26 | 30.3 | 90,12,26 | 45,64,58 | 50.6 | 1,28,66,32 | 56,71,96 | 44.0 |
| 1956 | 33,82,89 | 12,71,16 | 37.5 | 45,13,84 | 11,80,33 | 26.1 | 66,05,64 | 18,52,88 | 28.0 | 1,05,56,75 | 48,35,10 | 45.8 | 1,36,23,76 | 53,07,98 | 38.9 |
| 1958 | 43,29,46 | 14,66,72 | 33.9 | 67,10,39 | 26,72,75 | 39.8 | 84,76,04 | 24,49,90 | 28.9 | 1,28,29,18 | 64,09,04 | 49.6 | 1,59,09,96 | 53,02,51 | 33.3 |
| 1959 | 48,91,75 | 20,12,85 | 41.1 | 80,90,60 | 30,92,10 | 38.2 | 98,02,81 | 29,81,88 | 30.4 | 1,39,86,40 | 66,76,94 | 47.7 | 1,77,26,90 | 55,01,98 | 31.0 |
| 1960 | 50,79,67 | 17,08,62 | 33.6 | 84,95,87 | 23,13,27 | 27.2 | 1,06,32,90 | 20,37,17 | 19.1 | 1,38,13,74 | 45,80,34 | 32.5 | 1,95,62,17 | 56,70,05 | 29.0 |

## பங்கு மாற்று நிலைய ஈடுகளின் சாதகமான அமிசங்கள்

பங்கு மாற்று நிலைய ஈடுகளின் கீழ்க்காணும் அமிசங்கள் நிதிகளை அவற்றைக் கொள்முதல் செய்வதில் முதலீடு செய்யச் சாதகமாக உள்ளன:

(1) மூன்றும் அணிப்பாதுகாப்பாக அவை அமைகின்றன. வாடிக்கைக்காரர்களின் எதிர்பாரா எடுப்புத் தேவைகளைச் சமாளிக்க பாங்கர்களிடமுள்ள ரொக்கக் காப்பிருப்பு போதாமற்போகும்பொழுது, இந்த ஈடுகளை ரொக்கமாக்கலாம் ; அவற்றின் பிணையமாக நியாயமான வட்டிக்குக் கடனும் பெறலாம்.

(2) முதலீடு செய்த மூலதனத்தின்மீது சீரான, நியாயமான வருவாயை அவை அளிக்கின்றன.

(3) பாங்கொன்றின் இருப்புநிலைக் குறிப்பில் அவற்றின் தோற்றம் அந்த பாங்கின்மீது பொதுமக்களுக்கு நம்பிக்கையை ஊட்டி அதை வலுப்படுத்தவும் செய்கிறது.

## ஈடுகளைத் தராதரப்படுத்துதல் (Rating of Securities)

நாணயத்தைத் தராதரப்படுத்தும் வழக்கம் சென்ற நூற்றூண்டிலேயே தோன்றிற்று எனினும், ஈடுகளைத் தராதரப்படுத்தும் முறை அண்மையில்தான் எழுந்து, வளர்ச்சியுற்றது. ஈடுகளைத் தராதரப்படுத்தும் பணி கடினமானதுதான்; ஆயினும், செயற்கரிய பணியல்ல. இருபதாம் நூற்றூண்டின் முதற்பத்தாண்டின் இறுதியில்தான் அமெரிக்க ஐக்கிய நாட்டில் இந்த முயற்சி முதன் முதலாக மேற்கொள்ளப்பட்டது. ஒவ்வோர் ஈட்டுக்கும் அது பெற்றிருக்கும் பண்புகளுக்கேற்ப, அறுதியான தரநிலை (rank) தரப்படுகிறது. எனவே, விரும்பும் பண்புகளுக்கேற்பத் தராதரப்படுத்தும் முறையும் மாறுபடுகிறது. மிகச் சிறந்த முதலீடு, ஒன்பது பண்புகளைப் பெற்றிருக்க வேண்டும் என்று 'பிணையப்பத்திர முதலீட்டின் கோட்பாடுகள்' (Principles of Bond Investment) என்னும் நூலாசிரியரான லாரென்ஸ் சேம்பர்லின் என்பவர் கருதுகிறூர். மூலதனத்தின் பாதுகாப்பு, சீரான வருமானம் ஆகிய இரண்டும் அவற்றில் மிக முக்கியமான பண்புகளாகும். எளிதாக விற்பனையாகும் தன்மை, சுமையான வரிகளுக்குட்படாமை, பாதுகாக்க வேண்டிய தேவையின்மை, நிலையான விலை, ஏற்பான தொகை, மதிப்புயர வாய்ப்புகள் ஆகிய பிற பண்புகளும் தராதரத்தைத்

தீர்மானிக்கின்றன. பொது முதலீடு செய்ய இந்தப் பண்புகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகத் தரமிட வேண்டும். இலாப நோக்கோடு ஈடுகளை வாங்குபவர் மதிப்புயர்வதற்கான வாய்ப்புகளையே பிரதானமாக ஆராய்கிறார். ஈடுகளை வெளியிடும் நபர் அல்லது கார்ப்பரேஷனின் வெற்றியினாலும் புகழ் ஓங்குவதாலும் அந்த ஈடுகளின் விலை ஏறலாம். பிற பண்புகளைக் கண்ணெடுத்தும் பாராமல், மூலதனத்தின் பாதுகாப்பு, சீரான உறுதியான வருமானம் ஆகிய இரண்டின் அடிப்படையில் மட்டும் தராதரப் படுத்துதல் மற்றொரு வகையானதாகும். இந்த முறையின்கீழ் நெடுங்கால நோக்குடன் ஈடு ஆராயப்படுகிறது. சிறப்பீடுகள் போன்று முற்றிலும் பாதுகாப்பானவையாகக் கருதப்படும் ஈடுகளை இந்த முறை, முதன்மையாக வைத்து, பிறவற்றை அவற்றின் பாதுகாப்பளவிற்கு ஏற்ப வரிசைப்படுத்துகிறது.

## பாங்குகள் முதலீடு செய்யும்பொழுது, எந்தக் கோட்பாடுகளைக் கொண்டு ஈடுகளைத் தராதரப்படுத்துவது ?

(1) பாதுகாப்பு ; முதலீடு செய்யும் நிதிகள் பாதுகாப்பாக இருக்குமா என்று பாங்கர் முதலாவதாகக் கண்டறிய வேண்டும். ஏனெனில், அவர் அவற்றை இழக்க இயலாது. உடனடியான நன்மைகளின்மீது நாட்டங்கொள்ளாமல் நீண்டகால நோக்குடன் தான் அவர் எண்ணிப் பார்க்க வேண்டும். விளையாட்டாக ஈடுகள் வியாபாரத்தில் இறங்கும் ஊகவணிகர் ஒருவர் (speculator), ஆபத்தான பேரங்களை மேற்கொள்ளுவதன்மூலம் தமது பணம் முழுவதையோ அல்லது அதில் பெரும்பங்கையோ இழக்கலாம். ஆனால், தமது நிதிகளின் பெரும்பங்கைக் கடனாகவே பெறும் பாங்கரின் நிலைமை முற்றிலும் வேறுபட்டது. ‘எண்ணித் துணிக கருமம்’ என்பதே பாங்கர் கடைப்பிடிக்க வேண்டிய நெறியாகும். ஈடு ஒன்றின் பாதுகாப்பு, அதை வெளியிடும் ஆளின் அல்லது நிறுவனத்தின் நாணயத்தைப் பொறுத்தது என்பதை அவர் மனத்திலிருத்த வேண்டும். எடுத்துக்காட்டாக, இயல்பான காலங்களில் அரசாங்கக் கடன் தொகுப்புப் பத்திரங்களுக்கு (government stocks) அந்நாட்டு மக்களின் வரி செலுத்தும் ஆற்றலும், நாணயமான கடனாளி என்ற அந்நாட்டின் நற்பெயரைக் காக்கும் பொருட்டுத் தேவையானால் தியாகமும் செய்யத் தயாராகவுள்ள அவர்களின் மனப்பான்மையும் பின்னணிக்காப்பாக (backing) விளங்குவதால், மிக்க பாதுகாப்பான ஈடுகளாக அவை கருதப்படுகின்றன. ஆனால், தனி ஒருவரின் வெண்கடன் பத்திரத்திற்கும், கம்பெனியின் கடன் தொகுப்புப் பத்திரங்களுக்கும் (debenture stock) அவற்றை வெளியிடும் ஆளின் அல்லது கார்ப்பரேஷனின்

நாணயம் மட்டுமே பின்னணிக்காப்பாக இருக்கிறது. நாணய மாற்று வீதம் பாதகமான முறையில் ஏறி இறங்குவதால், பாங்கருக்கு இழப்பை விளைவிக்கும் ஆபத்துக்கு வெளிநாட்டு ஈடுகள் உட்பட்டுள்ளன. மேலும், அரசாங்கங்கள் நாணயமாற்று முறையில் குறுக்கிட்டு, சூழ்ச்சியாக (குயுத்தியாக) அதைக் கையாளும்பொழுது பெரும் இழப்பு நேரக் கூடும். உதாரணமாக, முதல் உலகப்போருக்கு முன்பு (அப்பொழுது ரூபாய்-பவுண்டு நாணயமாற்று வீதம் 1 ரூபாய்=1 ஷில்லிங்கு 1.4 பென்ஸ்) ஸ்டெர்லிங் ஈடுகளை வாங்கிய இந்திய பாங்கர் ஒருவர், பிறகு நேர்ந்த ரூபாய்-ஸ்டெர்லிங் நாணயமாற்றுவீத மாறுதலினால், கணிசமான நட்டத்தை அடைந்திருக்கக் கூடும். இந்த நட்டம் ஈடுகளின் விலைகளில் ஏற்பட்ட ஏற்ற இறக்கங்களினால் விளைந்த தல்ல. அது போலவே ஸ்டெர்லிங் ஈடுகளை வைத்திருந்த அமெரிக்க பாங்கரும், பொன் நாணயத் திட்டத்தை இங்கிலாந்து உதறித் தள்ளிய 1931ஆம் ஆண்டு செப்டெம்பர் 21ஆம் தேதிக்குப் பிறகு, இழப்பை ஏற்றிருக்கக் கூடும்.

(2) **விற்பனையாகும் தன்மை:** தாம் தமது நிதிகளை முதலீடு செய்யும் ஈடுகள் எளிதில் விற்கக் கூடியவையா, பெருந்தொகை களுக்கான ஈடுகளை விற்க முயலும்போதும் அவற்றின் விலைகள் கணிசமான அளவு குறையாமல் பெரும்பாலும் நிலையாக இருக்க வல்லவையா என்பதை பாங்கர் உறுதி செய்துகொள்ள வேண்டும். இந்த இயல்புகளை அவை பெற்றிராவிடில், மூன்றும் பின்னணிக் காப்பாக அவை விளங்கும் என்ற நோக்கம் ஈடேறாமற்போய் விடுவதோடு, தமது வாடிக்கைக்காரர்களின் எதிர்பாராத பெருந் தேவைகளைச் சமாளிக்கப் பெருமளவு ரொக்கம் தேவைப்பட்டு, அந்த ஈடுகளை விற்றுத்தான் பணத்தைத் திரட்ட வேண்டும் என்னும் நிலை ஏற்படும்பொழுது, நியாயமான விலைகளில் பாங்கர் அவர் அவற்றை விற்க இயலாமல் போய்விடும். அரசாங்கப் பிணையப் பத்திரங்கள், நகராட்சிப் பிணையப் பத்திரங்கள், துறைமுகப் பொறுப்பாண்மைக் கழகக் கடன்பத்திரங்கள், சீரமைப்புப் பொறுப்பாண்மைக் கழகக் கடன்பத்திரங்கள் (improvement trust debentures) ஆகியவற்றைப் பெருமளவு விற்கும் பொழுதும் அவற்றின் நடப்பு விலைகள் குறைவதில்லை. ஆனால், தொழிலமைப்புகள் போன்ற நிலையங்களின் பங்குகள் எளிதில் விற்கக்கூடியனவாகப் பெரும்பாலும் இருப்பதில்லை. பணமுடை யான நேரங்களில் விலை குறைவாக அன்றி அந்தப் பங்குகளைப் பெருமளவு குறிப்பாக ரொக்கத்திற்காக விற்றல் அரிது.

(3) **நிலையான விலை:** இந்த இயல்பைப் பெற்றிருக்கும் முதலீடுகளையே பாங்கர் பெரும்பாலும் விரும்புகின்றனர். தாம்

வாங்கும் ஈடுகளின் விலைகள் உயரக்கூடும் என்று ஊகித்து, அந்த அடிப்படையில் ஆதாயம் ஈட்ட விழைவது ஊகவணிகருடைய தொழிலின் குறிக்கோளாக அமையலாம். பாங்கருடைய தலையாய நோக்கமாக அது இருக்கக் கூடாது. எனவே, பாங்கர் தேரும் ஈடுகள் மிகுதியான ஏற்ற இறக்கங்களுக்கு உட்படாதவையாகச் சீரான விலைகளைக் கொண்டவையாக இருப்பதுடன், அவற்றை விற்றுப் பணத்தைத் திரட்ட வேண்டும் என்னும் நெருக்கடி தோன்றினால் ஒழிய, தாம் வைத்திருப்பதற்குகந்தவையாக அவை இருக்க வேண்டும். மேலும், சீரான விலையற்ற ஈடுகளை பாங்கொன்று வைத்திருக்கிறது என்பதைப் பிறர் அறிய நேருங்கால், அதன் நாணயத்திற்கு இழுக்கு ஏற்படவும் வாய்ப்பிருக்கிறது; அவற்றின் விலைகள் குறைவதால், அவற்றை விற்கும்பொழுது அந்த பாங்குக்கு அதிக இழப்பு ஏற்பட இடமில்லையெனினும், அதன் வைப்பாளிகளும் பங்காளிகளும் மனம் தளர்ந்து கிலியுற (panicky) அவை காரணமாக அமையலாம். உடைமை செறிந்த பங்குகளில் (highly geared shares)—அதாவது நிலையுறுமுதலை (fixed capital) உயர்ந்த வீதத்தில் கொண்ட பங்குகள்—முதலீடு செய்யும்பொழுது பாங்கர் மிக்க எச்சரிக்கையாகச் செயலாற்ற வேண்டும். இதுபோன்ற பங்குகளை வெளியிடும் நிறுவனங்களின் இலாப நிலைமை சற்று நலிவுற்றாலும் இந்தப் பங்குகளின் விலைகள் மிகுதியாக வீழ்ச்சியுறும். எனவே, அவற்றை உடனடியாகச் சுணங்காமல் விற்றாலொழிய, அந்த பாங்கின் முதலீட்டுத் திரட்டை (investment portfolio), அவை வெகுவாகப் பாதிக்கக் கூடும்.

(4) **வருமானம் அல்லது ஆதாயம்:** தாம் முதலீடு செய்யும் மூலதனத்தின்மீது நியாயமான, சீரான வருமானம் கிடைக்குமா என்பதை பாங்கர் எண்ணிப் பார்க்க வேண்டும். அதே நேரத்தில் உயர்ந்த வருமானத்தில் வேட்கை கொள்ளக்கூடாது. ஏனெனில், ஊகபேர ஈடுகள்தான் (speculative securities) பெரும்பாலும் உயர்ந்த ஆதாயத்தைத் தரவல்லன. எனவே, நிகர வருமானத்தைக் கணக்கிடும்பொழுது, ஈடுகளின் நடப்புவிலை, வட்டிவீதம், அவற்றை மீட்கும்பொழுது ஏற்படக்கூடிய இலாப நட்டம் ஆகியவற்றைக் கருத்திற்கொள்ள வேண்டும்.

**ஆதாயத்தை மதிப்பிடல்:** ஈடு ஒன்று கழிவுடனோ (at discount) அல்லது உயர்மதிப்புடனோ (at premium) விலை கூறப்படும்பொழுது, அந்தக் கழிவோ அல்லது உயர்மதிப்போ அதன் வருவாயைப் பாதிக்க வல்லது. உதாரணமாக, 1964ஆம் ஆண்டு செலுத்தத் தக்க 3% இந்திய அரசாங்கக் கடன் பத்திரங்கள் (1950ஆம் ஆண்டு வெளியிடப்பட்டவை) ஏறத்தாழ 92.50 ரூபாயாக விலை

கூறப்பட்டால் ஏறத்தாழ 4 விழுக்காடாக அதன் மொத்த ஆதாயம் (gross yield) அமைகிறது. அரசாங்கக் கடன்களையும், கடன் பத்திரங்களையும், அவற்றின்மீது கூடியுள்ள வட்டியை (accrued interest) விலக்கி விலை கூறுதல் இந்தியாவில் நிலவும் வழக்கமாகும்; எனவே, அவற்றை வாங்கும்பொழுது, ஒப்புக் கொண்ட விலைக்குமேல் அந்நாள்வரை (வாங்குபவரிடம் அவற்றைக் கொடுக்கும் நாள் வரை) அவற்றின்மீது கூடியுள்ள வட்டியையும் செலுத்துதல் வழக்கமாக விளங்குகிறது.

மேற்கூறிய பண்புகளோடு, மதிப்புயரப் போதிய வாய்ப்புகள், சுமையான வரிகளுக்குட்படாமை, ஏற்பான தொகையும் தவணையும் ஆகிய கூடுதல் பண்புகளையும் பெற்றிருப்பவையே குறிக்கோள் (உத்தமமான) முதலீடாகும் (ideal investment).

## ஈடுகளை வகைப்படுத்துதல்

தமது நடைமுதலின் ஒரு பகுதியைத் தமது தேவைக்குகந்த ஈடுகளில் முதலீடு செய்வதற்கு பாங்கருக்கு வழிகாட்டியாக அமையும் பொதுவான கோட்பாடுகளை இதுவரை ஆராய்ந்தோம். பங்கு மாற்று நிலைய ஈடுகளில் முக்கியமான சிலவகை ஈடுகளின் சிறப்பு அமிசங்களை இங்கு விளக்குவோம். பங்குமாற்று நிலையத்தின் அதிகார்பூர்வமான பட்டியலில் சேர்க்கப்பட்டு, அங்கு வாங்கவும் விற்கவும் அனுமதியளிக்கப்படும் ஈடுகளுக்குப் பங்குமாற்று நிலைய ஈடுகள் என்று பெயர்.

பங்குமாற்று நிலைய ஈடுகளின் முக்கியமான வகைகள்:

### நாட்டுக் கடன்கள்

இந்திய அரசாங்கமும், மாகாண அரசாங்கங்களும் திரட்டும் பல்வேறு கடன்கள் இந்த வகையைச் சேர்ந்தவை. பின்னிணைப்பு 'இ'-ல் இந்த ஈடுகளின் பட்டியலைக் காணலாம். வரிகள், தீர்வைகள், பிற ஆதாய வளங்கள் ஆகியவற்றிலிருந்து அரசாங்கம் பெறும் நடப்பு வருவாய், அதனுடைய நடப்புச் செலவீடுகளைச் சமாளிக்கப் போதுமானதாக இல்லாதபொழுது, அந்தப் பற்றுக்குறையை ஈடு செய்யும்பொருட்டுக் கடன் திரட்ட வேண்டிய நிலை அதற்கு ஏற்படுகிறது. குறிப்பாக, போர் நிகழும்பொழுதும் அல்லது நீர்ப்பாசனம், இரயில் வசதிகள், இன்னபிற அபிவிருத்தித் திட்டங்களுக்காகப் பெருந்தொகைகளை அரசாங்கம் செலவு செய்யும் பொழுதும், பற்றுக்குறை பெருமளவு உண்டாகிறது. பணச் சந்தையின் நிலைமை, கடன் திரட்டும் அரசாங்கத்தின் நிதி நிலைமை,

நாணயம் ஆகியவற்றிற்கேற்ப வட்டி, தவணைக்காலம் ஆகிய நிபந்தனைகள் முடிவு செய்யப்படுகின்றன. வட்டியையோ முதலையோ செலுத்துவதற்காக எந்த ஒரு சொத்தையும் பொது வாக அரசாங்கங்கள் குறித்தொதுக்கி வைப்பதில்லை. எனவே, சம்பந்தப்பட்ட மக்களின் வரி செலுத்தும் ஆற்றலும் விருப்பமுந் தான் இந்த ஈடுகளின் பின்னணிக்காப்பாக அமைகின்றன. அதாவது, அந்த நாட்டின் நாணயம் முழுவதையும் பிணையமாக வைத்து அரசாங்கம் கடன் திரட்டுகிறது. எனவே, அமெரிக்க ஐக்கிய நாடு, ஐக்கிய அரசு போன்ற செல்வமிக்க நாடுகளின் அரசாங்கங்கள், ஏழ்மையான நாடுகளின் அரசாங்கங்களைக் காட்டிலும் குறைந்த வட்டிக்குக் கடனைத் திரட்ட இயலுகிறது. ஏற்கெனவே திரட்டிய கடனும், அதன்மீது செலுத்த வேண்டிய வட்டியும் பெருஞ்சுமையாக இருக்கும்பொழுது, இனித் திரட்ட விருக்கும் கடன்களின் வட்டி வீதத்தை நேரடியாக இன்றி, மறை முகமாகக் குறைக்க அரசாங்கம் விழையும்.

பகுதிநிலை அரசாங்க ஈடுகள் (Semi-Government Securities)

துறைமுகப் பொறுப்பாண்மைக் கழகம், சீரமைப்புப் பொறுப்பாண்மைக் கழகம், நகராட்சி ஆகியவை வெளியிடும் பிணையப் பத்திரங்களும், கடன் பத்திரங்களும் பகுதிநிலை அரசாங்க ஈடுகள் எனப்படும். நாட்டுக் கடனுக்கு அடுத்தபடியாக மிக்க பாதுகாப்புடையவை பகுதிநிலை அரசாங்க ஈடுகளே. காரணங்கள் பின்வருமாறு : முதலாவதாக, மதிப்பு வாய்ந்த உடைமைகளை இந்த அமைப்புக்கள் பெருமளவு வைத்துள்ளன. இரண்டாவதாக, அவற்றின் நிருவாக சபைகளில் அரசாங்கம் நியமித்த உறுப்பினர்கள் மட்டுமின்றி, வாணிகச் சங்கங்கள் போன்ற வாணிக அமைப்புகளின் வகை ஆள்களும் (representatives) இருப்பதால், அவற்றின் நிருவாகமும் செயலாண்மையும் திறம்பட அமைகின்றன. மூன்றாவதாக, அரசாங்க ஈடுகளுக்கு அந்த நாட்டின் நாணயம் பின்னணிக்காப்பாக அமைவது போல, நகராட்சிகளுக்கும் அவற்றின் ஆட்சி வரம்புக்குட்பட்டுள்ள நகர மக்களின் ஆதரவு பெரும் சொத்தாக அமைகிறது. உள்ள வரிகளை அதிகரித்தும், புதிய வரிகளை விதித்தும் அரசாங்கம் தனது வருவாயைப் பெருக்கிக்கொள்வது போல, நகராட்சிகள், துறை முகப் பொறுப்பாண்மைக் கழகங்கள் (port trusts) போன்ற அமைப்புகளும் தங்கள் பொறுப்புக்களைச் செலுத்தவும், வரவு செலவுத் திட்டங்களைச் சமநிலைப்படுத்தவும், தங்கள் கட்டணங்கள், வரிகள் ஆகியவற்றை உயர்த்த இயலும். நான்காவதாக, அரசாங்க ஈடுகளைப் போலவே, பகுதிநிலை அரசாங்க ஈடுகளையும் மீட்க, கடன் தீர்வு நிதிகளை அந்த அமைப்புகள் உண்டாக்குகின்றன. எனவே,

பகுதிநிலை பொதுப்பணி அமைப்புகளின் (semi-public bodies) ஈடுகள், பிணையப் பத்திரங்களாயினும் அல்லது கடன் பத்திரங்களாயினும் மிக்க பாதுகாப்புடையவை. இருப்பினும், அவற்றை வாங்குவோர் அவை செல்லத்தக்கவையா என்று கண்டறிய வேண்டும். திரு. ஜார்டன் அவர்கள் கூறுவது போலக் கீழ்க் கண்ட காரணங்களுக்காக, இது போன்ற ஈடுகள் சட்டத்திற் கெதிரானவை என்று தீர்ப்பளிக்கப்பட்டுள்ளன (டேவிட் எஃப். ஜார்டன் என்பவரின் முதலீடு என்னும் நூல், இரண்டாம் பதிப்பு பக். 83) :

(அ) எந்தச் சட்டத்தை நம்பி ஈடுகள் வெளியிடப் பட்டனவோ அது அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணானது என்று தீர்ப்பளிக்கப்படுதல்,

(ஆ) கடன் வரம்பை மீறியிருத்தல்,

(இ) சட்டரீதியான அங்கீகாரம் இல்லாதிருத்தல்,

(ஈ) ஈடுகளை வெளியிடும்போது சட்டரீதியாக வேண்டுவன வற்றை நிறைவேற்றத் தவறுதல் ஆகியவை.

**நம்பகமான முதலீட்டு நிலையங்களைத் (Investment Agencies) தோற்றுவித்தல் மிக அவசியம் :** சாதாரணமான முதலீட்டாளர் (investor), இச்செய்திகளை அலசி ஆராய இயலாத நிலையில் இருக் கிறார். எனவே, புகழ்பெற்ற பிணையப்பத்திரங்கள் (bond houses) அல்லது பங்குதரகர்கள் வழியாக ஈடுகளை வாங்குதல் விரும்பத் தக்க முறையாகும். பொதுநிலையான ஒருவர் மருத்துவருடைய பணிகளை ஆற்ற இயலாமலிருப்பது போல, சாதாரணமான முதலீட்டாளரும், தமது நிதிகளை முதலீடு செய்வது பற்றித் தக்க அறிவுரைகளை வழங்கும் நிலையத்தின் (அல்லது ஆளின்) துணையை நாடல் அறிவுடைமை. லண்டன் மாநகரிலுள்ள இன்வெஸ்ட் மெண்ட் ரெஜிஸ்ட்ரி கம். லிமிடெட் என்னும் நிறுவனம் தனது வாடிக்கைக்காரர்களின் சார்பாக ஈடுகளை வாங்கி விற்கும் பணியுடன் நில்லாது, அவர்கள் முதலீடு செய்துள்ள ஈடுகளின் போக்கில் ஆழ்ந்த கவனம் வைத்திருப்பது அதன் பெருஞ்சிறப் பாகும். இந்தத் தறுவாயில், இதுபோன்ற கம்பெனிகளை இந்தி யாவில் துவக்க வேண்டிய இன்றியமையாமையைச் சுட்டிக் காட்டல் பொருத்தமுடைத்து. நம் நாட்டில் அண்மையில் துவக்கப் பட்ட யூனிட் டிரஸ்டு என்னும் நிறுவனம் இப்பணியில் சிறந்த சேவை புரிய வல்லது.

சிறப்பீடுகள் (Gilt - edged Securities): அரசாங்க ஈடுகள் மட்டுமின்றி, நகராட்சிப் பிணையப்பத்திரங்கள், சீரமைப்புப் பொறுப்பாண்மை, துறைமுகப் பொறுப்பாண்மை ஆகிய கழகங்களின் கடன்பத்திரங்கள், இன்னபிற அரைகுறை அரசாங்க ஈடுகள் ஆகியவையும் இந்த வகையைச் சேர்ந்தவை. அவை மிகவும் பாதுகாப்பானவை என்பதை அவற்றின் பெயரே குறிக்கிறது; பொறுப்பாண்மை நிதிகளை அவற்றில் முதலீடு செய்யப் பொறுப்பாண்மையாளர்கள் அனுமதிக்கப்படுகின்றனர். பொறுப்பாண்மை நிதிகளைப் பொறுப்பாண்மையாளர்கள் எவ்வாறு முதலீடு செய்ய வேண்டும் என்பதைக் கீழ்க்கண்டவை சுருக்கமாகக் குறிக்கின்றன.

1908, 1916, 1934 ஆகிய ஆண்டுகளின் இந்தியப் பொறுப்பாண்மைத் திருத்தச் சட்டங்கள் திருத்தியமைத்த 1882ஆம் ஆண்டு இந்தியப் பொறுப்பாண்மை (டிரஸ்ட்) சட்டத்தின் 20ஆம் பிரிவு இயம்புவதாவது :

பொறுப்பாண்மைச் சொத்தில் ரொக்கம் இருந்து, பொறுப்பாண்மைச் செயல்களுக்கு அதை உடனடியாகவோ அல்லது கூடிய விரைவிலோ ஈடுபடுத்த இயலாத நிலையிருந்தால், (பொறுப்பாண்மைப் பத்திரம் தாங்கியுள்ள கட்டளை கட்குட்பட்டு) கீழ்க்கண்ட ஈடுகளில் மட்டுமே அந்த ரொக்கத்தை முதலீடு செய்யப் பொறுப்பாண்மையாளர் (டிரஸ்டி) கடமைப்பட்டவர்; வேறெவற்றிலும் அவர் அதை முதலீடு செய்யக் கூடாது :

(அ) மாநில அரசாங்கம், மத்திய அரசாங்கம், (கிரேட் பிரிட்டன், அயர்லாந்து ஆகியவற்றைக்கொண்ட) ஐக்கிய அரசு ஆகியவற்றின் வெண்கடன் பத்திரங்கள், கடன், கடன் தொகுப்புப் பத்திரங்கள், பிற ஈடுகள் ஆகியவை ;

இந்த விதியைப் பொறுத்தவரை, முதல், வட்டி ஆகியவற்றைப் பற்றி மேற்கூறிய அரசாங்கங்களின் நிபந்தனையற்ற முழு உத்தரவாதத்தைத் தாங்கியுள்ள ஈடுகளும், அந்தந்த அரசாங்கங்களின் ஈடுகளாகவே கருதப்படும் ;

(ஆ) ஐக்கிய அரசின் பாராளுமன்றம், இந்தியாவின் வருவாயையோ, ஏதாவதொரு மாநிலத்தின் வருவாயையோ அல்லது தலைமைக் கவர்னரின் வருவாயையோ பிணைத்து 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதிக்கு முன் வெளியிட்ட

பிணையப் பத்திரங்கள், கடன் பத்திரங்கள், ஆண்டு வருவாய் தரும் முதலீடு (annuity) ஆகியவை.

இருப்பினும், 1916ஆம் ஆண்டு பிப்பிரவரி 15ஆம் தேதிக்குப் பிறகு, ஆண்டு வருவாய் தரும் முதலீடுகளை மீட்க எழுப்பப்படும் கடன்தீர்வு நிதி இருந்தாலன்றி, அந்த முதலீடுகளில் பொறுப்பாண்மைப் பணத்தை முதலீடு செய்யக் கூடாது; ஆயினும், மேற்கூறிய தேதிக்குமுன் செய்யப்பட்ட முதலீடுகளுக்கு இக்காப்பு வாசகம் பொருந்தாது;

(ஆஆ) 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் XIIIஆம் பிரிவின்கீழ், தலைமைக் கவர்னரின் சார்பாக, இந்திய அரசாங்க மந்திரி வெளியிட்ட கீழ்க்காணும் ஈடுகளில் அல்லது ஐக்கிய அரசின் பாராளுமன்றம் இயற்றிய சட்டத்தின் அங்கீகாரத்துடன் இந்தியாவின் வருவாயைப் பிணைத்து, இந்திய அரசாங்க மந்திரி 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதி வெளியிட்ட $3\frac{1}{2}$% இந்தியக் கடன் தொகுப்புப் பத்திரம், 3% இந்தியக் கடன் தொகுப்புப் பத்திரம், $2\frac{1}{2}$% இந்தியக் கடன் தொகுப்புப் பத்திரம், இன்ன பிற பத்திரங்கள் ஆகியவை;

(இ) மத்திய அரசாங்கமோ அல்லது இந்திய அரசாங்க மந்திரியோ வட்டியைப்பற்றி அளித்த உத்தரவாதத்தைத் தாங்கிய இரயில்வே அல்லது பிற கம்பெனிகளின் பங்குகள், கடன் பத்திரங்கள் அல்லது கடன் பத்திரத் தொகுப்புக்கள், அல்லது பம்பாய் மாநில அரசாங்கமோ அல்லது இந்திய அரசாங்க மந்திரியோ வட்டியைப்பற்றி அளித்த உத்தரவாதத்தைத் தாங்கிய பம்பாய் மாகாணக் கூட்டுறவு பாங்கு வெளியிட்ட கடன் பத்திரங்கள் ஆகியவை;

(ஈ) மத்தியச் சட்டம், மாநிலச் சட்டம் அல்லது சமஸ்தானச் சட்டத்தின் அங்கீகாரத்திற்கேற்ப, கராச்சித் துறைமுகப் பொறுப்பாண்மையாளர்களோ அல்லது அவர்களின் சார்பாகவோ அல்லது ரங்கூன் நகரத்திலோ அல்லது மாநிலத் தலைநகரங்களிலோ அமைந்துள்ள நகரச் சீரமைப்புப் பொறுப்பாண்மைக் கழகம், துறைமுகப் பொறுப்பாண்மைக் கழகம், நகராட்சி ஆகியவையோ அல்லது அவற்றின் சார்பாகவோ வெளியிடப்பட்ட கடன்பத்திரங்கள், பிற ஈடுகள் ஆகியவை;

இருப்பினும், ரங்கூன் நகரத்தில் அமைந்துள்ள நகரச் சீரமைப்புப் பொறுப்பாண்மைக் கழகம், துறைமுகப் பொறுப்

பாண்மைக் கழகம், நகராட்சி ஆகியவையோ அல்லது அவற்றின் சார்பாகவோ அல்லது கராச்சித் துறைமுகத்தின் பொறுப்பாண்மையாளர்களோ அல்லது அவர்களின் சார் பாகவோ வெளியிடப்பட்ட ஈடுகளில் 1948ஆம் ஆண்டு மார்ச்சு 31ஆம் தேதிக்குப் பிறகு பொறுப்பாண்மைப் பணத்தை முதலீடு செய்யக் கூடாது.

(உ) இச்சட்டம் பொருந்தும் நிலப்பகுதியில் அமைந் துள்ள அசையாச் சொத்தின் முதல் அடைமானமாக முதலீடு செய்யலாம். ஆனால் கீழ்வரும் நிபந்தனைகள் நிறைவேற வேண்டும் :

அச்சொத்து சில ஆண்டுக் குத்தகைச் சொத்தாக இருக்கக் கூடாது ; மேலும், அதன் மதிப்பு அடைமானத் தொகையைக்காட்டிலும் ஒன்று, ஒன்றில் மூன்று பங்குக்கு மிகுதியாக இருக்க வேண்டும் ; அச்சொத்து கட்டடமாக இருந்தால், அதன் மதிப்பு அடைமானத் தொகையைக்காட் டிலும் ஒன்றரைப் பங்குக்கு மிகுதியாக இருக்க வேண்டும்.

(ஊ) பொறுப்பாண்மைப் பத்திரம் தெளிவாக (வெளிப் படையாக) அங்கீகரித்திருக்கிற பிற ஈடுகளில் அல்லது இதைப்பற்றி உயர்நீதிமன்றம் அவ்வப்போது விதிக்கும் விதிகள் அங்கீகரிக்கிற ஈடுகளிலும் பொறுப்பாண்மைப் பணத்தை முதலீடு செய்யலாம்.

இருப்பினும், வாழ்நாள் முழுவதும் பொறுப்பாண்மைச் சொத்தின் வருமானத்தைப் பெற்றுத்துய்க்கும் உரிமையை யுடைய ஒருவர் இருந்து, ஒப்பந்தம் செய்யத் தகுதியுடைய வராகவும் அவர் இருந்தால், அவரின் எழுத்து மூலமான இசைவின்றி, (ஈ) முதல் (ஊ) வரையிலுள்ள சரத்துக்கள் குறிப்பிடும் ஈடுகளில் முதலீடு செய்யக் கூடாது.

**மீட்கக்கூடிய கடன்தொகுப்புப் பத்திரங்களை உயர்மதிப்போடு வாங்க அதிகாரம் :** மேற்கூறிய சட்டத்தின் 20-அ என்னும் பிரிவு கூறுவ தாவது :

(1) 20ஆம் பிரிவு குறிப்பிடும் ஈடுகள் மீட்கக் கூடியவை யாயினும், அவற்றின் விலை அவற்றின் மீட்பு மதிப்பைக்காட் டிலும் அதிகமாயினும், பொறுப்பாண்மையாளர் அவற்றில் முதலீடு செய்யலாம் ;

இருப்பினும், 20ஆம் பிரிவின் (இ), (ஈ) ஆகிய சரத்துக்கள் குறிப்பிடும் ஈடொன்றை, வாங்கும் தேதியிலிருந்து 15 ஆண்டுக் காலத்திற்குள் முகமதிப்புக்கோ அல்லது வேறொரு நிர்ணயித்த வீதத்திலோ அது மீட்கப்படுமாயினும், மீட்பு மதிப்பைக்காட்டிலும் அதிக விலை கொடுத்துப் பொறுப்பாண்மையாளர் அதை வாங்கக் கூடாது; அது போலவே மேற்கூறிய சரத்துக்கள் குறிப்பிடும் ஈடொன்றை, முகமதிப்புக்கோ அல்லது வேறொரு நிர்ணயித்த வீதத்திலோ அது மீட்கப்படுமாயினும், மீட்பு மதிப்பைக்காட்டிலும் 15 விழுக்காட்டுக்கு அதிகமான விலைகொடுத்து வாங்கக் கூடாது.

(2) பொறுப்பாண்மையாளர், இந்தப் பிரிவுக்கேற்ப வாங்கிய மீட்கக்கூடிய கடன் தொகுப்புப் பத்திரங்களையும், நிதிகளையும், பிற ஈடுகளையும் அவை மீட்கப்படும்வரை வைத்திருக்கலாம்.

**ஈடுகளை மதிப்பிடுதல்:** அரசாங்க ஈடுகளின் மதிப்பீடு அந்நாட்டின் நிதி நிலைமையைப் பெருமளவு சார்ந்திருக்கிறது. ஐக்கிய அரசு, பிரிட்டனின் ஆட்சிக்குட்பட்ட நாடுகள் ஆகியவற்றின் அரசாங்கங்களுக்கு முதலிடுபவர்களிடையே நல்ல நாணயம் இருப்பதால், எந்த ஒரு தனியான பிணையமுமின்றி அவை வெளியிடும் ஈடுகளை வாங்க அவர்கள் முன்வருகின்றார்கள். இதற்கு மாறாக, குறிப்பிட்ட வரியொன்றின் மூலம் திரட்டும் வருவாயை வட்டி செலுத்துவதற்காகச் சில நாடுகள் ஒதுக்கி வைத்தாலும், அவற்றின் பிணையப்பத்திரங்கள் எளிதில் விற்பனையாவதில்லை. அரசாங்கத்தின் நாணயம், அதனுடைய வரவு செலவுத் திட்டங்களை ஈடு செய்யும் அதன் திறமையையும், ஏற்றுக்கொண்ட பொறுப்புக்களை மதிக்கும் ஆற்றலையும் நேர்மையையும் வெகுவாகச் சார்ந்திருக்கிறது. லண்டன் மாநகரிலுள்ள வெளிநாட்டுப் பிணையப்பத்திரங்களை வைத்திருப்பவர்களின் கார்ப்பரேஷன் (The Corporation of Foreign Bond-Holders) என்னும் நிறுவனம் வெளிநாட்டு அரசாங்கங்கள் மீட்கத் தவறுவதால் இழப்பை ஏற்கும் பிணையப்பத்திரங்களை வைத்திருப்பவர்களின் நலனுக்காகப் போராடுகிறது. அரசாங்க ஈடுகளை மதிப்பிடும்பொழுது, அந்நாட்டின் புவியியல் ரீதியான அமைப்பு, மக்கட்பெருக்கத்தின் போக்கு, அரசியல் நிலைமை, பல ஆண்டுகளாக நிலவும் நிதி உறுதிப்பாடு (financial stability) ஆகிய சிறப்புக் காரணிகளையும் கருத்திற் கொள்ள வேண்டும்.

ஈடுகள் செலுத்தப்படும் செலாவணியின் உறுதிப்பாடு : பணம் திரட்டும் நாட்டின் செலாவணியில்தான், ஈடுகள் பெரும்பாலும் செலுத்தப்படுகின்றன. ஆனல், அந்தச் செலாவணி உறுதியற்ற தாக இருந்தால், உறுதியான வேருெரு நாட்டின் செலாவணியில் வட்டியையும் முதலையும் செலுத்த, அந்த நாடு முன் வருகிறது. உதாரணமாக, முன்பு லண்டனில் வெளியிடப்பட்ட வெளிநாட்டு ஈடுகளில் சில ஸ்டெர்லிங் செலாவணியில்தான் இருந்தன ; அவற்றின் முதலும் வட்டியும் அந்தச் செலாவணியில்தான் செலுத்த வேண்டியவையாக இருந்தன. இங்கிலாந்து பொன் நாணயத் திட்டத்தைத் தனது செலாவணி முறையின் அடிப்படை யாகக்கொண்டிருந்தவரை, ஸ்டெர்லிங் செலாவணி மிக்க நிலையானதாக விளங்கியது. இருபெரும் உலகப் போர்களின் விளைவாக, பொன் நாணயத் திட்டத்தை இங்கிலாந்து உதறித் தள்ளிற்று. அதைத் தொடர்ந்து அயல் நாட்டுச் செலாவணிகளின் மீது பல தடைகள் விதிக்கப்பட்டதுடன் ஈடுகளை வெளியிட்ட நாடுகளின் செலாவணி மாற்று வீதங்களும் மிகுதியான ஏற்ற இறக்கங்களுக்குட்பட்டன ; ஸ்டெர்லிங் செலாவணியில் செலுத்த வேண்டிய அவற்றின் ஈடுகளின் விலைகளும் வெகுவாக ஏறி இறங்கின. உதாரணமாக, ஸ்டெர்லிங்கில் செலுத்தப்படும் பிரிட்டிஷ் ஈடுகளின் மதிப்பு அமெரிக்காவில் கணிசமாகக் குறைந்தது ; ஸ்டெர்லிங்கின் டாலர் மதிப்பு ஏறி இறங்கியது மட்டுமல்ல ; பிரிட்டனின் நாணயம் வீழ்ச்சியுற்றதும் இந்த ஏற்ற இறக்கங்களுக்குக் காரணமாக இருந்தது. அது போலவே ஃப்ரான்ஸ் நாட்டின் செலாவணியான ஃப்ராங்கின் டாலர் மதிப்பும், ஸ்டெர்லிங் மதிப்பும் வெகுவாகக் குறைந்தது. பல நாடு களின் பொருளாதார நிலை சீர் குலைந்ததால், அவை தங்கள் செலாவணிகளின் மதிப்பைக் குறைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது; இதன் விளைவாக ஸ்டெர்லிங் தொகுதி, டாலர்தொகுதி என்னும் இரு தொகுதிகள் தோன்றின. இந்தியாவிலும் வாணிக அடிப் படையில் ஏற்றுமதி இறக்குமதிகளை ஈடு செய்யும் நோக்கத்துடன், வாணிக உறவுக்கேற்பக் கடினமான, நடுத்தரமான, மென்மையான செலாவணிப்பகுதிகள் என்று பல நாடுகளின் செலாவணிகள் பாகு படுத்தப்பட்டன. இரண்டு உலகப்போர்களின் விளைவாகவும், அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிதி நிலைமை வெகுவாக முன்னேற்ற மடைந்ததாலும், நிதியின் உலகப் பெரு மையம் என்ற லண்டனின் முக்கியத்துவம் தேய்ந்ததோடு, பணச்சந்தையின் மையமும் (money market centre) லண்டனிலிருந்து நியூயார்க்குக்கு இடம் பெயர்ந்தது.

**குறுந்தவணை ஈடுகளா நெடுந்தவணை ஈடுகளா?** இந்த ஈடுகள் குறுந்தவணை ஈடுகளாகவும் அல்லது நெடுந்தவணை ஈடுகளாகவும் இருக்கலாம். குறுந்தவணை ஈடுகள் விரைவில் (குறுகிய காலத்தில்) முதிர்வடைகின்றன; ஆனால், நெடுந்தவணை ஈடுகள் நீண்டகாலப் புழக்கம் உடையவை ஆயினும், முடிவுறுக் கடன்களைப் போலன்றி, உறுதியான மீட்புத் தேதியைத் தாங்கியுள்ளவை. குறுந்தவணை ஈடுகளினால் பல நன்மைகள் உள்ளன; தீமைகளும் இருக்கின்றன. உதாரணமாக, போர் அல்லது வேறு சில காரணங்களையொட்டி உயர்வட்டியில் கடன் திரட்ட வேண்டிய நிலைமை ஏற்படும் பொழுது, அரசாங்கம் குறுந்தவணைக் கடன்களை வெளியிட்டுப் பணத்தைத் திரட்டலாம்; போர் முடிந்து, அதனுடைய நாணயம் உயருவதாலும், வட்டி வீதம் எங்கும் குறைவதாலும், குறைந்த வட்டியைக்கொண்ட ஈடுகளாக அவற்றை மாற்றிக்கொள்ள லாம். முதல் உலகப் போர் முடிந்து சில ஆண்டுகளில், இந்த வழி நம் நாட்டில் கையாளப்பட்டது. 2,000,000,000 பவுண்டுக்குத் திரட்டப்பட்ட 5% பிரிட்டிஷ் போர்க்கடன் 1932ஆம் ஆண்டு 3½% கடனாக மாற்றப்பட்டது. அது போலவே இந்தியாவிலும் 1929-47 ஆண்டுகளுக்கான 5% போர்க்கடன், 1933ஆம் ஆண்டின் 5% பிணையப்பத்திரங்கள், 1933-36 ஆண்டுகளுக்கான 6% பிணையப்பத்திரங்கள் ஆகிய மூன்று கடன்களும் 1960-70 ஆண்டு களுக்கான 4% கடனாக 1933ஆம் ஆண்டின் தொடக்கப்பகுதியில் மாற்றப்பட்டன. இருப்பினும், நாட்டின் நிதி நிலைமை சற்று நலிவுறும்பொழுது, நெடுந்தவணை ஈடுகளைக்காட்டிலும், குறுந் தவணை ஈடுகளே அரசாங்கத்திற்கு மிகுதியான தொல்லைகளைத் தருகின்றன. ஏனெனில், அவற்றைக் கூடிய விரைவில் செலுத்து வதற்குத் தக்க ஏற்பாடுகளை அரசாங்கம் செய்ய வேண்டிய இக்கட்டை அவை விளைவிக்கின்றன. குறுங்கால முதலீட்டாளர் களுக்கு நெடுந்தவணை ஈடுகளைக்காட்டிலும் குறுந்தவணை ஈடுகளே விரும்பத் தக்கவையாகும். ஆனால், நெடுங்கால முதலீட்டாளர்கள் நெடுந்தவணை ஈடுகளையே விரும்பித் தேர்ந்துகொள்வர். உதாரண மாக, காப்புறுதிக் கம்பெனிகள் நெடுங்கால முதலீட்டாளர் களாகப் பெரும்பாலும் இருப்பதால், 1960-70ஆம் ஆண்டுகளுக் கான மாற்றுக்கடன் போன்ற நெடுந்தவணை ஈடுகளில் முதலீடு செய்யவே மிகவும் விரும்பும்.

**இந்த ஈடுகளையே பாங்கர்கள் விரும்பித் தேர்ந்துகொள்கின்றனர்:** இந்த நாடுகள் பாதுகாப்பானவையாகவும், அவற்றின் பிணைய மாக எளிதில் கடன்பெறத் துணையாகவும் இருப்பதால், இவற் றையே பெரும்பாலும் பாங்கர் விரும்பித் தேர்ந்துகொள்கின்றனர் (prefer). மேலும், அவற்றின் விலைகளைப் பிறவற்றோடு ஒப்பிடும்

பொழுது அவை சீராக (நிலையாக) இருப்பது விளங்கும். போரினாலோ அல்லது பிற நெருக்கடியான அரசியல் குறுக்கீட்டினாலோ அவற்றின் விலைகள் சற்றுக்குறைய வழியிருக்கிறதெனினும், இயல்பான காலங்களில் அவற்றின் ஏற்றிறக்கம் மிகக்குறுகிய எல்லைகளுக்குட்பட்டிருப்பது கண்கூடு. ஒரு குறிப்பிட்ட இந்திய பாங்கு அதன் தொடக்கக்காலத்திலிருந்து செய்து வந்தது போல, நடைமுதலின் பெரும்பகுதியை இது போன்ற ஈடுகளில் பாங்கொன்று முதலீடு செய்தால், அதன் இலாபம் மிகக் குறைவாக இருப்பதில் வியப்பொன்றுமில்லை; ஏனெனில், இந்த ஈடுகளிலிருந்து பெறும் வருவாயில் அதன் (பாங்கின்) கடன் செலவு போக நிற்கும் எச்ச ஓரம் (margin) மிகச் சிறியதாகவே இருக்கும்.

**பொது நலக் கம்பெனிகளின் ஈடுகள்**

மக்களின் நலனுக்கு இன்றியமையாத பணிகளை ஆற்றுதலும், பண்டங்களை அளித்தலும் பொதுநலக் கம்பெனிகளின் தொழிலாகும். குடிநீர், மின்சாரம், எரிவளி (gas) ஆகிய பொருள்களையும், போக்குவரத்து, தொடர்புச் சாதனம் ஆகிய வசதிகளையும் அளிக்கும் கம்பெனிகள் பொது நலத்தின் அச்சாணிகளாகத் திகழ்வதால், பொதுநலத் தொழிலமைப்புகள் என அவற்றை அழைக்கிறோம். மின்சாரம், மின்னூர்தி (tramways), எரிவளி, தொலைபேசி ஆகிய வசதிகளை அளிக்கும் கம்பெனிகளும், நீர்மின்சார உற்பத்திக் கம்பெனிகளும் (hydro-electric power companies) பொதுநலக் கம்பெனிகளுக்குத் தக்க உதாரணங்களாகும். இவ்வாறு வாழ்க்கைக்கின்றி அமையாத பொருள்களையும் வசதிகளையும் அளிக்கும் இக்கம்பெனிகளின் பணி மிகவும் திடமான தொழிலாகக் கருதப்படுவதால், இவற்றின் ஈடுகள் மிகவும் பாதுகாப்பானவை என்று பொதுவாக மதிக்கப் பெறுகின்றன. மேலும், குறிப்பிட்ட இடங்களில் பண்டங்களையோ அல்லது வசதிகளையோ அளிப்பதற்கு அவை பெரும்பாலும் சர்வாதீன உரிமை (monopoly) பெற்றுள்ளன. எனவே, முதல் தரப் பொதுநலக் கம்பெனிகளின் கடன்பத்திரங்களிலும், சிற்சில சமயங்களில் அவற்றின் பங்குகளிலும், தமது நிதிகளின் ஒரு பகுதியை முதலீடு செய்வதற்கு பாங்குகள் தயங்குவதில்லை. பொதுநலக் கம்பெனிகளுடைய ஈடுகளின் செல்வாக்கு ஐரோப்பாவில் மிகக் குறைவானதாக இருப்பினும், அமெரிக்காவில் மிகுதியானது என்பது நோக்கற்பாலது.

இரயில்வே, இந்திய வானூர்திக் கார்ப்பரேஷன் (Indian Airlines Corporation), பன்னாட்டு இந்திய வானூர்தி போன்ற

பொதுநலக் கம்பெனிகளை நாட்டு உடைமைகளாக்க இந்திய அரசாங்கம் முனைந்திருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள மின்சாரக் கம்பெனிகளை நாட்டுடைமையாக்குவதற்கான மசோதாவைத் தமிழ்நாட்டு அரசாங்கம் நிறைவேற்றியுள்ளது. பன்னாட்டு இந்திய வானூர்தி உட்பட விமானப் போக்குவரத்து முழுவதையும், தொலைபேசிக் கம்பெனிகளனைத்தையும் இந்திய அரசாங்கம் ஏற்கெனவே எடுத்துக்கொண்டுவிட்டது.

### தொழிலியல் ஈடுகள்

தற்கால வாழ்க்கைக்குத் தேவைப்படும் பல்வேறு பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை உற்பத்தி செய்தல், வழங்கல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டுள்ள கம்பெனிகளின் பங்குகள், பங்குத் தொகுப்புகள், பிணையப்பத்திரங்கள், கடன் பத்திரங்கள் முதலிய ஈடுகள் இந்த வகையில் சேரும். பொருள் செய் தொழில்கள், வாணிகம், எடுதொழில்கள், கடல்போக்கு வரத்து என நான்கு வகைகளாக இக்கம்பெனிகளின் தொழில் களைப் பகுக்கலாம். ஒவ்வொரு வகைக் கம்பெனியும் சில சிறப்பு அமிசங்களைப் பெற்றிருக்கின்றன. பலவகைக் கம்பெனிகளும் வெவ்வேறு விதமாக வணிகநிலை மாறுபாடுகளால் தாக்கப்படு கின்றன. இக்கம்பெனிகளை அவற்றின் தொழில்தன்மைக்கேற்ற வாறு பாகுபடுத்தி, பல இனங்களாகப் பங்குமாற்று நிலையம் பிரிக் கிறது. உதாரணங்கள், இரும்பும் எஃகும், மின்பொருள், சுரங்கம், நெசவு, எரியெண்ணெய், பொறிவண்டி, இன்னபிற இனங்கள் ஆகியவை.

### பாங்கரும் தொழிலியல் ஈடுகளும்

பிற வகை ஈடுகளில் பாங்கர்கள் செய்யும் முதலீடுகளோடு ஒப்பிடும்பொழுது, தொழிலியல் ஈடுகளில் அவர்களின் முதலீடு பெரும்பாலும் குறைவாகவே இருப்பது விளங்கும். இதுவரை நாம் கண்டவற்றைப் போன்று இந்த வகையைச் சேர்ந்த ஈடுகள் அனைத்தும் அவ்வளவு பாதுகாப்பானவையாகக் கருதப் படுவதில்லை. சில வகைத் தொழிற்கம்பெனிகளின் சலுகைப் பங்குகள் போன்ற ஈடுகள் பாதுகாப்பானவையாகவும், முதலீடு செய்வதற்கு உகந்தவையாகவும் இருக்கலாம். ஓரளவு சீரான வருவாயையும் அவை தரலாம். ஆனால், அவற்றின் விற்பனை வாய்ப்பு குறைவானதாகையால், பாங்கர்கள் பெரும்பாலும் அவற்றை விரும்புவதில்லை. சிறப்பீடுகள் தரும் குறைவான வருவாயோடு மனநிறைவைப் பெறுதவர்களையும் இது போன்ற

கம்பெனிகளின் பங்குகள், பங்குத் தொகுப்புகள் முதலியவற்றில் முதலீடு செய்வதால் ஏற்க வேண்டிய ஆபத்துகளைக் கண்டு அஞ்சாதவர்களையும் இது போன்ற ஈடுகள் கவருகின்றன. எனவே, அவர்கள் அவற்றின் பங்கு மூலதனத்துக்கும் கடன் பத்திர வெளியீடுகளுக்கும் தாராளமாகப் பணம் வழங்குகின்றனர். ஏனெனில், மணியான ஈடுகளைக்காட்டிலும் உயர்வருவாயைத் தரும் வாய்ப்பை அவை அளிக்கின்றன. சில தொழில் நிலையங் களின் கடன்பத்திரங்கள் தக்க பாதுகாப்பானவையாக மதிக்கப் பெறுகின்றன ; அவற்றின் சலுகைப் பங்குகள் ஓரளவு நம்பக மானவை; சாதாரணப் பங்குகள் ஊக வாணிகத்திற்குகந்தவை. ஆனால், பின்னுரிமைப் பங்குகளோ மிக்க ஆபத்தானவை. பங்குகளின்மீது அவை செலுத்தும் இலாப ஈவு, அவற்றின் இலாப அளவைப் பொறுத்தது. ஆனால் இலாபமோ, கச்சாப் பொருள்களின் விலை, கூலி, பொதுச்செலவு, அவை தயாரித்த பொருள்களின் வேட்புநிலை ஆகிய பல காரணிகளைச் சார்ந்துள்ளது. இவற்றில் ஏதாவது ஒன்று மாறினாலும், இலாப ஈவு செலுத்தக் கூடிய அந்தக் கம்பெனியின் ஆற்றல் உயர்ந்தாலும் உயரலாம் ; தாழ்ந்தாலும் தாழலாம். மேலும், இது போன்ற நிலையங்களின் இலாபம் மட்டுமல்ல, மூலதனமும் பாதுகாப்பாக இருக்குமா என்பதே அவற்றை நிருவகிப்பவர்களின் நுண்ணறிவு, நாணயம், ஆற்றல் ஆகியவற்றைச் சார்ந்துள்ளன. ஆனால், சிறப்பீடுகளின் நிலைமை வேறு ; கட்டணங்கள், கப்பல்துறைக் கட்டணம், இரயில் சத்தம், கப்பல் சத்தம், இன்னபிற வரவுகள் ஆகியவை மேற்கூறிய காரணிகளை மிகக் குறைந்த பாகையே சார்ந்துள்ளன. வட்டி, கடன் தீர்வு நிதிகள் ஆகியவற்றுக்குத் தேவையான பணம், இந்த வரவுகளிலிருந்து ஒதுக்கப்படுவதால், மணியான ஈடுகள் மெய் யாகவே மணியானவைதான் என்பது வெளிப்படை. ஆயினும், தொழிலியல் ஈடுகளை வாங்க பாங்கர் முடிவு செய்திருந்தால், பின்னுரிமைப் பங்குத் தொகுப்புகளைக்காட்டிலும் சாதாரணப் பங்குகள், சாதாரணப் பங்குகளைக்காட்டிலும் சலுகைப் பங்குகள், அவற்றைக்காட்டிலும் கடன் தொகுப்புப் பத்திரங்கள் சிறந்தவை என்பதை அவர் கருத்திற்கொள்ள வேண்டும்.

### தொழில் நிலைமானிகள் (Business Barometers)

வணிக நிலைமைகள், ஈடுகளின் விலைகளைப் பாதிக்கின்றன. குறிப்பாக, வணிக, தொழில் நிலையங்களின் ஈடுகளை மிகவும் பாதிக்கின்றன என்பது அனைவரும் அறிந்ததே. எனவே, இந்த நிலைமைகளை மக்கள் அறிவதற்குகந்த முறையில் அரசாங்கமோ, மைய பாங்கோ, நம்பகமான வேறோர் அமைப்போ தொழில்

நிலைமானிகளை வெளியிடுதல் மிகவும் விரும்பத்தக்க பணியாகும். அண்மையில் இத்துறையில் சில முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. வானிலையைக் குறிசொல்லும் கழகத்தை ஒரு நாட்டில் ஏற்படுத்துவதைப்பற்றிய திட்டம் ஏளனத்திற்கிடமான நிகழ்ச்சி நெடுங்காலத்திற்கு முன் நடந்ததல்ல என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். இந்திய ரிசர்வு பாங்கின் பொருளாதாரத் துறையும், புள்ளி விவரத் துறையும், இந்திய அரசாங் கத்தின் பொருளாதார அறிவுரைஞரும் இந்திய வாணிக நிலையைப்பற்றிய மதிப்பீட்டைத் தாங்கிய பல அறிக்கைகளை வெளியிடுகின்றனர். பல வகை ஈடுகளில் முதலீடு செய்யும் பொது மக்களுக்கு இவை பயனுள்ளவையாக இருக்கின்றன. பங்குமாற்ற நிலைய ஈடு வியாபாரம் செய்யும் புகழ்பெற்ற பங்குத்தரகு நிறுவனங்கள் வெளியிடும் வார அறிக்கைகளையும், செய்தித்தாள் களும் சில வார ஏடுகளும் தாங்கியுள்ள நிதிப்பத்திகளையும் நாம் படித்துப் பயனுறலாம். மேலும், இங்கிலாந்தில் வெளிவரும் ஃபைனான்ஷியல் ரெவ்யூ ஆஃப் ரெவ்யூஸ், நம் நாட்டில் வெளி வரும் இந்தியன் ஃபைனான்ஸ், ஈஸ்டெர்ன் இகானமிஸ்ட், கேபிடல், காமெர்ஸ் ஆகிய ஏடுகள், சந்தையில் வழங்கும் பல்வேறு ஈடுகளின் வளர்ச்சி, போக்கு ஆகியவற்றைச் சிறப்பாக ஆராய் வதுடன் விலைகளின் ஏற்ற இறக்கங்களைப்பற்றி நம்பகமான குறியீட்டையும் தருகின்றன. அது போலவே, மேற்கத்திய நாடுகளிலுள்ள சில பாங்குகள், பொருளாதார, நிதி நிலைமைகளை ஆராய்ந்து மாத அறிக்கைகளைப் பதிப்பிக்கின்றன. அண்மையில் பம்பாயிலுள்ள சில செய்தித்தாள்களும், இகனமிக் டைம்ஸ், ஃபைனான்ஷியல் எக்ஸ்பிரஸ் போன்ற ஏடுகளை வெளியிடத் துவங்கி யுள்ளன. இது நல்ல அறிகுறி; பயனுள்ள பணி என்பவற்றை யாரும் மறுக்க முடியாது.

## கடனும் கடன் வகையறுக்களும்

### கடன், கடன் வகையறுக்களின் முக்கியத்துவம்

சாதாரண காலங்களில் பெரும்பான்மையான பாங்குகள் பங்குமாற்ற நிலைய ஈடுகளில் முதலீடு செய்யும் நிதி அவ்வளவு பெரி தல்ல என்பதைக் கண்டோம். எனவே, 265, 266ஆம் பக்கங்களில் உள்ள அட்டவணைகள் தெளிவாக்குவதுபோல், தங்கள் நிதிகளை ஈடுபடுத்த மேற்கூறிய வழிகளன்றிப் பிற இலாபகரமான துறை களையும் எதிர்நோக்க வேண்டிய தேவை பாங்குகளுக்கு ஏற்படு

கிறது. இவற்றில் மிக முக்கியமானவை கடன், அதிகப்பற்று ஆகியவற்றை வழங்குதலும், வாணிக உண்டியல்களைக் கொள் முதல் செய்தல், வட்டம் கழித்து வாங்குதலும் ஆகும். லண்டனி லுள்ள தீர்வு பாங்குகள் வெளியிடும் மாத அறிக்கையின்படி, 1960ஆம் ஆண்டு இறுதியில், தங்கள் மொத்த வைப்புக்களான 7,121 மில்லியன் பவுண்டுகளில் 3,323 மில்லியன் பவுண்டுகளை அவை கடனாகக் கொடுத்திருந்தன. இந்தியாவில் 1960ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் தேதி இந்திய அட்டவணையிலிட்ட பாங்குகள் தங்களின் மொத்த வைப்புக்களான 1,582,99 இலட்ச ரூபாய்களில் 925.49 இலட்ச ரூபாய்களைக் கடனாக அளித்திருந்தன. தங்கள் வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் வசதியளித்தல் தற்கால பாங்குகளின் தலையாய பணிகளில் ஒன்று என்பதைத் தொடக்க அத்தியாயத்தில் முன்பே கூறியுள்ளோம். இக்கடன் வசதி பல வடிவங்களில் கொடுக்கப்படினும், அவற்றினிடையே அடிப்படை யான வேறுபாடு எதுவுமில்லை. பெருவாரியான நிகழ்ச்சிகளில் பாங்குகள் கடனையும், கழிவுநீக்கி உண்டியல்களை வாங்கும் தொகைகளையும் வாடிக்கைக்காரர்களின் நடப்புக் கணக்குகளில் வரவு வைக்கின்றன. பிறகு வேண்டும்பொழுது அத்தொகையைச் செக்குகள் மூலமாக வாடிக்கைக்காரர்கள் எடுத்துக்கொள்ளு கின்றனர் அல்லது பிறருக்குச் செலுத்திவிடுகின்றனர். எனவே, வாடிக்கைக்காரர் ஒருவருக்காக பாங்கர் உண்டியலைக் கழிவு நீக்கி வாங்கும்பொழுது, அந்த உண்டியலின் தொகையைக் கழிவுநீக்கி, முன்னவரின் நடப்புக் கணக்கில், அவர் வரவு வைக்கிறார். பாங்கு களின் கடனளிப்புப்பணி மிகவும் முக்கியம் வாய்ந்ததாகத் தற்பொழுது திகழ்கிறது. எனவே, எந்த பாங்கு ஆயினும், இந்நூலில் நாம் முதன்மையாக ஆராயும் குறிப்பாக வாணிக பாங்குகளைப் பொறுத்தவரை, இப்பணியைப் புறக்கணிக்கவே இயலாது.

நாணயமாற்று, தரகு, கட்டணங்கள் ஆகியவற்றிலிருந்து வாணிக பாங்கு பெறும் வரவுகள், அதனுடைய இலாபத்தின் கனிசமான பகுதியாக அமையினும், கடன், கழிவு நீக்கி வாங்கல் ஆகியவற்றின்மீது அது விதிக்கும் வட்டியின் மூலமாகத்தான் அதன் வருவாயின் முக்கிய பங்கை அது ஈட்டுகிறது. எனவே, கடன்களைப் பொறுத்தவரை பாங்கரின் நிலைமை என்ன என்பதை ஆழ்ந்து ஆராய வேண்டும். இருப்பினும், அதற்கு முன்பு, இப்பணியில் அவருக்குத் தக்க வழிகாட்டியாக அமையும் சில பொதுக்கோட்பாடுகளை இங்கு ஆராயலாம்.

## இந்தியாவிலுள்ள பெரிய ஐந்து பாங்குகளின் வைப்புக்களுக்கும் கடன்களுக்கும் உள்ள விகிதம்

| ஆண்டு | தி அலகாபாத்து பாங்கு | | | தி பாங்கு ஆஃப் பரோடா | | | தி பாங்கு ஆஃப் இந்தியா | | | தி பஞ்சாப் நேஷனல் பாங்கு | | | தி சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % |
| | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | |
| 1935 | 9,95,49 | 3,57,31 | 35.9 | 5,82,55 | 1,84,37 | 31.6 | 16,16,51 | 8,10,65 | 50.1 | 5,47,88 | 2,85,60 | 52.1 | 27,97,02 | 8,69,72 | 31.1 |
| 1936 | 10,66,69 | 5,89,59 | 55.3 | 7,00,10 | 2,47,00 | 35.3 | 17,02,95 | 8,90,76 | 52.3 | 6,09,89 | 3,66,31 | 60.1 | 31,93,00 | 10,38,08 | 32.5 |
| 1937 | 10,97,50 | 5,54,22 | 50.5 | 6,84,04 | 2,86,24 | 41.8 | 17,13,71 | 8,57,94 | 50.1 | 6,96,47 | 3,95,18 | 56.7 | 30,68,38 | 11,78,63 | 38.4 |
| 1938 | 11,16,17 | 5,22,82 | 46.8 | 7,17,45 | 2,85,12 | 39.7 | 17,25,22 | 7,95,91 | 46.1 | 6,82,98 | 4,26,91 | 62.5 | 31,03,01 | 12,63,08 | 40.7 |
| 1939 | 11,89,79 | 6,33,13 | 53.2 | 6,99,14 | 3,39,68 | 48.6 | 18,59,51 | 9,54,11 | 51.3 | 7,15,05 | 4,34,47 | 60.8 | 29,86,82 | 13,95,18 | 46.7 |
| 1940 | 12,37,85 | 5,31,29 | 42.9 | 7,48,49 | 3,43,28 | 45.9 | 22,27,61 | 7,41,20 | 33.3 | 8,02,97 | 3,47,87 | 43.3 | 32,49,88 | 12,04,35 | 37.1 |
| 1941 | 12,97,64 | 4,71,44 | 36.3 | 9,60,01 | 4,61,18 | 48.0 | 25,86,03 | 10,38,12 | 40.1 | 9,80,30 | 3,93,62 | 40.2 | 41,31,90 | 16,15,69 | 39.1 |
| 1942 | 16,84,43 | 5,52,31 | 32.8 | 13,26,72 | 3,66,95 | 27.7 | 36,82,34 | 9,04,42 | 24.6 | 15,46,33 | 4,45,68 | 28.8 | 59,65,34 | 13,81,73 | 23.2 |
| 1943 | 20,87,60 | 7,14,61 | 34.2 | 20,73,95 | 6,30,41 | 30.4 | 55,13,88 | 13,20,76 | 24.0 | 26,43,16 | 8,19,44 | 31.0 | 81,63,71 | 22,80,88 | 27.9 |
| 1944 | 22,93,88 | 8,45,54 | 36.9 | 26,47,94 | 6,95,85 | 26.3 | 60,82,72 | 14,37,03 | 23.6 | 37,75,81 | 10,25,19 | 27.2 | 94,48,67 | 27,47,63 | 29.1 |
| 1945 | 28,74,90 | 13,66,75 | 47.5 | 29,67,95 | 10,57,88 | 35.6 | 59,01,54 | 19,04,41 | 32.3 | 51,52,46 | 14,42,44 | 28.0 | 1,05,23,41 | 33,74,32 | 32.1 |
| 1946 | 26,33,98 | 12,97,45 | 49.3 | 32,69,23 | 14,44,50 | 44.2 | 64,40,37 | 24,81,10 | 38.5 | 62,02,30 | 24,68,69 | 39.8 | 1,13,52,22 | 52,89,21 | 46.8 |

## இந்தியாவிலுள்ள பெரிய ஐந்து பாங்குகளின் வைப்புக்களுக்கும் கடன்களுக்கும் உள்ள விகிதம் (தொடர்ச்சி)

| ஆண்டு | தி அலகாபாத்து பாங்கு | | | தி பாங்கு ஆஃப் பரோடா | | | தி பாங்கு ஆஃப் இந்தியா | | | தி பஞ்சாப் நேஷனல் பாங்கு | | | தி சென்ட்ரல் பாங்கு ஆஃப் இந்தியா | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % | வைப்பு | கடன் | % |
| | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | | ரூ. (000) | ரூ. (000) | |
| 1947 | 29,38,02 | 14,09,89 | 48.0 | 32,80,79 | 11,39,44 | 34.7 | 68,63,36 | 26,68,94 | 38.9 | 59,64,00 | 23,38,87 | 39.2 | 1,23,15,37 | 44,35,44 | 36.0 |
| 1948 | 28,16,99 | 14,06,25 | 49.9 | 35,22,39 | 13,44,24 | 33.2 | 66,29,09 | 26,13,47 | 39.4 | 55,02,83 | 27,77,01 | 50.5 | 1,32,24,45 | 44,49,50 | 33.6 |
| 1949 | 28,49,61 | 12,30,97 | 43.2 | 30,83,61 | 13,57,44 | 44.0 | 59,37,98 | 25,90,98 | 43.6 | 42,94,58 | 17,21,83 | 40.1 | 1,21,73,38 | 38,79,87 | 31.9 |
| 1950 | 27,08,77 | 14,00,72 | 51.7 | 31,84,01 | 14,14,56 | 44.4 | 59,50,44 | 32,24,87 | 54.2 | 44,19,93 | 17,88,72 | 40.5 | 1,26,80,74 | 43,86,13 | 34.6 |
| 1951 | 28,11,21 | 15,82,60 | 56.3 | 31,32,15 | 17,09,34 | 54.6 | 55,62,78 | 37,81,66 | 68.0 | 51,94,34 | 21,99,60 | 42.3 | 1,23,86,05 | 51,30,08 | 41.4 |
| 1952 | 26,44,13 | 13,53,53 | 51.2 | 29,17,12 | 13,22,75 | 45.3 | 53,76,63 | 28,35,46 | 52.7 | 58,94,02 | 26,89,55 | 45.6 | 1,22,11,97 | 48,59,57 | 39.8 |
| 1954 | 33,01,59 | 18,98,32 | 57.4 | 34,85,38 | 25,50,18 | 73.1 | 60,38,16 | 39,74,94 | 65.8 | 75,63,84 | 32,40,40 | 42.8 | 1,23,97,06 | 60,07,14 | 48.4 |
| 1955 | 35,90,96 | 22,56,39 | 62.8 | 40,51,62 | 30,41,56 | 75.0 | 67,55,37 | 46,09,54 | 68.2 | 90,12,26 | 42,02,21 | 46.6 | 1,28,66,32 | 72,20,70 | 56.1 |
| 1956 | 33,82,89 | 18,37,13 | 54.3 | 45,13,84 | 28,85,93 | 63.9 | 66,05,64 | 42,10,49 | 63.7 | 1,05,56,75 | 46,08,36 | 43.6 | 1,36,23,76 | 72,83,29 | 53.4 |
| 1958 | 43,29,46 | 22,37,74 | 51.7 | 67,10,39 | 33,55,67 | 50.0 | 84,76,04 | 52,10,72 | 61.5 | 1,28,29,18 | 57,80,13 | 45.1 | 1,59,09,96 | 85,09,58 | 53.5 |
| 1959 | 48,91,75 | 24,97,89 | 51.1 | 80,90,60 | 42,31,29 | 52.3 | 98,02,81 | 59,78,25 | 61.0 | 1,39,86,40 | 59,93,68 | 42.9 | 1,77,26,90 | 1,00,95 81 | 57.0 |
| 1960 | 50,79,67 | 27,14,37 | 53.4 | 34,95,87 | 48,73,18 | 57.3 | 1,06,32,90 | 75,92,99 | 71.4 | 1,38,13,74 | 80,44,06 | 58.2 | 1,95,62,17 | 1,28,88,62 | 65.8 |

## பொதுக்கோட்பாடுகள்

### பாதுகாப்பு

'பாதுகாப்பு தலையாயது' என்பதே கடனளிப்புப் பணியைப் பொறுத்தவரை பாங்கரின் முதலாவது நெறிமுறையாக அமைய வேண்டும். கடன்கள் பாதுகாப்பாக இருப்பதைப் பொறுத்துத் தான் அவர் வாழ்வே இருக்கிறது. எனவே, மிகுதியான இலாபத்தை அளிக்கும் கடன்களில் நாட்டங்கொண்டு, அவை பாதுகாப்பான வையா என்பதைக் கண்டறிய மறந்துவிடக் கூடாது. அதாவது இலாபத்தில் மயங்கி, பாதுகாப்பைக் கைவிடக் கூடாது. முழுப் பாதுகாப்பு இல்லாவிட்டால், பாங்கு கடன் தராது என்னும் நம்பிக்கை இதையொட்டித்தான் மக்களிடையே வளர்ந்தது போலும். இது எல்லா பாங்குகளும் முயன்று எய்த வேண்டிய குறிக் கோளான கருத்து என்பதில் ஐயமேதுமில்லை. ஆனால், பாங்குகளி டையே நிலவும் கடும்போட்டியின் விளைவாக, ஒவ்வொரு பாங்கும் தனது வாடிக்கைக்காரர்களின் ஆள்திறப்பிணையத்திற்கு (personal security) எதிராகச் சிலபொழுது கடன்தர வேண்டிய நிலையில் உள்ளது. இதுபோன்ற தறுவாய்களில் பாங்கு நிருவாகி அறிவார்ந்த முடிவுக்கு வந்து, தன் விருப்புரிமையைப் பயன்படுத்த வேண்டும்; வாடிக்கைக்காரரின் வலிமைக்கு மீறிய கடனை ஒருபொழுதும் தரக் கூடாது. எனவே, பாங்கொன்று திடமான நிலைமையில் என் றென்றும் இருக்க வேண்டுமாயின், வாடிக்கைக்காரர்களுக்கு அது தரும் கடன்கள் தக்க பாதுகாப்புள்ளவையாக இருக்க வேண்டும் என்னும் தலையாய கோட்பாட்டை வழுவாது கடைப்பிடித்தல் இன்றியமையாதது. கடனுகத் தரும் நிதிகள் இழக்க வேண்டிய ஆபத்துக்கு உட்படாமல் இருக்கின்றனவா என்று ஆழ்ந்து கவனிக்க வேண்டியது பாங்கரது பெரும் பொறுப்பாகும்.

### ரொக்கத்தன்மை

இரண்டாவதாக, தாம் கொடுக்கும் கடன்கள் நீண்டகாலம் வெளியில் அடைபட்டுக் கிடக்காதவாறு இருக்கின்றனவா என்று ஒவ்வொரு பாங்கரும் கண்டறிய வேண்டும்; இல்லையெனில், ரொக்கத்தன்மை குன்றியவையாக அவை அமைவதோடு, நெருக்கடி நிலைமைகளில் அவற்றை விற்று ரொக்கமாக்குதல் அரிது. நிலைத்து நிற்கும் தன்மை வாய்ந்த கடன்களை அளித்தல் வாணிக பாங்குகளின் பணியல்ல. வாணிக, தொழில் நிலையங் களுடைய புரள்-முதலின் (circulating capital) ஒரு பகுதியை மட்டுமே வாணிக பாங்குகள் கடனுக அளித்தல் போதுமானது. நிலம், கட்டடம், பொறிகள் போன்ற நிலையான சொத்துக்களை

வாங்கத் தேவையான தொகையையும், புரள்-முதலின் குறைந்தது ஒரு பகுதியையும் திரட்டியளிப்பது அந்தத் தொழிலமைப்பின் உரிமையாளர்களது பொறுப்பாகும். அவர்களால் இயலாது போனல், நெடுந்தவணைக் கடன்களை அளிக்கும் பணியில் சிறப்பாக ஈடுபட்டுள்ள நிதிநிலையங்களிலிருந்து அவர்கள் தேவையான நிதியைப் பெற வேண்டும். வாணிக பாங்கின் பொறுப்புக்கள் கேட்கும்பொழுதோ அல்லது குறுகிய கால அறிவிப்பிலோ திரும்பச் செலுத்த வேண்டிய இயல்புடையவையாகையால், குறுந் தவணைக் கடன்களை மட்டுமே அது தர இயலும். நிலையான சொத்துகளுக்காக அது கடன் தந்திருந்து, பெரும்பான்மையான வைப்பாளிகள் தங்கள் வைப்புக்களைத் திரும்ப எடுக்கும் நிலைமை ஏற்பட்டால், அவர்களின் தேவைகளைச் சமாளிக்க வேண்டிய அந்த நேரத்தில் அந்தக் கடனைத் திருப்பிக்கேட்டுப் பணத்தைப் பெறுதல் அவ்வளவு எளிதல்ல. காப்புறுதி நிதியீட்டுக்கும் (insurance finance), பாங்குத் தொழிலுக்கும் முக்கியமான வேறுபாடு ஒன்று இருக்கிறது. 'அடைமான நிதியீட்டுக்கும் உண்டியல் நிதியீட் டுக்கும் உள்ள வேறுபாட்டை ஆழ்ந்தாராய்ந்து அறிந்திருப்பதில் தான் பாங்கியலின் கலைத்திறம் அடங்கியுள்ளது.' அடைமானம், ஏறத்தாழ நிலையான முதலீடாகும். எனவே, பொதுவாக அது பாங்குக்குகந்த பிணையமல்ல. மாருக, செம்மையான உண்டியலை வட்டம் கழித்து வாங்குதல் திடமான பாங்குக்குகந்த பேர மாகும். ஆனல், தொழிற்பாங்குகளின் இயல்பு இவற்றினின்றும் மிக்க மாறுபட்டது. அவற்றின் மூலதனம் பெரிது; பிணையப் பத்திரங்களையும் கடன்பத்திரங்களையும் வெளியிட்டு அவை திரட்டும் கடனும் நீண்ட காலத்திற்கானது. எனவே, நிலையான சொத்துகளை வாங்குவதற்கு வாணிக, தொழில் நிலையங்களுக்குத் தேவைப்படும் (நெடுந்தவணைக்) கடனை அச்சமின்றி அவை தரலாம்; மேலும், அவற்றின் பொறுப்புக்கள் கேட்கும்பொழுதோ அல்லது குறுகிய கால அறிவிப்பிலோ முதிர்வடையும் (திரும்பச் செலுத்த உரியதாகும்) தன்மையானவையல்ல. எனவே, கொடுத்த கடன்களைத் திரும்பப்பெற அவை பல ஆண்டுகள் காத்திருக்கவும் இயலும். ஐக்கிய அரசில் நிலவிவரும் பாங்கியலின் நடைமுறை யினின்றும் மாறுபட்ட நடைமுறை இரண்டாம் உலகப் போருக்கு முன்பு ஐரோப்பாக் கண்டத்தில், உ-ம். ஜெர்மனியில், நிலவி வந்தது. ஐரோப்பாக் கண்டத்தில் தொழில், வாணிக நிலையங் களில் பாங்குகள் தங்கள் நிதிகளைப் பெருமளவு முதலீடு செய்தன. இதன் விளைவாகத் தொழிற்கூடங்களின் வெற்றியிலும் தோல்வி யிலும் பாங்குகளுக்கு நேரடியான ஈடுபாடு இருந்ததுடன் அவற்றின் நிருவாகத்தில் நெருங்கிய தொடர்பையும், அதைக் கட்டுப்படுத்தும் வன்மையையும் அவை பெற்றிருந்தன. இது திட

மான பாங்கியலைப் பற்றிய ஆங்கிலேயரின் இலட்சியக் கருத்துக்கு ஒவ்வாத நடைமுறையாகும். அண்மை ஆண்டுகளில், தொழிலின் நிதியீட்டில் (industrial finance) இந்திய பாங்குகளின் பங்கு முக்கியமடைந்து வருவதைக் காணலாம். இவை ஈந்த கடன்களில் பெரும்பான்மையானவை நடைமுதல் தேவைகளுக்காகக் கேட்கும்பொழுது திருப்பித்தர வேண்டியவையாக இருப்பினும், சாதன நிதியீட்டை (equipment finance) அளிப்பதில், இவை அக்கரை காட்டி வருகின்றன. மறு-கடன் வசதி அளிப்பதன் மூலம் பாங்குகளின் செல்வதாரத்திற்கு ரொக்கத்தன்மை வழங்கும் மறுநிதிக் கார்ப்பரேஷன் போன்ற அமைப்புக்கள் தோன்றியது நற்பயன் விளைவிக்கத்தக்க முன்னேற்றம் என்பதில் ஐயமில்லை. அண்மையில் வகுத்த கடன் உத்தரவாதத் திட்டம் மேலும் ஒரு தூண்டுகோலாக அமைகிறது.

**கடனளிப்பு நோக்கங்கள்**

கடன் பெறுபவரின் (கடன்பெறும்) நோக்கம், அதைத் திருப்பித்தர இயலும் அவரது செல்வாதாரத் திண்மை ஆகியவற்றுக்கும், அக்கடனின் ரொக்கத்தன்மை, அதன் விரும்பத்தக்க தன்மை ஆகியவற்றிற்கும் முக்கிய தொடர்புண்டு, ஆக்கமற்ற (non-productive) ஊக வாணிக நோக்கங்களுக்காகத் தேவைப்படும் கடனைத் தருமுன், ஒன்றுக்கிருமுறை பாங்கர் எண்ணிப் பார்க்க வேண்டும். கடன்பெறு நோக்கம் செம்மையான வாணிகக் கூற்றாக இருக்கலாம்; ஆனால், நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கக்கூடியதாக இருந்தால், அதை பாங்கு மறுக்க வேண்டும். தற்பொழுது பங்குக் கடன்களின்மீது சில 'அதிகார ரீதியான கட்டுப்பாடுகள்' விதிக்கப்பட்டுள்ளன; அவற்றிற்குட்பட்டுப் பணியாற்றுதல் பாங்கரின் கடமையாகும். உதாரணமாக, கடனீவதில் பாங்குகள் கடைப்பிடிக்க வேண்டிய கைக்கோளைத் தீர்மானிப்பதற்கும் எந்தெந்த நோக்கங்களுக்குக் கடன் தரலாம், தரக் கூடாது என்னும் நெறிகளை வகுத்து அறிவிப்பதற்கும் 1949ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 21ஆம் பிரிவு, ரிசர்வு பாங்குக்கு அதிகாரம் வழங்குகிறது. இந்த அதிகாரங்களையொட்டியே, தேர்வுக் கடன் ஒழுங்கு விதிகளை (selective credit regulation measures) ரிசர்வு பாங்கு வகுத்துள்ளது. பிரிட்டிஷ் பாங்குத் துறையிலும் அதிகார ரீதியான கடனளிப்புக் கட்டுப்பாடு நிலவுகிறது என்பதற்கு எண்ணற்றச் சான்றுகள் உள.

**பிணையம்**

கடனுக்கு எதிராக அளிக்கப்படும் பிணையங்கள் பல்திறப்படலாம்—காணி நிலத்திலிருந்து வணிகத்தாள்வரை (commercial

paper), கட்டடத்திலிருந்து கட்டித்தங்கம் வரை அவை மாறுபட லாம். கடன் வாங்குவோரின் ஆள்திறப்பிணையமின்றி வேறு பிணையங்களற்ற கடன்களும் இருக்கலாம். பிணையம் எதுவாக இருப்பினும், அது மாரிக்காலத்தே பயன்படும் பின்னணிக்காப்பே யன்றி வேறொரு சிறப்பும் அதற்கில்லை. எனவே, போதிய பெறு மானமுடையதாக அது இருக்கிறதா என்னும் ஒரே சிந்தனையின் அடிப்படையில் கடன் ஒன்றின் தகுதியை முடிவு செய்யக் கூடாது. ஆயினும், ஏற்றுக்கொண்ட பிணையம் போதுமானதாக, எளிதில் விற்கக் கூடியதாக, கையாள எளிதாக (easy to handle) வில்லங்க மற்றதாக இருக்க வேண்டும். அடுத்துள்ள அத்தியாயங்களில் பிணையங்களைப் பற்றி விரிவாக ஆராய்வோம்.

### பாங்கருடைய கடன்கள் பெரும்பாலும் கேட்கும்பொழுது திருப்பிச் செலுத்த வேண்டியவை

கடனளிப்பு ஒப்பந்தத்தின் வாசகங்களுக்கு (terms) இணங்க வாடிக்கைக்காரர் செயலாற்றும்வரை, கடனுகை அளித்த பணத் தைக் கொஞ்சகாலம் பயன்படுத்த அனுமதிக்கப்படுவார் என்பது வாய்மொழி உடன்படிக்கையாக இருப்பினும், கேட்கும்பொழுது திருப்பிச் செலுத்த வேண்டும் என்ற வடிவத்தில்தான் பாங்கர்கள் பெரும்பாலும் கடன் தருகின்றனர்; மேலும், கொடுத்த கடனை ரத்து செய்யவோ அல்லது அதன் தொகையைக் குறைக்கவோ தேவையான அதிகாரத்தைத் தங்களுக்கு ஒதுக்கி வைத்துக் கொள்ளுகின்றனர். ஆனால், இந்த அதிகாரத்தைப் பயன்படுத்து முன், நியாயமான அறிவிப்பை அவர்கள் கொடுக்க வேண்டும். மேற்கோளாக, 10,000 ரூபாய் அதிகப்பற்று தருவதாக பாங்கர் ஒருவர் தமது வாடிக்கைக்காரருக்கு வாக்குறுதி அளித்துவிட்டு, 5000 ரூபாயாக அதைக் குறைக்க விரும்பினால், அந்த வாடிக்கைக் காரருக்கு நியாயமான அறிவிப்பைக் கொடுக்க வேண்டும். அந்த அறிவிப்பைப் பெறுமுன் வாடிக்கைக்காரர் வெளியிட்ட செக்கு களை, ஆதியில் ஒப்புக்கொண்ட அதிகப்பற்று வரம்பை அவை மீறுதவரை, அவர் அவமதிக்கக் கூடாது. [ரௌஸ் (எ.) பிராட் பீபோர்டு பாங்கிங் கம். (1894) ஏ.சி. 595, 596 என்னும் வழக் கைக் காண்க.) ஆயினும், அந்த வாடிக்கைக்காரர் வைத்த பிணை யங்களின் மதிப்பு தேய்ந்து (depreciate), ஒப்பந்தப்படி நிலைநிறுத்த வேண்டிய எச்ச ஓரத்தை (margin) அவர் பேணுவதற்குத் தவறினால், அவரது செக்குகளை பாங்கர் அவமதித்தல் முறையான தாகும். அதே போல பாங்கருக்குத் தீமை நேருமாறு வாடிக்கைக் காரர் பிணையங்களைக் கையாண்டாலும், அவர் செக்குகளை பாங்கர் அவமதிக்கலாம். தமது உடைமையை பாங்கரிடம் நியாய அடைமானம் (equitable mortgage) வைத்துவிட்டு, பிறகு

வேறோர் ஆளிடம் அதைச் சட்ட அடைமானம் (legal mortgage வைப்பது, வாடிக்கைக்காரர் பாங்கருக்குப் பாதகமாகப் பிணையங் களைக் கையாளுவதற்குத் தக்க மேற்கோளாகும். வாடிக்கைக்காரர் அதிகப்பற்றுத் தொகையின் ஒரு பகுதியைத் திருப்பிச் செலுத்தி ஞலோ அல்லது மேலும் பிணையங்களை வைத்தாலோவன்றி, அதிகப்பற்றை ரத்து செய்யும் (அல்லது குறைக்கும்) தமது முடிவைப்பற்றி முன்னதாகவே அறிவிப்புத் தருதல் பாங்கரிடையே நிலவும் வழக்கமாகும்.

**காலாவதிச் சட்டம்**

காலாவதிச் சட்டத்தைப் பொறுத்தவரை, கடனை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம் : கடனாளிகளைத் திருப்பிச் செலுத்து மாறு கேட்க வேண்டிய தேவையுள்ள கடன்கள் முதல் வகையைச் சேரும். திருப்பிச் செலுத்துமாறு கடனீந்தவர்கள் முறையாகக் கேட்கும்வரை, இவற்றின் வாய்தா அமுலுக்கு வரத் தொடங்கு வதில்லை. உதாரணமாக, ஈடுகளைப் பிணையமாக வைத்துப் பெற்ற கடனைக் கேட்கும்பொழுது செலுத்துவதாகக் கடனாளி உறுதி மொழி அளித்திருந்து, திருப்பிச் செலுத்துக என்னும் கடிதத்தை அவருடைய இறுதியாகப் பதிவு செய்யப்பட்ட முகவரிக்கு அஞ்சல் மூலமாக அனுப்புதல் அவரைக் கேட்பதற்கு ஒப்பக் கருதப்படும் என்னும் வாசகமும் ஒப்பந்தத்தில் சேர்க்கப்பட்டிருந்தால், அது கேட்க வேண்டிய தேவையுள்ள கடனாகும். கடனாளிகளைத் திருப்பிச் செலுத்துமாறு கேட்கத் தேவையற்ற கடன்கள் இரண் டாவது வகையிலடங்கும். வெண்கடன்பத்திரங்கள் தாங்கியுள்ள கடன்கள் இந்த இனத்தைச் சேரும். இந்த வகைக் கடன்களின் வாய்தா கடன் கொடுத்த தேதியிலிருந்து அமுலுக்கு வரத் தொடங்குகிறது. கடனாளியின் இசைவின்றியோ அல்லது அவருக்குத் தெரியாமலோ வட்டியைக் கணக்கில் பற்றிடுதல், ஓடும் வாய்தாவைத் தடுத்து நிறுத்தாது. குறிப்பிட்ட கடனுக்குக் காலாவதிச் சட்டம் பொருந்தாதிருக்க, கடனாளியிடமிருந்து பெற்ற கடன் ஒப்புகை (acknowledgement of debt) எழுத்து மூலமாக இருக்க வேண்டும். பாங்கர் உத்தரவாதத்தைப் பெறுந் தறுவாயில் 'எழுத்து மூலமாக அவரைக் கேட்கும்பொழுது' உத்தரவாதி (surety) பணத்தைச் செலுத்த வேண்டும் என்னும் பகர்வை (provision) அந்த ஒப்பந்தத்தில் சேர்த்துக்கொள்வதால், காலாவதிச் சட்டம் அந்த ஒப்பந்தத்திற்குப் பொருந்துவதில்லை; எனவே, மூன்றுண்டுகளுக்கு ஒருமுறை அதைப் புதுப்பிக்க வேண்டிய தேவையில்லை. மேற்கூறிய பகர்வை அந்த ஒப்பந்தத்தில் சேர்க்காதிருப்பின், மூன்றுண்டுகளுக்கொருமுறை அதைப் புதுப் பிக்க வேண்டும். கேட்கும்பொழுது செலுத்தத்தக்க உண்டியல்,

வெண்கடன் பத்திரம் ஆகியவற்றின் தேதிகள், அவை வெளியிடப்பட்ட தேதிகள் ஆகிய இவையிரண்டில் எது பிந்தியதோ அன்றிலிருந்து அவற்றின் வாய்தா அமுலுக்கு வரத் தொடங்குகிறது. காணும்பொழுது (at sight) செலுத்தத்தக்க முறிகளின் வாய்தா, அவை சமர்ப்பிக்கப்படும் தேதியிலிருந்தும், குறிப்பிட்ட காலப் பகுதி கழியும்போது செலுத்தத்தக்க முறிகளின் வாய்தா, செலுத்துவதற்கு அவை உரியனவாகும் தேதியிலிருந்தும் ஓடத் தொடங்குகிறது.

**எல்லா நிதிகளையும் ஒரு தொழிலிலோ அல்லது ஒரே இனத்தைச் சேர்ந்த தொழில்களிலோ முதலீடு செய்யக் கூடாது**

ஒரு தொழிலின் தேவைகளையோ அல்லது ஒரே இனத்தைச் சேர்ந்த தொழில்களின் தேவைகளையோ நிறைவேற்றத் தமது நிதிகளின் பெரும்பங்கைப் பயன்படுத்துவதை ஒவ்வொரு பாங்கரும் தவிர்க்க வேண்டும். இது தந்நலத்தைக் காக்கமட்டுமல்ல, பொதுநலத்தையும் பேணுவதற்குகந்த ஓர் எச்சரிக்கையாகும். எல்லா முட்டைகளையும் ஒரே கூடையில் வைத்தல் அறிவீனமான செயலென்று மீண்டும் மீண்டும் கூறவும் வேண்டுமோ?

**சில வாடிக்கைக்காரர்களுக்குப் பெரும்பெருந்தொகைகளைக் கடனாகக் கொடுப்பதைக்காட்டிலும் பலருக்கு நடுத்தரமான தொகைகளைக் கடன் வழங்குதல் சிறந்தது**

பாங்கர், சில வாடிக்கைக்காரர்களுக்குப் பெரும்பெருந் தொகைகளைக் கடனாகக் கொடுப்பதைக்காட்டிலும், பலருக்குச் சுமாரான தொகைகளைக் கடனளித்தல் மிகவும் சிறந்தது. ஏனெனில், கடனைத் திருப்பிச் செலுத்தப் பலர் தவறுவதைக் காட்டிலும், சிலர்—அதுவும் பெருங்கடனாளிகள்—தவறுவதற்கு மிகுதியான வாய்ப்புண்டு. இதனால் தமக்கு விளையும் இடையூறுகளை பாங்கர் சமாளித்தல் எளிதன்று. சில வாடிக்கைக்காரர்களிடம் தமது நிதிகளின் பெரும்பங்கைச் சிக்க வைத்ததன் விளைவாக வீழ்ச்சியுற்ற பல பாங்குகளின் சோகக்கதைகள், ஆங்கில பாங்கியலின் பண்டை வரலாற்றில் மலிந்துள்ளன. ஓர்-ஆள் கட்டுப்பாட்டுக்குட்பட்ட (one man's control) சில நிறுவனங்களுக்குத் தமது நிதிகளின் பெரும்பகுதியைக் கடனாக வழங்கியதால் சரிந்த சில பாங்குகள் இந்தியாவிலும் இருந்திருக்கின்றன. இந்த நோக்கத்தைக் குறிக்கோளாகக்கொண்டுதான், அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள பாங்குகள் தமது மூலதனம், உபரிநிதிகள் (surplus) ஆகியவற்றின் கூட்டில் குறிப்பிட்ட பகுதிவரைதான் ஓர் ஆளுக்கோ

அல்லது கூட்டு நிறுவனம் அல்லது கம்பெனி ஒன்றுக்கோ கடனுக அளிக்கலாம் என்னும் உச்சவரம்பை, அந்நாட்டின் நேஷனல் பாங்குச் சட்டம் (National Banking Act) விதிக்கிறது.

**கடன், கடன் வகையரு ஆகிய முதலீடு போதுமான வருவாயைத் தர வேண்டும்**

குறிப்பிட்ட ஒரு கடனைத் தரலாமா வேண்டாமா என்று பாங்கர் முடிவு செய்வதற்குமுன் ஆராய வேண்டிய மற்றொரு முக்கியமான காரணி, அது அளிக்கவிருக்கும் வருவாயின் அளவைத் தெரிந்துகொள்வதாகும். பாங்கு, கடன்பெறும் வீதத்திற்கும் கடன்தரும் வீதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு தான் அதனுடைய மொத்த இலாபமாகும் ; எனவே, போதுமான எச்ச ஓரத்தை (margin) இலாபமாகத் தர இயலாத கடனைப்பற்றி பாங்கர்கள் பொதுவாக எண்ணிப் பார்ப்பதுகூட இல்லை. இருப்பினும், கடன் பெறும் கடனளிக்கும் வீதங்களினூடேயுள்ள எச்ச ஓரத்தைப்பற்றி ஆணித்தரமான கடும் விதிகளை வகுக்க இயலாது. ஆயினும், இரண்டிலிருந்து இரண்டரை விழுக்காடாகவாவது அது இருப்பது நியாயமானதே.

## இந்திய பாங்குகள் வழங்கும் கடன்கள்

**கடன்கள்**

இந்திய பாங்குகள் வழங்கும் கடன் இரண்டு வகைப்படும். முதலாவது சுத்தக்கடன் (clean advance) ; அதாவது துணைப் பிணையங்களற்ற கடன்; இரண்டாவது துணைப்பிணையங்களிணைந்த கடன். கடனுளியின் ஆள்திற நாணயத்தோடு (personal credit-சொந்த நாணயத்தோடு) அவரது வெண்கடன் பத்திரத்திற்கு உத்தரவாதமளிக்கும் முகத்தான் இடப்பட்ட இரண்டாவது கையொப்பமும் கூடிய பின்னணிக்காப்பின் எதிராக வழங்கப்படும் கடனுக்குச் சுத்தக்கடன் என்று பெயர். தொட்டுணரக்கூடிய தன்மையும், எளிதில் விற்பனையாகும் தன்மையும் பொருந்திய ஈடுகளை அடகாக (pledge) வைத்துக்கொண்டு, அதற்கு எதிராகத் தரும் கடன், துணைப்பிணையங்களிணைந்த கடன் என்று அழைக்கப் படும். கடன் பெறுபவரின் ஆள்திற நாணயத்திற்கு மட்டும் எதிராக அளிக்கப்படும் சுத்தக் கடன்கள் மூன்றுவது வகுப்பில் அடங்கும்; இவை மேற்கத்திய நாடுகளில் சாதாரணமாக வழங்கப் படுகின்றன. ஆனுல், இந்திய பாங்கர்கள் பொதுவாக இதை விரும்புவதில்லை; இவர்கள் விரும்புவது கடனுளிகள் கொடுக்கும்

வெண்கடன் பத்திரங்களுக்கு உத்தரவாதமளிக்கும் முறையில் காசுக்கடையாளர்களோ அல்லது கம்பெனிகளின் நிருவாகப் பதிலாள்களோ தங்கள் கையொப்பத்தை அவற்றில் இடுவது தான். மகாபாரத காலத்தில் தோன்றிய நாட்டு உண்டியலும் இரண்டு-பெயர்கொண்ட தாள்தான் (two-name paper) என்பது கண்கூடு. மத்திய பாங்கியல் விசாரணைக்குழு கூறியது போன்று, கீழ்க்கண்டவையே இந்தப் பிற்போக்கு மனப்பான்மையை உருவாக்கிய காரணிகளாகும் :—

(அ) முதன்மையான பணச்சந்தை மையங்களிலுள்ள கடன் பெறுபவர்கள், கடன் தருபவர்களிடையே தொடர்பு இல்லாதிருத்தலும், இதனால் ஒருவரையொருவர் தேவையான அளவு அறிந்திராதிருத்தலும்,

(ஆ) மேற்கத்திய நாடுகளில் 'ஒவ்வொருவருக்கும் தமக்கென்று ஒரு பாங்கு' (one man, one bank) இருப்பது போல இங்கு இல்லாதிருத்தல்,

(இ) முன்பு பாங்குகளிடமிருந்து கம்பெனிகள் கடன் பெறுவதற்குத் துணையாக அவற்றின் கடன் பத்திரங்களில் அவற்றின் நிருவாகப் பதிலாள்களும் (இரண்டாவது) கையொப்பமிட்டுக் கொடுத்தனர். அவர்கள் ஊட்டி வளர்த்த இந்த மரபு வேரூன்றி நிலைபெற்ற பிறகு, நிருவாகப்பதிலாண்மை முறைக்கு வலுவையும் ஆதரவையும் கொடுத்தது. எனவே, ஒன்றுக்கொன்றின் ஆதரவில் இரண்டுமே நிலையானவையாகிவிட்டன.

(ஈ) கடன்பெறுபவர்களின் நிதி நிலைமையைப் பற்றிய தகவல் அளிக்கும் நிலையங்கள்—செய்(ட்)ஸ், டன்ஸ் போன்ற நிறுவனங்கள் (Seyds and Duns)—இங்கு இல்லாதிருத்தல் ஆகியவை.

## ரொக்கக்கடன், அதிகப்பற்று, கடன்

### ரொக்கக்கடன்

ரொக்கக்கடன், அதிகப்பற்று, கடன் ஆகிய மூன்று வடிவங்களில் இந்திய பாங்குகள் பெரும்பாலும் கடனளிக்கின்றன. ஒன்று அதற்கு மேற்பட்ட உத்தரவாதிகளின் நாணயப் பிணையப் பத்திரத்திற்கு (bond of credit) எதிராகவோ அல்லது பிற பிணையங்களுக்கு எதிராகவோ குறிப்பிட்ட வரம்புவரை கடன் வாங்க

பாங்கர் வாடிக்கைக்காரருக்கு அனுமதி அளிக்கும் ஏற்பாட்டிற்கு ரொக்கக் கடன் என்று பெயர் (பின்னிணைப்பு ஆ, படிவ எண் 28-ஐக் காண்க). இந்தியாவிலுள்ள பெரிய பெரிய வாணிக, தொழிற்கூடங்கள் அனைத்தும் விரும்புவது இம்முறைக் கடன் வசதியைத்தான். ஏனெனில், தமக்கு அளித்த கடன்தொகை முழுவதையும் வாடிக்கைக்காரர் உடனடியாக பாங்கிலிருந்து எடுக்க வேண்டும் என்ற தேவையில்லை; தேவையான தொகைகளை அவ்வப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துக்கொள்ளலாம்; அவ்வப்பொழுது உபரியாக உள்ள தொகைகளையும் அக்கணக்கில் திருப்பி இட்டு விடலாம். மேலும் ரொக்கக்கடன், அதிகப்பற்று ஆகிய கடன் வசதிகளைப் பெறும் வாடிக்கைக்காரர்கள் தாங்கள் மெய்யாகப் பயன்படுத்திய கடன் வசதிமீது மட்டுமே வட்டி செலுத்தப் பொறுப்பாகின்றனர். எனவே, இந்த இரு வகையான கடன் வசதிகளையும் அளிக்கும்பொழுது பாங்கர், தக்க வாடிக்கைக் காரர்களின் மெய்யான தேவை எவ்வளவு இருக்கலாம் என்று மதிப்பிட்டு அவ்வளவு தொகையை மட்டுமே ரொக்கமாக, இவற்றிலிருந்து எழும் தேவைகளை நிறைவேற்ற வைத்திருக்க வேண்டும். ஆயினும், வாடிக்கைக்காரரின் உண்மையான எடுப்பு மதிப்பீட்டைக்(எதிர் பார்த்ததைக்)காட்டிலும் குறைவானதாகப் போகும்பொழுது, வெட்டியாக அவர் வைத்திருந்த எச்ச ரொக்கத் தினுல் வட்டி வருவாயை அவர் இழக்க நேரிடுகிறது. இந்த இழப்பைத் தவிர்க்கும் நோக்கத்தோடுதான் ‘பாதி அல்லது காற்பகுதி வட்டிச்சரத்தை’ (one-half or one-quarter, interest clause) ரொக்கக் கடன் ஒப்பந்தத்தில் பாங்கர் சேர்த்துக்கொள் கின்றனர். இச்சரத்தின் விளைவாக, வாடிக்கைக்காரர் பயன்படுத் தினுலும் அன்றியும், அவருக்கு அனுமதி அளிக்கப்பட்ட ரொக்கக் கடன் வரம்பில் முறையே பாதி அல்லது கார்பகுதித் தொகைக்கு அவர் வட்டி செலுத்தப் பொறுப்பாகிருர்.

**அதிகப்பற்று**

தற்காலிகமான கடன் வசதியை வேண்டும் வாடிக்கைக்கார ருக்குத் துணைப்பிணையங்களின் எதிராக, அவருடைய நடப்புக் கணக்கிலிருந்து பாங்கர் அதிகப்பற்று அளிக்கலாம். ரொக்கக் கடனைப் போலவே இந்த ஏற்பாடும் வாடிக்கைக்காரருக்கு நன்மை யானதாகும். ஏனெனில், உண்மையாகவே அவர் பயன்படுத்திய அதிகப்பற்றுத் தொகையின்மீதுதான் அவர் வட்டி செலுத்தப் பொறுப்பாகிருர். எனினும், அதிகப்பற்று சிற்சில சமயங்களில் மட்டுமே பயன்படுத்தக்கூடிய கடன் வசதியாகும்; ஆனல், ரொக்கக்கடனின் தன்மை அவ்வாறுனதல்ல; முறையான

வாணிபத்தில் ஈடுபட்டிருக்கும் வாணிப, தொழிலமைப்புகள் தொடர்ச்சியாக நெடுங்காலத்துக்குப் பயன்படுத்தும் கடன் வசதி யாகும் இது. இதுவே அவையிரண்டிற்கும் உள்ள அடிப்படை வேறுபாடாகும். ஆயினும், நடைமுறையில் இந்த வேறுபாடு கடைப்பிடிக்கப்படுவதில்லை. சில பாங்குகள் அதிகப்பற்றுக்கும் முறையான வரம்புகளை அமைக்கின்றன.

**பிணைப்புப்பத்திரங்கள், தொடர்ந்த பிணையக்காப்புக்கு வழி வகுக்க வேண்டும்**

ரொக்கக்கடன், அதிகப்பற்று ஆகிய கடன்களுக்குப் பிணைய மாக பாங்கர் ஏற்றுக்கொள்ளும் பத்திரங்கள், தொடர்ந்த பிணையக்காப்புக்கு வழி வகுக்க வேண்டும்; அதாவது அக்கடனின் கணக்கு வரவு இருப்பையோ அல்லது கடன்பெற்றவருக்குப் பொறுப்பேதுமில்லை என்றோ காட்டினாலும், பிணையக்காப்பு தொடர்ந்து கிட்ட வேண்டும். இல்லையெனில், அக்கணக்கில் அடுத்துச் செய்யப்படும் பற்றுப் பதிவுகள் பின்னணிக்காப்பற்றுப் போக நேரும். குறிப்பாக மூன்றும் ஆள்கள் உத்தரவாதம் அளித் துள்ள கணக்குகளைப் பொறுத்தவரை, பாங்கர் அவசியம் மேற் கொள்ள வேண்டிய எச்சரிக்கையாகும் இது.

**கடன்**

பாங்கர் கடன் ஒன்றை முழுத்தொகையாக அளித்து, கடன் வாங்குபவரும் அவ்வாறே அதைப் பெற்று, உரிய காலத்தில் பெரும் பாலும் முழுத்தொகையாகவே அதைத் திருப்பிச் செலுத்துமாறு இருக்குமாயின், கடன் என அது அழைக்கப்படுகிறது. வாடிக்கைக் காரர் அதை முழுமையாகவோ அல்லது அதன் ஒரு பகுதியையோ திருப்பிச் செலுத்திவிட்டு, மேலும் கடன் வசதி அளிக்க வேண்டு மென்று கோரும்பொழுது, பாங்கர் அவ்வாறே அளிக்க உடன் பட்டாலும் வேறு கடனாகத்தான் அதைத் தர இயலும். அப்பொழுது அவர் விதிக்க விரும்பும் எந்தக் கட்டுப்பாட்டையும் விதிக்கலாம். எனவே, ரொக்கக்கடன், அதிகப்பற்று ஆகிய கடன் வசதிகளை அளிக்கும்பொழுது எச்சமான ரொக்கத்தை வைத்திருப்ப தால் பாங்குக்கு நேரும் வட்டியிழப்பு, கடனை அளிக்கும்பொழுது நேருவதில்லை. மேலும், ரொக்கக்கடன், அதிகப்பற்று ஆகிய கடன் வசதிக் கணக்குகளிலிருந்து வாடிக்கைக்காரர்கள் அவ்வப் பொழுது பணத்தை எடுப்பதும், உபரித்தொகைகளை வெவ்வேறு சமயங்களில் அவற்றில் இடுவதுமாக இருப்பதால், அவற்றைப் பற்றிய பேரங்கள், கடனைப்பற்றிய பேரங்களைக்காட்டிலும் மிக அதிகமானவையாகப் பெருகுகின்றன. பாங்கர் செய்ய வேண்டிய வேலைகளும் மிகுதியானவை ; எனவே, அவற்றைக்காட்டிலும்

கடன் கணக்குகளின் (loan accounts) இயக்கச் செலவு (operating cost) குறைவானதாக இருக்கிறது. இதன் விளைவாக, ரொக்கக் கடன், அதிகப்பற்று ஆகியவற்றைக்காட்டிலும் குறைந்த வட்டிக்குக் கடனளிக்கலாம் என்பது நியாயமான கோரிக்கை யாகவே தோன்றுகிறது.

## தவணைக்கடன் (Term Loan)

ஓர் ஆண்டுக்கும் மேற்பட்ட குறிப்பிட்ட காலத்திற்குக் கடன் ஒன்று தரப்பட்டு, கேட்கும்பொழுது ஒரே தடவையில் திருப்பிச் செலுத்த வேண்டியதாக இல்லாது, திருப்பிச் செலுத்தும் அட்டவணைக்கு (schedule of repayment) ஏற்ப, பகுதிப் பகுதியாகத் திருப்பிச் செலுத்தத் தக்க கடனுக்குத் தவணைக் கடன் என்று பெயர். தவணைக்காலம் ஓர் ஆண்டுக்கு அதிகமாக ஐந்திலிருந்து ஏழாண்டுகளை மீறுமல் இருந்தால், நடுத்தரத் தவணைக்கடன் என்று பொதுவாக அழைக்கப்படுகிறது ; திருப்பிச் செலுத்த வேண்டிய தவணைக்காலம் நீண்டதாக இருக்கும் கடன் நெடுந்தவணைக் கடனுகும். நிலைமுதல் தேவைகளுக்காகத்தான் பெரும்பாலும் தவணைக்கடன் கொடுக்கப்படுகிறது ; ஆயினும், சிற்சில சமயங் களில் நடைமுதல் தேவைக்காக இது கொடுக்கப்படுதல் எவரும் அறியாததல்ல ; குறிப்பாக, நிலையான சொத்துக்களின் எதிர்கால வருவாய்களிலிருந்தும், பொதுவாக, கடன்பெற்றவரின் எதிர்கால வருவாய்களிலிருந்தும் இது திருப்பிச் செலுத்தத் தக்கது. எனவே, கேட்கும்பொழுது திருப்பிச் செலுத்தத்தக்க சாதாரண வாணிபக் கடனைக்காட்டிலும், தக்க முறையில் ஆற அமர (sustained) இதைப்பற்றிய பல்வேறு காரணிகளை மதிப்பிட்ட பிறகுதான், இந்தக் கடனை அளிப்பது பற்றி பாங்கு முடிவு செய்ய வேண்டும்.

## பங்குகொற்கடன் (Participation Loan)

ஒன்றுக்கு மேற்பட்ட நிதியமைப்புகள் ஒன்று சேர்ந்து கொடுக்கும் கடனுக்குப் பங்குகொற்கடன் என்று பெயர். ஒரு கடனில் பல பாங்குகள் பங்கு கொள்வதற்குத் தக்க காரணங்கள் இருக்கலாம், அதாவது பங்குகொள்ளும் அமைப்புகள் தனித்தனி யாகத் தாங்க முடியாதவாறு அவ்வளவு ஆபத்து நிறைந்ததாக அந்தக் கடன் இருக்கலாம், அல்லது அந்தக் கடன் தருவதைத் தொடர்ந்து செய்ய வேண்டிய செயல்களும் மேற்கொள்ள வேண்டிய பொறுப்புக்களும் கடினமானவையாக இருந்து, அவற்றை அவை தனியாகச் செய்ய இயலாது, ஒன்று கூடினுல் மட்டுமே செய்ய இயலும் என்ற நிலையிருக்கலாம். பங்குகொற் கடன்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மிகுந்த செல்வாக்கை

அடைந்துவிட்டன. அதற்கான காரணங்கள் பின் வருமாறு: (அ) அங்கு நிலவி வரும் இருமையான பாங்கு முறை (dual banking system), (ஆ) போதுமான செல்வாதாரமில்லாத ஒற்றைப் பாங்குகள் (unit banks), பெரும் நகர பாங்குகளைப் பங்கு கொள்ளுமாறு நாடுதல், (இ) கடனீவதின்மீது விதிக்கப்பட்டுள்ள சட்டத் தடைகள், நாட்டு பாங்குகளின் (national banks) செலுத்திய முதல், காப்புநிதிகள் ஆகியவற்றின் மொத்தத் தொகையில் 10% மேலாக ஓர் ஆளுக்கு (அல்லது கூட்டு நிறுவனத் திற்கு அல்லது கம்பெனிக்கு) கடனளிக்கக் கூடாது என்று அவற்றைத் தடை செய்கின்றன, (ஈ) அசையாச் சொத்துக்களை வாங்குவதற்கு பாங்குகள் கடனளித்தலும், இக்கடன்கள் ஆபத்து நிறைந்தவையாக இருப்பதும் ஆகும். இந்தியாவில் மாபெரும் பாங்குகள், தனித்திறமை பெற்ற பிற நிதியமைப்புகள் ஒருபுறமும், எண்ணிறந்த சிறு வாணிக பாங்குகள் கூட்டுறவு பாங்கு நிலையங்கள் மறுபுறமும் இருந்தும், கடனளிப்பில் குறிப்பாக வளர்ப்பு நிதியளிப்பில் (development financing) அவை பங்கு கொள்ள வளமான வாய்ப்பிருந்தும் பங்குகொற்கடன்கள் நம் நாட்டில் இன்னும் முக்கியத்துவம் பெறுதிருத்தல் வியப்பே.

## தனிநபர் கடன் (Personal Loan)

தற்கால பாங்கியல் விரைவாக முன்னேறுகிறது என்பதை வலியுறுத்தும் மற்றொரு சான்றாக ஆள்நலக் (தனிநபர்) கடன்கள் எழுந்துள்ளன. இக்கடன்கள், தொழில், வாணிகக் கடன்களைப் போலன்றி, வாடிக்கைக்காரர்களின் வாழ்க்கைத்தரம் உயரவும் இன்ப வாழ்வு நடாத்தவும் தேவையாகவுள்ள பொருள்களை அவர்கள் வாங்கிக்கொள்ள வசதியாக அளிக்கப்படுகின்றன. வீட்டை அலங்கரிக்கவும், பழுது பார்க்கவும், வானொலிப்பெட்டி, மோட்டார் கார், குளிர்முறைக் காப்புப்பெட்டி (refrigerator), தட்டுமுட்டுப் பொருள், பணிச் சாதனங்கள் (professional equipment) ஆகியவற்றைப் போன்ற பொருள்களை வாங்குவதற்கும் இக்கடன் அளிக்கப்படுகிறது. இது துணைப்பிணையமற்றது; இரண்டு ஆண்டுகளுக்குள் எளிதான மாதத் தவணைகளாகச் செலுத்தத் தக்கது. அமெரிக்காவில் ஆள்நலக் கடன்கள் மிகச் சாதாரண அமிசமாக அமையும் அளவிற்கு விரிவடைந்து விட்டன. ஆயினும், ஐக்கிய அரசு நாட்டில் 1958ஆம் ஆண்டி லிருந்துதான் கடனளிப்புக் கட்டுப்பாடு சற்றுத் தளர்த்தப் பட்டதைத் தொடர்ந்து, இதுபோன்ற கடன்களை பாங்குகள் வழங்கத் துவங்கியுள்ளன. ஐக்கிய அரசில் நிலவும் திட்டத்தில் புதுமையான அமிசமொன்று உள்ளது. யாதெனில், முழுக்

கடனையும் திருப்பிச் செலுத்துமுன் கடனுளி இறந்து விட்டால், நிலுவையாக நிற்கும் தொகையைப் போக்கெழுதிவிட வேண்டும் (written off); அது மாண்டவருடைய வாரிசுகளிடமிருந்தோ (heirs) அல்லது வழியுரிமை பெற்றவர்களிடமிருந்தோ (successors) மீட்கப் படுவதில்லை. தங்களுடைய பிரிட்டிஷ் கூட்டாளிகளின் வழியைப் பின்பற்றிச் சில இந்திய பாங்குகளும் இத்துறையில் துணிகரமாக இறங்கியுள்ளன. ஆனால், செயல்முறை பாங்குக்கு பாங்கு மாறுபடு கிறது.

**வாணிக பாங்குகள் அளிக்கும் கடன்மீது ரிசர்வு பாங்கின் கட்டுப்பாடு:** பாங்குக் கம்பெனிகள் அளிக்கும் கடன்களின்மீது விரிவான கட்டுப் பாட்டதிகாரங்களை 1949ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிச் சட்டம், ரிசர்வு பாங்குக்குக் கொடுத்துள்ளது. பாங்குக் கம்பெனி யொன்று தன்னுடைய பங்குகளின் பிணையமாகக் கடன் தரவும், தன்னுடைய இயக்குநர்களுக்குத் துணைப்பிணையங்களற்ற கடன் தரவும் இயலாதவாறு பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 20ஆம் பிரிவு தடை விதிக்கிறது; மேலும், தானோ அல்லது தனது இயக்கு நரோ, கூட்டாளி அல்லது நிருவாகப் பதிலாள் என்னும் தகுதியில் அக்கறை கொண்டுள்ள கூட்டு நிறுவனங்களுக்கோ, தனிக்கம்பெனி களுக்கோ, அல்லது தனது இயக்குநர் உத்தரவாதியாக இருக்கும் ஓர் ஆளுக்கோ, கூட்டு நிறுவனங்களுக்கோ, தனிக்கம்பெனி களுக்கோ துணைப்பிணையமற்ற கடனைத் தராதவாறு தடை செய்யப்பட்டுள்ளது. மேலும், தானோ தனது இயக்குநரோ அக்கரை கொண்டுள்ள கம்பெனிகளுக்குக் கொடுக்கப்பட்ட துணைப்பிணையங்களற்ற கடன்களனைத்தையும் காட்டும் மாத விவரத் தாக்கல்களை (returns) அப்பாங்குக் கம்பெனி ரிசர்வு பாங்கிடம் சமர்ப்பிக்க வேண்டியிருக்கிறது. இவ்விவரத் தாக்கல் களைத் துருவி ஆராயும்பொழுது, அந்த பாங்குக் கம்பெனி, தனது வைப்பாளிகளுடைய நலனுக்குக் கேடாகக் கடன் கொடுத்து வருகிறது என்பது தெரிய வந்தால், கீழ்க்காணும் நடவடிக்கைகளை ரிசர்வு பாங்கு எடுக்கலாம் :

(i) இது போன்ற கடன்களை மேலும் தராதவாறு அப்பாங்குக் கம்பெனியைத் தடை செய்யலாம். (ii) இது போன்ற கடன்களின்மீது மேலும் சில கட்டுப் பாடுகளை விதிக்கலாம். (iii) இக்கடன்களைக் குறிப்பிட்ட காலத்திற்குள் வசூல் செய்யுமாறு அப்பாங்குக் கம்பெனிக்குக் கட்டளை பிறப்பிக்கலாம். மேலும், எந்தெந்த நோக்கங்களுக்குக் கடன் தரலாம், தரக் கூடாது, காக்க வேண்டிய எச்ச ஓரம், கடன்களின்மீது

விதிக்கப்படும் வட்டிவீதம் ஆகியவற்றைப்பற்றி பாங்குக் கம்பெனிகள் கடைப்பிடிக்க வேண்டிய கைக்கோளை வகுக்கும் அதிகாரத்தை அச்சட்டத்தின் 21ஆம் பிரிவு, ரிசர்வு பாங்குக்கு அளித்திருக்கிறது.

# 10. நிதிகளை ஈடுபடுத்தல் (தொடர்ச்சி)

பாங்குக் கம்பெனிகள் தாங்கள் அளிக்கும் கடன்களை, ஈட்டுக் காப்புள்ளவை, ஈட்டுக்காப்பற்றவை என்று வகைப்படுத்த வேண்டுமென பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 20ஆம் பிரிவு கூறுகிறது. தொட்டுணரக்கூடிய தன்மையும் பெறுமானமுமுள்ள உடைமைகளின் ஈட்டுக்காப்புக்கு எதிராகத்தான் இந்தியாவிலுள்ள பாங்குகள் பெரும்பான்மையான கடன்களைக் கொடுக்கின்றன. பிணையப்பத்திரங்கள், பங்குகள், பாங்கரின் பண்டடையிலோ (godown), பந்தகச் சீட்டின்கீழ்க் (letter of hypothecation) கடனாளியின் பண்டடையிலோ வைக்கப்பட்டுள்ள வாணிகச் சரக்குகள், அசையாச் சொத்துகள் போன்ற உடைமைகளே பிணையங்களாகப் பொதுவாக அமைகின்றன. ஆயினும், சிற்சில சமயங்களில் எந்தவொரு (துணைப்) பிணையமுமின்றிக் கடன் தரப்படுகிறது. ஈட்டுக்காப்பற்ற கடனைப்பற்றி முதலில் நாம் காண்போம்.

## ஈட்டுக்காப்பற்ற கடன்

கடன் பெறுபவரின் ஆள்திறப்பிணையத்தை மட்டுமே நம்பி பாங்கு கடனளித்திருந்தால், அது ஈட்டுக்காப்பற்ற கடனாகும். வாடிக்கைக்காரரின் ஆள்திற நாணயமே இக்கடன்களுக்குத் தலைமையான ஆதாரமாக அமைகிறது. எனவே, நாணயம் என்பதென்ன, அதன் ஆதாரம் எது, வாடிக்கைக்காரர் ஒருவரின் நாணயத்தை பாங்கர் மதிப்பிடும்பொழுது கருத்திலிருத்த வேண்டிய முக்கியச் செய்திகள் யாவை ஆகியவற்றைச் சுருக்கமாகக் கூறுதல் இன்றியமையாதது.

'நாணயம்' என்னும் சொல், அறிவியல் நூல்களிலும், சாதாரணப் பேச்சு முறையிலும் வெவ்வேறு பொருளில் வழங்கு

கிறது. பாட நூல்கள் தரும் இச்சொல்லின் வெவ்வேறு இலக்கணங்கள் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன. ஒவ்வோர் எழுத்தாளரும் இச்சொல்லின் வெவ்வேறு மூலக்கூறுகளை வற்புறுத்துவதால், இந்த மாறுபாடு தோன்றுகிறது.

'சமமதிப்பை எதிர்காலத்தில் திருப்பித்தர வேண்டிய பொறுப்பை உள்ளடக்கிய சரக்கு மாற்றமே, நாணயம் என்பதன் எளிமையான பொருளாகும்' என்று பேராசிரியர் லாஃப்லின் அவர்கள் கூறுகிறார் (ஜே. சி. லாஃப்லின் அவர்கள் எழுதிய பணத் தத்துவங்கள் என்னும் நூல், பக். 72).

'தற்பொழுது ஒருவர் செய்யும் சேவை, அதற்கு மற்றொருவர் எதிர்காலத்தில் திருப்பித்தரும் கைம்மாறு இவையிரண்டின் பரிவர்த்தனையே' நாணயம் ஆகும் என்று கைன்ஸ் (Kines) அவர்கள் பகர்கிறார். இது, எதிர்காலம் என்னும் அமிசத்தை அளவுக்கு மீறி வற்புறுத்துகிறது என்று நேஸ் (Nasse) அவர்கள் குறை கூறுகிறார். நாணயம் என்பதற்கு இவர் இயம்பும் இலக்கணமாவது: 'ஒருவருடைய எதிர்காலச் செல்வத்திண்மையில் பிறருக்குள்ள நம்பிக்கையே நாணயம் ஆகும்; அவர், பிறருடைய உடைமைகளைக் கடனாகவோ அல்லது நுகர்வதற்கோ பெறுவதற்கு இந்த நம்பிக்கையே ஆதாரமாக அமைகிறது'. 'எதிர்காலச் செலுத்தலுக்குத் தற்பொழுதுள்ள உரிமையே' நாணயமாகும் என மெக்லாய்டு அவர்கள் மொழிகிறார்.

ரொக்கப் பேரங்களிலிருந்து நாணயப் பேரங்களை வேறுபடுத்தல்

நம்பு, நம்பிக்கை வை, நம்பிக்கையோடு இரு, திட நம்பிக்கை வை முதலிய உட்பொருளுடைய 'கிரெடியர்' (credere) என்ற சொல்லிலிருந்து 'நாணயம்' என்னும் சொல் பிறக்கிறது. எதிர்காலத்தில் ஒரு செயலைச் செய்வேன் (பெரும்பாலும் சம ரொக்கத்தை அல்லது சம மதிப்புள்ள பண்டத்தைத் தருவேன்) என்னும் வெளிப்படையான அல்லது குறிப்பான வாக்குறுதிக்கு எதிராகப் பிறருடைய சரக்குகளையும் சேவைகளையும் இப்பொழுது தருமாறு தூண்டவல்ல ஒருவரின் சக்தியே நாணயம் என மக்களிடையே வழங்குகிறது. மேற்கோளாக, திரு. தஸ்தூர் என்பவர் திருவாளர்கள் பிடே, ஆப்டே & கம். என்னும் நிறுவனத்தை அணுகி, 500 ரூபாய் பெறுமானமுள்ள சில சரக்குகளைத் தம்மிடம் கொடுக்குமாறும், மூன்று மாதங்கள் கழிந்து தாம் அத்தொகையைச் செலுத்துவதாகவும் கூறி, அந்நிறுவனத்தை வசப்படுத்த முடியுமாயின், நாணயப்பேரம் என்று அது கருதப்படும். இதற்கு மாறாக, ரொக்கத்தைக் கொடுத்து அச்

சரக்குகளைப் பெற்றால், ரொக்கப் பேரம் என்று அது அழைக்கப் படும். முதலாவது பேரத்தில் கால இடைவெளி இருப்பதும் (அதாவது சரக்கை வாங்குவதும், பணத்தைச் செலுத்துவதும் ஒரே நேரத்தில் நிகழ்வதில்லை; இரண்டிற்கும் ஊடே கால இடை வெளி இருக்கிறது), இரண்டாவது பேரத்தில் அது இல்லாமையுந் தான் அவையிரண்டிற்குமுள்ள முக்கிய வேறுபாடாகும். அது போலவே பணத்தைக் கடன் பெறுபவருடைய கடன் வாங்குதல், அதைத் திருப்பிச் செலுத்துதல் ஆகிய இரு செயல்களும் காலத் தால் பிரிக்கப்படுகின்றன. நாணயப்பேரமா ரொக்கப் பேரமா என்னும் வேறுபாட்டை அந்தச் செயலின் 'எதிர்காலத் தன்மையை' (futurity) மட்டும் கொண்டு சொல்ல முடியாது. கடன் பெறுபவரின் கடனைத் திருப்பிச்செலுத்தும் ஆற்றலிலும், ஆர்வத்திலும் கடனளிப்பவருக்கு நம்பிக்கை இருப்பதால், அவர் கடனளிக்கிறார். எனினும், நாணயம் நம்பிக்கையை மட்டுமே சார்ந்திருப்பதில்லை; எதிர்காலத்தில் எதிர்பார்க்கப்படும் கைம் மாறின் அடிப்படையில் சரக்குகளும் சேவைகளும் தற்பொழுது தரப்படுகின்றன. கடன் பெறுபவரிடம் கொஞ்சம் மூலதனம் இருக்கிறது, ஆக்க வேலைகளுக்கு அவர் அதைப் பயன்படுத்த முடியும், எனவே உரிய காலத்தில் கடனை அடைக்க அவரால் இயலும்; அவ்வாறு கடனை அடைக்க அவர் தவறினாலும், இறுதி முயற்சியாகத் தாம் அவருடைய உடைமைகளைத் தம் வசம் பெற்று, பயன்படுத்தி அல்லது விற்றுத் தமக்குரிய தொகையை மீட்க முடியும் என்று கடனீவோர் நன்கு அறிவதால், தற்பொழுது பணத்தைக் கடனாக அளிக்கிறார்.

### நாணயத்தின் ஆதாரம்

ஏன் ஒருவர் வேறொருவருக்குக் கடனளிக்க இசைகிறார் என் பதைப் பற்றி ஒருமித்த கருத்து நிலவவில்லை. நம்பிக்கையே நாணயப் பேரங்களுக்கு ஆதாரமாகத் திகழ்கிறது என்று பொது வாக நம்பப்படுகிறது. கடனளிப்பவர்களுக்குத் தவணை முடியும் பொழுது கடன்களைத் திருப்பிச்செலுத்தும் கடன் வாங்கியவர் களின் ஆற்றலிலும் ஆர்வத்திலும் நம்பிக்கை இல்லையென்றால், அற ஆர்வம் (philanthropic) அல்லது தனிப்பட்ட காரணங்களுக் காகப் பணத்தை (உதவியாக) வழங்கினாலன்றி, கடனாக அளிக்க அவர்கள் ஒருபொழுதும் எண்ணமாட்டார்கள். கடன் பெறு பவரிடம் அசையாத நம்பிக்கையும், அளிக்கும் கடனை மீட்க நீதி மன்றத்தின் உதவியை நாடும் தேவையிருக்காது என்ற திட நம்பிக்கையும் இருந்தாலன்றி, தெரிந்து, பாங்கர் கடனளிக்க மாட்டார். அவ்வாறாயின், நம்பிக்கையின் ஆதாரம் என்ன என்ற வினா எழும். இவ்வினாவுக்கு விடை கூறுதல், நாணயத்தின்

ஆதாரம் என்ன என்னும் வினவுக்கு விடையளிப்பதாகும். பண்பு, திறமை, மூலதனம் ஆகிய மூன்றும் நாணயத்தின் அச்சாணியாகத் திகழும் கோட்பாடுகளாகும். ஆங்கிலத்தில் இவற்றை நாணயத்தின் முத்திற 'C' (three C's of credit-character, capacity and capital) என்று அழைக்கிறோம்.[1] முத்திற 'C' என்பதன் பகரமாக முத்திற 'R' அதாவது, நம்பத்தக்கமை, பொறுப்புடைமை, செல்வாதாரம் (reliability, responsibility and resources) எனச் சில நூலாசிரியர் உரைக்கின்றனர். இவை ஒன்றுக்கொன்று தொடர்புடையவை என்பது வெளிப்படை. பண்பும் திறனும் உடையவரிடம் கொஞ்சம் மூலதனமும் இருக்கக்கூடும். இந்த முச்'செ' யுடன் மேலும் இரு 'செ'க்களை அமெரிக்க ஆன்றோர் சேர்த்துள்ளனர். அவை சொத்துப்பிணையம், சேர்க்கை (collateral and conditions) ஆகிய இரண்டுமாகும். இறுதியாகக் கூறப்பட்டுள்ள 'சேர்க்கை' என்பதற்குப் 'பொருளாதார நிலைமை அல்லது காலப் போக்கில் கடனளிப்பாபத்தை (credit risks) அதிகரிக்கவோ குறைக்கவோ வல்ல புறக்காரணிகளின் சேர்க்கை' என்று பொருள்.

**செம்மை (பண்பு)**

பண்பே ஒருவரின் தலையாய சொத்து. கடனைத் திருப்பிச் செலுத்தவல்ல கடனாளியின் ஆற்றல், அவருடைய செயல் திறனையும், செல்வத் திண்மையையும் சார்ந்திருக்கும்பொழுது, அதைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்னும் அவரது நேர்மை, அவருடைய செம்மையான பண்பைச் சார்ந்துள்ளது. கடன் வாங்குபவரின் நேர்மை மறுக்க முடியாத அளவு உறுதியாக இருக்க வேண்டும். குறிப்பாக, துணைப்பிணையத்தின் பெறுமானம் அளிக்கவிருக்கும் கடனைக்காட்டிலும் குறைவாக இருக்கும் பொழுது, இதன் தேவை இன்றியமையாததாகிறது. நேர்மையற்ற ஒருவருக்குத் துணைப்பிணையங்களின் எதிராகக்கூடக் கடனளிக்கக் கூடாது. ஏனெனில், பிணையமாக அவர் அளிக்கும் ஈடுகளின் பாலுள்ள அவரது உரிமை அப்பத்திரங்களைச் சாதாரணமாக ஆராயும்போது வெளிப்படாத ஏதாவதொரு சொல்லையுடையதாக (குறைபாடுடையதாக) இருக்கலாம்; அல்லது அறப்பொறுப் புறுதகைமையில் (fiduciary capacity), அந்த ஈட்டை வைத்திருப்பவர் என்பது (அதாவது அதைப் பிணையமாக வைக்க அவருக்குரிமை இல்லையென்பது) பிறகு வெளிப்படலாம். நியாய எதிரை (equitable charge) மட்டுமே பாங்கர் பெறும்பொழுது

[1] இதைத் தமிழில் முச்'செ' (அதாவது மூன்று 'செ') எனச் செம்மை, செயல் திறன், செல்வத் திண்மை முதலிய மூன்றையும் குறிக்குமாறு அழைக்கலாம்.

இது சிறப்பாகப் பொருந்தும். தம்மிடம் கொடுக்கப்பட்டுள்ள பிணையத்தில் பாங்கர், சட்ட உரிமையைப் (legal title) பெற்றாலும், அவரது நிலைமை மிக்க வலுவானதுதானெனினும், முற்றிலும் பாதுகாப்பானதல்ல (தாக்க முடியாததல்ல) ; ஏனெனில், சொத்தின் சட்ட அடைமானத்திற்கு எதிராகக் கடனளித்த பிறகு அதன் உரிமையாளர் குறைந்த வாடகையில் அதை நெடுங்குத் தகைக்கு ஏற்கெனவே விட்டிருப்பது தெரியவரலாம். இது போன்றவரின் நடப்புக்கணக்கைக் கையாளும்பொழுது, பாங்கர் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும். குறிப்பாக அவர் எழுதும் செக்குகள் அவருடைய கணக்கின் வரவில் இடப்படும் செக்குகள் ஆகியவற்றை மிக்கக் கவனத்துடன் கையாள வேண்டும். செம்மை, 'நேர்மையை' மட்டுமே கொண்டு அமைவதில்லை. 'அடக்கம், உரியபொழுது சுணங்காது செலுத்துதல், நற்பழக்கங்கள், ஆளுமை (personality), மேற்கொண்ட பணியைத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை அயராது செய்து முடிக்கும் ஆற்றலும் ஆர்வமும், நட்பொழுக்கமும் (reputation of the people with whom he deals) போன்ற பிற இயல்புகளும் சேர்ந்து வாடிக்கைக்காரர் ஒருவருடைய செம்மையை உருவாக்குகின்றன.'

கீழ்க்காணும் மேற்கோள்கள் நிலைமையைத் தெளிவாக்க உதவும் (ஜேம்ஸ் பி. த்ராண்ட் அவர்களின் பாங்கு நிருவாகம் என்னும் நூல் முதற்பதிப்பு, பக்கங்கள் 189-191);

**பொறுப்புணர்வின்மை** (Lack of Sense of Responsibility): மதிக்கத் தக்கவராகத் தோன்றும் ஒருவர் கடனளிக்குமாறு தமது பாங்குக்கு மனுச் செய்தார். உத்தரவாதமின்றி அவருக்குக் கடனளிக்க அந்த பாங்கு இசையாமல், அவருடைய வெண்கடன் பத்திரத்தில் அது அறிந்த அவருடைய நண்பர் ஒருவரின் கையொப்பத்தைப் பெற்று வருமாறு வினவியது. கடன் முதிர்வடைந்தபொழுது, அதைப் புதுப்பிக்குமாறு கடன் வாங்கியவர் அதற்கு (பாங்குக்கு) மனுச் செய்தார். உத்தரவாதியின் இசைவைப் பெற்று வந்தால் மட்டுமே கடன் புதுப்பிக்கப்படும் என்று பாங்கு வற்புறுத்தவே, பத்திரத்தைப் புதுப்பிப்பதற்கு உத்தரவாதி இசைய வேண்டும், அன்றி அவரே அதைச் செலுத்த வேண்டும் என யாதொரு மன உறுத்தலுமின்றி அவர் (கடன் வாங்கியவர்) கூறினார். தமது நண்பரின் அன்பை உணராமல், அவருக்குத் தாம் தரும் தொந்தரைகளைப் பற்றிச் சிறிதேனும் கவலையின்றி அவ்வாறு கூறிய அவர் கடனுக்கு உகந்தவரன்று (poor credit risk) என மதிக்கப்பட்டார். அவர் பொறுப்புணர்வற்றவராவர்.

**(நேர்மையான) நாணமான சூதாடி:** மிடுக்காக உடையணிந்த ஒருவர் ஒரு பாங்கு நிருவாகியை அணுகிக் கடன் கேட்டார். சிறு தொகையை அவர் கடனுகப் பெற்றுச் சென்ற பிறகு வேருெரு வாடிக்கைக்காரருடன் உரையாடும்பொழுது அவர் சூதாடி என்பதையும், ஆயினும் சூதாட்டத்தில் குதிரைக்கொம்பாகத் திகழும் நேர்மைக்கு அவர் பெயர் போனவர் என்பதையும் அந் நிருவாகி உணர்ந்தார். இங்குக் கடன் சிறியதாகையால், பாங்கு மேற்கொண்ட ஆபத்து பெரிய தல்ல. ஆயினும், போதுமான துணைப்பிணையங்களின் காப்பைப் (cover) பெற்றிருந்தாலன்றிச் சூதாடிக்குக் கடனளிப்பது பாங்கரது வழக்கமன்று.

**(நேர்மையற்ற) நாணயமற்ற வாடிக்கைக்காரர் :** நேர்மையின் மைக்கும் கடன் மறுதலிப்புக்கும் இகழார்ந்த (notorious) ஒருவர், கடனளிக்குமாறு பாங்குக்கு அடிக்கடி மனுச்செய்வதுண்டு; துணைப்பிணையங்களையும் அளிப்பார். ஆனுல், அவர் பொறுப் புணர்வும் நேர்மையுமற்றவராகையால், பாங்கு கடனளிக்க மறுத்துவிடும். தருமாறு வேண்டும் கடன்களுக்குப் போதிய உடைமைகளைப் பிணையமாக அளிப்பினும், இது போன்ற வாடிக்கைக்காரர்களிடம் பாங்கு உறவே வைத்துக்கொள்ளக் கூடாது.

### செயல்திறனும் செல்வத்திண்மையும்

நிலையாமைக்கும் பொய்மதிப்பீடு, தவறுரைத்தல், பிற மோசடி நடவடிக்கைகள் போன்ற பல தீமைகளுக்கும் உடைமைகள் உள்ளானவையாதலின், சொத்தாளரைக்(man of property)காட்டிலும் பண்பாளரே (man of character) மிக்க நாணயம் வாய்ந்தவர் (credit-worthy) என்று சிலர் கருதுகின்றனர். ஆள்-சாரா (impersonal) உறவின் முக்கியத்துவம் எழுந்தோங்கி யுள்ள தற்கால பேரளவு வணிகமுறைச் சூழலில் முச்'செ'யின் கடையிரு'செ'-க்களின்—செயல்திறன், செல்வத்திண்மை ஆகிய இரண்டின்—மகத்துவம் வெகுவாகப் பெருகியுள்ளது. செயல் திறனும் தொழிலமைப்பின் வெற்றி தோல்வியும் ஒன்றுக்கொன்று நெருக்கமாக இணைந்துள்ளன. எத்தொழிலுக்காக வாடிக்கைக் காரர் கடனளிக்குமாறு பாங்கரை வேண்டுகிருரோ,அத்தொழிலின் நெளிவு சுளுவு (insight-நுண்ணறிவு) தெரியாதவராக இருந்தால், அதனுல் பாங்கருக்கு 'இலாபம்' வருவதைக்காட்டிலும் 'இழப்பு' நேரத்தான் வாய்ப்புகள் மிகுதியாக இருக்கும். இறக்குமதி செய்யப்பட்ட உணவுப்பொருள் வாணிபத்தில் அதைப் பற்றிப்

போதுமான அளவு அறியாமல் ஒருவர் ஈடுபட்டால், சில பண்டங்கள் கெட்டுப்போவதால் அவர் நட்டம் அடையக் கூடும். உதாரணம், சாக்லெட்டுகள் கோடையில் கெட்டுப்போகும். புதிய தொழில் துறையில் ஏதும் அறியாமல் ஈடுபடும் அனுபவமற்ற வாடிக்கைக்காரருக்குக் கடனளித்து, அவர் ஏற்கும் ஆபத்தில் பங்குகொள்ளல் அறிவற்ற செயலாகும். வாடிக்கைக்காரரின் கடந்தகால சாதனையும் வரலாறும் பாங்கருக்கு வழிகாட்டியாக அமையும். கடன்வசதி கோரும் ஒருவர் மூன்றும் 'செ' ஆகிய செல்வத்திண்மையை உடையவராக இருக்க வேண்டும். ஏனெனில், எத்தொழிலிலும் வெற்றி முற்றிலும் உறுதியில்லை. ஒரு வேளை இழப்பு நேர்ந்தால், கடனீந்தவர்மீது அதைச் சுமத்தாமல் அவரே அதை ஏற்க இயலும்வண்ணம் போதிய செல்வத்திண்மை உடையவராக வாடிக்கைக்காரர் இருக்க வேண்டும். தேவையான மூலதனத்தின் பெரும்பங்கைக் கடனாக அளிக்குமாறு சிலர் தமது பாங்கரை வேண்டுகின்றனர். இது வாணிக பாங்குகளின் தொழிலே அல்ல; நெடுந்தவணைக் கடன்களை அளிப்பதில் சிறப்பாக ஈடுபட்டுள்ள தொழில் அல்லது நிதி நிலையங்களின் பணியாகும் இது. ஒரு தொழிலமைப்பின் உரிமையாளர்கள் அளித்துள்ள மூலதனத்தைக்காட்டிலும் மிகுதியாகக் கடனை பாங்கு அதற்குத் தரக் கூடாது என்பது பொதுவான ஒரு விதியாகும். இருப்பினும், இதற்கு ஒரு சில விதிவிலக்குகள் உள்ளன. நல்ல வேட்பும் (demand), எளிதில் விற்கக்கூடிய தன்மையுமுள்ள விளைபொருள் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள தரகர்களும், சரக்குடைப்பதிலாள் களும் (factors) தங்களுடைய சொந்த மூலதனத்தைக்காட்டிலும் அதிகமாகக் கடன் வாங்குவர் என்பதை இங்கு மேற்கோளாகக் காட்டலாம். ஆயினும், இம் முச்'செ'களுக்கும் பாங்கர் அளிக்க வேண்டிய முக்கியத்துவம் வாடிக்கைக்காரருக்குத் தக்கவாறு மாறுபடலாம். உதாரணமாக, இம்மூன்றில் இரண்டு 'செ'களை ஒரு வாடிக்கைக்காரர் போதுமான பாகை உடையவராயிருந்து மூன்றுவதைச் சிறிது குறைவாகப் பெற்றிருந்தாலும், அவருக்குக் கடனளிக்க பாங்கர் தயங்க மாட்டார்.

## நாணயத் தகவல் நிலையங்கள் (Credit Agencies)

நாணயத்தின் அடிப்படையாக விளங்கும் இம்மூன்று 'செ' களைப்பற்றித் தேவையான செய்திகளை எவ்வாறு பாங்கர் சேகரிப்பது என்பதே நாம் அடுத்து ஆராயவிருக்கும் வினவாகும். யாருடைய நாணயத்தைப்பற்றி விசாரித்தறிய வேண்டுமோ அவரிடம் வாணிகத்தொடர்பு கொண்டுள்ள தமது வாடிக்கைக் காரர்களையும் பிற ஆள்களையும் விசாரிப்பதன்மூலமும், எங்கெங்கு

நாணயத் தகவல் கழகங்கள் தோன்றிச் செயலாற்றுகின்றனவோ அங்கு அவற்றினிடமிருந்தும் செய்திகளைத் திரட்டலாம். இங்கிலாந்திலுள்ள செ(ய்)ட்ஸ் (Seyds), அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள டன்ஸ், பிராட்ஸ்டிரீட்ஸ் (Duns and Bradstreets) ஆகிய கழகங்கள் இதற்குத் தக்க உதாரணங்களாக அமைகின்றன. இறுதியாகக் கூறப்பட்டுள்ள இரண்டு நிலையங்களும் பல ஆண்டுகளாக இயங்கி வருவதன் விளைவாக, வட அமெரிக்காவிலுள்ள தொழிலகங்களைப் பற்றிக் கனிசமான அளவு செய்திகளைத் திரட்டியுள்ளதோடு சிறு நகரங்களிலுமுள்ள நிலையங்களின் நாணயத்தைப் பற்றிய தகவல்களைக் கொண்ட கையேடுகளை ஆண்டுக்கு இருமுறை வெளியிட்டு வருகின்றன; மேலும், தொழில் நிலையங்களைப் பற்றிய முழு அறிக்கைகளைத் தமது வரியாளர்களுக்கு அனுப்புகின்றன. அந்த அறிக்கைகள் கீழ்க்காணும் அமிசங்களைப் பற்றிச் செய்திகளைத் தருகின்றன :

(அ) தொழில் நிலையத்தின் வரலாறு,

(ஆ) அதன் உரிமையும் (ownership) அதில் ஏற்படும் மாற்றங்களும்,

(இ) சொத்து, பொறுப்பு அறிக்கைகளின் ஆய்வுத்தொகுப்பு (digest),

(ஈ) அந்த வாணிகத்தில் செய்யப்பட்ட பரிசீலனைகளின் முடிவுகள்,

(உ) தீ விபத்துக் குறிப்பு ஆகியவை.

**இந்தியாவில் நாணயத்தகவல் நிலையங்கள் இன்மை**

இது போன்ற நிலையங்கள் இந்தியாவில் இன்னும் தோன்றவில்லை. ஆனால், கடன் வேட்பும் கடன் அளிப்பு வசதிகளும் பெருகப்பெருக, இப்பணியின் முக்கியத்துவம் கட்டாயமாகப் பெருகும். கூடிய விரைவில் இது போன்ற நிலையங்கள் தோன்றி வளரும். இப்பணியை ஆற்றுவதில் சில உள்ளார்ந்த முட்டுப்பாடுகள் இந்தியாவில் உள்ளன. உதாரணமாக, எழுத்தறிவில்லாத காரணமாக, மக்களில் பெரும்பாலோர் தங்கள் நிதிநிலைமையைப் பற்றிய செய்தியைத் தர விரும்புவதில்லை. இந்த இடையூறுக்குள்ளாகும் இந்திய பாங்குகள் தங்கள் வாடிக்கைக்காரர்களின் நிதி நிலைமையைப்பற்றிய செய்தியைத் திரட்டும்பொருட்டுத் தனித்துறைகளை நிறுவியிருக்கின்றன. மூன்றும் ஆள்களிடமிருந்து பாங்குகள் திரட்டும் இச்செய்திகள் முற்றும் நம்பத்தக்கதாக

எப்பொழுதும் இருப்பதில்லை. ஏனெனில். அவர்கள் அறிந்தோ அறியாமலோ கூட்டியோ குறைத்தோ சொல்லக் கூடும். தற்பொழுது நம் நாட்டின் தேவை, நமது மரபுகளுக்கும் தேவைகளுக்கும் உகந்த இந்திய நாணயத் தகவல் நிலைய முறையாகும். சிற்றளவுத் தொழில்களுக்கு நிதியளிப்பதைப் பற்றிய ரிசர்வு பாங்கின் தலைமையில் 1959ஆம் ஆண்டு ஜூலை மாதம் நடைபெற்ற கருத்தரங்கு (seminar) தக்க நாணயத் தகவல் நிலையங்களை நிறுவுவதன் முக்கியத்துவத்தைப்பற்றித் துருவி ஆராய்ந்தது. பாங்கியலின் அண்மைய வளர்ச்சிகளும் இந்நிலையங்களின் இன்றியமையாமையை வலியுறுத்தியுள்ளன. இச்செய்தி ரிசர்வு பாங்கின் தீவிர ஆலோசனையில் இருந்து வருகிறது.

### கணக்குகளை ஆராய்தல் (Examination of Accounts)

கடன் வசதிக்காகத் தமது வாடிக்கைக்காரர்கள் தம்மை அணுகும்பொழுது, அவர்களுடைய கணக்குகளையும் கடந்தகால நடவடிக்கைகளையும் பாங்குகள் ஆராய்தல் நன்மை பயக்க வல்லது. உதாரணமாக, கடன் வசதி வேண்டும் ஒருவரின் கணக்கைக் கவனமாக ஆராய்வதன்மூலம், அவர் மிகை வாணிகம் செய்கிறாரா (overtrading) அல்லது வேறு எக்காரணத்தாலோ கடனளிப்புக்குத் தகுதியற்றவராக இருக்கிறாரா என்பதை அறியலாம். அது போலவே, அவருக்காகக் (அவரிடமிருந்து) கழிவு செய்து வாங்கப்பட்ட உண்டியல்கள் அனைத்தும் முறையாக மதிக்கப்பட்டிருப்பின், அவருக்குச் சாதகமான அமிசமாக அது அமையும்.

### பிற தலைவாய்கள் (Other Sources)

மேற்கூறிய செய்தித்தலைவாய்களைத் (sources of information) தவிர, அந்தந்த வாடிக்கைக்காரர்களின் கோப்புக்களில் (files) அவ்வப்பொழுது கோர்த்து வைக்கப்பட்டுள்ள செய்தித்தாள் (பத்தி) வெட்டுத் துண்டுகளையும் (newspaper columns cuttings) பாங்குகளின் நாணயத் துறைகள் நுணுகித் தேர்ந்துகொள்ள வேண்டும். இச்செய்திகளைச் சேகரித்தலும், சௌகரியமான, எளிதில் விளங்கக்கூடிய வடிவத்தில் இவற்றைப் பதிவு செய்து வைத்தலும் பாங்குகளுடைய நாணயத்துறையின் (credit department) பணியாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டில் சீருற அமைந்த (well organised) பாங்கின் நாணயத்துறை, தனது பணியாளர்களுக்கு மட்டுமின்றிச் சிலபொழுது தனது வாடிக்கைக்காரர்களுக்கும் கட்டணமின்றி இச்செய்திகளை அளிக்கிறது. மேலும், கடனுக்காகத் தம்மை அணுகும் வாடிக்கைக்காரர்கள் ஒவ்வொருவரையும், அவர்களு

டைய தொழிலின் தன்மை, கடனின் நோக்கம், அது தேவைப்படும் தவணைக்காலம் ஆகிய செய்திகளைத் தருமாறு கேட்கின்றன. அல்லாமலும், தேவைப்படும் கடன் வசதி (accommodation) கடனு கவா, அதிகப் பற்ருகவா அல்லது உண்டியல்களைக் கழிவு செய்து வாங்கும் வடிவத்திலா எந்த வடிவத்தில் தேவை என்று பாங்கு அறிய வேண்டும் (பின்னிணைப்பு ஆ, 20, 21ஆம் படிவங்களைக் காண்க).

### மெய்த் தொழிலுக்காகத் தேவைப்படும் கடன் வசதிகளுக்குச் சலுகை யளிக்க வேண்டும்

நெடுந்தவணைக் கடனளிப்பை வாணிக பாங்கு விரும்பாது. எந்நோக்கங்களுக்குக்காக மட்டுமே கடனளிக்க வேண்டும் என்பதைப் பற்றி அறுதியான கடும் விதிகளை வகுப்பதரிது. ஏனெனில், நேரத்துக்கு நேரம் சூழ்நிலைகள் மாறுபடுகின்றன. ஆயினும், பணச்சந்தையில் முடைநிலைமை (tightness) தோன்றி யுள்ளபொழுது, வெறும் ஊகவாணிக நோக்கங்களுக்காகக் கடன் வேண்டுபவர்களைக்காட்டிலும் மெய்த்தொழிலுக்காக (genuine business) கடன் வேண்டும் வாடிக்கைக்காரர்களுக்குச் சலுகை அளிப்பது சிறந்தது. அது போலவே அத்து மீறிச் செலவு செய்து வாழும் வாடிக்கைக்காரரின் ஊதாரித்தனத்திற்கு ஆர்வங் கொடுக்கும் முறையில் அவருக்கு பாங்கர் கடனளித்தல் தக்க தன்று.

### இலாப இழப்புக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு (ஐந்தொகை) ஆகியவற்றின் படிகளைத் தருமாறு கேட்க வேண்டும்

வாடிக்கைக்காரருடைய கடந்த சில ஆண்டுகளின் இலாப இழப்புக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவையும் அவருடைய சொத்துப் பொறுப்பு அறிக்கையும் முக்கியமான நாணயச்செய்தி ஊற்ருக அமைகின்றன. கூடியவரை, தகைமையும் நம்பிக்கையும் வாய்ந்த கணக்கரால் அவை சான்றளிக்கப்பட்டிருப்பது சிறந்தது. வாணிகஞ்செய் வாடிக்கைக்காரர்களைப் பொறுத்தவரை மட்டுமே இது இயலும். ஆயினும், கடன் வராது போகும் ஆபத்தைக் குறைக்க இது சிறந்த உபாயமாகும். பொதுவாக, நம் நாட்டில் கடன் வாங்குவோர் தமது நிதி நிலைமையை பாங்கரிடம் கூற விரும்புவதில்லை. இருப்பினும், தமது கடன் மனுவோடு இலாப இழப்புக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைச் சமர்ப் பிக்கும் வாடிக்கைக்காரரிடமிருந்து தேவையான செய்திகளை பாங்கர் சேகரித்தல் கடினமானதன்று.

## அறிக்கை ஆய்வு: சிந்திக்கத் தக்க பொதுக் கருத்துக்கள்

நிதி அறிக்கைகளை அலசி ஆராய்வதைப் பற்றிய கீழ்க்காணும் பொதுக் குறிப்புக்கள் பயனுள்ளவையாக இருக்குமென நம்புகிறோம் :

### தொழிலின் தன்மை

கடன் மனுச் செய்தவரின் தொழில் அல்லது வியாபாரத்தின் தன்மை என்ன? அது உற்பத்தித் தொழிலா அல்லது மொத்த வியாபாரமா அன்று சில்லறை வியாபாரமா என்பதை பாங்கர் முதலாவதாகக் கண்டறிய வேண்டும். அறிக்கையிலுள்ள பல்வேறு இனங்களை ஆராய்வதற்கு இச்செய்தி தேவைப்படுகிறது.

### அண்மைக்கால அறிக்கையா ?

இரண்டாவதாக ஊன்றி நோக்க வேண்டியது யாதெனில், அது அண்மைக்கால அறிக்கையா என்பதேயாகும். வாடிக்கைக் காரரின் பழைய நிலையைக் காட்டும் அறிக்கை அவரின் தற்பொழுதைய உண்மை நிலைமையை எடுத்துக் காட்டாது. மேலும், கடன் வாங்குபவரது வியாபாரம் எதுவோ அதில் ஈடுபட்டுள்ள வணிகர்களின் கடன் நிலை மிகவும் குறைவானதாக இருந்த காலத்தைச் சேர்ந்ததாக அந்த அறிக்கை இருக்கக் கூடாது. அறிக்கை காட்டும் செய்திகளைத் தனி விசாரணைகளின் மூலம் கூடுமானவரை மெய்ச்செய்திகள்தானா என்று சரி பார்க்க வேண்டும். குறிப்பாக, அந்த அறிக்கை நம்பத்தக்க தணிக்கையர் நிறுவனங்களால் (firm of auditors) முறையாகத் தணிக்கை செய்யப்பட்டிருக்காத பொழுது, இது மிகவும் தேவையானதோர் எச்சரிக்கையாகும்.

### ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களையும் பிற சொத்துக்களையும் வேறுபடுத்திக் காட்டல்

மூன்றாவதாக, அந்த அறிக்கை ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களையும் நிலையான பிற சொத்துக்களையும் வேறுபடுத்திக் காட்டியிருக்க வேண்டும். கைரொக்கம், பாங்கரிடமுள்ள (தமது) ரொக்கம், வரவுடைய உண்டியல்கள், பங்குகள், பிணையப் பத்திரங்கள், வாணிகப்பொருள் [கச்சாப்பொருள், முடிந்த பொருள், தயாரிப்பிலுள்ள பொருள் (in the process of manufacture) ஆகியவை] முதலியன சில ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களாகும். அது போலவே குறுந்தவணையா நெடுந் தவணையா என்று பொறுப்புக்களை வேறுபடுத்திக் காட்ட

வேண்டும். ஏற்புக்கள் (செலுத்த வேண்டிய உண்டியல்கள்), வணிகக் கடனீந்தவர்களுக்கும் பாங்குகளுக்கும் உரிய செலுத்துக்கள் ஆகியவை குறுந்தவணைப் பொறுப்புக்களாகும். நிலம், கட்டடங்கள், இயந்திரங்கள், தொழில் நன்மதிப்பு ஆகியவை நிலையான சொத்துக்களில் முதன்மையானவை. அடைமானங்களும், கடன் பத்திரங்களும் முக்கியமான நெடுந்தவணைப் பொறுப்புக்களாகும்.

### ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்கள் குறுந்தவணைக் கடன்களைத் தீர்க்கப் போதுமானவையாக இருக்க வேண்டும்

நான்காவதாக அறிக்கையை ஆயும்பொழுது, கடன் வாங்க இருப்பவர் (would-be borrower) தம்முடைய விரைவு (quick) அல்லது ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களைக்கொண்டு தம்முடைய நடப்பு அல்லது குறுந்தவணைப் பொறுப்புக்களைத் தீர்க்க இயலுமா என்று பாங்கர் கண்டறிய வேண்டும். குறுந்தவணைப் பொறுப்புக்கள் அவ்வப்பொழுது முதிர்வடையும் பொழுது (செலுத்த உரியவையாகும்பொழுது) அவற்றை அவர் செலுத்த இயலுவதைச் சார்ந்தே பெரும்பாலும் வாணிகத்தின் வாழ்வு இருக்கிறது. உதாரணமாக, வணிகரொருவரின் நிலையான சொத்துக்கள் அவருடைய பொறுப்புக்களனைத்தையும் தீர்க்கப் போதுமானவையாயினும், அவருடைய ஏற்புக்களை (acceptances) அவ்வப்பொழுது அவர் மதிக்க இயலாமலிருந்தால், அவர் நாணயம் சரிந்து தொழிலமைப்பையே மூடவேண்டிய நிலைக்கு அது ஆளாக்கிவிடும். ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களும், குறுந்தவணைப் பொறுப்புக்களும் குறைந்தது இரண்டிற்கு ஒன்று (2 to 1) என்னும் விகிதத்தில் இருந்தால், பாங்கர் பெரும்பாலும் மனநிறைவைப் பெறுவர்.

### சொத்துக்களின் ஏட்டு மதிப்பிற்கும் பெறுமானத்திற்கும் (Realisation Value) உள்ள வேற்றுமை

ஐந்தாவதாக, அறிக்கையில் தரப்பட்டுள்ள சொத்துக்களின் மதிப்பு, நன்கு நடைபெறும் நிலையத்தில் (going concern) வணிகருக்கு அவற்றின் பயன்பாட்டுப் பெறுமானம் எவ்வளவோ, அவ்வளவாகக் கூறப்பட்டிருக்கும் என்பதைக் கருத்திலிருத்த வேண்டும். அதே சமயம் கட்டாய விற்பனையின்பொழுது (forced sale) அவை பெறும் விலை (பெறுமானம்) மிகக் குறைவாகவே இருக்கும் என்பதை பாங்கர் நினைவில் வைக்க வேண்டும்.

### ரொக்கம்

அவ்வறிக்கையிலிருக்கும் தலைமையான இனங்களை இங்கு வெவ்வேருக ஆராய்ந்து விளக்கந்தருவோம். கடன் வாங்குபவருடைய அறிக்கையில் சொத்துப் பகுதியிலுள்ள முதன்மை வாய்ந்த இனங்களில் ஒன்று கையிருப்பும் பாங்கிருப்பும் (cash in hand and at the bankers) ஆகும். கையிருப்பாகக் காட்டப்பட்டுள்ள தொகையில் உரிமையாளர் அல்லது நிருவாகியின் ஐ. ஒ. யுக்கள் (I. O. U's) மெய்யாகவே அடங்கவில்லை என்பதை பாங்கர் கண்டறிய வேண்டும். 1913ஆம் ஆண்டுப் பாங்கு நெருக்கடியில் நொடித்துப்போன சிறிய பாங்கு ஒன்றின் கணக்குகளைத் தணிக்கை செய்யும்பொழுது அதனுடைய சில்லறை ரொக்கப்புத்தகம் காட்டிய கையிருப்பில் 60-லிருந்து 80% வரை, அப்பாங்கின் நிருவாக இயக்குநர் அளித்த ஐ. ஒ. யு (I. O. U—I owe you Rs.... நான் உமக்குத் தர வேண்டிய கடன் ரூ.... என்ற பத்திரம்) ஆக இருந்த இந்நூலாசிரியர் கண்டார். கடன் வாங்குபவர் பின்பற்றும் இது போன்ற பழக்கங்களுக்கு ஊக்கங்கொடுக்க வேண்டும். மேலும், சில கம்பெனிகள் அறிக்கையைத் தயாரிக்கும்பொழுது, ஏற்கெனவே அவை அறிவித்த இலாப ஈவை வழங்க இயலுமாறு, அதில் கையிருப்புத் தொகையைத் தகாத முறையில் மிகையாகக் காட்டுதல் வழக்கம். இதைப்பற்றியும் பாங்கர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

### வரவுடைய உண்டியல்கள்

அறிக்கையில் காணப்பெறும் வரவுடைய உண்டியல்கள் அனைத்தும் வாணிப உண்டியல்கள்தானு, அதாவது கடன் வாங்குபவர் தமது வாடிக்கைக்காரர்களுக்குச் சரக்குகளை விற்றதன் அடிப்படையில் எழுந்த உண்டியல்கள்தானு அவையனைத்தும் என்று பாங்கர் கண்டறிய வேண்டும். அவர் ஈடுபட்டுள்ள வியாபாரத்தில் நிலவும் பழக்க வழக்கங்களை பாங்கர் கருத்திற் கொண்டு, தகாத பெருந்தொகைகளுக்கோ அல்லது வழக்கத்திற்கு மாறுன நெடுங்காலத்திற்கோ அவ்வுண்டியல்கள் எழுதப்பட்டுள்ளனவா என்பதையும் பார்க்க வேண்டும். நெடுந்தவணை உண்டியல்களுக்கு எதிராகக் கடனளிக்க வணிக பாங்குகள் பெரும்பாலும் இசைவதில்லை. அத்தகைய உண்டியல்கள் பாங்கருக்குகந்த பிணையங்கள் அல்ல. ஏனெனில், அவை முதிர்வடையுமுன் நெடுங்காலம் கழிய வேண்டும்.

### ஏட்டுக் கடன்களும், வரவுடைய கணக்குகளும் (Book Debts and Accounts Receivable)

ஏட்டுக் கடன்கள், வரவுடைய கணக்குகள் ஆகிய இனத்தை ஆராயும்பொழுது, அத்தொழிலின் இயல்பையும் மரபுகளையும்

அளவுகோலாகக்கொண்டு, அவை மட்டுமீறிய (unduly) பெருந் தொகைகளா அல்லவா என்று கண்டறிய வேண்டும். மட்டுமீறிய பெருந்தொகைகளாக அவை இருக்குமானுல், அவற்றில் சில வசூலிக்க முடியாமல் போவதால் விளையும் இழப்பு என்னும் ஆபத்து பெருமளவானதாக இருக்கும். மேலும், கடன்களின் இயல்பையும் ஆராய்ந்து வசூலாகாமல் நீண்டகாலம் நிலுவையாக நிற்கின்ற பெருங்கடன்கள் எவையேனும் உள்ளனவா என்றும் பார்க்க வேண்டும். அல்லாமலும், இக்கணக்குகளில் சிலவற்றை நுணுகித் தேர்ந்துகொள்வதன் மூலம் அவை வரக்கூடிய கடன்கள் (good debts) அல்லது வாராக் கடன்களா (bad debts) என்பதையும் கண்டுபிடிக்க இயலும். கடன் வாங்க மனுச் செய்திருக்கிறவர் தமது வாடிக்கைக்காரர்களை நீண்ட காலம்—அந்த வியாபாரத்தில் பொதுவாக வழங்கும் வழக்கமான காலப் பகுதியையும் (usual period) மீறிய நெடுங்காலம்—கணக்கை வைத்திருக்க அனுமதி அளிக்கிருரா என்பதை விசாரித்தறிதலும் விரும்பத் தக்கது. ஐயக் கடன்களுக்காகப் போதுமான காப்பொதுக்கை (provision) ஏற்படுத்தி வைத்திருப்பதாக உறுதியளித்துக் கையொப்பமிட்டுத் தந்த வாக்குமூலம் ஒன்றைக் கடன் வேண்டுபவரிடமிருந்து பெறுதல் சிறந்தது.

## இருப்புச்சரக்கு (Stock-in-Trade)

சரக்குப் பட்டியலைப் (inventory) பாங்கர் பெற்று, தற்சார்பும் நம்பிக்கையும் வாய்ந்த மதிப்பிடுபவரைக் (valuer) கொண்டு இருப்புச்சரக்கின் பெறுமானத்தை மதிப்பீடு செய்யப்பெறுதல் நடைமுறையில் இயலுவதன்று. எனவே, பாங்கர் பெரும்பாலும் கடன் வாங்குபவரின் மதிப்பீட்டையே சார்ந்திருக்க வேண்டிய நிலை உண்டாகின்றது. இருப்பினும், இது போன்ற சூழ்நிலைகளில் விற்க இயலாதவை, தரங்கெட்டவை (deteriorated) ஆகிய சரக்குகளை இருப்புச்சரக்கு மதிப்பீட்டில் சேர்க்கவில்லையென்றும், அடக்கவிலை அல்லது கணக்குகளை முடிக்கும்பொழுது நிலவிய நடப்புவிலை இரண்டில் எது குறைவானதோ அதன் அடிப்படையில் தான் இருப்புச்சரக்கு மதிப்பிடப்பட்டது என்றும் உறுதிமொழி கூறுமாறு கடன் வாங்குபவரை வேண்ட வேண்டும். எனினும், பாங்கர் கடன் வாங்குபவரின் மதிப்பீட்டை ஏற்பது தொழிலின் இயல்பு; விற்பனைக்கும் இருப்புக்கும் உள்ள தொடர்பு இன்னபிற காரணிகளைச் சார்ந்தும் உள்ளது. மேலும், இருப்புச்சரக்கு தேவைக்கு மிஞ்சியதல்ல என்றும், அதில் அடங்கியுள்ள முடங்கிய இருப்பின் (dead stock) பங்கு பெரூமளவானதல்ல என்றும் பாங்கர் அறிய வேண்டும்.

### பங்குமாற்று நிலைய ஈடுகள்

கடன் வாங்க மனுச்செய்துள்ளவர் பங்குமாற்று நிலைய ஈடுகளில் முதலீடு செய்திருப்பதன் நோக்கம் என்ன என்பதை பாங்கர் அறிய முயல வேண்டும். தமது தொழிலில் இலாபகர மாகப் பயன்படுத்த இயலாத நிதிகளை அவர் அவ்வீடுகளில் முதலீடு செய்திருந்தால், அவருடைய கடன் தகுதி (credit position) வலு வடையும். மாறாக, அவ்வீடுகள் ஊகவாணிகத்தன்மை பொருந்தி யவையாக இருப்பின், பாங்கருக்கு அவற்றின் மெய்நோக்கத்தைப் பற்றிச் சற்று ஐயப்பாடு தோன்றுவதியல்பு; விரும்பத்தக்கது மாகும். இந்த ஈடுகளின் மிக அண்மைய (latest) நிலவர விலைகளை அறிவது எளிதேயாகையால், அவற்றின் நிலவர மதிப்பை அறுதி யிடுவதும் எளிதேயாகும். இருப்பினும், எல்லா வகைப் பங்கு களுக்கும் பங்குத்தொகுப்புக்களுக்கும் இது பொருந்துவதன்று. உதாரணமாக, கடந்த சில ஆண்டுகளில் தோன்றிய பல கம்பெனி களின் பங்குகள் எளிதில் விற்கக் கூடியவையல்ல; அவற்றின் நிலவர விலைகள் (quotations) என்று நிதியியல் தாளும் பிறச் செய்தித்தாள்களும் குறிப்பிடும் விலைகள் நுனிப்புல் மேயும் தன்மைத்தாதலின் (being merely nominal), எப்பொழுதும் நம்பத் தக்கவையல்ல. இவையன்றி, வாடிக்கைக்காரர் வைத்துள்ள பங்குகள் முற்றும் செலுத்தியவையா அரைகுறையாகச் செலுத்தி யவையா (fully paid or partly paid-up) என்று பாங்கர் பார்த் தறிதல் நன்று. ஏனெனில், அரைகுறையாகச் செலுத்தியவை யாக இருந்தால் இன்னும் அவை பொறுப்பைத் தொடுத்துக் கொண்டிருப்பதை (தாங்கியிருப்பதை) பாங்கர் கவனிக்க வேண்டும்.

### நிலையான சொத்துக்கள்

கடன் வாங்குபவருக்குரிய நிலங்களும் கட்டடங்களும் உள்ளூர்க் கட்டணம், வரி, இன்னபிற போன்ற வழக்கமாக விதிக் கப்படும் கட்டணங்களுக்கு இலக்காகாமல் உள்ளனவா என்றும், கட்டடங்கள் பழுது பார்க்கப்பட்டு நல்ல நிலைமையிலும், தீ, பெரு வெள்ளம், நில அதிர்ச்சி, கலகம், உள்நாட்டுக் கொந்தளிப்பு போன்ற பல ஆபத்துக்களுக்கும் எதிராகப் போதுமான அளவு காப்புறுதி செய்யப்பட்டும் உள்ளனவா என்றும் பாங்கர் கண்டறிய வேண்டும். அவற்றின் நடப்பு மதிப்பை மட்டுமின்றி வருங்கால மதிப்பையும் (prospective value) தக்கவாறு எண்ணிப் பார்த்தல் நன்று. பொறிகள், இயந்திரங்கள் ஆகிய சொத்துக்கள் பழுதற்ற நிலையில் இருக்கின்றனவா என்றும் ஆராய வேண்டும். இச்சொத்துக்களுக்குப் போதிய தேய்மானக் காப்பொதுக்கை

(provision for the depreciation) ஏற்படுத்துவது பற்றி மனுச்செய்துள்ளவர் கையாண்டுவரும் கைக்கோள் தக்கதுதானு என்பதையும் பாங்கர் தேர்ந்தறிதல் சிறந்தது. கட்டடத்தை இடித்துவிட்டுப் புதிய கட்டடத்தை எழுப்புவது, பயனற்ற பொறிகளைக் களைந்து விட்டுப் புதுப்பொறிகளை நாட்டுவது ஆகிய தேவைகள் எழும் போது அதுவரை திரண்ட காப்பிருப்பு அத்தேவைகளை உடனடியாக நிறைவேற்றப் போதுமானதாக இருக்க வேண்டும் அல்லது தங்குதடையின்றி அந்த நிறுவனம் தொடர்ந்து செயலாற்றும் வண்ணம் அச்சொத்துக்களின் ஏட்டு மதிப்புக்கள் மிகவும் குன்றியிருக்க வேண்டும்.

**பல்திறச் சொத்துக்கள் (Sundry Assets)**

குத்தகை உரிமை, தொழில் நன்மதிப்பு, புதுக்கண்டுபிடிப்புரிமை (patents), வணிகப் பொறிப்புரிமை (trade-marks), இன்ன பிற பல தினுசுச் சொத்துக்களின் மதிப்பை பாங்கர் புறக்கணிக்க வேண்டும். அந்த வணிக அமைப்பு கலைக்கப்படும்பொழுது இச்சொத்துக்கள் பெறுமானமற்றுப் போகும். கடனளிப்பு மனுக்களை ஆய்ந்து கடனளிக்கலாமா வேண்டாமா என்று முடிவு செய்யுமுன் நிலையான, பிற சொத்துக்களின் தனித்தனி மதிப்பை (break-up value) உற்று நோக்க வேண்டும்.

## பொறுப்புக்கள்

பொறுப்புக்கள் பகுதியை ஆராயப் புகும்பொழுது, அத்தொழிலில் இட்டுள்ள மூலதனம் அதனுடைய இயல்புக்கும் மொத்த விற்பனைக்கும் ஏற்றவாறு போதுமான அளவு இருக்கிறதா என்பதை முதன்மையாக பாங்கர் தேர்ந்தறிய வேண்டும். சிறிய மூலதனம் தொழிலின் வளர்ச்சிக்குப் பெரிய இடையூறு. வாணிக பாங்குகள் இயலும் அளவுக்கு ரொக்கத்தன்மையை உடைய சொத்துக்களையே வைத்திருக்க முயலுவதால், தொழில்களுக்குத் தேவையான நிலைமுதலை அளிக்க அவை முன் வருவதில்லை; அது அவைகளின் பணியுமல்ல. தொழிலமைப்புக்களின் நிலைமுதல் தேவைகளுக்கு ஓரளவும், நடைமுதல் தேவைகளுக்குப் பெருமளவும் கடன் வசதியளிக்குமாறு பாங்குகள் தற்பொழுது எழுச்சியூட்டப்படுவதால், அவற்றின் இடையறு வளர்ச்சியில் கண்ணும் கருத்தும் இருக்குமாறு செய்விக்க வல்ல தக்க மூலதனத்தைத் தொழில்முனைவர் (entrepreneur) இட்டிருக்கின்றனரா என்று நோக்கல் அறிவுடைமை.

**ஏற்புக்கள்**

எல்லா ஏற்புக்களும் பெற்ற சரக்குகளின் அடிப்படையில் எழுந்தவைதானா என்று தேர்ந்தறிதல் பாங்கர் கண்டறிய வேண்டிய இரண்டாவது அமிசமாகும். யாரிடமிருந்து சரக்குகளைக் கொள்முதல் செய்கிறார்களோ அவர்கள் எழுதிய உண்டியல்களை ஏற்பது வாணிகத்தில் நிலவும் பொது நடப்பாகும். இதற்கு மாறாக, மனுச்செய்திருக்கிறவர் தாம் கொள்முதல் செய்யாத அல்லது எந்த விதத்திலும் கடன்பட்டிராத ஆள்கள் எழுதிய உண்டியல்களையும் ஏற்றிருந்தால், இது அவருக்குக் கடனளிப்பதற்குக் குறுக்கே நிற்கும் ஓர் அமிசமாகும். செலுத்த வேண்டிய உண்டியல்களின் பதிவேட்டிலிருந்து (Bills Payable Register) உண்டியல்களை எழுதியவர்கள், தொகைகள், அவை ஒவ்வொன்றும் முதிர்வுபெறும் தேதி ஆகிய விவரங்களை அறியலாம். கடன் வாங்குபவருக்கு வாணிகக் கடனீந்தவர்களுடன் தொடர்புகொள்வதே இத்தலைப்பின்கீழுள்ள அவரது மொத்தப் பொறுப்பை உறுதியாக அறிந்துகொள்ளச் சிறந்த வழியெனினும், தரகர்களை விசாரித்துப் பெறும் செய்தியைக்கொண்டே பாங்கர்கள் பெரும்பாலும் அமைதியடைகின்றனர்.

**செலுத்த வேண்டிய கணக்குகள் (Accounts Payable)**

சரக்குகளைக் கடனாக விற்பதனால் ஏட்டுக்கடன்கள் அல்லது வரவுடைய கணக்குகள் எழுவது போல, அவற்றைக் கடனாகக் கொள்முதல் செய்து பணமும் செலுத்தாமல் உண்டியலையும் ஏற்காமல் இருக்கும்பொழுது செலுத்த வேண்டிய கணக்குகள் பிறக்கின்றன. பெற்ற வழிப்பட்டியல்களைப் புரட்டிப் பார்த்து, இந்த இனத்தைச் சரிபார்க்க இயலும். கடன் வசதிக்காக மனுச்செய்துள்ளவர் ஈடுபட்டுள்ள வியாபாரத்தின் பழக்க வழக்கங்களைக் கருத்திற்கொண்டு இக்கணக்குகளை ஆராயும்பொழுது தவணைக் காலம் கடந்தும் செலுத்தாமல் இருப்பவையாக அவை இல்லாதிருப்பது சிறந்தது; இதற்கு மாறாக அவை இருக்குமாயின், உரிய தேதிகளில் கடன்களைச் செலுத்த இயலாத அவரது ஆற்றலின்மையை அது ஒளிவுமறைவின்றிக் காட்டிக் கொடுத்துவிடும். இத்தலைப்பின்கீழுள்ள தொகை நியாயமற்ற பெருந்தொகையாகவும் இருக்கக் கூடாது. உதாரணமாக, ஒரு வாணிக அமைப்பின் மாத விற்பனை ரூ. 50,000ஆக இருந்தால், அதன் மாதக்கொள்முதல் பொதுவாக இத்தொகைக்கும் குறைவாகவே இருக்க வேண்டும்; அது ஈடுபட்டுள்ள வியாபாரத்தில் தவணைக் காலம் (credit term) ஒரு மாதமாக இருப்பின், அது இவ்வகையில் (அல்லது இத்தலைப்பில்) செலுத்த் வேண்டிய தொகை அதனுடைய

ஒருமாதக் கொள்முதலுக்கும் மிகுதியாக இருக்கக் கூடாது. அந்த வியாபாரத்தில் தாராளமான ரொக்கக் கழிவு (cash discount) தருவதும், அதை அந்த அமைப்பு பயன்படுத்திக்கொள்வதும் வழக்கமானுல், இக்கணக்குகளின் தொகை இன்னும் முற்றிலும் சரிபார்க்காத வழிப்பட்டியல்களின் தொகையையோ அல்லது கழிவைப் பெறுவதற்குரிய தவணை வரம்பை இன்னும் கடக்காத வழிப்பட்டியல்களின் தொகையையோ மீறக் கூடாது. மேலும், ஏற்புக்கள், பிற வழிகள் முதலியவற்றின் மூலமாக ஒரு நிலையம் கடன் திரட்டியிருந்தால், இத்தலைப்பில் அது செலுத்த வேண்டிய தொகை பெரியதாக இல்லாமல் இருத்தல் சிறந்தது.

### பிற பொறுப்புக்கள்

கடனுக்காக மனுச்செய்திருக்கும் வாணிக அமைப்பு, ஒரே ஒரு பாங்கரிடம் மட்டுமே பாங்குறவு வைத்திருந்தால், அது துய்த்துவரும் கடன் வசதிகளின் தொகையையும் கட்டுப்பாடு களையும் அவர் அறிந்திருக்கக் கூடும். அது போலவே ஏறிய ஆனுல் செலுத்தாத (accrued but not paid) வரிகள், செலுத்தாத சம்ப ளமும் கூலியும் ஆகியவற்றுக்காக அவ்வமைப்பு பணம் செலுத்த வேண்டிய பொறுப்பு நிலுவையாக நிற்கலாம். வாணிக அமைப்பின் நிருவாகிகளுக்கு இத்தொகைகள் மிக்க தொல்லையைத் தருகின்றன.

### இலாப இழப்புக் கணக்கு

சொத்து, பொறுப்பறிக்கையை ஆராய்வதோடு பாங்கர் அமையாமல், கடந்த சில ஆண்டுகளின் இலாப இழப்புக் கணக்கு களையும் விழிப்புடன் ஆராய வேண்டும். ஏனெனில், அத்தொழில் போதிய இலாபத்தை வழங்குகிறதா இல்லையா என்பதை அவை புலப்படுத்தும். இலாப இழப்புக்கணக்கில் ஏற்றத்தக்க (chargeable) செலவுகளனைத்தும் அவை காட்டும் நிகர இலாபத்தொகை களைப் பெறுவதற்குமுன் மொத்த இலாபத்திலிருந்து கழிக்கப் பட்டுள்ளனவா என்று கண்டறிய வேண்டும்; மேலும், சொத்துக் களின் தேய்மானத்திற்காகவும் வருமான வரி, இன்னபிற செலவி னங்களுக்காகவும் போதுமான தொகைகள் ஒதுக்கி வைக்கப் பட்டுள்ளனவா என்றும் நோக்க வேண்டும். பொறிகளும் இயந் திரங்களும், கட்டடங்கள், மோட்டார் கார்கள், தட்டுமுட்டுப் பொருள்கள் போன்றவை சில ஆண்டுகள் பயன்படுத்தப்பட்டபின் 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்பதற்கேற்பப் புதியன வற்ருல் மாற்றப்பட வேண்டும். எனவே, அவற்றின் தேய் மானத்தை மதிப்பிட்டுத் தக்க தொகையை மொத்த இலாபத்தி

லிருந்து ஒவ்வோராண்டும் ஒதுக்கி வைத்தல் அறிவுடைமை அல்லாமலும், இக்கணக்குகள் காட்டும் இலாபங்கள் மெய்யானவைதான், கற்பனையானவையல்ல என்பதையும் கண்டறியத் தவறக் கூடாது.

இதுவரை கூறிய பொதுக்கோட்பாடுகளுக்குக் கீழ்க்காணும் நிதி அறிக்கைகளும், அவற்றைப்பற்றிய எமது விளக்கவுரைகளும் மேற்கோளாக அமைந்து, கற்போர் தெளிவுபெற உதவும் என நம்புகிறோம்.

## வியாபாரிகள்

### I

### நபர்கள்

‘அ’ என்பவர்

| பொறுப்புக்கள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| ஏற்றுக்கொண்ட உண்டியல்கள் | 3,000 | நிலமும் கட்டடமும் | 6,000 |
| பாங்கில் அதிகப்பற்று | 2,000 | இருப்புச்சரக்கு | 8,000 |
| பிற பொறுப்புக்கள் | 3,000 | ஏட்டுக் கடன்கள் | 8,000 |
| | | ரொக்கம் | 2,000 |
| | 8,000 | | |
| மூலதனம் | 16,000 | | |
| | ரூ. 24,000 | | ரூ. 24,000 |

‘அ’ என்பவரின் இருப்புநிலைக் குறிப்பு அவருடைய தொழிலின் நிகர மதிப்பு (net value) ரூ. 16,000 என்று காட்டுகிறது; அதாவது, அவருடைய கடன்கள் அனைத்தையும் அவர் அடைத்த பிறகும் உபரியாக அத்தொகை மீந்து நிற்கும் அல்லது வேறு மாதிரியாக இதைக் கூறுவோமாயின், அவருடைய சொத்துக்களை அவற்றின் ஏட்டு மதிப்பிற்கே விற்றுப் பணமாக்க இயலுமாயின், அவருக்குக் கடனீந்தவர்களின் ஒரு ரூபாய்க் கடனுக்கு மூன்று ரூபாய்களை (அல்லது முந்நூறு பைசாக்களை) அவர் செலுத்த இயலும்.

**‘ஆ’ என்பவர்**

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ஏற்கப்பட்ட உண்டியல்கள் | 20,000 | கிடங்கியும் நிலைப்படுத்திய பொருள்களும் | 7,000 |
| பாங்கில் அதிகப்பற்று | 11,000 | இருப்புச்சரக்கு | 33,000 |
| பிற கடனீந்தவர்கள் | 3,000 | ஏட்டுக்கடன்கள் | 8,000 |
| | 34,000 | ரொக்கம் | 2,000 |
| மூலதனம் | 16,000 | | |
| ரூ. | 50,000 | ரூ. | 50,000 |
| கழிவுசெய்து வாங்கிய உண்டியல்களின்மீது பொறுப்பு | 10,000 | | |

**‘அ’, ‘ஆ’ ஆகியவர்களின் அறிக்கைகளை ஒப்பிட்டுப் பார்த்தல்**

மேலுள்ள இரு அறிக்கைகளையும் ஒப்பிட்டால், கீழ்க்கண்டவை புலனுகும் : ‘அ’ ‘ஆ’ ஆகிய இருவரின் மூலதனங்களும் ஒரே அளவு தான் ; ஆயினும், பின்னவரின் இருப்புச்சரக்கு முன்னவருடையதைக்காட்டிலும் நான்கு மடங்கினும் பெரிது. ‘ஆ’ என்பவருடைய இருப்புச்சரக்கின் மதிப்பு 25% ஆகக் குறைந்தால், அவருடைய மூலதனத்தில் பாதியே மிஞ்சும். நிலைப்படுத்திய பொருள்களை விற்றுமாயின் அதிக விலையை அவை பெறுது. அவருடைய சொத்துக்கள் அனைத்தையும் ஏட்டு மதிப்பிற்கே விற்றாலும், அவருடைய பொறுப்பின் ஒவ்வொரு ரூபாயுக்கும் ஏறத்தாழ 150 பைசாக்களே அவர் செலுத்த இயலும். இரண்டாவது அறிக்கையில் குறுந்தவணைப் பொறுப்புக்களுக்கும் ரொக்கத் தன்மை வாய்ந்த சொத்துக்களுக்கும் உள்ள வீதம் சிறியதாக இருப்பது அதன் மற்ருெரு வலுவற்ற அமிசமாகும். ‘அ’ என்பவருடைய அறிக்கையில் அவருடைய ஏற்புக்களும் அதிகப்பற்றும் சேர்ந்து ரூ. 5000 ஆகிறது ; இதற்கு எதிராக ரூ. 2000 ரொக்கமும், ரூ. 16000 பெறுமானமுள்ள இருப்புச்சரக்கும் ஏட்டுக் கடன்களும் இருக்கின்றன ; அதாவது, அவரது விரைவுப் பொறுப்புக்களைத் தீர்ப்பதற்குக் கூடுதலாகத் தேவைப்படும்

ரொக்கத்தைக் (ரூ. 5000—ரூ. 2000 = ரூ. 3000) காட்டிலும் ஐந்து மடங்குக்கும் மிகுதியான ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்கள் இருக்கின்றன. ஆனால் 'ஆ' என்பவரின் இருப்புச் சரக்கு ஏட்டுக் கடன்கள் ஆகியவற்றின் பெறுமானம் ரூ. 41,000 ஆகும். ஆனால் அவருடைய விரைவுப் பொறுப்புக்களைத் தீர்ப்ப தற்குக் கூடுதலாகத் தேவைப்படும் ரொக்கம் ரூ. 29000 (ஏற்புக்கள் + அதிகப்பற்று—ரொக்கம் = 29000), எனவே, 'ஆ' என்பவரின் ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்துக்களுக்கும் குறுந்தவணைப் பொறுப்புக்களுக்கும் உள்ள வீதம் மிகக் குறை வானது.

எனவே, 'ஆ' என்பவரின் நிலைமை 'அ' என்பவருடையதோடு ஒப்பிடத் தக்கதற்றதாகத் தாழ்வானது. கடன் மனுக்களை ஆராயும்பொழுது பாங்கரின் மூளை எவ்வாறு இயங்கும் என்று கற்பவர் எண்ணிப் பார்க்க இயலுமாறு கீழ்க்காணும் உண்மை நிகழ்ச்சிகளையொட்டிய எடுத்துக்காட்டுகளைத் தருகிறோம்: (ஃபிரான்சிஸ் ஆர். ஸ்டெட் அவர்களுடைய பாங்கர் கையாளத் தக்க தேர்வு என்னும் நூலைக் காண்க.)

## தொழில் அமைப்புக்கள்

### அம்ரித் நூற்பு நெசவாலை, லிமிடெட்

துணைப்பிணையமற்ற அதிகப்பற்றாக ரூ. 15,00,000-ஐத் தொடர்ந்து அளிக்குமாறும், ரூ. 7,50,000-க்கு உண்டியல்களைக் கழிவு செய்து வாங்குமாறும் மனுச் செய்திருக்கிறது.

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| செலுத்திய முதல் | 75,00,000 | நிலமும் கட்டடமும் | 3,50,000 |
| பாங்கில் அதிகப்பற்று | 12,00,000 | பொறியும் இயந்திரமும் | 44,50,000 |
| ரொக்கக்கடன்கள் | 4,50,000 | பண்டகக் கருவிப் பொருள்கள் (stores) | 3,00,000 |
| வணிகக் கடனீந்தவர்கள் | 9,75,000 | நூல், துணி-இருப்பு | 39,00,000 |
| காப்பிருப்பு நிதி | 5,25,000 | ஏட்டுக்கடன்கள் | 20,25,000 |
| இலாப இழப்புக்கணக்கு | 3,75,000 | | |
| | ரூ. 1,10,25,000 | | ரூ. 1,10,25,000 |

இந்த ஆலே தொன்மையான சீருற அமைந்த முற்றிலும் நவீனமான அமைப்பாகும். அண்மையில் இது பருத்தி, செயற்கைப் பட்டு இழைகள் இணைந்த ஆடையை உற்பத்தி செய்வதற்கு ஆயத்தப்படுத்தப்பட்டது (equipped). இதன் சிறப்புச் செய் பொருள்களுக்கு (specialities) நல்ல வேட்பு இருக்கிறது. துணிச் சந்தையில் இதன் தயாரிப்புக்கள் பெயர் போனவை. மந்த காலங் களிலும் சீரான இலாபத்தை இது ஈட்ட வல்லது. பம்பாய் பஞ்சு மாற்று நிலையத்தில் (Bombay Cotton Exchange) செயலாற்றும் தரகர்கள் மூலமாக இது பஞ்சைக் கொள்முதல் செய்கிறது. அனுபவமிக்க நிருவாகிகளால் இக்கம்பெனி நிருவகிக்கப்படுகிறது. மேலும், தற்பொழுது நிலவும் ஆடை கிடைப்பருமையையும் கருத்திற்கொண்டு தேவைப்படும் கடன்வசதிகளைத் தயக்கமின்றி அளிக்கலாம்.

## II

### கூட்டு நிறுவனங்கள்

#### திருவாளர்கள் போஸும் உடன்பிறந்தவர்களும், துணி வணிகர்கள்

துணைப்பிணையமற்ற கடனை ரூ. 75,000-ஐ நீடித்து அளிக்கு மாறு இந்த நிறுவனம் மனுச்செய்துள்ளது. இரண்டாண்டுகளுக்கு முன்பு மூலதனம் மேலும் தேவைப்பட்டபொழுது, ரூ. 90,000-ஐக் கொண்டுவந்த ஒருவரைப் புதிய கூட்டாளியாக அது ஏற்றுக் கொண்டது. இப்புதிய நிறுவனம் முன்பு பெற்ற அக்கடனை ஒப்புக்கொண்டதாக அறிவிக்கவில்லை. நிறுவனத்தின் பெயரில் யாதொரு மாற்றமும் இல்லாததால் பழைய கணக்கு அதே பெயரில் தொடர்ந்து இருந்து வந்தது. அதன் தொழில் சீரழிகிறது (decline) என்பதை இருப்புநிலைக் குறிப்பு (ஐந்தொகை) காட்டு கிறது.

புதிய நிறுவனத்தின் உத்தரவாதத்துடன் அக்கடனைப் புதுப்பிக்குமாறு வேண்டுதல் பாங்கரது நிலையை வலுவாக்கும். அவ்வாறு செய்யாவிடில், அந்த நிறுவனம் திவாலாகும்பொழுது, புதிய கூட்டாளியின் தனிப்பட்ட நிகரசொத்துத் திரட்டின் (separate estate—அதாவது பொறுப்புக்கள் தீர்ந்து மிஞ்சும் சொத்துக்கள்)மீது பாங்கர் எந்த உரிமையும் பாராட்டவியலாது. பழைய நிறுவனத்தின் கடனுக்குப் புதிய நிறுவனம் உத்தரவாதம் அளிக்க மறுத்தால், அக்கடனைத் திருப்பி அழைக்க வேண்டும் (recalled).

# III

## கம்பெனிகள்

### ஈஸ்டெர்ன் ட்ரேடிங் கம். லிமிடெட்

இக்கம்பெனி தனது நிருவாக இயக்குநரின் உத்தரவாதத்தைப் பிணையமாகத் தருவதாகக் கூறி ரூ. 75,000-ஐக் கடனளிக்குமாறு வேண்டுகிறது. இது பாங்கின் தொன்மையான வாடிக்கை அமைப்பாகும். இதன் மொத்த விற்பனையும் பெரிது. ரூ 60,000-ஐச் செலுத்திய முதலாகக்கொண்டுள்ள இது அண்மையில் கூட்டுப் பங்குக் கம்பெனியாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இதன் மொத்த சொத்துக்களின் மதிப்பு ரூ. 2,25,000 ஆகும். இதிலடங்கிய பெரும்பகுதியான சொத்துக்கள் ஏற்றதாழ அடைமானமாக வைக்கப்பட்டுள்ளன,

இது ஆழ்ந்து நிதானமாக ஆராய வேண்டிய ஒரு நிகழ்ச்சியாகும்; இதன் நேர்மையும் தொழில்திறனும் நன்கு சிந்திக்கத் தக்க முக்கிய அமிசங்களாகும்; இவை முற்றும் மனநிறைவை அளிப்பவையாக இருக்குமாயின், இது பாங்கர் துணிந்து ஏற்கத் தக்க ஆபத்தே. கடனைத் திருப்பிச் செலுத்தும் அதனுடைய ஆற்றல் நிருவாகத்திறனைப் பெருமளவு சார்ந்திருப்பதால், அவருடைய ஆயுளைக் கொஞ்சம் தொகைக்குக் காப்புறுதி செய்யப் பெற்று, அவ்வாவணத்தைத் (policy) தம்மிடம் கொடுத்து வைக்குமாறு பாங்கர் நிருவாக இயக்குநரைக் கேட்க வேண்டும். ஆயுள் காப்புறுதி மட்டுமே போதிய பிணையக்காப்பை அளிப்பதில்லை என்பது உண்மையே. ஏனெனில், எதிர்காலத்தில் செலுத்த உரியனவாகும் வட்டங்களை (premia) முறைப்படி செலுத்துவதைச் சார்ந்தே அதன் மதிப்பு உள்ளது; ஆயினும், கம்பெனியின் சொத்துக்களும் நிருவாக இயக்குநரின் தனிப்பட்ட செல்வாதார வளங்களும் எந்த அளவுக்கு வில்லங்கங்களுக்கு உட்பட்டிருக்கின்றன என்பதைத் துருவி ஆராய்ந்தறிந்த பிறகு, முறையானது என்று முடிவு செய்தால், அக்கம்பெனிக்கு பாங்கர் கடன்வசதி அளிக்கலாம்.

## நிலக்கரிச் சுரங்கங்கள்

### சில பொதுக் கூற்று

குறைந்தபட்ச ஆண்டுச் செலுத்தலுக்குக் குறையாமல், தோண்டியெடுக்கப்பட்ட நிலக்கரியின்மீது டன் ஒன்றுக்குக் குறிப்

பிட்ட வீதத்தில் குத்தகை எடுத்தவர் நில உரிமையாளருக்கு உரிமை ஊதியம் (royalty) செலுத்த வேண்டிய பொறுப்பு நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் பொதுவாக நிலவுகிறது. தொடக்க ஆண்டுகளில் குறைந்தபட்ச ஆண்டுத்தொகை வீதாச்சார உரிமை ஊதியத்தைக்காட்டிலும் மிகுதியாக இருத்தலும், போகப்போகத் தோண்டி எடுக்கும் நிலக்கரியின் அளவு மிகமிக, வீதாச்சார உரிமை ஊதியம் குறைந்தபட்ச ஆண்டுத்தொகையைக் கடந்து வளர்ந்துகொண்டே போதலும் இயல்பு. எனவே, குத்தகை எடுத்தவருக்குத் தொடக்க ஆண்டுகளில் நேர்ந்த இழப்பை (குறைந்தபட்ச ஆண்டுத்தொகை வீதாச்சார உரிமைப் பணத்தைக்காட்டிலும் மிகுதியாக இருப்பதால்), ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ளபடி பின்வரும் இலாபகரமான ஆண்டு சிலவற் றிற்குள் அவர் மீட்கலாம். எனவே, மந்த காலங்களில் குறைந்த பட்ச ஆண்டுத்தொகையைச் செலுத்துதல் பெருஞ்சுமையாகப் புலப்படும். பொறி, இயந்திரங்களின் தேய்மானத்தை மதிப்பிட்டு, அத்தொகையை ஒவ்வோராண்டும் மொத்த இலாபத்திலிருந்து ஒதுக்கி வைத்து அவை பயனற்றுப் போகும்பொழுது புதியன வற்றல் அவற்றை மாற்ற இயலுமாறு காப்பிருப்பை ஏற்படுத்த வேண்டும். வீதங்களுக்கும் கட்டணங்களுக்கும் உட்படாத சுரங்கங்களுக்குக்கூட, அவை விரையச் சொத்துக்களாதலால் (wasting assets), நிலக்கரி தீர்ந்துபோகும் கண்ணோட்டத்தோடு தனிமீட்பு நிதியை உண்டாக்குதல் சிறந்தது. மேலும், வாடகைக் கொள்முதல் முறையிலோ அல்லது பின்செலுத்தும் முறையிலோ (deferred payment system) பொதி வண்டிகளைப் (wagons) பெற்றி ருந்தால், எல்லாத் தவணைகளையும் செலுத்தி முடிக்கும் வரை அவை விற்றவருக்கே சொந்தமானவை. அவற்றின் உழைப்புக் காலம் (effective life) குறைவானதேயாயினும் அடிக்கடி பழுது பார்க்க வேண்டிய தேவையும், அதனல் செலவீடும் ஏற்படும்.

## I

### திருவாளர்கள் முகர்ஜி & கம்., நிலக்கரி தோண்டுபவர்கள்

பழைய கடனுகிய ரூ. 3,75,000-க்கு மேல் முதல் எதிரான கடன்பத்திரங்களுக்கு (first debenture charge - அதாவது நிறுவனத்தின் அமைப்பு, செயல், சொத்து ஆகியவற்றின் முதல் எதிரைத் தாங்கிய கடன் பத்திரங்கள்) எதிராக ரூ. 75,000-ஐக் கடன் அளிக்குமாறு மனுச் செய்திருக்கிறது.

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ | | ரூ. |
| செலுத்திய முதல் | 9,00,000 | குத்தகைச் சொத்துக்களும் அபிவிருத்திகளும் | 6,00,000 |
| பாங்கில் அதிகப்பற்று | 3,75,000 | விடுபொறி, இன்ன பிற | 5,25,000 |
| பிற கடனீந்தவர்கள் | 4,50,000 | பொதிவண்டிகள் | 2,25,000 |
| காப்பிருப்பு | 3,00,000 | இருப்புச்சரக்கு | 2,25,000 |
| | | ஏட்டுக்கடன்கள் | 3,75,000 |
| | | இலாப இழப்புக்கணக்கு | 75,000 |
| | 20,25,000 | | 20,25 000 |

இந்த நிறுவனத்தின் நிலைமை மோசமாக இருப்பதாகத் தோன்றுகிறது. தனது பொறுப்புக்களைத் தீர்க்க நியாயமான வாய்ப்புக்கள் அதற்கில்லை. இது ஏற்கத்தக்க ஆபத்தல்ல. அது தனது தொன்மையான வாடிக்கைக்காரரை அமைப்பாக இருப்பினும், மனுச்செய்துள்ள கடனுக்குத் தக்க உத்தரவாதியின் உத்தரவாதத்தைப் பெற்றுத் தந்தாலன்றி, பாங்கர் அதன் மனுவைத் தள்ளிவிட வேண்டும்.

## II

### வங்காள நிலக்கரிச் சுரங்கக் கம்பெனி வரையறுத்தது

முதல் எதிரான கடன்பத்திரத்திற்கு எதிராகத் தந்த அதிகப் பற்றுகிய ரூ. 15,00,000-ஐ நீடித்தளிக்குமாறு மனுச் செய்திருக் கிறது.

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | | |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| செலுத்திய முதல் | 45,00,000 | சொத்து (வில்லங்கமில்லாதது) | | 52,50,000 |
| பாங்கில் அதிகப்பற்று | 10,50,000 | குடிசைகள் (வில்லங்கமற்றவை) | | 4,50,000 |
| கடனீந்தவர்கள் | 9,00,000 | பொதி வண்டிகள் | 10,50,000 | |
| காப்பிருப்பு | 6,00,000 | குறைக்க—செலுத்த | | |
| இலாப இழப்புக்கணக்கு | 4,50,000 | வேண்டிய தவணைத்தொகை | 4,50,000 | |
| | | | | 6,00,000 |
| | | இருப்புச்சரக்கு | | 4,50,000 |
| | | ஏட்டுக்கடன்கள் | | 7,50,000 |
| | ரூ. 75,00,000 | | | ரூ. 75,00,000 |

இக்கம்பெனியின் நிலைமை முற்றிலும் திடமானதாகத் தோன்றுகிறது. நிலக்கரிச் சுரங்கம் முற்றிலும் தோண்டப்பட்டுச் சுரண்டப்பட்டிருந்தாலன்றி, இக்கடன் வசதியை அளிக்கலாம். இருப்பினும், பொதிவண்டிகள் வாடகைக் கொள்முதல் முறையில் வாங்கப்பட்டவையா என்று அறிதல் விரும்பத் தக்கது. ஏனெனில், இந்த அடிப்படையில் வாங்கப்படும் பொதிவண்டிகளின் எல்லாத் தவணைகளையும் செலுத்தி முடிக்கும் வரை அவை விற்றவருக்கே சொந்தமானவை.

## கட்டடமைப்புக் (கட்டட நிர்மாணக்) கம்பெனிகள்
## (Constructional Companies)

### I

### திருவாளர்கள் யோரா & கம்., கட்டட நிர்மாணக் குத்தகையாளர்கள்

துணைப்பிணையமற்ற பழைய அதிகப்பற்ருன ரூ. 45,000 கழிவு நீக்கி வாங்கிய உண்டியல்கள் ரூ. 30,000 ஆகிய கடன் வசதிகளுக்குமேல் ரூ. 15,000-ஐக் கடனளிக்குமாறு மனுச் செய்திருக்கிறது.

| பொறுப்புக்கள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பாங்கு(க்கடன்) | 30,000 | ஏட்டுக்கடன்கள் | 60,000 |
| கடனீந்தவர்கள் | 75,000 | முடிவுரு வேலைகள் | 2,25,000 |
| உபரி | 5,10,000 | இருப்புச்சரக்கு | 1,50,000 |
| | | தொழில் மனையகம் | 75,000 |
| | | பொறியும் இயந்திரமும் | 1,05,000 |
| | ரூ. 6,15,000 | | ரூ. 6,15,000 |

நல்ல செல்வாக்குடைய பாங்கின் நெடுங்கால வாடிக்கைக்காரர்களான மக்களால் மனுச்செய்துள்ள இந்த நிறுவனம், குத்தகையாளர்களாக அமர்த்தப்படுகிறது.

கடந்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளின் இலாப இழப்பு அறிக்கைகள் மனநிறைவான இலாப நிலைமையைக் காட்டினால், இது ஏற்கத்தக்க ஆபத்தேயாகும்.

## II

*மேற்கத்திய கட்டட, கட்ட நிர்மாணக் கம்பெனி வரையறுத்தது*

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| செலுத்திய முதல் | 7,50 000 | தொழில் மனையகம் | 3,75,000 |
| கடன் பத்திரங்கள் | 4,50,000 | பொறியும் இயந்திரமும் | 3,00,000 |
| பாங்கு(க்கடன்) | 1,50,000 | இருப்புச்சரக்கு | 1,20,000 |
| கடனீந்தவர்கள் | 75,000 | முடிவுரு வேலைகள் | 1,80,000 |
| | | நிறுத்தி வைத்துள்ள பணம்[1] | 1,50,000 |
| | | ஏட்டுக்கடன்கள் | 75,000 |
| | | தொழில் நன்மதிப்பு | 75,000 |
| | | இலாப இழப்புக்கணக்கு | 1,50,000 |
| | ரூ. 14,25,000 | | ரூ. 14,25,000 |

இக்கம்பெனி பாங்கருக்குத் தர வேண்டிய கடனுக்கு (ரூ. 1,50,000) திடமான உத்தரவாதம் பிணையமாக இருக்கிறது. ஆனால் உத்தரவாதி அண்மையில் இறந்துவிட்டார். நிறுத்தி வைத்துள்ள பணத்தின் எதிரை (charge) ஏற்றுக்கொண்டு, மறைந்த உத்தரவாதியின் நிகர சொத்துத் திரட்டை பொறுப்பி லிருந்து விடுவிக்குமாறு பாங்கர் வேண்டப்படுகிறார். பாங்கரின் கண்ணோட்டத்தோடு நோக்கினால், நிறுத்தி வைத்துள்ள பணத்தின் எதிர், விரும்பத்தக்க பிணையமல்ல. நிறுத்தி வைத் துள்ள பணம், மனநிறைவான முறையில் அந்தக் குத்தகைப்பணி நிறைவேற்றப்பட்டுள்ளதா என்பதற்கு உட்பட்டிருக்கிறது.

[1] நிறுத்தி வைத்துள்ள பணம் (retention money)—குத்தகைப்பணி முடிந்த பின்னும் சில காலம் (ஆறு மாதமோ ஓராண்டோ) கொடாமல் நிறுத்தி வைத் துக்கும் பணத்திற்கு நிறுத்தி வைத்துள்ள பணம் என்று பெயர்,

மேலும், கொஞ்ச காலத்திற்குக் குறைபாடுகள் வெளிப்படாம லிருக்கலாம். மேலும், இயல்புரிமைகளுக்கும் (equities) அது (நிறுத்தி வைத்துள்ள பணம்) உட்பட்டுள்ளது. குறிப்பாக, கடன் பத்திர வெளியீடு, இலாப இழப்புக் கணக்கின் பாதக இருப்பு (adverse balance) ஆகியவற்றையும் கருத்திற்கொண்டு ஆராயும் பொழுது இந்த வேண்டுகோளுக்கு பாங்கு இணங்கக் கூடாது.

## தரகு முகவர்கள் (Commission Agents)

*திருவாளர்கள் மல்லோத்ராவும் உடன்பிறந்தவர்களும், கூலவாணிகத் தரகர்கள்*

உறுதி செய்த ஆவணஞ்சேர் கடனளிப்பு (confirmed documentary credit) *3,75,000* ரூபாய் வரை நம்பிக்கை ஒப்படைப்பு வசதிகள் (trust facilities), *7,50,000* ரூபாய்வரை கழிவுநீக்கி உண்டியல்களை வாங்குதல் ஆகியவை அடங்கிய 15 இலட்ச ரூபாய் களைக் கடன் வசதியாக 15 விழுக்காடு எச்ச ஓர அடகுறுதியின் எதிராகத் தருமாறு மனுச் செய்திருக்கிறது. அவர்கள் சொந்த வாணிகமும் ஓரளவு தரகுப்பணியும் புரிகின்றனர். அவர்கள் இருப்புநிலைக் குறிப்பைத் தராது தங்கள் உபரிநிதி 6 இலட்ச ரூபாய் என்று மட்டுமே கூறுகின்றனர். பிற பாங்குகளிலும் அவர்களுக்குக் கணக்குகளிருக்கின்றன. இப்பாங்கில் முன்பு இருந்த அவர்கள் கணக்கு சிறியது ; ஆனால் இப்பொழுது அவர்கள் வேண்டும் கடன் வசதியோ பெரியது. மேலும், கழிவு நீக்கி அவர்களிடமிருந்து வாங்கிய உண்டியல்களில் சில ஒழுங்கற்ற அமிசங்களைக் கொண் டிருந்ததை பாங்கு அண்மையில் கண்டுபிடித்தது. அவற்றில் கணிசமான அளவு ஒப்புரவு உண்டியல்களாக (accommodation bills) இருப்பது கண்கூடு. அவர்கள் ஊக வாணிகத்தில் தலை தெறிக்க (wildly) ஈடுபட்டுக் கடுமையாகத் தாக்கப்பட்டதாகச் செய்திகள் கிடைக்கின்றன.

கடன் வசதிகளை அவர்களுக்கு விரிவாக அளிப்பதற்குத் தக்க காலமல்ல இது; மாறாக ஏற்கெனவே அவர்கள் பாங்குக்குத் தர வேண்டிய பொறுப்புக்களைத் தீர்க்குமாறு வேண்டுவதே பொருத்தமானது. ஆயினும், ஓரளவு முனைப்பும் வற்புறுத்தலும் இன்றி முழுக்கடனையும் மீட்பது அரிது. இதுபோன்ற கணக்கை பாங்கு பெற்றிராதிருத்தலே உத்தமம். இச்சூழலில் மிக்க விழிப் போடு நம்பிக்கை ஒப்படைப்பு வசதிகளை அளித்தல் சிறந்தது ; ஏனெனில், வாங்கிய அதே சந்தையில் அவர்கள் சரக்குகளை விற்கக் கூடும். எனவே, அவர்கள் திவாலாகும்பொழுது நம்பிக்கை

ஒப்படைப்புத் திருமுகத்தின்கீழ் (trust letter) பாங்கர் எழுப்பும் உரிமை, பிறருடைய எதிரீட்டு உரிமை (set-off) என்னும் பாறையில் மோதிக் கவிழ நேரிடும். கூலவாணிகத்தின் இயல்பே ஊக வாணிகத்தின் தன்மையைக் கணிசமான அளவு கொண்டுள்ளது. கோதுமையின் வேட்பு பெருமளவானதாக மிகவும் பரந்ததாக இருக்கிறது. உலக அளிப்பின் அளவு (world supplies), வருங்கால மாசூல் வாய்ப்புக்கள் (crop prospects) ஆகிய இரண்டு காரணி களும் விலைகளைப் பெருமளவுக்குக் கட்டுப்படுத்தும் வல்லமை வாய்ந்தவை. எனவே, விலைகள் மிகவும் ஏறி இறங்குவது இயல்பே. அளிப்பவர்களின் எண்ணிக்கையும் வளமும் மிகுந்து இருப்பதால் சந்தையில் பண்டங்களை முடக்கிக் (cornering) கிடைப்பருமையை உண்டுபண்ண வேண்டும் என்னும் முயற்சி ஈடேறாது, தற்காலிக மானதாகவே அது பூத்துப் போகும்.

## இனப்பாகுபாடற்றவை (Miscellaneous)

### I

#### கூச்பெர்வாணிபூர் மாநகராட்சி

செய்துள்ள மனு, பல அடைமானங்களின் பிணையமாக 2 இலட்ச ரூபாய்க் கடனும், துணைப்பிணையமற்ற ரூ. 50,000 கடனும் பெறுவதற்காகும். பல்வேறு பணிகள், செயற்பொறுப் புக்கள் ஆகியவற்றை நிறைவேற்ற வெவ்வேறு கணக்குகளிலிருந்து அது கடன் பெறுகிறது; பிறக் கணக்குகளில் பெரும் வரவிருப் புக்களை வைத்திருக்கின்றது. எனவே, மாநகராட்சியின் பணத் தையே பெரும்பாலும் பாங்கு கடன் தருகிற நிலை ஏற்படும். பிற மூலங்களிலிருந்து அது வாங்க இருக்கும் கடனையோ அல்லது அது விதித்த கட்டணங்களின் வசூலையோ எதிர்நோக்கி, இரண்டாவது கடனை ரூ. 50,000 அவ்வப்பொழுது நேரும் தற்காலிகத் தேவை களுக்கு மட்டுமே அதற்கு வேண்டியிருக்கும். இம் மாநகராட்சியின் நிதியங்கள் நன்கு நிருவகிக்கப்படுகின்றன. இம்மாநகராட்சியின் கட்டணங்கள், வருவாய், நிதிகள், சொத்துக்கள் ஆகியவற்றின் பிணையமாகப் பெருங்கடன்கள் வாங்கும் அதிகாரங்களை அதற்கு அதன் உள்ளாட்சிச் சட்டம் (local act) வழங்குகிறது. ஆனால் வாங்கும் கடன்கள், இவ்வதிகாரங்களுக்கும், இச்சட்டம் அங்கீகரித் துள்ள மேலாண்மையாளர்கள் அவ்வப்பொழுது விதித்து அமுலி லிருக்கும் தற்காலிக ஆணைகளுக்கும் இணங்க இருத்தல் வேண்டும். இவை தவிர, வேறு எந்த அங்கீகாரமும் தேவையில்லை. அடை மானங்களுக்குப் பொதுமுறை ஒன்றை வகுத்து அதைக் கையாண்டு

வருகிறது. இதன் அடைமானங்களில் பெரும்பகுதியானவற்றைப் பொதுமக்கள் வைத்திருக்கின்றனர். சிற்சில சமயங்களில் மீட்கக் கூடிய கடன் தொகுப்பை வெளியிட்டும் பிற வழிகளிலும் இது பணம் திரட்டுகிறது.

நியாயமான ஊதியத்தைத் தரும் கட்டுப்பாடுகளோடு, தயக்க மின்றி இக்கடன் வசதியை அளிக்கலாம்.

## II

கான்பகதூர் ஜாம்ஷெட்ஜி பூனுவாலா
இயக்குநர், ப்ரோக் பஞ்சுக் கம்பெனி வரையறுத்தது

நிலவர விலைகள் உச்சத்தில் இருக்கும்பொழுது ரூ. 1,75,000 பெறுமானமுள்ள பண்ணை நிலங்களுக்கு எதிராகக் குறைந்த வட்டியில் ரூ. 1,25,000 கடனைத் தொடர்ந்தளிக்குமாறு மனுச் செய்திருக்கிறார். அவர் அங்கு செல்வாக்கு மிக்கவர். கம்பெனியின் கணக்கு அப்பாங்குக்கு மாற்றப்படலாம் என்ற பேச்சும் நிலவு கிறது. நல்ல பணவசதியுள்ளவர் என்ற புகழ் இன்னும் இருப் பினும், கடந்த காலத்தில் பல தொழிலமைப்புக்களை நடத்தத் தவறியிருக்கிறார்.

மேலும், பிணையங்களை அளிக்குமாறு வற்புறுத்துவதுடன், கடன் பொறுப்பைப் படிப்படியாகக் குறைப்பதற்கு அறுதியான திட்டத்தை வகுத்து அதை அவர் பின்பற்றுமாறு தக்க ஏற்பாட் டைச் செய்ய வேண்டும்; வட்டி வீதத்தையும் உயர்த்த வேண்டும்.

## III

திருவாளர்கள் ஏ. கே. போசும், எஸ். ஹெச். சேட்டர்ஜி
என்பவரும்
மறைந்த சர். எஸ். பி. குப்தா என்பவரின்
விருப்பாவணத்தின் நிறைவேற்பாளர்கள்

ரூ. 50,000 பெறுமானமுள்ள விற்கத்தக்க ஈடுகளின்மீது நிறைவேற்பாளர்கள் அளிக்கும் பிணைப்பொறுப்புக்கும், மாண்ட வரின் வரவிருப்பு 10,000 ரூபாயுக்கும் பிணையமாக ரூ. 50,000-ஐக் கடனளிக்குமாறு மனுச் செய்துள்ளனர். இக்கடன் சொத்துத் திரட்சி வரியைச் (estate duty) செலுத்துவதற்குத் தேவைப் படுகிறது. உயிர் நிரூபனச் சான்றிதழைக் கூடிய விரைவில் பெற்றுத் தருவதாக வாக்குறுதியளிக்கின்றனர். மனுச் செய்ப

வர்களைப் புகழ் வாய்ந்த வழக்குரைஞர்கள் அறிமுகப்படுத்து கின்றனர்.

இவ்வாபத்து புறக்கணிக்கத்தக்க அளவு மிகச் சிறியது. உயிர் நிரூபனச் சான்றிதழைப் (probate) பெற்றுத் தருவதற்கு நிறைவேற்பாளர்களைக் கூட்டாகவும் தனித்தனியாகவும் பொறுப் பேற்குமாறு கேட்க வேண்டும். அல்லாவிடில், அவர்கள் கூட்டாக மட்டுமே பொறுப்பாவர். அரசாங்க வருவாய்த்துறையிடம் நேரடியாக அத்தொகையைச் செலுத்துவதற்கு பாங்குக்கு அதிகாரம் வழங்கப்படாமலிருந்தால், அக்கடன் சொத்துத்திரட்சி வரியைச் செலுத்த மட்டுமே பயன்படுத்தப்பட்டது என்பதை வேறு ஏதாவது வழியில் அப்பாங்கு உறுதி செய்துகொள்ள வேண்டும். உதாரணமாக, அதற்கான இரசீதைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு அவர்களை வேண்டலாம்.

சொத்துத்திரட்சியைத் தக்கவாறு ஈடுபடுத்தும் உரிமையை விருப்பாவணமே நிறைவேற்பாளர்களுக்கு வழங்கியிருக்கிறதா, குறிப்பிட்ட சொத்துக்களை உடனே அடகு வைப்பதற்கு அவர் களுக்கு அதிகாரம் உண்டா என்று பாங்கர் கண்டறிய வேண்டும். பொறுப்பாண்மையாளர்கள் (டிரஸ்டிகள்), சொந்த முகவர்கள் ஆகியோரைப் பொறுத்தவரை, அவர்களுக்குக் கடனீந்தவர் அவர்களுடைய நிலையிலிருந்துதான் சொத்துத் திரட்டுக்கு எதிராக உரிமை பாராட்டலாம். சொத்துத்திரட்டிலிருந்து நிறைவேற் பாளர் மீட்க இயலாத பணத்தை, கடனீந்த பாங்கரும் மீட்க இயலாது.

## IV

### டாக்டர் ஜே. டி. லோதி, எம். டி.

வெற்றி நடைபோடும் வாணிக, தொழிற்கம்பெனிகளின் சாதாரணப் பங்குகள், முன்னணியிலுள்ள பொறுப்பாண்மைக் கம்பெனிகள், காப்புறுதிக் கம்பெனிகள் ஆகியவற்றின் பின்னுரி மைப் பங்குத் தொகுப்புக்களைப் போன்று உயர்விலையும் விற்க எளிதாகவும் உள்ள ரூ. 1,25,000 பெறுமானமுள்ள ஈடுகளின் எதிராக ஓர் இலட்ச ரூபாய் கடனளிக்குமாறு மனுச் செய்கிறார். அவருடைய தொழிலைத் தவிர வேறு வளங்களைக் (means) கணிச மாக இல்லாதவர்.

தற்காலிகமாகவன்றி, அவருக்குக் கடன் வசதியளிப்பது உகந்ததல்ல. இத்தகைய உயர்விலை கொண்ட ஈடுகள் மிக்க ஏற்ற

இறக்கங்களுக்கு உட்பட்டுள்ளன. அவற்றின் நிலவர விலைகள் எதிர்பாராதவாறு வீழ்ச்சியுற்றால், அக்கடனின் எச்ச ஓரம் விரைவில் கரைந்து மறைந்துவிடலாம். தற்காலிகக் கடன் நிரந்தரக் கடனாக மாறுவது அடிக்கடி நிகழாததொன்றல்ல. இந்த ஈடுகள் உயர்ந்த விலையில் இருப்பதால், அவற்றின் நிலவர விலைகள் எதிர்பாராமல் விழுவதால் ஏற்படும் ஆபத்திலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள வழக்கமாக வேண்டும் எச்ச ஓரத்தைக் காட்டிலும் அதிகமான எச்ச ஓரத்தை வைக்குமாறு பாங்கர் வற்புறுத்துதல் விரும்பத் தக்கது.

## துணைப்பிணையங்களற்ற கடனின் வெவ்வேறு வகைகள்

துணைப்பிணையங்களைப் பெறாது, கடன் வாங்குபவரின் ஆள்திறப்பிணையத்தை மட்டுமோ அல்லது அத்துடன் மூன்றாம் ஆள் ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்டவரின் ஆள்திறப் பிணையத்தையும் நம்பி பாங்கர் அளிக்கும் கடனின் வெவ்வேறு வகைகளை ஈண்டு நாம் ஆராய்வோம். கடன் வாங்குபவரின் ஆள்திறப்பிணையத்தை மட்டும் நம்பி இன்று பாங்கர் தரும் கடன் மிகமிகக் குறைவு. அளிக்குமாறு தாம் மனுச்செய்துள்ள கடனுக்குப் பின்னணிக்காப்பாகத் தக்க துணை ஈடுகளைக் கடன் வாங்குபவர் தர இயலாதபொழுது, பாங்கர் அறிந்த மூன்றாம் ஆள் ஒருவரின் உத்தரவாதத்தைப் பெற்று வருமாறு அவர் வேண்டப்படுகிறார். அந்த மூன்றாம் ஆளின் நாணயம் பாங்கருக்கு மனநிறைவையளிக்கக் கூடியதாக இருக்க வேண்டும்.

### உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குதல்

சுத்த உண்டியல்களை (clean bills) வட்டம் கழித்து வாங்குதலே, பாங்கர்கள் அளிக்கும் ஈட்டுக்காப்பற்ற கடன்களில் மிக முக்கியமானதாகும். பாங்கரின் நிதியில் போதுமான அளவை தன்வயம் ஈர்க்கும் இம்முறை இன்னும் பாங்கரிடையே செல்வாக்கு மிக்கதாகத் திகழ்கிறது; குறிப்பாக, முன்னணியிலிருக்கும் ஐரோப்பிய நாடுகளிலுள்ள வாணிக பாங்குகளுக்கு இக்கூற்று மிகவும் பொருந்தும். 1952ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் தேதியன்று லண்டன் தீர்வு பாங்குகள் தங்கள் வைப்புக்கள், நடப்புக் கணக்குப் புழக்கத்திலுள்ள செலாவணி ஆகியவற்றின் கூட்டுப்பொறுப்புக் களில் 18 விழுக்காடான ஏறத்தாழ 1122 மில்லியன் பவுண்டுப் பெறுமானமுள்ள உண்டியல்களை (கருவூல உண்டியல்களும் அடங்க) வாங்கி வைத்திருந்தன. 1952ஆம் ஆண்டு இறுதியில் இந்தியாவிலுள்ள அட்டவணையிலிட்ட பாங்குகள் 891.97 இலட்ச ரூபாயான

தங்கள் வைப்புக்களில் 6.75 விழுக்காடான 60.77 இலட்ச ரூபாய்ப் பெறுமானமுள்ள உள்நாட்டுத் தவணை உண்டியல்களை வைத்திருந்தன. இங்கிலாந்தைப் போலன்றி இந்தியாவில் எல்லா வைப்புக்களும் கேட்கும்பொழுதோ அல்லது மிகக் குறுகிய அறிவிப்பிலோ செலுத்தத் தக்கவை அல்ல என்பதை இங்கு உற்று நோக்க வேண்டும்.

இந்தப் புள்ளி விவரங்களிலிருந்து இந்தியாவிலுள்ள பாங்குகள் உண்டியல்களைப் பெருமளவு வைத்திருப்பதில்லை என்பது தெளிவாகப் புலனாகிறது. இருப்பினும், அண்மைய ஆண்டுகளில் இப்போக்கில் சற்று முன்னேற்றம் இருப்பதை உணர வேண்டும். இந்தியாவிலுள்ள பாங்குகளின் பெரும்பகுதியான வைப்புக்கள் கேட்கும்பொழுதோ அல்லது மிகக் குறைந்த அறிவிப்பின் அடிப்படையிலோ செலுத்தத் தக்கவையல்ல; எனவே, இங்கிலாந்திலுள்ள தமது கூட்டாளிகளைப் (confreres) போல அவ்வளவு ரொக்கத்தன்மை வாய்ந்த சொத்து வளங்களை இந்தியாவிலுள்ள பாங்குகள் வைத்திருக்க வேண்டிய தேவையில்லை. மேலும், இங்கிலாந்தைக்காட்டிலும் இந்தியாவில் அரசாங்க ஈடுகள் உயர்ந்த ஆதாயத்தை அளிக்கின்றன.

## இந்தியாவில் உண்டியல்கள் செல்வாக்குப் பெறாததன் காரணங்கள் என்ன?

### ரொக்கக் கடன்கள், தொடர்கணக்கு ஆகிய முறை

இந்தியாவில் வாணிக உண்டியல்கள் குறைந்த அளவு மட்டுமே பயன்படுத்தப்படுவதற்கான காரணங்களைத் தேடியலைய வேண்டிய தேவையில்லை. அவை உள்ளங்கை நெல்லிக்கனி போல் அவ்வளவு கண்கூடாக உள்ளன. (1) நம் நாட்டில் பெருவழக்காகவுள்ள ரொக்கக்கடன், தொடர்கணக்கு ஆகிய முறை, உண்டியல்கள் நாடுவாரற்றுத் தேய்வதற்கு முக்கிய காரணியாகும். ரொக்கக் கடன் முறை பல நன்மைகளை அளிக்க வல்லது; அரை அல்லது கால்பகுதி வட்டிச் சரத்துக்கு உட்பட்டு மெய்யாகவே பயன்படுத்திய கடன் பகுதிக்கு மட்டுமே வட்டி செலுத்த வேண்டிய வசதி கடன் வாங்கியவருக்கு இருப்பது போல அவரது நிலைமை சீர்குலைந்து வரும்போது, உறுதியளித்த ரொக்கக்கடனை இரத்து செய்ய பாங்குக்கு உரிமையுள்ளது. இந்தியாவில் வியாபாரிகள் சரக்குகளைக் கடனாக வாங்கும்பொழுது, அவற்றிற்கு எதிராக உண்டியல்களை ஏற்கப் பெரும்பாலும் விரும்புவதில்லை; தொடர் கணக்கைத் துவக்கி நடத்தவே விரும்புகின்றனர். அந்த ஆண்டு

இறுதியில், பொதுவாகத் தீபாவளிக்கு முன், அக்கணக்கைத் தீர்த்து விடுவர் அல்லது அவர்களுக்குள் ஒப்புக்கொண்டவாறு, கணக்கின் இருப்பை அடுத்த ஆண்டுக்குக் கொண்டு செல்கின்றனர்.

**(2) உண்டியல்களை மறு வட்டம் கழிய விற்கவும் வாங்கவும் (Rediscounting) வசதிகள் குறைவு**

இந்திய ரிசர்வு பாங்கு துவக்கப்படுவதற்கு முன் இந்தியக் கூட்டுப் பங்குப் பாங்குகளுக்கு நிதி வசதி தேவைப்பட்டபொழுது அன்றிருந்த இம்பீரியல் பாங்கையே அவை நாட வேண்டியிருந்தது; ஆனால், இம்பீரியல் பாங்கு வாணிக பாங்குத் தொழிலில் அவைகளோடு போட்டியிட்டுக்கொண்டிருந்தால், தங்கள் உண்டியல்களை மறு வட்டம் கழிய அதனிடம் (இம்பீரியல் பாங்கு-அப்பொழுது அதுவே மத்திய பாங்காகப் பணியாற்றியது) விற்பதன் விளைவாகத் தங்கள் வாடிக்கைக்காரர்களின் பெயர்களைத் தெரிவிக்க வேண்டிய தொல்லையைத் தவிர்க்கும் நோக்கத்தோடு, பெரும் பங்குக் கடன் வசதியை அதனிடமிருந்து தாங்கள் வைத்துள்ள அரசாங்க ஈடுகளின் எதிராகப் பெறுவதையே அவை விரும்பின. இதனால் அவை உண்டியல்களை யாரிடமிருந்து வட்டம் கழித்து வாங்கினவோ அந்த வாடிக்கைக்காரர்களின் பெயர்களை இம்பீரியல் பாங்குக்கு—அவைகளோடு கடும் போட்டியிட்ட பாங்குக்கு—தெரிவிக்க வேண்டிய தேவையின்றிப் போயிற்று. மேலும், வட்டம் கழித்து வாங்கும் வசதியை ஒப்புக்கொள்ளத் தக்க உண்டியல்களுக்கு (approved bills) மட்டுமே இம்பீரியல் பாங்கு வழங்கியது. ஒப்புக்கொள்ளத்தக்க உண்டியல்கள் என்றால் அன்றிருந்த இம்பீரியல் பாங்கு ஒப்புக்கொள்ளத்தக்கவாறு உள்ள உண்டியல்கள் என்று பொருள். ஆனால் ஒப்புக்கொள்ளத் தக்க உண்டியலின் சிறப்பியல்புகள் யாவை, எம்மாதிரியான உண்டியல்கள் ஒப்புக்கொள்ளத் தக்கவையாகும் என்று எந்த விவரத்தையும் வெளியிடாதது நிலைமையை இன்னும் மோசமாக்கியது. அதன் விளைவாக உண்டியல்களை வட்டம் கழித்துவாங்கும் பாங்கர், இம்பீரியல் பாங்கு அவற்றை மறு வட்டம் கழித்து வாங்கிக் கொள்ளும் தன்மையை அவை பெற்றுள்ளனவா என்று திடமாக நம்பிச் செயலாற்ற முடியாமல் போயிற்று. ஆயினும், 1934ஆம் ஆண்டு இந்திய ரிசர்வு பாங்கு நிறுவப்பட்டதிலிருந்து 1934ஆம் ஆண்டு ரிசர்வு பாங்கு ஆக்ஃப் இந்தியச் சட்டத்தின் 17ஆம் பிரிவின் கீழ் உண்மையான வாணிக பேரங்களிலிருந்து எழும் தன்மையும் தொண்ணூறு நாள்களுக்குள் முதிர்வடையும் தன்மையும் பொருந்திய உண்டியல்களை மறு வட்டம் கழித்து வாங்கும் வசதிகளை அட்டவணையிலிட்ட பாங்குகளுக்கு அது அளிக்கிறது.

### (3) முத்திரை வரியின் வீதம் உயர்வாக இருக்கிறது

இந்தியாவில் மாமூல் தவணை உண்டியல்கள் பெறுமான விகிதத்தில் முத்திரை வரிக்கு இலக்காகின்றன. இவ்வரிச்சுமை, வட்டி அல்லது கழிவுடன் சேர்ந்து கடன் செலவை அதிகமாக்கு கிறது. 1957ஆம் ஆண்டு மே திங்களில் முத்திரை வரி குறைக்கப் பட்டதெனினும், அதன் சுமை இன்னும் கணிசமான அளவு இருக்கிறது.

### (4) பொதுக்கிடங்குகள் போதுமான அளவு இன்மை

விளைபொருள்களைச் சேகரித்துச் சேமித்து வைப்பதற்குத் தேவையான பொதுக் கிடங்குகளும் பண்டடைகளும் (godowns) போதுமானதாக இல்லாமை, ஆவணஞ்சேர்ந்த உண்டியல்கள் பாங்குகளிடையே செல்வாக்குப் பெறுவதற்கு முக்கிய தடையாக அமைந்திருக்கிறது. கிடங்குகளை நிறுவுதல் இந்தியாவில் அண்மையில் எழுச்சிபெற்றுக்கொண்டு வருகிற ஒரு முன்னேற்ற மாகும்; முன்பு, ஒரு சில பிணையப்பத்திரக் கிடங்குகளைத் தவிர, பொதுக்கிடங்குகளே இல்லாமல் இருந்தன. நாட்டின் விளைபொருள்கள், உற்பத்திச் சரக்கு ஆகியவற்றைச் சேமித்துப் பாதுகாக்க வேண்டிய தேவைகளின் அடைப்படையில் நோக்கினுல் மத்திய கிடங்கமைவு கார்ப்பரேஷன், மாநில கிடங்கமைவு கார்ப்பரேஷன்கள் ஆகியவை அண்மையில் நிறுவிய கிடங்குகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு என்பது புலப்படும். மேலும், அவைகளின் இரசீதுகளும் குறைவான மாற்றத்தக்க தன்மை யையே (transferability) பெற்றுள்ளன.

### (5) பாங்கு அலுவலகங்களின் எண்ணிக்கை சிறியது

நம் நாட்டில் பாங்கு அலுவலகங்கள் போதுமான எண்ணிக்கை யில் இன்மையும் உண்டியல்களின் செல்வாக்கு வளர்ச்சியுறுதிருப்ப தற்கு ஒரு காரணமாக விளங்குகிறது. எடுத்துக்காட்டாக, பம்பாயிலிருந்து பாங்கு வசதிகளற்ற உள்நாட்டிலுள்ள பல இடங்களுக்குச் சரக்குகளை அனுப்பும்பொழுது அவற்றின் தொடர் பாக எழுதப்படும் உண்டியல்களை வசூலிப்பதற்கு ஆகும் செலவு களின் சுமை மிகுதியானதாக இருக்கிறது; எனவே, பணம் அனுப்ப விரும்புகிறவர்கள் அஞ்சல்துறை அளிக்கும் காப்புறுதி வசதிகளையே பயன்படுத்த வேண்டிய தேவை இருக்கிறது. மேலும், சிறு இடங்களில் தொழிலாற்றும் வணிகர்களின் நாணயத்தை அறிய இயலாது போவதற்கும் இந்தக் காரணி ஒரு குறுக்கீடாக அமைகிறது.

**(6) நாட்டு உண்டியல்களைச் சார்ந்துள்ள மரபுகள் ஒரே சீராக இல்லை**

இந்தியாவில் வாணிக உண்டியல்களின் செல்வாக்கு குன்றி இருப்பதற்கு நாட்டு உண்டியல்களைச் சார்ந்துள்ள மரபுகள் நாடு முழுவதும் ஒரே தன்மையுடையனவாக இல்லாமையும் ஒரு காரண மாகும். நாட்டு உண்டியல்களில் பொதுவாக இடம் பெற்றுள்ள நீண்ட தொடக்க முகமனுரைகளையும், தேவையற்ற வணக்க வுரைகளையும் களைந்துவிட்டு, அவற்றை எளிய நடையில் எழுதும் பழக்கத்தைக் கையாள்வதோடு, அவற்றின் அடிப்படை அமிசங்களை ஆணித்தரமாக வகுத்தமைத்தால், அவற்றின் புழக்கம் தற்பொழுது உள்ளதைக்காட்டிலும் பரவலாகப் பெருகுவது திண்ணம்.

## பாங்குகள் உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குவதால் விளையும் நன்மைகள்

கீழ்க்காணும் முதற்பெரு நன்மைகள், தங்களுடைய நிதிகளை, உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குவதில் ஈடுபடுத்துமாறு வாணிக பாங்குகளுக்கு ஆர்வமூட்ட வல்லன :

**(அ) உரிய தேதியில் பணம் பெறுவது உறுதி**

முதல்தரமான உண்டியல்களில் முதலீடு செய்த பணத்தை உரிய தேதியில் மீட்பது உறுதி. உண்டியலொன்றை ஏற்கும் வாணிகர் தமது நாணயம் கெடாமல் காக்கும்பொருட்டு, உரிய தேதியில் அதை மதிக்க விழைகிறார் ; அவ்வாறு மதித்துப் பணஞ் செலுத்த அவர் தவறினாலும், அதை எழுதியவரான தமது வாடிக்கைக்காரரிடமிருந்தோ அல்லது புறங்குறித்தவர்களில் யாராவது ஒருவர், குறிப்பாக யாருக்காக, யாரிடமிருந்து வட்டம் கழித்து அதை வாங்கினாரோ அந்த வாடிக்கைக்காரரிடமிருந்தோ அதன் பணத்தை பாங்கர் பெறுவது திண்ணம். பிணையக்காப்பு, உரிய தேதியில் பணம் பெறும் உறுதிப்பாடு ஆகியவற்றை உரை கல்லாகக் கொண்டு சோதித்தால், உண்டியல்கள் செம்மையான முதலீடாக விளங்குவது வியக்கத் தக்கதன்று. எனவேதான் நாட்டுப்புற பாங்கர் (the country banker) என்னும் நூலாசிரிய ரான மறைந்த திரு. ஜார்ஜ் ரே அவர்கள் அவற்றை பாங்குக் குகந்த மிகச் சீரிய பிணையம் என்று கருதினார்; பிரிட்டிஷ் அரசாங்க கான்சல் கடன் பத்திரங்களைக்காட்டிலும் மிகுதியாக விரும்பத் தக்கவை என்றும் கூறிப் போந்தார்.

## (ஆ) திட்டமான காலத்திற்கு நிதிகளை ஈடுபடுத்தல்

திட்டமான காலத்திற்கு பாங்கர் தமது நிதிகளை இலாபகரமாக ஈடுபடுத்த உண்டியல்கள் தக்க வாய்ப்பை அளிக்கின்றன. மேலும், வாடிக்கைக்காரர்களுடைய எதிர்பார்க்கவல்ல கேட்புத் தேவைகள் எவ்வெப்பொழுது ஏற்படும் என்பதைத் துருவி ஆராய்ந்தறிந்து அதற்கேற்ப அவ்வப்பொழுது ரொக்கம் கிடைக்குமாறு வகை செய்யும் தக்க முதிர்வுகளைக்(தவணைகளைக்)கொண்ட உண்டியல்களைப் பகுத்தறிவுணர்வோடு தேர்ந்தெடுத்து அவற்றில் பாங்கர் தமது உபரி நிதிகளை முதலீடு செய்வதன் மூலம், தம்மிடம் வீணுக, பயனற்றுத் தேங்கியுள்ள ரொக்கத்தைக் குறைந்தபட்ச அளவுக்குக் குறைத்துக்கொள்ள முடிகிறது. எடுத்துக்காட்டாக, மூன்றுமாத காலத்திற்கு ஓர் இலட்ச ரூபாயைத் தவணை வைப்பாகப் பெறும் பாங்கர், அதன் செலுத்த உரிய தேதிக்கு ஓரிரு நாள்கள் முன்னதாக முதிர்வடையவல்ல உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குவதன் மூலம் அப்பணத்தை இலாபகரமாகப் பயன்படுத்த இயலுகிறது.

## (இ) ரொக்கத்தன்மை

உண்டியல்கள், மிக்க ரொக்கத்தன்மை வாய்ந்த ஈடுகளாகும். தமது ரொக்கக்காப்பிருப்பை வலுப்படுத்த வேண்டிய தேவை ஏற்படும்பொழுது, ஏற்கெனவே வாங்கிய உண்டியல்கள் முதிர்வடைவதால் பெறும் பணத்தை, பாங்கர் புதிய உண்டியல்களை வாங்குவதில் ஈடுபடுத்தாமல் நிறுத்தி வைத்தாலே போதுமானது. மிகுதியான ரொக்கக்காப்பிருப்பின் தேவை நீடிக்கும்வரை இவ்வாறு நிறுத்தி வைத்திருந்து, அத்தேவை குன்றும்பொழுது உபரியாகும் பணத்தைப் புது உண்டியல்களை வாங்குவதில் ஈடுபடுத்தலாம். மேலும், எதிர்பாராத அவசரத் தேவைகள் ஏற்படும்பொழுது அந்நாட்டு மைய பாங்கு நிலையத்திற்கு மறு வட்டம் கழிய உண்டியல்களை விற்பதன்மூலம், அவற்றை பாங்கர் எளிதில் ரொக்கமாக மாற்ற இயலுகிறது. எனவே, தனது நிதிகளின் கணிசமான பகுதியை உண்டியல்களில் முதலீடு செய்துள்ள பாங்கு, உண்டியல் கோவை (portfolio) சிறியதாக உள்ள மற்ருெரு பாங்கைக்காட்டிலும் குறைவான ரொக்கக்காப்பிருப்பைக் கொண்டே திறமையாகப் பணியாற்ற இயலும்.

## (ஈ) விலைகளின் ஏற்ற இறக்கங்களிலிருந்து விடுதலை

பங்குமாற்று நிலைய ஈடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, வாணிக உண்டியல்களின் விலைகள் அவ்வளவு அதிகமான ஏற்ற இறக்கங்களுக்கு இலக்காகாதிருக்கும் இயல்பு புலப்

படும். நாட்டின் பண நிலைமை, பாங்குகள் கடைப்பிடிக்கும், கடைப்பிடிக்க வேண்டிய கடன் கைக்கோள் (credit policy) ஆகியவை மாறுபடும்பொழுது வட்ட வீதம் (discount rate) ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாவதும், மத்திய பாங்கு வாணிக பாங்கு களின் வாணிகத்தாளை (commercial paper) மறு வட்டம் கழித்து வாங்கும் வட்ட வீதத்தை மாற்றுவதும் உண்மையே. ஆனால், ஏற்படும் வட்ட வீத மாறுபாடுகள் சிறியனவையே; தமது உண்டி யல்கள் அனைத்தையும் ரொக்கமாக மாற்றிக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்படும்பொழுதுகூட, அதனால் விளையும் மாறுபாடு பாங்கரைப் பாதிக்கும் அளவு அவ்வளவு முக்கியமானதாக இருக்காது.

## (உ) உயர்ந்த ஆதாயம்

கடன்களின் வட்டி வீதமும், உண்டியல் கழிவு வீதமும் ஒன்றாகவே இருப்பினும் உண்டியல்களை வட்டம் கழித்து வாங்கு வதால் அடையும் ஆதாயம் (yield) கடனைக் கொடுப்பதால் பெறும் ஆதாயத்தைக்காட்டிலும் ஓரளவு உயர்வாக உள்ளது. எவ்வாறெனில், உண்டியல்களின் வட்டத்தை அவற்றை வாங்கும் பொழுதே பாங்கர் பெறுகிறார். அதாவது, வட்டத்தைக் கழித்துக் கொண்டு அந்த உண்டியலின் மீதி தொகையைத்தான் வாடிக்கைக் காரரிடம் (உண்டியல்களை வட்டம் கழிய விற்பவரிடம்) பாங்கர் செலுத்துகிறார்; ஆனால், பிற கடன்களைப் பொறுத்தவரை கடன் வாங்கியவர்கள் அவற்றைத் திருப்பிச் செலுத்தும்பொழுதோ அல்லது காலாண்டு அரையாண்டு அல்லது ஆண்டுக்கு ஒரு முறை யோதான் வட்டியைச் செலுத்துகின்றனர். ஆண்டுக்கு இவ்வளவு விழுக்காடு என்று கடன்களின்மீது பெறும் வட்டிக்கும் உண்டியல் களின்மீது கிடைக்கும் வட்டத்துக்கும் உள்ள வேறுபாட்டைக் கீழ்க்காணும் அட்டவணை காட்டுகிறது :

| வட்டியாக விழுக்காடு | கழிவாக விழுக்காடு | வட்டியாக விழுக்காடு | கழிவாக விழுக்காடு |
|---|---|---|---|
| 1 | 1.0101 | 6 | 6.3829 |
| 2 | 2.0408 | 7 | 7.5268 |
| 3 | 3.09278 | 8 | 8.6956 |
| 4 | 4.1666 | 9 | 9.8901 |
| 5 | 5.2631 | 10 | 11.1111 |

ஒரு கோடி ரூபாய்களை 5 விழுக்காடு வட்ட வீதத்தில் மூன்று மாதத் தவணையுள்ள வணிகத்தாளில் ஒரு பாங்கரும், அதே தொகையை அதே வட்டி வீதத்தில் அதே தவணைக்குக் (காலப் பகுதி) கடனாக மற்றொரு பாங்கரும் முதலீடு செய்வாராயின், முதலாவது பாங்கர் இரண்டாமவரைக்காட்டிலும் ரூ. 6600·25-ஐ மிகுதியாக ஈட்டுவார். ஏனெனில், வட்டம் தொடக்கத்திலேயே கழிக்கப்படுகிறது. ஆனால், வட்டியோ கடனுடைய தவணை முடியும்பொழுதுதான் செலுத்த உரியதாகிறது.

**(ஊ) புதிய வாடிக்கைக்காரர்கள் (கணக்குகள்)**

தங்கள்மீது எழுதப்பெற்ற உண்டியல்களை வைத்திருக்கும் பாங்குகளில் கணக்கைத் துவக்கவே, அவ்வுண்டியல்களின்மீது பணஞ்செலுத்த வேண்டிய வணிகர்கள் பெரும்பாலும் விரும்புவர். எனவே, உண்டியல்களைக் கழிவுநீக்கி வாங்கும் பாங்குகள் மேலும் மேலும் புதிய வாடிக்கைக்காரர்களைக் கவர முடிகிறது.

## உண்டியல்களின் வகைகள்

சுத்த உண்டியல்கள், ஆவணஞ்சேர் உண்டியல்கள், கடனளிப்பின் அடிப்படையில் எழுதப்படும் உண்டியல்கள் (bills drawn under credit) ஆகிய இம்மூன்று வகை உண்டியல்களை பாங்குகள் வட்டம் கழித்து வாங்குகின்றன. முதலிரண்டு வகை உண்டியல்களைப்பற்றி மட்டுமே ஈண்டுக் காண்போம். மூன்றாவது வகையைச் சேர்ந்த உண்டியல்களைப்பற்றி இந்நூலின் பதினைந்தாவது அத்தியாயத்தில் காண்போம்.

## உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குவதில் மேற்கொள்ள வேண்டிய எச்சரிக்கைகள்

**பொது உண்டியல்களா பட்டங்களா (Kites)?**

நிதிகளை உண்டியல்களில் ஈடுபடுத்துவதில் மேற்கூறிய பல நற்பயன்கள் இருப்பினும், பாங்கர் சில எச்சரிக்கைகளை மேற்கொள்ளுவது அவசியம். அவற்றைப்பற்றி ஈண்டுக் காண்போம். முதலாவதாக, தாம் வட்டம் கழித்து வாங்கும் உண்டியல்கள் வாய்மையான வாணிக உண்டியல்களா அல்லது ஒப்புரவுத் தாள்களா (accommodation papers) என்பதை பாங்கர் கண்டறிய வேண்டும். வாணிக உண்டியல்கள் வாணிக பேரங்களின் அடிப்படையில் எழுவதால் சரக்குகளைப் பின்னணிக்காப்பாகப் பெற்று

ஆபத்தற்றவைகளாகத் திகழ்கின்றன. ஒருவருக்கொருவர் கடன் திரட்ட உதவும் சாதனங்களாக மட்டும் ஒப்புரவுத்தாள்கள் அமைவதால், மெய்யாகவே பின்னணிக்காப்பு எதுவுமின்றி ஆபத்து நிறைந்தவையாகத் திரிகின்றன. எடுத்துக்காட்டாக, கல்கத்தாவிலுள்ள துணி வியாபாரி ஒருவர் பம்பாய் வியாபாரி ஒருவரிடமிருந்து சில பாரம் வேட்டிகளைக் (a few bales of dhoties) கொள்முதல் செய்கிறார்; ஆனால், அவற்றிற்கு உடனடியாக ரொக்கம் செலுத்த இயலாததால், பம்பாய் வியாபாரி தம்மீது தக்க தொகைக்கு எழுதிய உண்டியல் ஒன்றை ஏற்றுக்கொள்கிறார். சரக்குகளை விற்று, விற்ற பணத்தைக்கொண்டு அந்த ஏற்பைத் (acceptance) தீர்த்துவிடலாம் என்று அவர் திட்டமிட்டிருக்கிறார். எனவே, மெய்யான சரக்குகள் அதாவது வேட்டிகள், அந்த உண்டியலின் பின்னணிக்காப்பாக அமைந்திருக்கின்றன. இதற்கு மாறாக, எழுதுபவரும் ஏற்பவரும் பணத்தைத் திரட்ட ஒரு கருவியாகப் பயன்படுத்தும் ஒப்புரவுத்தாள் அல்லது 'பட்டம்' ஒன்றை, பாங்கர் வட்டம் கழித்து வாங்கும்பொழுது, சரக்குகளின் பின்னணிக்காப்பைப் பெறாது வெறும் தாளாக அது இயங்குவதை அவர் அறியலாம்; வட்டம் கழிய விற்பவர் மேலும் சரக்குகளைக் கொள்முதல் செய்ய அத்தொகையைப் பயன்படுத்தாது முந்திய கடன்களை அடைப்பதற்கோ அல்லது சில செலவுகளைச் செய்யவோ அதைப் பயன்படுத்துவது வழக்கம். பொதுவாக, உண்டியல்களில் ஒரு வகையை மறு வகையினின்றும் பிரித்தறிதல் அரிதாகத் தோன்றினும், வாய்மையான உண்டியல்களுக்கும் ஒப்புரவுத் தாள்களுக்கும் உள்ள வேறுபாட்டை பாங்கர் கண்டு பிடிப்பது கடமையானதன்று. எடுத்துக்காட்டாக, பருத்தி வியாபாரி ஒருவர் எழுதும் உண்டியலை மருத்துவர் ஒருவர் ஏற்றால், ஒப்புரவுத்தாளாகத்தான் அது பெரும்பாலும் இருக்க வேண்டும்; பருத்தி வியாபாரியின் நண்பன் என்ற முறையில் அவருக்கு உதவ வேண்டும் என்னும் எண்ணத்தில் மருத்துவர் அதை ஏற்கிறார் என்பதே இயல்பான உய்த்தறிவு (presumption). பாங்கர் தம்மைத் தாமே கேட்டு விடை காண வேண்டிய வினா யாதெனில், அந்த உண்டியலை எழுதியவருக்கும் ஏற்றுக்கொண்டவருக்குமிடையே நடந்த வாய்மையான வாணிக பேரத்தின் விளைவாக அது எழுந்திருக்கக் கூடுமா அல்லது வாணிகத் தொடர்பற்ற பிற நோக்கங்களே அதன் எழுச்சிக்குக் காரணமா என்பதேயாகும். கட்டடங்கள், இயந்திரங்கள் போன்ற நிலையான சொத்துக்களின் செலுத்தாக அளிக்கப்படும் உண்டியல்கள் ரொக்கத்தன்மை வாய்ந்தவை அல்ல; எனவே, பாங்கர் அவற்றைத் தவிர்த்தல் சிறந்தது.

**ஆவணஞ்சேர் உண்டியல்களா வேறு?**

இரண்டாவதாக, வணிகத்தாளொன்று பாங்கர் வாங்கத் தக்கதா என்பது அது தாங்கியுள்ள ஆள்களின் நாணயத்தை மட்டு மல்ல; அது எவ்வகையைச் சார்ந்தது என்பதையும் பொறுத் திருக்கிறது. எடுத்துக்காட்டாக, கப்பல் இரசீது (bill of lading), இரயில் இரசீது (railway receipt), காப்புறுதி ஆவணம் (insurance policy), வழிப்பட்டியல் போன்ற சரக்குரிமை ஆவணங்கள் (documents of title to goods) இணைந்த ஆவணஞ்சேர் உண்டி யல்களைப் பொறுத்தவரை, குறிப்பாக அச்சரக்குகள் வாழ்க்கைக் கின்றியமையாதனவாகவும் இருந்தால், அவற்றோடு தொடர் புடைய ஆள்களின் நாணயத்தைப் பற்றி பாங்கர் தீர விசாரிக்க வேண்டிய தேவை இருக்காது. இது போன்ற உண்டியல் ஒன்றை அதன் எழுதப்பெற்றவர் அவமதித்தாலும், அதை எழுதியவரிட மிருந்து பாங்கர் அதன் தொகையை மீட்பது அரிதாக இருந் தாலும், அவர் (பாங்கர்) அச்சரக்குகளை விற்றுத் தமக்கு இழப்பு நேருவதற்கான வாய்ப்புக்களைக் குறைத்துக்கொள்ள முடியும். இருப்பினும், தாம் நன்கு அறியாத ஆள்களிடமிருந்து இது போன்ற உண்டியல்களை பாங்கர் வாங்கக் கூடாது. ஏனெனில், தமக்கு இழப்பை விளைவிக்கக்கூடிய சில ஆபத்துக்களை அவை தாங்கியிருக்கலாம். எடுத்துக்காட்டாக, அவை தாங்கியுள்ள ஆவணங்கள் போலியாக இருக்கலாம் அல்லது சரக்குகள் அவற் றைச் சேர்ந்த ஆவணங்கள் கூறும் விவரங்களோடு (description) ஒத்திராதிருக்கலாம்.

**ஆள்களின் நாணயம்**

மூன்றாவதாக, உண்டியல்களை எழுதியவர்கள், ஏற்றுக் கொண்டவர்கள், புறங்குறித்தவர்கள் ஆகியவரின் நாணயம் பாங் கருக்கு மனநிறைவை அளிக்கத் தக்கதாக இருக்க வேண்டும். திறமை வாய்ந்த இன்றைய பாங்கின் நாணயத்துறை, உண்டியல் களில் இடம்பெறத்தக்க பல்வகைப்பட்ட வணிகர்களின் நாண யத்தைப்பற்றிய விரிவான செய்திகளை எவ்வாறு திரட்டி எளிதில் பயன்படுமாறு வைத்துள்ளது என்பதை முன்பே கண்டோம். பாங்கர் வாங்கவிருக்கும் உண்டியலோடு சம்பந்தப்பட்ட வெவ்வேறு ஆள்கள் அவருடைய வாடிக்கைக்காரர்களாகவே இருப்பின், தம்முடைய பதிவேடுகளிலிருந்தே போதுமளவு நம்பத் தக்க செய்திகளை அவர் சேகரிக்க இயலும்.

### குறைபாடுகளற்று முழுமைத்துவம் பெற்றதாக உண்டியல் இருக்க வேண்டும்

எல்லா அமிசங்களையும் பெற்று முழுமைத்துவம் உற்றதாக உண்டியல் இருக்கிறதா என்று கண்டறிதலே பாங்கர் மேற்கொள்ள வேண்டிய நான்காவது எச்சரிக்கையாகும். சட்டத் தேவைகளுக்கேற்பத் தக்க வடிவத்தை (அமைப்பை) மட்டும் உண்டியல்கள் பெற்றிருந்தால் போதாது; தவணை கடந்தவையாகவோ அல்லது வேறெந்தக் குறைபாட்டைக்கொண்டவையாகவோ அவை இல்லாதிருத்தலும் இன்றியமையாதது. அந்த உண்டியலின் பால் தமது வாடிக்கைக்காரருக்குள்ள உரிமையில் குறைபாடு ஏதேனும் இருப்பதை பாங்கர் அறிய நேர்ந்தால், அதைக் கழிவு நீக்கி வாங்க அவர் மறுக்க வேண்டும்; இதற்கு மாறாக அவர் அதை வாங்கினுல் முறைப்படி பெற்றவராகவோ (1881ஆம் ஆண்டுச் செலாவணி முறிச்சட்டத்தின் 9ஆம் பிரிவு) அல்லது குறைபாடற்ற செம்மையான உரிமையை உடையவராகவோ அவர் க்ருதப்பட மாட்டார் என்பது திண்ணம்.

### முத்திரை வரி செலுத்தத் தவறுதல் தண்டத்தில் முடியும்

ஐந்தாவது எச்சரிக்கை உண்டியல் தேவையான முத்திரை ஒட்டப்பெற்று, 1899ஆம் ஆண்டு இந்திய முத்திரைச் சட்டத்திற்கு முற்றும் ஏற்ப இருக்க வேண்டும். பாங்குகள் கையாள நேரும் முக்கியமான ஆவணங்களின்மீது விதிக்கப்படும் தீர்வைகளைப் பற்றியும், முத்திரைச் சட்டத்தின் பொதுக் கோட்பாடுகளைப் பற்றியும் பின்னிணைப்பு ‘உ’-வில் தரப்பட்டுள்ள விளக்கத்தைக் காண்க.

### வாடிக்கைக்காரரின் கணக்கு வரவு வைக்கப்படும்

உண்டியலொன்றைக் கழிவு நீக்கி வாங்க பாங்கர் முடிவு செய்யும்பொழுது, அந்த வாடிக்கைக்காரரின் நடப்பு அல்லது அதிகப்பற்றுக் கணக்கில் கழிவு நீங்கிய அதன் தொகையை அவர் வரவு வைப்பது வழக்கம். பிறகு அந்த உண்டியலை வரவுடைய உண்டியல் குறிப்பேட்டிலும் (Bills Receivable Book), அதன் முதிர்வு தேதியை வரவுடைய உண்டியல் நாளேட்டிலும் (Bills Receivable Diary) பதிவு செய்வார்.

### தொடர்புடைய ஆள்களின் பொறுப்புக்கள்

ஏற்புக்காகச் சமர்ப்பித்தல், செலுத்தலுக்காகச் சமர்ப்பித்தல் ஆகியவற்றைப் பற்றிய பொதுக் கோட்பாடுகளை முன்பே விளக்கியுள்ளோம். எனவே, உண்டியல் அவமதிக்கப்படுங்காலத்து,

அதில் தொடர்புடைய ஆள்களின் பொறுப்புக்களை ஈண்டு ஆராய்ந்து விட்டு இவ்வத்தியாயத்தை முடிக்க எண்ணுகிறோம். உண்டியல் எழுதப்பெற்றவர் அதை ஏற்கும்பொழுது அதன் தலையாய கடனாளியாகிறார்; ஆனால் அதுவரை அவருக்கெதிராக, அந்த உண்டியலை வைத்திருப்பவர், எவ்வித உரிமையையும் பாராட்டவியலாது. அவர் அதை ஏற்க மறுக்குங்காலத்து, அதை வைத்திருப்பவர் எழுதியவரிடமிருந்தும் புறங்குறித்தவர்களிடமிருந்தும் அதன் தொகையைச் செலுத்துமாறு கேட்டு ஆவன செய்ய வேண்டும். உண்டியலை எழுதிக் கையொப்பமிட்டுத் தருவதன்மூலம் அதன் எழுதுபவர், அது சமர்ப்பிக்கப்படும்பொழுது அதன் வெளிப்படையான நோக்கத்திற்கேற்ப முறையாக ஏற்கப்பட்டுச் செலுத்தப்படுமென்று உறுதிமொழி கூறிப் பொறுப்பேற்கிறார். மேலும், அது அவமதிக்கப்படுங்காலத்து, அதை வைத்திருப்பவருக்கோ புறங்குறித்தவருக்கோ நேர்ந்த இழப்பை ஈடு செய்வதாகவும் உறுதிமொழியளிக்கிறார்—ஆனால் ஒரு நிபந்தனை, அதாவது ஈடுபெற உரியவர், உண்டியல் அவமதிக்கப்படுங்காலத்து மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளனைத்தையும் முறைப்படி செய்ய வேண்டும். தமது கைகளை விட்டுச் செல்லும்பொழுது அந்த உண்டியல் முழுமைத்துவம் பெற்றிருந்தது என்று புறங்குறித்தவர் தமது புறக்குறிப்பின் வாயிலாகச் சான்று பகர்கிறார். புறங்குறித்தவர்களின் பொறுப்பு எந்த வரிசையில் அவர்களுடைய பெயர்கள் (புறக்குறிப்புக்கள்) உண்டியலில் தோன்றுகின்றனவோ அவ்வாறு எழுகிறது. இரண்டாவதும் அதற்கடுத்தும் புறங்குறித்தவர்களுக்கு முதற்புறங்குறித்தவரும், மூன்றாவதும் அதற்கடுத்தும் புறங்குறித்தவர்களுக்கு இரண்டாவது புறங்குறித்தவரும் ஆகிய இவ்வரிசையில் பொறுப்பாகின்றனர்.

### உண்டியல் (மறுப்பு) அவமதிப்பு

தாம் வட்டம் கழித்து வாங்கிய உண்டியல் அவமதிக்கப்படுங்காலத்து, அதன் தொகை, அவமதிப்புச் செலவு ஆகியவற்றை பாங்கர் தக்க வாடிக்கைக்காரரின் கணக்கில் பற்று வைக்க வேண்டும்—ஆனால் அவருடைய கணக்கின் வரவிருப்பையோ அல்லது அதிகப்பற்று வரம்பையோ அவை மீறக் கூடாது. மேலும், பற்றறிவிப்போடு (advice about the debit) அந்த உண்டியலை வாடிக்கைக்காரருக்குத் திருப்பி அனுப்ப வேண்டும்; இதுவே போதுமானது; தனி அவமதிப்பறிவிப்பு அனுப்பத் தேவையில்லை. மாறாக அத்தொகை, அந்த வாடிக்கைக்காரரின் வரவிருப்பையோ அதிகப்பற்று வரம்பையோ காட்டிலும் மிகுதியாக இருப்பின், அந்த உண்டியலில் தொடர்புடைய பிற ஆள்களை நாடிப் பரிகாரம்

பெறும் உரிமையை இழக்காதிருக்கும் வண்ணம், தவணை கடந்த உண்டியல்கள் கணக்கில் (overdue bills account) அந்த உண்டியலைப் பற்றிட வேண்டும். மேலும் வாடிக்கைக்காரருக்கு அவமதிப் பறிவிப்பை அனுப்பி உரிய அத்தொகையைச் செலுத்துமாறு கோர வேண்டும். பாங்கின் வாடிக்கைக்காரர் போதிய வளமுடையவராக இல்லாதிருப்பின், அதற்குமுன் அந்த உண்டியலில் தொடர்புடைய ஆள்களில் யார் யார்மீது நடவடிக்கை எடுக்க (பணம் பெறுவதற்கான வழக்குத் தொடரும் உரிமையைப் பெற) பாங்கு விரும்புகிறதோ, அவர்களனைவருக்கும் அவமதிப்பறிவிப்பை அனுப்ப வேண்டும்.

**அவமதிப்பறிவிப்பை அனுப்புவது பற்றிய விதி**

அறிவிப்பை அனுப்புபவரும் பெறுபவரும் ஒரே நகரில் குடியிருந்தால், அவமதித்த மறுநாள் பெறுபவரை அடையுமாறு, விடுப்பவர் அறிவிப்பை அனுப்ப வேண்டும்; அவர்கள் இருவரும் வெவ்வேறு ஊர்களில் குடியிருந்தால், அவமதித்த நாளுக்கு அடுத்து அலுவல் நாளாவது, விடுப்பவர் அறிவிப்பை அனுப்ப வேண்டும். உண்டியலை வைத்திருப்பவர் தமக்குமுன் அதில் புறங்குறித்தவர்களுக்கும், தொடர்புடைய பிறருக்கும் அது அவமதிக்கப்பட்ட நிகழ்ச்சியைப் பற்றித் தகாத சுணக்கமின்றி (without undue delay) அறிவிக்கத் தவறினுல், அவர்களிடமிருந்து உரிய தொகையை மீட்கும் தமது உரிமையை இழப்பார். பாங்கர்கள் தமது இக்கடமையைச் சிலபொழுது புறக்கணிப்பதால், புறங்குறித்தவர்கள்மீதுள்ள தமது உரிமையை இழக்க நேரிடுகிறது. குறிப்பாக, ஆவணஞ்சேர் உண்டியல்களைப் பொறுத்தவரை இது போன்ற புறக்கணிப்பு அடிக்கடி நிகழ வாய்ப்பிருக்கிறது. பாங்கரைப் பாதுகாக்கச் சரக்குகள் இருப்பதால், அந்த உண்டியலைச் செலுத்துவதற்கு அச்சமின்றிச் சிறிது அவகாசம் தருமாறு அதன் எழுதப்பெற்றவர் பாங்கின் பதிலாளை வேண்டலாம். அறிவிப்பைத் தரவேண்டிய பாங்கருடைய கடமையைப் பொறுத்தவரை, அவமதிக்கப்பட்ட உண்டியல் ஆவணஞ் சேர்ந்ததா, சுத்த உண்டியலா என்ற பிரச்சினைக்கே இடமில்லை. தம்முடைய வாடிக்கைக்காரரிடமிருந்து பெற்ற உண்டியலை ஒரு பாங்கர் மற்ருெரு பாங்கரிடம் வசூலிப்பதற்காகக் கொடுக்கும்பொழுதும் அல்லது அவருக்கு அதை விற்கும்பொழுதும் இந்த எச்சரிக்கையை மேற்கொள்ளுவது மிகவும் முக்கியம். எழுதப் பெற்றவர் சிறிது சலுகை காட்டுமாறு (indulgence) வேண்டினுல், பாங்கர் அதற்கு இடமளிக்குமுன், அந்த உண்டியலின் பொறுப்பையேற்ற எல்லா ஆள்களிடமிருந்தும்—தமக்கு உரிய தொகையை மீட்க யார் யாரை நாட பாங்கர் விரும்புகிருரோ அவர்களிட

மிருந்து—அவ்வாறு செய்யத் தவறுவதால் தாம் யார் யாருக்குப் பொறுப்பாவாரோ அவர்களிடமிருந்தும், பாங்கர் எழுத்து மூலமாகக் கட்டளையைப் பெற வேண்டும்.

**உண்டியல் சந்தைத் திட்டம் (Bill Market Scheme)**

இந்தியாவில் உண்டியல் சந்தையைத் தோற்றுவிக்க, 1952ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ரிசர்வு பாங்கு நடவடிக்கை எடுத்தது ; அதே ஆண்டு ஜனவரித் திங்கள் 16ஆம் தேதியன்று உண்டியல் சந்தைத் திட்டம் என்னும் திட்டத்தைப் புகுத்தியது. ரிசர்வு பாங்கு நிறுவப்படுவதற்கு முன், அன்றிருந்த இம்பீரியல் பாங்கு (அரசாங்கத்தின்) செலாவணித் துறையிடமிருந்து, முறுக்குப் பருவத்தில் (busy season) நிதிகளைக் கடன் வாங்கிக்கொண் டிருந்தது. அக்கடன்களை மெய்யாகவே வியாபாரத்திற்கு நிதியளிப்பதற்காக எழுதப்பெற்ற உள்நாட்டு உண்டியல்கள், நாட்டு உண்டியல்கள் ஆகியவற்றிற்கு எதிராகவும் அதே நோக்கத் திற்காக அளிக்கப்பட்ட கடன்களைத் தவணை உண்டியல்களாக மாற்றி அவற்றின் எதிராகவும் அது (இம்பீரியல் பாங்கு) பெற முடிந்தது. ரிசர்வு பாங்கு தோன்றுவதற்கு முன் நிலவிவந்த இந்த முறையைப் பொதுப்படையாகத் தழுவியே உண்டியல் சந்தைத் திட்டத்தை அது படைத்தது. இத்திட்டத்தின்கீழ் ரிசர்வு பாங்கு உண்டியல்களை வட்டம் கழித்து வாங்குவதில்லை ; மாறாக, தகுதி யுடைய (eligible) அட்டவணையிலிட்ட பாங்குகளுக்கு, அவைகளின் வாடிக்கைக்காரர்கள் தந்த தவணை வெண்கடன் பத்திரங்களுக்குப் பிணையமாக, இந்திய ரிசர்வு பாங்குச் சட்டத்தின் 17(4) (இ) என்னும் பிரிவிற்கேற்ப வேட்புக் கடன்களை (demand loans) அளிக் கிறது ; தான் வாங்குவதற்கும் வட்டம் கழித்து வாங்குவதற்கும் தகுதியை உடைய உண்டியல்களும் வெண்கடன் பத்திரங்களும் எவ்வெவையோ அவற்றைத் துணைப்பிணையமாகப் பெற்று பாங்கு களுக்குக் கடனளிக்க இப்பிரிவு ரிசர்வு பாங்கிற்கு அதிகாரம் வழங்குகிறது. பாங்குகள் ரிசர்வு பாங்கிடமிருந்து இத்திட்டத்தின் கீழ்க் கடன் வாங்க இரு வகையான பிணையக்காப்பை அளிக்க வேண்டும் ; அதாவது (i) தாங்கள் வாங்கும் கடன்களைக் கேட்கும் பொழுது (வேண்டும்பொழுது) திருப்பிச் செலுத்துவதாக உறுதி மொழி கூறிக் கேட்புவெண்கடன் பத்திரங்களை (demand promissory notes) ரிசர்வு பாங்குக்குத் தர வேண்டும் ; (ii) அவற் றிற்குப் பிணையமாக (அதாவது பிணையத்திற்குப் பிணையமாக) தாங்கள் தங்கள் வாடிக்கைக்காரர்களிடமிருந்து பிணையமாகப் பெற்ற தொன்னூறு நாள்களுக்குள் முதிர்வடையும் தவணை வெண்கடன் பத்திரங்களை ரிசர்வு பாங்கிடம் கொடுத்து வைக்க வேண்டும். எனவே, பாங்குகள் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு

அளித்த ரொக்கக் கடன், அதிகப்பற்று, பிற கடன்கள் ஆகிய வற்றின் பிணையமாக அவர்களிடமிருந்து பெற்ற வேட்பு வெண்கடன் பத்திரங்களைத் தவணை வெண்கடன் பத்திரங்களாக (90 நாள்களுக்குள் முதிர்வடையும் தன்மையனவாக) மாற்ற வேண்டிய தேவை ஏற்படுகிறது. பாங்குகள் முன்பு கொடுத்து வைத்த (lodged) உண்டியல்களைத் திரும்ப எடுக்கவும், தகுதியுடைய பிற உண்டியல்களைக் கொடுத்துவிட்டு மாற்றாக முன்பு கொடுத்து வைத்த உண்டியல்களைத் திரும்பப் பெறவும், கடனை முழுமை யாகவோ பகுதி பகுதியாகவோ அடைக்கவும், அடைத்த பகுதியையோ முழுக்கடனையோ அதே உண்டியல்களுக்கு எதிராகத் திரும்ப வாங்கவும் ரிசர்வு பாங்கு இத்திட்டத்தில் அனுமதியளிக் கிறது. இத்திட்டத்தின் பயனாக பாங்குகளின் வாடிக்கைக்காரர் களுக்கும் சில நன்மைகள் கிட்டுகின்றன. தாங்கள் பெற்ற ரொக்கக் கடனையோ அதிகப்பற்றையோ தொடர்கணக்கைப் போல் நீடித்துப் பயன்படுத்தும் வசதி உண்டாகிறது; மேலும், தாங்கள் தந்த தவணை உண்டியல்களைத் தமது பாங்குகள் ரிசர்வு பாங்கிடம் மறு வட்டம் கழிய விற்றிருந்தால் எவ்வாறு அவை களின் முழுத்தொகையையும் தேவை இருப்பினும் இல்லாவிடினும் எடுத்துக்கொள்ளுமாறு அவர்கள் வற்புறுத்தப்படுவரோ, அத்தொல்லை இத்திட்டத்தின் நல்விளைவாக இல்லாதொழிகிறது. இத்திட்டத்தின்கீழ்க் கடன் பெறும் பாங்குகள் எந்தெந்த ஆள்களின் (தங்கள் வாடிக்கைக்காரர்) உண்டியல்களை ரிசர்வு பாங்கிடம் கொடுத்து வைக்க எண்ணியுள்ளன, அவர்கள் ஒவ்வொருவருக்கும் தந்த கடன் தொகை எவ்வளவு, அவரின் செல்வத்திண்மை எப்படி ஆகிய விவரங்களைக்கொண்ட பட்டியலையும், அவர்கள் ஒவ்வொருவரையும் பற்றிய நாணய அறிக்கையையும் (credit report) ரிசர்வு பாங்கிடம் சமர்ப்பிக்க வேண்டும். இவற்றை ரிசர்வு பாங்கு ஆராய்ந்து ஒப்புக்கொண்ட (அங்கீகரித்த) ஆள்களின் உண்டியல்களை மட்டுமே கடனுக்குப் பிணையமாக ஏற்றுக்கொள்கிறது. மேலும், இவ்வுண்டியல்களைக் கொடுக்கும்பொழுது கடன் வாங்கும் பாங்கு, தொடர்ந்து இருவேறு பத்திரங்களையும் ரிசர்வு பாங்கிடம் தரவேண்டும். அவை யாவன: (i) உண்டியலைத் தந்த தமது வாடிக்கைக்காரர் அதன் தொகைக்குப் போதுமான அளவு வக்குள்ளவராக இருக்கிறார் என்ற சான்றிதழ், (ii) மெய்யான வாணிக அல்லது வியாபார பேரங்களிலிருந்துதான் அவ்வுண்டியல்கள் எழுந்தன என்று அவ்வாடிக்கைக்காரரே கையொப்பமிட்டுத் தரும் உறுதிக் கூற்று (declaration) ஆகியவையாம்.

தொடக்கத்தில் இவ்வசதி, குறைந்தபட்சம் பத்துக்கோடி ரூபாய்களை வைப்புக்களாகக்கொண்டுள்ள பாங்குகளுக்கு மட்டுமே

கிட்டுமாறு வரையறை செய்யப்பட்டது. ஆனால், 1953ஆம் ஆண்டு ஜூன் திங்களில் குறைந்தது 5 கோடி ரூபாய்களை வைப்புக் களாகக் கொண்டுள்ள இயங்குரிமைபெற்ற (licensed) அட்டவணையி லிட்ட பாங்குகள் அனைத்திற்கும் இவ்வசதி பரப்பப்பட்டது. ஆயினும், 1954ஆம் ஆண்டிலிருந்துதான் வைப்புக்களின் அளவைப் பற்றிய எவ்விதப் பாகுபாடுமின்றி, உரிமம் பெற்ற அட்டவணையிலிட்ட பாங்குகள் அனைத்தும் இவ்வசதியைப் பெறு மாறு விரிவு படுத்தப்பட்டது. இத்திட்டத்தின்கீழ், ரிசர்வு பாங்கிடம் ஒப்புவிக்கப்படும் உண்டியல்கள் ஒவ்வொன்றின் குறைந்தபட்சத் தொகை ரூ. 1 இலட்சம் என்றும், பாங்கொன் றுக்கு அளிக்கப்படும் குறைந்தபட்சக் கடன் ரூ. 25 இலட்சம் என்றும் தொடக்கத்தில் நிர்ணயிக்கப்பட்டது. இந்தக் குறைந்த பட்ச வரம்புகள் தணிக்கப்பட்டுத் தற்பொழுது முறையே ரூ. 50,000 ஆகவும், ரூ. 10 இலட்சமாகவும் நிலவுகின்றன. ஏற்றுமதி உண்டியல்களைப் பொறுத்தவரை இவற்றைக்காட்டிலும் இன்னும் தாழ்வான வரம்புகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. தவிர, இத்திட்டத்தைத் துவக்கியபொழுது, இவ்வசதியை பாங்குகள் பெருவாரியாகப் பயன்படுத்துவதற்குத் தக்க ஊக்கங்கொடுக்கும் நோக்கத்துடன், இதன்கீழ் அளிக்கப்பெறும் கடன்களின்மீது மைய பாங்கு வீதத்தைக்காட்டிலும் ஆண்டுக்கு ½ விழுக்காடு குறைவான வட்டி விதிக்கப்படும் என்றும், தங்களுடைய வாடிக்கைக்காரர்கள் தந்த வேட்புக் கடன் பத்திரங்களைத் தவணை உண்டியல்களாக மாற்றும்பொழுது பாங்குகள் இலக்காகும் முத்திரை வரிச் செலவில் பாதியைத் தான் ஏற்பதாகவும் ரிசர்வு பாங்கு அறிவித்தது. 1956ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் முத்திரை வரியைப் பற்றிய சலுகையை ரிசர்வு பாங்கு ரத்து செய்தது; மேலும் இரண்டு கட்டங்களில் ஒவ்வொரு முறையும் ¼ விழுக்காடாக வட்டிவீதத்தைப் பற்றிய சலுகையையும் அது படிப்படியாக ரத்து செய்து விட்டது. இதன் விளைவாக 1956ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களிலிருந்து இக்கடன்களின்மீது பாங்குகள் செலுத்த வேண்டிய வட்டிவீதம் மைய பாங்கு வீதத்திற்குச்[1] (அப்பொழுது அது 3½% ஆகும்) சமமாக உயர்ந்தது. தவணை உண்டியல்களின் முத்திரை வரியை அரசாங்கம் உயர்த்தியதன்

1 மொழிப்பெயர்ப்பாளரின் குறிப்பு:

மைய பாங்கு வீதம் கீழ் வருமாறு அவ்வப்பொழுது உயர்த்தப்பட்டது:

1957ஆம் ஆண்டு மே மாதம்—3½%-இருந்து 4% ஆகவும், 1963ஆம் ஆண்டு ஜனவரி 3ஆம் நாளிலிருந்து 4%இருந்து 4½%ஆகவும், 1964ஆம்ஆண்டு செப்டெம்பர் 26ஆம் நாளிலிருந்து 4½%இருந்து 5% ஆகவும், 1965ஆம் ஆண்டு பிப்பிரவரி 17ஆம் நாளிலிருந்து 5% இருந்து 6% ஆகவும் உயர்த்தப்பட்டது.

விளைவாக, 1957ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களிலிருந்து கடன் அடக்க வீதம் (effective rate of borrowing) இன்னும் $\frac{1}{2}$ விழுக்காடு உயர்ந்தது. ஆயினும், 1957ஆம் ஆண்டு மே திங்களில் மைய பாங்கு வீதம் 4% ஆக உயர்ந்ததாலும் அதே சமயம் முத்திரை வரி $\frac{1}{5}$% ஆகத் தணிந்ததாலும், ; இத்திட்டத்தின்கீழ் பாங்குகள் பெறும் கடன்களின் அடக்கவீதம் $4\frac{1}{5}$% ஆக உயர்ந்தது. 1960ஆம் ஆண்டுச் செப்டெம்பர் மாத இறுதிவரை இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொரு பாங்கும் வாங்குகின்ற கடன்கள் தனித்தனி உச்ச வரம்பிற்கு உட்பட்டிருந்தன ; இவ்வரம்புகள் ஒவ்வொன்றையும் ஆண்டுக்கொருமுறை ரிசர்வு பாங்கு நிர்ணயித்தது. ஒவ்வொரு பாங்கும் தன்னிடமிருந்து மைய பாங்கு வீதத்தில் வாங்கக்கூடிய கடனின் பங்களவை (quota) ரிசர்வு பாங்கே நிர்ணயிப்பதாலும், அந்த மட்டத்தைக் கடந்து பாங்குகள் வாங்கும் கடனுக்குத் தண்ட வட்டியை விதிப்பதாலும், இத்திட்டத்தின்கீழ் பாங்குகள் வாங்கும் கடன்களுக்கு வேறு உச்சவரம்புகளை நிர்ணயிப்பது தேவையற்றது என்றுணர்ந்து, 1960ஆம் ஆண்டு அக்டோபர் 1ஆம் தேதியிலிருந்து ரிசர்வு பாங்கு இவற்றை நீக்கி விட்டது.

1961ஆம் ஆண்டு மார்ச்சு 31ஆம் நாளன்று ரிசர்வு பாங்கு அட்டவணையிலிட்ட பாங்குகளுக்கு இத்திட்டத்தின்கீழ் அளித்திருந்த கடன்களில் நிலுவையாக நின்ற தொகை ரூ. 45.39 கோடியாகும். 1959ஆம் ஆண்டும், 1960ஆம் ஆண்டும் அந்தந்த மார்ச்சுத் திங்களில் கடைசி வெள்ளிக்கிழமையின் இறுதியில் நின்ற இதற்கிசைந்த தொகைகள் முறையே ரூ. 13·48 கோடியும், ரூ. 14·03 கோடியும் ஆகும். இத்திட்டத்தின் தொடக்கத்திலிருந்து இன்றுவரை நிலுவையாக நின்ற மிக உயர்ந்த தொகை ரூ. 73·8 கோடியும், அது நின்ற தேதி 1957ஆம் ஆண்டு மார்ச்சு 23ஆம் நாளும் ஆகும்.

1958ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 1ஆம் நாளிலிருந்து ஆய்வு அடிப்படையில் (experimental basis) ஏற்றுமதி உண்டியல்களுக்கும் ஓராண்டு காலத்திற்கு அமுலிலிருக்குமாறு உண்டியல் சந்தைத் திட்டம் விரிவு படுத்தப்பட்டது; பிறகு தொடர்ந்து அமுலிலிருந்து வருகிறது. அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்கவும் விற்கவும் தக்க அங்கீகாரம் பெற்ற வணிகர்களாகவும், அவ்வாறு இல்லாவிடினும் இத்திட்டத்தின்கீழ்க் கடன் வாங்கத் தகுதியுடையனவாகவும் உள்ள அட்டவணையிலிட்ட பாங்குகளுக்கு இவ்வசதி (ஏற்றுமதி உண்டியல்களின் பிணையமாகக் கடன் பெறும் வசதி) கிட்டுகிறது. கடைப்பிடிக்க வேண்டிய செயல்முறை ஏறத்தாழ ஒன்றே; இங்கும், பாங்குகள் உண்டியல்களை நேரடி

யாக வாங்கவோ வட்டம் கழித்து வாங்கவோ செய்யாமல், அவற்றிற்கு எதிராக அதிகப்பற்று போன்ற கடன்களை அளிப்பதன் மூலம் தங்கள் வாடிக்கைக்காரர்களிடமிருந்து தவணை வெண்கடன் பத்திரங்களை, ரிசர்வு பாங்கிடம் ஒப்புக்கத் தக்கவாறு பெற வேண்டும். உண்டியல் ஒவ்வொன்றின் குறைந்தபட்சத் தொகையாகத் தொடக்கத்தில் நிர்ணயிக்கப்பட்ட ரூ. 20,000, 1959ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் ரூ. 10,000 ஆகவும், 1961ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் ரூ. 5,000 ஆகவும் படிப்படியாகத் தணிக்கப்பட்டது. இத்திட்டத்தின்கீழ் பாங்கொன்று பெறும் குறைந்தபட்சக் கடன் ரூ. 2 இலட்சம் என்றும் நிர்ணயிக்கப்பட்டது—உள்நாட்டு உண்டியல்களைப் பொறுத்தவரை இந்த வரம்பு ரூ. 5 இலட்சம் என்பதை இங்கு நினைவிற்கொள்ளுதல் பயனுடைத்து. ஏற்றுமதி உண்டியல்களை ஈவோர் (இத்திட்டத்தின் பயனாக இறுதியாகக் கடன் வசதி பெறும் தங்கள் வாடிக்கைக்காரர்கள்) நாணயமாற்று ஆபத்தை (exchange risk) அவர்களே ஏற்பதற்கு ஆவன செய்திருக்கிறார்கள் அல்லது அவர்கள் தங்கள் கடன் கணக்குகளில் குறிப்பிட்ட எச்ச ஓரத்தை (margin) வைத்திருக்கிறார்கள் என்பதை உறுதிப்படுத்த வேண்டிய கட்டுப்பாடு பாங்குகளின்மீது துவக்கத்தில் விதிக்கப்பட்டது; ஆனால், இப்பொழுது ரத்து செய்யப்பட்டுவிட்டது. மேலும், தொடர்புடைய தக்க (வாடிக்கைக்காரர்களின்) கணக்குகளில் பிணையமாக பாங்குகள் வைத்திருக்க வேண்டிய ஏற்றுமதி உண்டியல்கள் 90 நாள்களை மீறாத தவணையைக்கொண்டிருக்க வேண்டும் என்ற பழைய நிபந்தனையும் விட்டுக்கொடுக்கப்பட்டது (waived); ஆயினும், ரிசர்வு பாங்கிடம் ஒப்புவிக்கப்படும் தவணை வெண்கடன் பத்திரங்கள் 90 நாள்களுக்குள் முதிர்வடைய வேண்டும் என்னும் நிபந்தனை இன்னும் அமுலில் இருக்கிறது. இந்த ஏற்பாட்டின்கீழ்க் கடன்வசதி பெறும் ஏற்றுமதியாளர்கள் தவணை வெண்கடன் பத்திரங்களை எழுதிக் கொடுக்க வேண்டிய தேவை இருப்பதாலும், அவ்வாறு செய்ய அவர்கள் பெரும்பாலும் விரும்பாததாலும் இவ்வசதி மிகவும் குறைவாகவே பயன்படுத்தப்பட்டு வருகிறது.

பாங்குகள் ரிசர்வு பாங்கிடமிருந்து கடன் வாங்குவதை எளிதாக்குகிற இந்த உண்டியல் சந்தைத் திட்டம் பாங்கமைப்புக்குச் சிறந்த சேவை செய்கிறது; குறிப்பாக வளர்ந்து வரும் நம் பொருளாதார அமைப்பில் பணச்சந்தையில் அடிக்கடி தட்டுப்பாட்டு நிலைமை தோன்றுகிறபொழுதெல்லாம் இத்திட்டம் புரிகின்ற சேவை அரியதொன்றாக மிளிர்கிறது; ஆயினும், இத்திட்டம் முறையான உண்டியல் சந்தையை உருவாக்கவில்லை. இத்திட்டத்தின்கீழ் பாங்குகள் ரிசர்வு பாங்கிடம் பிணையமாகக்

கொடுத்து வைக்கும் தவணை உண்டியல்கள் என்று சொல்லப்படு பவை, மெய்தவணை உண்டியல்களேயல்ல. அவை, பாங்குகள் இயல்பாக அளிக்கும் ரொக்கக்கடன், அதிகப்பற்று ஆகிய கடன் வசதிகளிலிருந்து எழும் கேட்பு வெண்கடன் பத்திரங்களின் வெறும் மாற்றேயாகும்; இவைகளுக்கும், சந்தையில் நடைபெறும் பேரங்களைப் பைசல் செய்ய வல்ல, கைவிட்டுக் கை எளிதாகவும் தங்கு தடையின்றியும் மாற வல்ல மெய்தவணை உண்டியல் களுக்கும் உறவு (ஒற்றுமை) சிறிதும் இல்லை; இவை வெறும் போலித் தவணை உண்டியல்களாகும். 'உண்டியல் சந்தை' என்னும் சொற்றொடரின் மெய்ப்பொருளுக்கேற்பத் தக்க சந்தையை உருவாக்க வேண்டும் என்னும் எண்ணமிருந்தால், அண்மை வளர்ச்சிகளான கிடங்கு வசதி முன்னேற்றம், நாணயத் தகவல் கழகத்தின் (credit information bureau) தோற்றம் ஆகிய காரணி களைக் கருத்திற்கொண்டு வாய்வியலான (realistic) கைக்கோளையும் செயல்முறைகளையும் தீர்மானித்து அவற்றை நிறைவேற்ற வேண்டும். பெருவளர்ச்சி பெற்ற நாடுகளிலுங்கூட உண்டியல் சந்தை நலிவுற்று நசிந்து வரும் போக்கு தென்படுவதை இவண் கூறுதல் பொருத்தமற்றதன்று. உண்டியல்களை எழுதியவர்களும், ஏற்றவர்களும், புறங்குறித்தவர்களும் கடனாளிகள் என்று சந்தையில் தங்கள் பெயர்கள் அடிபடுவதை விரும்பாததே இந்நலி விற்கு முக்கிய காரணங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

# கலைச்சொல்லகராதி

## (தமிழ்—ஆங்கிலம்)

### அ

| | | |
|---|---|---|
| அசையும் சொத்து | — | movable property |
| அங்கொன்று இங்கொன்றுன | — | sporadic |
| அஞ்சலகத் தலைவர் | — | Post-Master |
| அஞ்சலிட்ட சான்று | — | certificate of posting |
| அட்டவணையிலிட்ட பாங்குகள் | — | scheduled banks |
| அட்டவணையிலிடா பாங்குகள் | — | non-scheduled banks |
| அடக்கம் | — | sobriety |
| அடக்கிய | — | reppressed |
| அடகு | — | pledge |
| அடைமானம் | — | mortgage |
| அடைமானம் பெற்றவர் | — | mortgagee |
| அடைமானம் வைத்தவர் | — | mortgagor |
| அடிச்சீட்டு | — | counterfoil |
| அடிப்படை விதி | — | canon |
| அடைத்து வைத்தல் | — | impounding |
| அதிகாரத்திற்குட்பட்ட நாடு | — | dominion |
| அதே மாதிரியான | — | ejus dem generis |
| அந்தக் காரணத்திஞலேயே, அந்த உண்மையிஞல் | — | ipso facto |
| அந்தரங்கம் | — | privacy, secrecy |
| அம்ச திருத்தங்கள் | — | material alterations |
| அமுக்கிய | — | suppressed |
| அரசாங்கக் கடன் தொகுப்புப் பத்திரங்கள் | — | govt. stocks |

| | |
|---|---|
| அரசிறைக் கைக்கோள் | fiscal policy |
| அரசரின் அறிவுரைஞர் | king's counsel |
| அரசியின் அறிவுரைஞர் | Queen's counsel |
| அருகதை | qualification |
| அலகு | unit |
| அலுவலாள் | ex-officio |
| அவமதித்தல் (மறுத்தல்) | dishonour |
| அறப்பொறுப்புறுதகைமையில் | fiduciary capacity |
| அறிக்கை | notification |
| அறிவு சான்ற நீதிபதி அவர்கள் | learned judge |
| அண்மைக்கால | recent |

ஆ

| | |
|---|---|
| ஆக்கமற்ற | non-productive |
| ஆண்டு வருவாய் தரும் முதலீடு | annuity |
| ஆதாயம் | gain |
| ஆய்வுத் தொகுப்பு | digest |
| ஆயத்தப்படுத்துதல் | equip |
| ஆர்வம் | willingness |
| ஆவணஞ்சேர் கடனளிப்பு | documentary credit |
| ஆயச்சான்று அலுவலர் | notary public |
| ஆயத்தப்பணி | preparatory work |
| ஆள்திற நாணயம் (தனிநபர் நாணயம்) | personal credit |
| ஆள்திறப்பிணையம் (தனிநபர் பிணையம்) | personal security |
| ஆள்நலக்கடன்கள் (தனிநபர் கடன்) | personal loans |
| ஆளடையாளச் சான்று | identification |
| ஆளப்பட்டவை | quoted |
| ஆற்றல் | ability |
| ஆற அமர | sustained |

இ

| | |
|---|---|
| இகழார்ந்த | notorious |
| இங்கிலாந்தின் தலைமைபாங்கு | Bank of England |
| இடப்பட்ட | paid in |
| இணக்கமான | flexible |
| இந்திய வானூர்திக் கார்ப்பரேஷன் | Indian Airlines Corporation |

இம்மை — present
இயக்கச் செலவு — operating cost
இயங்குரிமை (உரிமம்) — licence
இயல் — normal
இயல்புரிமை — equity
இரட்டைக் கீரல் — double crossing
இருபெயர் தாள் — two name paper
இருமையான பாங்கு முறை — dual banking system
இலக்கு — target
இறக்கம் — decrease
இறங்குமுகம் — downward
இறுக்குதல் — tighten
இறுதி எச்சரிக்கை — ultimatum
இன்றைய — modern
இனப்பாகுபாடற்ற — miscellaneous

ஈ

ஈடுகள் — securities
ஈடுகளைத் தராதரப்படுத்துதல் — rating of securities
ஈடுபாடு — deligence
ஈற்றயல் — penultimate

உ

உட்கிடை — content
உட்பொருள் — essence
உடந்தை — collusion
உடல் நலம் பேணும் இல்லம் — convalcscent home
உடைமை செறிந்த பங்குகள் — highly geared shares
உடையவர் பத்திரம்
இறுதிவரை உடையவர் பத்திரமே — once a bearer always a bearer
உண்மை நிகழ்ச்சியைப் பற்றிய தவறு — mistake of fact
உண்மைப்பாடு — question of fact
உத்தமம் — ideal
உத்தம முதலீடு — ideal investment
உத்தரவுடன் எழுது — draw
உபாயம் — method, device
உய்த்தறிவு — presumption
உயர் மதிப்பு — premium

உயில் நிருவாகப் பத்திரம் — letter of administration
உயிர் நிரூபனச் சான்றிதழ் — letter of probate, probate
உரிமம் — licence
உரிமை ஊதியம் — royalty
உரிமைப் பட்டயங்கள் — letters patent
உரிமை பாராட்டுதல் — claiming
உரிமை மாற்றம் — transfer
உரிமையளிப்பு — assignment
உரிமையை ஓச்சல் — exercise a right
உருப்பெறாத — abortive
உழைப்புக் காலம் — effective life
உள்மதிப்பு — intrinsic
உள்ளார்ந்த — inherent
உறுதகைமை — capacity
உறுதிக்கூற்று — declaration
உறுதி செய்த கடனளிப்பு — confirmed credit
உறுதி நகல் — true copy
உறுதியுடைமை — durability

ஊ

ஊக பேர ஈடுகள் — speculative securities
ஊட்டு — inspire
ஊடாடு புத்தகம் — pass book
ஊதியம் — remuneration

எ

எச்ச ஓரம் — margin
எச்சம் — excess
எடுகோள் அறிவிப்பு — constructive notice
எடுகோள் கொடுப்பு — constructive delivery
எடுத்துக்காட்டுப் பகுதி — extract
எடு தொழில்கள் — extractive industries
எடுப்புத் தேவை — demands for withdrawal
எத்தர்கள் — fraudulent parties
எதிர் உரிமை — cross claims
எதிர்காலத் தன்மை — futurity
எதிர்பார்ப்பு — expectation
எதிரியக்கம் — reaction
எதிரீடு — set-off

எதிரெதிரானவை — mutual
எரிவளி — gas
எரி எண்ணெய் — oils
எழுதுபவர் — drawer
என்னை நாடாதே — without recourse to me

ஏ

ஏட்டுக்கடன்கள் — book debts
ஏலாமை — infirm, invalid
ஏற்கத்தக்க ஆபத்து — good risk
ஏற்காத உண்டியல்கள் — unaccepted bills
ஏற்புகள் — acceptances
ஏற்றத்தக்க — chargeable
ஏற்றம் — rise
ஏறுமுகம் — upward

ஒ

ஒட்டு முத்திரைகள் — adhesive stamps
ஒப்பந்தக் குறிப்பு — memorandum of agreement
ஒப்பந்த வாசகங்கள் — terms
ஒப்புமதிப்பு — comparative value
ஒப்பளிப்பு — sanction
ஒப்பந்த மறுதளிப்பு — repudiation of contract
ஒப்புக்கொள்ளத்தக்க உண்டியல்கள் — approved bills
ஒப்புகை — acknowledgement
ஒப்புடைய — analogous
ஒப்புதல் பெறாத — unauthorised
ஒப்புமையற்ற — dissimilar
ஒப்புரவு உண்டியல் — accommodation bill
ஒவ்வொருவருக்கும் தமக்கென்று ஒரு பாங்கு — one man one bank
ஒரு தரப்பு — exparte
'ஒருவர் பன்மையினராகிப் பெருக்கும்' காப்புறுதித் திட்டம் — 'snow ball' scheme of insurance
ஒரே தடவையில் — at a time
ஒரே வட்டம் — single premium
ஒருமித்த தன்மையாக — homogenous

ஒழுக்கப்பிழை — moral delinquency
ஒற்றைப் பாங்கு முறை — unit banks

ஓ

ஓய்வூதியம் — pension

க

கட்டமைப்புக் (கட்டட நிர்மாணக்) கம்பெனிகள் — constructional companies
கட்டளை — mandate
கட்டாய விற்பனை — forced sale
கட்டி வராத — expensive
கட்டுப்பாடு — control
கடலாண்மைச் சட்டம் — maritime law
கடன் ஒழுங்கு நடவடிக்கைகள் — credit regulation measures
கடன் தொகுப்புப் பத்திரங்கள் — debenture stock
கடன் நசுக்கு/ஒடுக்குக் கைக்கோள் — credit squeeze policy
கடன் வாங்க இருப்பவர் — would be borrower
கடன் வாங்குவோர் — borrowers
கடனளிப் பாபத்து — credit risk
கடனீவு — lending
கடனுக்கு உகந்தவர் அன்று — poor credit risk
கடினச் செலாவணி — hard currency
கன்னக்காப்புறுதி — burglary insurance
கணக்கு விபரம் — statement of account
கப்பல் இரசீது — bill of lading
கப்பலேற்று உத்தரவு — shipping order
கப்பற்சரக்குக் கெதுவுப் பத்திரம் — respondentia bond
கருத்தரங்கு — seminar
கருத்தொருமித்து — unanimous
கருத்தொற்றுமை — unanimity
கருதுகோள் — theory
கருவி — instrument
கருவூல உண்டியல்கள் — treasury bills
கருவூல வைப்பு ரசீதுகள் — treasury deposit receipts
கவனக் குறைவு — oversight
கவனம் — care
கவனமின்மை — inadvertance

கழிவுப் பொருள் — waste
கழிவுத்தரகு — commission
கழிவுத் தரகர்கள்
(தரகு முகவர்கள்) — commission agents
கழிவு நீக்கி வாங்கல் அல்லது
விற்றல் — discounting a bill
களஞ்சிய கருவிப் பொருள்கள் — stores
கற்பனையான பதிலாண்மை
ஒப்பந்தம் — notional contract of agency
காப்பறை — safe
காப்பாண்மையாளர் — administrator
காப்பாளன் — custodian
காப்பிளைஞர் — ward
காப்புறுதி ஆவணம் — insurance policy
காப்புறுதி செய்யப் பெறு — insure
காப்பொதுக்கு — provision
காப்பு வைப்பு — safe deposit
காலப்பகுதி — period
காலந்தவறுமை — punctuality
காலாவதிச் சட்டம் — law of limitation
கிடைப்பருமை — scarcity
கிலியுற்று — panicky
கிளை அஞ்சலகம் — branch post office
குத்தகைச் சொத்து — leasehold property
குத்தகையாளர்கள் — contractors
குயுக்திச் செயல் — manipulation
குவியும் — commutation
குளிர்நலக் காப்புப்பெட்டி — refrigerator
குற்றமன்னிப்பு — amnesty
குறிக்கோள்கள் — objects
குறித்தொதுக்கி வை — earmark
குறிப்புச் சிறப்பு — significance
குறியீட்டு எண் — index no.
குறுமம், குறைந்தபட்ச — minimum
குன்றிய — decline
கூக்குரல் — clamour
கூட்டாளிகள் — confreres
கூடியுள்ள வட்டி — accrued interest
கூறு போடுதல் — apportionment

